# தமிழிலக்கிய குறியீடுகள் அகராதி

# A DICTIONARY OF LITERARY SYMBOLS IN TAMIL

அன்னிதாமசு

ஜெ. சரஸ்வதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தமிழிலக்கிய குறியீடுகள் அகராதி

## A DICTIONARY OF LITERARY SYMBOLS IN TAMIL

அன்னி தாமசு
ஜெ. சரஸ்வதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamiḻakkiya kuṟiyīṭukaḷ akarāti |
| Author | : | Dr. Annie Thomas<br>Professor (Retd.)<br>International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai - 600 113<br>Ph: 2254 2992 |
| Publication No. | : | 625 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2009 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | Demy 1/4 |
| Printing type Used | : | 11 points |
| No. of Pages | : | xxviii + 281 + 32 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 225/-<br>(Rupees Two hundred and Twenty five only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | A Dictionary of Literary Symbols in Tamil |

**பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி எனும் இந்த அகராதி வெறுமனே தமிழ் இலக்கியங்களில் காணலாகும் குறியீட்டுச் சொற்களை அறிவதற்கான நூல் மட்டுமல்ல; மாறாக, நம் பழந்தமிழ் இலக்கியவாதிகளின் மதிநுட்பம், உலகியல் அறிவு, மொழிப் புலமை, படைப்பாற்றல் போன்ற பற்பல திறன்களையும் வெளிப்படுத்துவது.

> **இலக்கியத் தளத்தில் மட்டுமன்றி, வாழ்வியலிலும் நாட்டுப்புறக் களனிலும் சமய நெறியிலும் வழிபாட்டு முறையிலும் நம்பிக்கை, பழக்கவழக்கங்களிலும் விழாக் களிலும் சடங்குகளிலும் அமையும் செயற்பாடுகளிலும் பொருட்களிலும் குறியீட்டுப் பொருண்மை தேர்வதும் மக்கட் பண்பாட்டின் மனப்பரிமாணத்தை வெளிப்படுத்தித் தர முடியும்.**

எனும் நூலாசிரியர் கூற்று இங்கு எண்ணுதற்குரியதாகும்.

குறியீடு என்பது இடம், இனம், மொழி, சாதி, பால் எனும் காரணிகளுடன் இணைந்து வெளிப்படக்கூடியதாகும். மொழியியல் வல்லுநர்கள் நவீன இலக்கிய ஆய்வுத்தேடலின் போதும், விமர்சனத்தின் போதும் சந்தித்த பிரச்சினைகளின் விளைவாகக் கண்டறிந்த ஒரு விதக் கருத்துப் பரிமாற்ற உத்திமுறையாகும்.

தமிழ்ச் சூழலில் புதுக்கவிதை விமர்சனத்தின்போது பெரிதும் குறியீட்டு மொழி குறித்த சிந்தனையை அழுத்தமாகச் சிந்திக்க நேரிட்டது. மொழியியலார், அரங்கியலார் குறியீடுகள் குறித்துப் பெரிதும் சிந்தித்தனர்.

குறியீடு என்பது வேறு வேறு துறைகளில் சிறப்பு பொருண்மை கொண்டு அதன் தனித்துவத் தன்மைகளை விளக்குகிறது.

அ முதல் வ வரையில் அமைக்கப்பட்டுள்ள இவ்அகராதியில் அகர வரிசையில் அமையாத துணைத் தலைப்புச் சொற்களின் பட்டியல் தனித்து அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன.

> (எ) **பள்ளி paḷḷi (bed) : ஆழ்ந்த சிந்தனை/உறக்கமின்மை**
> **deep thought, sleeplessness**
> **'எழினி வாங்கிய ஈர் அறைப்பள்ளியுள்**
> **.............. மண்டுஅமர் நசையொடு கண்படை பெறாஅது'** (முல். 64-67)

எனுமாறு ஆங்கிலத்தில் எடுத்து விளக்கிப் பின் பழந்தமிழ்ப் பாடல் அடிகளைச் சான்று காட்டி எடுத்துரைத்திருப்பதன் வழி நூலாசிரியரிடம் அமைந்திருக்கும் ஆய்வுச் சிந்தனை ஆற்றலை உணரமுடிகிறது.

இந்த அகராதி தமிழ் ஆர்வலர், மொழி வல்லுநர், கலைத் துறையினர் எனப் பல்துறையாளருக்கும் அரும்பெரும் விருந்தாக அமைந்திருப்பதனைப் பயில்வோர் எளிதில் உணர்ந்து பயன்பெறுவர் என்பது எம் எண்ணம்.

தமிழ் உலகுக்கு இந்நிறுவனம் இந்த அகராதியினை வெளியிடுவதில் பெரிதும் பெருமை கொள்கிறது. பல்கலைக் கழக மானியக்குழுத் திட்ட ஆய்வுப்பணியில் விளைந்த இந்தச் சொற்கோவைப் பெட்டகத்தினை உருவாக்கிடத் துணைநின்ற திட்ட நோக்காளர் திருமதி ஜெ. சரசுவதி அவர்கள் இந்நேரத்தில் நினைவுகொள்ளத்தக்கவர்.

இந்தப் பணி முயற்சியில் துணைநின்ற அனைத்து உள்ளங்களுக்கும் எமது நன்றி என்றும் உண்டு.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன் பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் **திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் வெளியீடு தொடர்பான அனைத்துப் பணிகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# A FEW WORDS

***The Lord hath done great things for us; whereof we are glad - Psalm 126.3***

**'A Dictionary of Literary Symbols in Tamil'** is the outcome of the **UGC Major Research Project of 2003-2006.** I sincerely thank the authorities of the UGC-New Delhi for funding this Project.

I express my gratitude to Dr.S.Krishnamoorthy, the then Director of the International Institute of Tamil Studies, Chennai 600 113, for his interest in the implementation of the Project; and showing continuous concern in its progress; and giving all sorts of timely help.

I am thankful to the members of the Selection Committee for choosing the proper person Ms.J.Saraswathi for placement as Project Fellow. Her unmitigated work and co-operation has been of much help in the completion of the Project to this extent.

The Dictionary would not have been materialized without the support of the academic stalwarts Dr.S.V.Subramanian, Dr.S.Agesthialingom, Dr.R.Kasirajan, Dr.L.Ruth Joy, Dr.L.Gloria Sundramathy, Dr.K.Nachimuthu, Dr.A.Pitchai and others, with whom I could have discussions often; and some of whom had browsed through the first sample entries and willingly given their meritorious suggestions in formulating the dictionary. My sincere thanks to them. I am also greatful to the UGC experts Dr.Daniel Deva Sangeetham, Dr.V.Jeyadevan and Dr.M.Ravindran. My due thanks to our colleagues Dr.S.Sivakami, Dr.K.Bagavathi and Dr.S.Jean Lawrence who were also on other UGC MRPs at that time.

I appreciate with thanks, the assistance given by my research scholars, Dr.A.Manavazhahan in draft typing the material; Ms.K.Jayanthi, in the input of additional entries to finalise the work; and Mr.S.Kapilar in helping with the proof.

My sincere thanks to **Dr.M.Rajendran**, the then Director and **Dr.K.A. Gunasekaran**, the present Director especially for bringing this in print. I am immensely greatful to our office staff, headed by Mr.G.N.Veerabahu Subramanian, Deputy Director and Mrs.R.Parvathi, Librarian, for their co-operation, support and timely help.

**ANNIE THOMAS**

# என்னுரை

**'தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி'** என்னும் இந்நூல் 2003-2006 ஆண்டுகளில் புதுதில்லி பல்கலைக்கழக மானியக் குழுவின் நிதிநல்கையுடன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் செய்யப்பெற்ற திட்டமாகும். இத்திட்டத்தில் இணைந்து பணியாற்றிய திருமதி ஜெ. சரஸ்வதி **'தமிழிலக்கியக் குறியீடுகள்'** என்ற தலைப்பில் சென்னை பல்கலைக் கழக முனைவர் பட்ட ஆய்விலும் பின்பு ஈடுபட்டார்.

**குறியீடு** பற்றிய கல்வி சுவையானது. சிக்கலானதும் கூட தெளிவுடையதாகத் தோன்றினாலும் வெளிப்படையாகாதது. எவ்வளவோ தேடினாலும் இன்னும் தேட வேண்டியதை முன்னுணர்த்துவது. மொழிக்கு உட்பட்டுப் புலப்பட்டாலும் சொல்லுக்கு அப்பாற்பட்டு அப்பாலைக்கு அப்பாலாகிக் குறிப்புக் காட்டுவது. இயற்கையின் பல கூறுகளிலும் கலந்து கிடப்பது. மனித வாழ்வியலின் பேச்சிலும் செயற்பாட்டிலும் பன்முகம் காட்டி வெளிப்படுவது. இலக்கியம், கலை எனப் பல துறைகளிலும் பரந்து நிற்பது. காணவும் உணரவும் சுவைக்கவும்பட வாய்ப்புத் தருவது; அறிந்து கொளற்கு ஏதுவானது.

ஆங்கில முதுகலை கற்ற காலத்தில் இலக்கியத் திறனாய்வின் போக்குகளாக உளவியில் பார்வையும் குறியீட்டியல் நோக்கும் அறிமுகமானபோது, தமிழில் இத்தகு தேடலின் களம் பிடிபட்டது. காலப்போக்கில் சில ஆய்வரங்கக் கட்டுரைகள், சொற்பொழிவுகள் என இது வெளிப்பட்டது. ஆங்கிலத்திலமைந்த பல குறியீட்டு அகராதிகளும், விவிலியப் பொழிவுகளில் அறிந்து புரிந்த குறியீட்டாழங்களும், தமிழுக்கும் இத்தகு பார்வையைப் பதிக்க வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தின. எனினும் இத்தகு அகராதி உருவாக்கம் வாய்ப்பு இந்தப் பல்கலைக் கழக நிதிநல்கையின் பெருந்திட்டம் வாயிலாகவே அமைந்தது; இக்குழுவுக்கும், அதன் தலைமையினர்க்கும், தேர்வுக்குழுவிலமைந்த பேராசிரியப் பெருமக்கட்கும் நன்றி நவில்வேன்.

இதற்காக விண்ணப்பிக்கக் களமமைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அப்போதைய இயக்குநர் **முனைவர் சா. கிருட்டினமூர்த்தி** அவர்களுக்கும்; திட்டம் நிறைவு செய்தளித்த அப்போதைய இயக்குநர் **முனைவர் ம. இராசேந்திரன்** அவர்களுக்கும் எம் நன்றி உரித்து.

தமிழிலக்கியக் களன் முழுவதையும் கண்டு, 10,000 தலைச்சொற்களுடன் 500 பக்க அளவில் இத்தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதியை அமைக்க வேண்டும் என முன்கருதிய போதும், தொல்காப்பியம் முதல், கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரையான தமிழ்ப் படைப்புகளை மட்டுமே களனாகக் கொண்டு, **அக்காரம்** தொடங்கி **வைரம்** ஈறாக ஏறத்தாழ 1040 தலைச்சொற்களும் இணைச் சொற்களாக சுமார் 1085உம் இதில் அமைக்கப்பட்டுள்ளன.

தொடக்க முயற்சியாகச் செய்யப்பெற்றுள்ள இவ்வகராதி ஒரு வரைவு மட்டுமேயாகும். ஒவ்வொரு குறியீடும் அதன் பொருளுடனும் சான்று வருகையுடனும் அமைக்கப்பட்டுள்ளது. எனினும், உறவும் தொடர்பும் பொருத்தமும்

விளக்கப்பட்டு, காலந்தோறுமான வளர்ச்சி காட்டப்பெற்று, பாடற்கருவுக்கேற்பவும் காலக் கருத்துக்கேற்பவும் பொருண்மை மாறியும் விரிந்தும் வளர்ந்தும் தொடர்வதும் அல்லது தொடராது நின்றுவிட்டமையும் இடத்துக்கேற்பக் காட்டப்பெற்று, வரலாற்று நோக்கிலும், ஒப்பீட்டுப் பார்வையிலும் ஆய்வுக்குறிப்பாக ஒவ்வொரு குறியீடும் விளக்கப்படல் தேவையாகும். தமிழிலக்கியக் களன் நிலையில் மட்டுமன்றி, உலகளாவிய கருத்துகளுடன் இணைத்தும் இயைத்தும் பொருத்தியும் முரணியும் காணக்கூடுமிடங்களும் தனித்த தெளிவான விளக்கங்கள் அளிக்க முடியும். இலக்கியத் தளத்தில் மட்டுமன்றி, வாழ்வியலிலும் நாட்டுப்புறக் களனிலும் சமய நெறியிலும் வழிபாட்டு முறையிலும் நம்பிக்கை. பழக்கவழக்கங்களிலும் விழாக் களிலும் சடங்குகளிலும் அமையும் செயற்பாடுகளிலும் பொருட்களிலும் குறியீட்டுப் பெருண்மைத் நேர்வதும் மக்கட்பண்டபாட்டின் மனப்பரிமாணத்தை வெளிப்படுத்தித் தர முடியும். அது ஒரு கனியாக அமையும்.

> ***....அவன் நீர்க்கால்களின் ஒரமாய் நடப்பட்டுத்***
> ***தன்காலத்தில் தன் கனியைத் தந்து***
> ***இலையுதிராதிருக்கிற மரத்தைப் போலிருப்பான்*** *(விவிலியம். சங். 1.3)*

> ***பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்***
> ***நயன்உடை யான்கண் படின்*** *(குறள். 216)*

மேலாய்வுக்கும் ஆழ்கல்விக்கும் விருப்பும் முயற்சியும் இவ்வகராதியைப் பார்ப்பவர்க்கு ஏற்படுமாயின் அதனையே இத்திட்ட வெற்றியாகக் கருதுவேன்.

**அன்னிதாமசு**

# உள்ளே

| | |
|---|---|
| **INTRODUCTION** | x |
| குறியீடு | xii |
| சுருக்கக் குறியீட்டு விளக்கம் | xxvi |
| களநூல்கள் - காலவரிசை | xxvii |
| அகராதியின் அமைப்பு | xxviii |
| அகராதி | 1 - 281 |
| நூற்றொகை | 1 - 24 |
| இணைப்பு | 25 |

# INTRODUCTION

'A symbol is something that a particular culture considers to mean something else. A symbol may seem to be the same as a sign; but the difference lies in their roles. A sign exists only to convey meaning; nothing more. A symbol on the other hand, exists in its own right, not just as a conveyor of meaning. In Jung's words, "what we call a symbol is a term, a name or even a picture that may be familiar in daily life, yet that possesses specific connotations in addition to its conventional and obvious meaning. Thus a word or an image is symbolic when it implies something more than its obvious and immediate meaning". Unlike signs, the meanings carried by symbols are loose, that is often capable of more than one interpretation, and beyond precise definition. The world of symbols is a world of inference and suggestion, rather than of concrete facts and definite statements' (1000 Symbols, Preface).

Symbolism is a common feature in all cultures of the world, tribal or civilized. Naturally it has taken a prominent place in oral and written literature too. There are many dictionaries of symbols and imagery in English and other foreign languages. Though there are ample studies about similes, metaphors and suggested meanings in Tamil literature, there is a dearth of such studies about signs, signals and symbols in Tamil. With the ancient Tamil literatures and other medieval writings as the corpus, the present project collects the different symbols and gives their meanings, with referred examples. To have a comparative idea of symbolism in other cultures / world languages, connotations are given under possible entries.

The dictionary is made up of three sections, viz., Introduction, Word entries and Bibliography.

The Introduction, 'Kuṟiyīṭu', is a study on what symbolism is and gives the working methodology of preparing the dictionary.

As per Tamil, literary symbol, as a figure of speech, was not given a separate entity in the study of rhetorics in the ancient period. Uvamam, Uḷḷuṟai, Iṟaicci and Kuṟippu were in vogue even from Tolkāppiyam, the earliest extant treatise of the Tamils, dating back to 3rd c B.C.

The word kuṟi meaning sign, is available in Tolkāppiyam. The word kuṟiyīṭu, now used to refer to symbol is of a later addition. Kuṟi, the sign, when stands to represent something else, something more than mere denotation, becomes kuṟiyīṭu, ie., symbol. Uvamam, ie., simile, forming the foundation and base of many symbols is seen in Tamil literature. The commonness and parallelism in characteristics bring together two different things in the simile. While comparing, the intricate qualities of flora, fauna and other concrete and abstract things form the basis on which symbols are built. The Caṅkam Akam poems, with their different intricacies, have given room for the subtle feature, viz., uḷḷuṟai, ie., suggestion. This is also rooted in simile, though, with a variation. Many of these allow a symbolic analysis. Flowers being used to denote certain stages of love has come from Tolkāppiyam to Caṅkam poetry.

Flowers are also used to denote certain stages of war. The development of sign and ensign are seen here. The totemic flowers of kings, worn as sign by the soldiers of their army is also a notable feature.

Colours like black and red, symbolizing wrath / anger are seen from Tolkāppiyam onwards. Dream symbols, augury and omen as corpus for symbolic interpretation are available from the Caṅkam period. Heaven and earth, characters and people, the body and

actions, living creature, legendary creatures, flowers, plants, trees, objects, artifacts and abstracts have been handled to express symbolic sense. Kuriñci flower / plant connoting love, mentioned in Tolkāppiyam is followed in Caṅkam poems. But along with it other flora like kāntaḷ and vēṅkai also come to convey the same concept. Patient awaiting suggested by mullai, the jasmine flower, as per Tolkāppiyam, has extended to refer to chastity in Caṅkam poems. Such developments are seen in most of the items. Tolkāppiyam refers only to certain flora as the sign of the ancient Tamil kings. But the Caṅkam poems give certain fauna and artifacts as emblems. Only in later literature, like the epic Cilappatikāram these are detailed as design on flags / emblem on banners.

After the Caṅkam period, the ethical works, especially the Tirukkuṟaḷ stands as a store house of symbols. A different dimension of symbolic presentation is available here. The short and pithy sayings are moulded in such a way that symbols come handy in subtly expressing various truths. The other ethical works of the minor collection, have a different vein. Proverbial expressions with symbolic relevance have come into the language at this stage. Besides connection and similarity as the link in symbolism, unconnected and distantly placed things and aspects featuring in the evolution of symbolism is seen here. Rain symbolizing chastity, mire standing for Hades, flower clusters connoting the educated, fruit trees and drinking water ponds representing the bountiful are all well set in these verses.

The epics of the early period have given room for the development of metaphors, allegory, parallelism, etc which are rich sources of symbols. Episodic events and parables have evolved into typical symbols in this phase. Iḷaṅko, the author of Cilappatikāram, the first and foremost Tamil epic, has handled traditional symbols, as well as, has created novel ones, which have influenced the later authors to follow suit. Chastity, connoted through Jasmine flower and rain earlier, is here shown as fire. Kampaṉ has later taken this to his epic when portraying Sita.

Intrinsic symbolic chains connecting different phases of Tamil literature can be seen. Continuation of dream symbols, colour symbolism, augury and omen are found in the medieval and later epic period too. Supernatural things and concepts like ambrosia, pond of cure, bowl of plenty are notable.

Archetypes and myth as source of symbolic expression are common in later epics and the devotional poems of Nāyaṉmār and Āḻvār. Generally, a large part of Tamil literature, as a repertoire of beliefs, scientific and superstitious, add new dimensions to the study of symbols.

The above corpus helps one into the knowledge of symbols of the ancient and medieval Tamils. The present Dictionary leads one through the various symbols and their meanings, sometimes single and sometimes multiple. Many symbols are indigenous, while some show equal or corresponding meanings in world symbolism, as depicted in the foot of certain entries.

The Bibliography lists the source books as well as dictionaries, dissertation and studies on symbolism.

**A Note on Entries**

The Dictionary is in Tamil Alphabetical order with Roman transliteration and English meaning to each headword. In each entry, the earliest occurrence is taken as the headword and given with denotations. It's symbolic connotations are given numbered, and ordered following ancient tradition, and the citations are given there under. Synonyms are accommodated along side, with similar or variant symbolic meaning. Connected words and expressions, idiomatic or verbal are also given there itself. As per availability, each entry ends with meanings from Dictionaries on Symbolism, to give a comparative outlook.

# குறியீடு

குறியீடு என்ற சொல் ஆங்கிலத்தில் 'Symbol' என்ற சொல்லுக்கு இணையாக அமைகிறது. 'சிம்பல்' **என்னும்** ஆங்கிலச் சொல், ஒன்றுசேர் (to put together) என்னும் பொருளுடைய சிம்பலேன் (Symballein) **என்னும்** கிரேக்க வினைச்சொல்லிலிருந்தும், சின்னம் (mark), அடையாளம் (token), குறி (sign) என்னும் பொருளுடைய சிம்பலன் (Symbolon) என்னும் பெயர்ச் சொல்லிலிருந்தும் தோன்றிய சொல்லாகும். சேர்க்கை காரணமாக மற்றொன்றை உணர்த்தும் பொருள் சிம்பல் என அழைக்கப்படலாயிற்று. (புதுக்கவிதையில் குறியீடு, ப.2). Sign, Symbol, Symbolism ஆகிய ஆங்கிலச் சொற்கள் முறையே குறி, குறியீடு, குறியீட்டியம் என்னும் பொருளுடன் தமிழில் வழங்கப்பெறுகின்றன.

தமிழ் லெக்சிகன் குறியீடு என்பதற்குக் 'குறியாக இட்டாளும் பெயர்' எனவும் (தொகுதி - 2, ப.1050), குறி என்பதற்குக் 'குறியீடு' (Symbol), அடையாளம், இலக்கு, முன்னறிந்து கூறும் 'நிமித்தம்' எனவும் (தொகுதி - 2, ப. 1047) பொருளுரைக்கிறது. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி குறி என்பதற்கு 'இன்ன இனம் என அறிவதற்கான அடையாளம் மற்றும் எதிர்கால நிகழ்ச்சியை அல்லது காணாத பொருளின் இருப்பை ஏதேனும் ஓர் அடையாளத்தின் அடிப்படையில் கூறும் அறிவிப்பு' எனவும் (ப.339), குறியீடு என்பதற்கு 'அடையாளம், சின்னம், ஒரு கருத்துக்குப் பதிலாக வழங்குவது மற்றும் ஒரு கருத்தை வெளியிடும் சாதனம்' எனவும் பொருளுரைக்கிறது. சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலம்-தமிழ் அகராதி 'Symbol' என்பதற்குச் சின்னம், பொதுக்குறியீடு, அடையாளம், இடுகுறி, குறியீடு, நினைவுக் குறிப்புச் சின்னம், பொதுநிலைக் குழூஉக்குறி, தனித்துறைக் குழூஉக்குறி என்று பொருள் தருகிறது (ப.1047). 'ஒன்றிற்காக நிற்கும் வேறொன்று ஒன்றின் சார்பாக நிற்கும் மற்றொன்று அல்லது வேறொன்றைச் சுட்டி நிற்கும் ஒன்று' என்று ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி குறியீட்டுக்கு விளக்கம் தருகிறது (Vol. II, p.3206).

'குறியீடு என்ற சொல், பெயர் - பெயரிடுதல் என்ற பொருளில் தமிழுக்கு ஏற்கெனவே பழக்கமானது' (இலக்கியவியல் கோட்பாடும் அணுகுமுறையும், ப.187). 'சொற்பொருள் நிலையில், குறியிடுதல் - குறியீடு என்பனவற்றுடன் இடுகுறி என்பதும் இணைத்துக் கருதத் தக்கது. குறியீடு எனும் பொருண்மை, குறி, அடையாளம் என்ற பொருள் நிலையிலும், குறிப்பாகக் கருத்தை - செய்தியைத் தரும் ஒரு முறை என்ற வெளியீட்டு நிலையிலும் தமிழிலும், தொல்காப்பியம் - சங்க இலக்கியம் முதல் காணப்பெறுகின்றது (மேற்படி ப.188). வடமொழியில் கூறப்பெறும் 'தொனி' என்ற சொல் குறியீடு சார்ந்த பொருளுடையது. சொல் வெளிப்படைப் பொருளுக்கு அப்பால் குறிப்பாய்ப் பொருளுணர்த்தும் ஆற்றலை 'வியஞ்சனை' (குறிப்பாற்றல்) என்றும், குறிப்பாய்ப் பொருளுணர்த்தும் சொல்லை 'வியஞ்சகம்' (குறிப்புச் சொல்) என்றும், குறிப்புப் பொருளை 'வியங்கியம்' என்றும் வடமொழியில் குறிப்பர்.

'குறி, குறியீடு என்ற சொற்கள் ஒன்று போல இருந்தாலும் நுட்பமான பொருள் வேறுபாட்டைக் கொண்டவை. குறி என்பது ஒன்றைச் சுட்டி இனம்கண்டு கொள்வதற்கான அடையாளச் சின்னமாகும். குறியீடு என்பது மற்றொரு பொருளுக்காக அப்பொருளின் இடத்தில் தானே நிற்பது ஆகும்' (கவிக்கோக்கவி, ப.43). 'தமிழ் இலக்கியத்தில் கருதப்பெறும் குறியியல் என்ற தமிழ்ச் சொல்லுக்குச் சமமான இரண்டு சொற்கள் உள்ளன. ஒன்று சீமியாலஜி (Semiology), இன்னொன்று சீமியாடிக்ஸ் (Semiotics). சீமியாலஜி என்ற சொல்

Sign என்கிற ஆங்கிலச் சொல்லுக்குச் சமமான Semeion என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து தோன்றியது' (தமிழும் குறியியலும், ப.1). குறியீடு என்ற சொல்லிலிருந்து குறியீட்டியம் என்ற சொல் தோன்றியதாகும்.

**வரையறை**

ஒரு பொருளைக் குறிப்பிட்டு அதன் வாயிலாக அதனுடன் தொடர்புள்ள வேறொரு பொருளைக் குறியிட்டுக் காட்டுவதே குறியீடு எனப்படுகிறது. 'குறியீடு என்பது ஏதேனும் ஒன்று பிறிதொன்றிற்காக நிற்பது; பிறிதொன்றைப் பிரதிபலிப்பது; பிறிதொன்றை உட்கருத்தாய் உணர்த்துவது' (பாரதியும் வள்ளத் தோளும் ஒப்பியல் பார்வை, ப.258). ஒன்றை மற்றொன்றில் குறிக்கும்போது, அந்த மற்றொன்றே குறியீடு எனப்படுகிறது. 'குறியீடு என்பது ஒரு பொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளைப் பதிலியாகக் காட்டுவதாகும்' (இலக்கிய இஸங்கள், ப.71). தமிழில் குறி என்ற சொல் குறியீட்டுடன் தொடர்புடையது. குறி என்பது ஒரு பொருளைச் சுட்டிக்காட்டுவது; குறியீடோ ஒரு பொருளுக்காகத் தானே அவ்விடத்தில் சென்று நிற்பதாம்.

'குறி, குறியிடுதல் என்ற அடிப்படையில் குறியீடு எனும் சொல் உருவாகியுள்ளது. அடிப்படையாக, ஒன்றோடொன்று ஒத்துச் செல்லும் இரண்டு பகுதிகளையுடைய அடையாளப் பொருளைச் சுட்டியது. பின்பு, பருவடிவாலான ஒரு குறி அல்லாத படிமம், வேறேதேனும் அருவப் பொருளையோ கருத்தையோ, மரபு, ஒப்புமை, உருவகம் ஆகிய ஒன்றால் உணர்த்துவதைச் சுட்டியது. நேரடியாக அன்றி வேறொரு ஊடகம் வாயிலாகத் தரும் வெளியீட்டு முறையாகவும் இது அமைகின்றது. இவ்விளக்கங்கள் குறி, குறிப்பு என்பனவற்றை சிம்பல் எனும் குறியீட்டோடு நெருங்கச் செய்கின்றன' (தொல்காப்பியம் எழுத்தும் கோட்பாடுகளும், ப.290).

'குறிகளின் அர்த்தங்களைப் பற்றிய அறிவியலைக் குறியியல் எனலாம். குறியியல் அர்த்தம் தரும் மிகச்சிறிய கூறு குறி (Sign) ஆகும். இந்தக் குறிகள் இணையும் விதிகளையும் அவை தரும் புதை அர்த்தங்களையும் (Connotative meanings) குறியியல் வெளிப்படுத்துகிறது. ஒவ்வொரு குறியும் குறிப்பான், குறிப்பீடு என்ற இரு கூறுகளால் பிணைக்கப்பட்டது. குறிப்பான் (signifier) என்பது ஒரு சொல்லின் ஒலி / வரி வடிவம் ஆகும். குறிப்பீடு (signified) என்பது அச்சொல் குறிக்கும் கருத்துக்கோவை ஆகும். குறிப்பானுக்கும் குறிப்பீட்டிற்கும் உள்ள அமைப்புறவுகள்தாம் குறியை உருவாக்குகின்றன. குறிப்பானுக்கும் குறிப்பீட்டிற்கும் இடையேயான உறவு தன்னிச்சையானது' (நோக்கு, தொகுதி - 2, ப. 84). 'ஒரு சொல் அது குறிக்கும் பொருளுக்குப் பிரதியீடாகப் பயன்படுகிறது. எனவே சொல் குறியாகிறது. மொழி என்பது இதனால் குறிகளின் ஒழுங்கமைப்பாகிறது. இதே போல்தான் சினிமாவும் குறிகளின் ஒழுங்கமைப்பாக உள்ளது. திரையில் ஒரு பிம்பம் அதன் நிஜப் பொருளுக்குப் பிரதியீடாய் நிற்கிறது. எனவே பிம்பம் குறியாகிறது' (மேற்படி, ப.87).

'குறி என்பது, ஒரு பொருள், யாரோ ஒருவருக்கு, ஏதோ ஒன்றாக, ஏதோ ஒரு முறைமையில், விளங்குவதாகும். குறி (sign) என்பது ஒருபொருள் (object) பற்றியும், ஒரு பிரதிநிதித்துவம் (interpretent) பற்றியும் விளக்குகிறது. இவை மூன்றின் உறவில் (செயல்பாட்டில்) தோன்றுவதுதான் குறிச்செயல்பாடு அல்லது குறிவயமாதல் (Semiosis)' (தமிழும் குறியியலும், ப.2). 'ஒப்புமைச் சிந்தனையானது மொழிமூலம் வெளிப்படுகையில் மொழி சில அடையாளங்களைப் பயன்படுத்துகிறது. அந்த அடையாளங்களே குறிகள் (signs) ஆகும்' (மேற்படி, ப.11).

'உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டடிப்படையில் நோக்கும் போது குறியீடு என்பது நனவிலியின் பிரதிநிதியாக / உண்மையின் பொய் வடிவமாக வெளிப்படுகிறது. வெளிப்பட்ட

நனவு மனப் படிமங்களினுள்ளே நனவிலி மன ஆசைகள் மறைந்திருக்கும். இவ்வாறு நனவிலி மன ஆசைகளை உள் வைத்திருக்கும் நனவு மனப் படிமங்களையே குறியீடுகள் எனலாம். அடுத்து குறிப்பிட்டதொரு செயல் அல்லது குறிப்பிட்டதொரு பழக்கம் கூட குறியீடாகலாம். எந்த ஒரு புறஉலகப் பொருளும் நனவிலி மன வேட்கையின் குறியீடாகலாம். அமுக்கப்பட்ட வேட்கைகளைப் படிமங்களின் உள் புதைக்கும் மனதின் நனவு நிலை / நனவிலி நிலைச் செயற்பாட்டையே குறியீட்டாக்கம் என உளப்பகுப்பாய்வு அடிப்படையில் சொல்லலாம்' (இலக்கியமும் உளப்பகுப்பாய்வும், ப. 106). 'உளப்பகுப்பாய்வின் தந்தையாகிய சிக்மண்ட் ஃபிராய்ட், குறியீடுகள் காமப் பொருண்மை உடையன என்கிறார். இயல்பாக எழத்துடிக்கும் காம விழைவுகள் தடையாகும்பொழுது குறியீடுகளாக வெளிப்படும் என்பதைக் கண்டறிந்தார் ஃபிராய்ட்' (ஆய்வுக்கோவை 2002, தொகுதி-2, ப.1014).

'ஒரு கவிஞன், குறிப்பிட்ட ஓர் உவமையையோ, உருவகத்தையோ இன்ன பிறவற்றையோ மீண்டும் மீண்டும் தம் படைப்பில் பலமுறை கையாளுவதன் காரணமாக ஒரு பொதுப்பொருள் தோன்றி அதன் வாயிலாக, அக்கவிஞரின் அடிமனத்து உணர்வு ஒன்று 'காட்சி நிலை' எய்துமானால் அதனைக் குறியீடு எனலாம்' (பாரதியும் வள்ளத்தோளும் ஒப்பியல் பார்வை, ப. 258). 'சில காட்சிப் படிமங்களைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தி உணர்த்த முடியாத பொருட்களை அவற்றோடு இணைத்து, நுண்பொருட்களுக்குப் பருப்பொருள் வடிவம் கொடுத்துக் கவிதைகளில் வெளிப்படுத்திக் காட்டக் கவிஞன் கையாளும் ஒருவித இலக்கிய உத்தியே குறியீட்டு அமைப்பு ஆகும்' (மேற்படி, ப.262). 'கவிதையில் ஒரு பொருளைக் குறிப்பிட்டு அதன் வாயிலாக அதனுடன் தொடர்புள்ள வேறொரு பொருளைக் குறியிட்டுக் காட்டுவதே குறியீடு' (சங்கப்பாட்டில் குறியீடு, ப.11).

கருத்துப் பரிமாற்றம் செய்யும் அல்லது உரையாடும் நபர்களிடையே பொதுவான பொருளை உடையது குறியீடு. சமூகத்தில் கருத்துப் பரிமாற்றத்திற்கு மொழி ஒரு முக்கியமான குறியீட்டு முறையாகும் என சமூகவியல் மற்றும் மானிடவியல் கலைச்சொல் விளக்க அகராதி கூறுகிறது (ப.234). 'குறியீடு என்பது ஒரு பொருளுக்காக நிற்பது; அப்பொருள் வழியே மெய்ம்மை அல்லது கருத்தைப் புலப்படுத்துகிறது என்ற கருத்தை நோக்கலாம்' (கவிக்கோக்கவி, ப.44). 'உவமானம் ஒரு உவமேயத்திற்குத் திரும்பத் திரும்ப ஒப்பீடாக வருகிறபோதும், ஒப்பீடு செய்கிறபோது உவமானத்தை மட்டும் குறிப்பிட்டு விட்டு உவமேயத்தைக் குறிப்பிடாமலேயே உணர்த்துவதும் குறியீடுகளாகும்' (தமிழ்ப் புதுக்கவிதைகளில் படிமங்கள், ப.42). 'ஒப்புறவாலும் ஒட்டுறவாலும் மற்றொன்றைக் குறிப்பாக உணர்த்தும் பொருள் (object) குறியீடு எனப்படுகிறது' (புதுக்கவிதையில் குறியீடு, ப.5).

**பயன்**

குறியீடுகள் நுண்பொருள் வடிவ உத்தியாகப் பயன்படுகின்றன. 'கவிஞன் பயன்படுத்தும் சொற்களின் பொருள்களுக்குட் பட்ட எல்லையிலிருந்து, அதே சமயத்தில் கவிஞன் உணர்த்த விரும்பும் பொருளின் எல்லைக்குள் படிப்போரை அழைத்துச் செல்லும் உத்திகள் இவ்வகை உத்திகளாகும். கூறவந்த பொருளைக் கவிஞன் நயம்பட அழுத்தமாக உணர்த்துவதற்கு நுண்பொருள் உத்திகள் பயன்படுவதாக அமையும். கவிதைக்குரிய இறுக்கத்தையும் செறிவையும் உருவாக்கும் சொற்சிக்கனம், கவிதைகளில் குறியீடுகளாக வெளிப்பட்டுக் கவிதைப் பொருளைச் சிறப்பிக்க வைக்கின்றன' (கவிக்கோக்கவி, ப.42). நுண்பொருள் உத்தியான இக்குறியீட்டு உத்தி கவிதைக்கு வடிவம் தருபவை. கவிதை உள்ளடக்கத்தின் பொருள் பரிணாமத்தை அதிகரிக்க உதவுபவை.

இலக்கியத்திற்கு அழகு சேர்க்கின்ற உத்தியாகக் குறியீடு பயன்படுகிறது. 'குறியீடுகள் உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் துல்லியமாக வெளிச்சம் பாய்ச்சிக் காட்டுகின்றன என்று அறிஞர்கள் குறிக்கின்றனர். கருத்து வெளிப்பாட்டிற்குச் சுதந்திரம் எப்போதெல்லாம் வரலாற்றில் மறுக்கப்படுகிறதோ, அப்போதெல்லாம் குறியீடு முதன்மை உத்தியாகப் பயன்பட்டு வருகிறது. நுண்ணிய கருத்துகளைச் சுருங்க உரைக்க ஆற்றல் வாய்ந்த உத்தியாகக் குறியீடு உள்ளது. இந்நிலையில் நேரடியாகச் சொல்லும் கூற்றால் அதனோடு தொடர்புடையவர்கள் மனம் புண்படாமல் இருக்க இக்குறியீடு பெரிதும் உதவுகிறது' (மேற்படி, ப.45). வெளிப்படக் குறிக்காத குறியீட்டின் அழகு சிறப்புடையதாகும். 'தேவையற்ற வெற்றுச் சொற்களைத் தவிர்த்துக் கவிதைக்கு இறுக்கத்தையும் செறிவையும் ஏற்படுத்துவதற்குக் காரணமாகிறது. இவ்வுத்தி மூலம் கவிதைப் பொருளை நேரடியாகச் சொல்லாமல் குறிப்பாகக் காட்டுவதில் கவித்துவம் மிளிர்கிறது' (மேற்படி, ப.46). குறியீடு பலதளங்களுக்குப் பொருள் தரும் பன்முக ஆற்றல் உடையது. 'சுருக்கம், பொருள் புலப்பாடு, சக்திமிக்க வெளிப்பாடு ஆகிய காரணங்களால் மக்கள் வாழ்க்கையில் குறியீடுகள் பயன்படுத்தப்படுகின்றன' (நோக்கு, ப.77). 'அகத்திற்கு அகப்படாத எண்ணங்களைக் கருத்துகளைச் சொல்வதற்குக் குறியீடுகள் துணைசெய்கின்றன. அகமனவாழ்வை வெளியிடவும் மறைக்கவும் குறியீடுகள் பயன்படுகின்றன. பொய்மை உணர்ச்சியும் மிகை உணர்ச்சியும் கவிதையில் இடம்பெறுவதைக் குறியீடுகள் தடைசெய்கின்றன' (மேற்படி, ப.82).

'குறியீட்டுக் கவிதையின் அடிப்படைப் பயனாக, ஒரு குறிப்பிட்ட மனநிலையை வருவித்தல் (தட்டி எழுப்புதல்) என்பதும் சுட்டப்பெறுகின்றது. ஒரு கருத்தை விளக்குதல், அதனை ஏற்புடையதாகச் செய்தல், தப்பித்தல், செயலற்று அழுந்திக் கிடக்கும் அனுபவங்களைத் தட்டியெழுப்புதல், அணி அல்லது வெளியீடு ஆதல் ஆகிய பலவும் குறியீட்டின் பயன்பாடாகும்' (இலக்கியவியல் கோட்பாடும் அணுகுமுறையும், ப.192). 'கவிதையில் இடம்பெறும் சொற்களுக்கு நேரடியாகவோ சார்பாகவோ அமைந்திருக்கும் பொருளை அக்கவிதையினின்றும் வெகு தொலைவுக்கு எடுத்துச் செல்வதற்குக் குறியீட்டுக் கலைத்திறன் பெரிதும் பயன்படுகின்றது' (திறனாய்வுக் கட்டுரைகள், ப.9). 'மனித வாழ்வில் அமைந்து கிடக்கும் அவல நிலைகளையும் இயற்கையின் ஊடாக அமைந்து கிடக்கும் புதிர்களையும் குறியீட்டுக் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன' (மேற்படி, ப.14). அங்கதமாய்க் கூறவும் குறியீடுகள் பயன்படுத்தப் படுகின்றன. குறியீடு கவிதையை வளப்படுத்துகிற பல செயல்களைப் புரிகிறது.

'மேனாட்டவர் பொதுவாகக் குறியீட்டியத்தை இருவகையாகப் பிரித்துக் காண்கின்றனர். உலகியல் அளவில் பயன்படும் குறியீட்டியத்தை 'மானுடக் குறியீட்டியம்' (human symbolism) என்றும், அறிவெல்லை கடந்து ஆன்மீக உணர்வுகளைக் குறிப்பிடப் பயன்படும் குறியீட்டியத்தைக் 'கடப்பியக் குறியீட்டியம்' (transcendental symbolism) என்றும் அவர்கள் வழங்குகின்றனர். பிரெஞ்சுக் குறியீட்டாளர் இரண்டாம் வகையைப் பயன்படுத்தினர்' (புதுக்கவிதையில் குறியீடு, ப. 59). 'இலக்கியப் படைப்பில் பொதுவாகக் கவிஞர்கள் தொன்று தொட்டு வழங்கி வரும் குறியீடுகளைப் பயன்படுத்துவர்; அல்லது தம் தேவைக்கேற்பப் புதிய குறியீடுகளைப் படைத்துக் கொள்வர். எனவே குறியீடுகள் 'பொதுநிலைக் குறியீடுகள்' (public symbols), 'தனிநிலைக் குறியீடுகள்' (local symbols) என இருவகையாக அமைகின்றன. இவற்றுள் பொதுநிலைக் குறியீடுகள், 'இயற்கைக் குறியீடுகள்' (natural symbols) என்றும் அழைக்கப்படுகின்றன. பொதுநிலைக் குறியீடுகளின் வகைகளாக 'அகிலத்துவ குறியீடு'களும் (universal symbols), 'வழக்குக் குறியீடு'களும் (conventional symbols) கூறப்பெறுகின்றன. தனிநிலைக் குறியீட்டின் வகைகளாகத் 'தறுவாய்க் குறியீடு'களும் (contextual symbols), 'மறிதரு குறியீடு'களும் (recurring symbols), 'தற்குறியீடு'

களும் (private symbols) கூறப்பெற்றுள்ளன' (மேற்படி, பக். 68-69). மேலும் இக்குறியீடு தொன்மம், சமயம், வரலாறு, இலக்கியம், இடம், காலம் பற்றிய குறியீடு எனப் பலவகைகளில் விரிகிறது. 'இப் புதுக்குறியீடுகள் மரபினை அடிப்படையாகக் கொண்டு அமையாமல் கவிஞர்களின் கற்பனை ஆற்றல்களாலும் படைப்புத் திறத்தாலும் சுய விளைச்சலில் உருவாக்கப்படுகின்றன' (கவிக்கோக்கவி, ப. 47).

'இலக்கியத் திறனாய்வாளர் வேறு வகையிலும் குறியீடுகளைப் பிரித்துக் காட்டியுள்ளனர். வெல்லக்கும் வாரனும் மரபுக் குறியீடுகள், தற்குறியீடுகள், இயற்கைக் குறியீடுகள் என மூவகையாகப் பிரிப்பர். இயல்பாகவே குறியீடுகளாக அமைந்து ஆன்மிக மெய்மைகளை உணர்த்தப் பயன்படுவனவற்றைத் 'தூய குறியீடுகள்' (mere symbols) என்றும், கருத்துகளைப் புலப்படுத்தத் திட்டமிட்டு உருவாக்கப்படுவனவற்றைத் 'திட்டமிட்ட குறியீடுகள்' (calculated symbols) என்றும் சொல்வதுண்டு. சாட்விக் குறியீடுகளை, உலகியற் பயனுக்குதவும் 'மானுடக் குறியீடுகள்' (human symbols) என்றும், அறிவெல்லை கடந்த உண்மைகளை உணர்த்தும் 'கடப்பியக் குறியீடுகள்' என்றும் வகைப்படுத்துகிறார். கருத்துகளை மட்டும் உணர்த்துவன 'அறிவுநிலைக் குறியீடுகள்' (intellectual symbols) என்றும், உணர்வுகளைக் கிளர்வன 'உணர்வு நிலைக் குறியீடுகள்' (emotional symbols) என்றும் ஏட்ஸ் பிரித்துக் காண்கிறார்' (புதுக்கவிதையில் குறியீடு, ப. 69).

### குறியீடு அமையும் முறை

ஏதேனும் ஒருவகை உறவால் தோன்றுகிற ஒப்புறவு (association of similarity), ஒட்டுறவு (association of contiguity) என்ற இருவிதத்தில் குறியீடு அமைகிறது. ஒரு பொருளோடு மற்றொரு பொருள் ஒத்திருந்தால் இரண்டிற்கும் இடையே தோன்றும் உறவு ஒப்புறவு என்றும், இரண்டு பொருள்கள் ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாக அமைவது ஒட்டுறவு என்றும் வழங்கப்படுகிறது. 'இவ்வொட்டுறவு மூன்று வகையில் ஏற்படலாம். சில பொருட்கள் இயற்கையாகச் சேர்ந்திருப்பன; சில செயற்கையாகச் சேர்த்து வைக்கப்படுவன; சில தற்செயலாக இணைவன. இம்மூவகை உறவாலும் பொருட்கள் குறியீடாகலாம்' (புதுக்கவிதையில் குறியீடு, ப. 3). 'ஒப்புறவு, ஒட்டுறவு என இருவகையில் அமையும் குறியீடுகள் உருவ அருவ நிலையில் அமைந்து வருவதைக் காணலாம்' (கவிக்கோக்கவி, ப. 46).

'ஒப்புறவுக்குச் சில நுண்மையான ஒப்புமைகளும் காரணமாகலாம். ப்ராய்ட் (Sigmund Freud) சொல்லொப்புமையும் குறியீட்டிற்குக் காரணமாகலாம் என்கிறார். இரு பொருட்களுக்கிடையே உள்ள உள்ளார்ந்த பண்பொப்புமையையே குறியீடு அடிப்படையாகக் கொள்கிறது. விட்ஜென்ஸ்டீன் (Wittgenstein) என்பவருடைய, 'பிரதிபலிப்புக் கொள்கை' (theory of reflection) அடிப்படையில் குறியீட்டை விளக்கிய சுசேன் லேங்கர் (Susanne Langer) இரு பொருட்களிடையே காணப்படும் அமைப்பு முறையின் முழுமையான பொருத்தம் (congruence of logical structures) ஒன்றே குறியீட்டு உறவுக்கு இன்றியமையாதது என்கிறார் (புதுக்கவிதையில் குறியீடு, ப.4). 'குறியீடு மற்றொன்றை உணர்த்துவதற்கு மூன்று வகையில் செயற்படுகிறது. குறியீடு மற்றொன்றிக்காக நிற்கலாம்; அல்லது மற்றொன்றின் பிரதிநிதியாகச் செயற்படலாம்; அல்லது மற்றொன்றைச் சுட்டிக்காட்டுவதோடு அமையலாம். சில குறியீடுகள் மற்றொன்றை (something else) உணர்த்தாமல், தம் பொருளோடு இன்னும் கூடுதலான பொருளை (something more) உணர்த்தும் (மேற்படி, ப.5). கருத்தியலானவற்றை (abstract) உணர்த்தப் பருப்பொருளைப் பயன்படுத்துவது என்பதே குறியீடு பற்றிய பொருட்களுள் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் இங்கேதான் குறியீட்டின் இன்றியமையாமை மிகுதியாக உணரப்படுகிறது.

## பகுப்பு

குறியீட்டகராதிகள், பொதுவான குறியீடுகளைத் தருவதுடன், இலக்கியம், இரசவாதம், கலையியல், தொன்மம், போரியல், மக்கள் வாழ்வியல் எனப் பகுத்து அணுகுதலும் உண்டு (பார்க்க : Dictionary of Symbols and Imagery). இதனால் ஒரு குறியீடு, வேறு வேறு துறையில் பெறும் பொருண்மைப் பரிமாணம் புலப்படுகின்றது.

பல்வகையான தளங்களிருந்து குறியீடு தோன்றுகின்றது. எனவே அவற்றின் அடிப்படையில் பாகுபடுத்தி அணுகுதல் காணப்படுகிறது. வானமும் பூமியும்; கதை மாந்தரும் மக்களும்; உடலும் செயல்களும்; வாழுயிரிகள்; தொன்ம விலங்குகள்; பூக்கள், தாவரங்கள், மரங்கள்; பொருட்களும் செய்பொருட்களும்; கருத்துருக்களாக அமையும் வடிவங்கள் - நிறங்கள் - எழுத்துகள் - சொற்கள் - எண்கள் எனப் பாகுபாட்டுப்பன்மை புலப்படுகின்றது (1000 Symbols). இவை யொவ்வொன்றும் உட்பகுப்புகள் பலவற்றுடன் அமைவதும் கண்கூடு. சான்றாக, வானம் (Heaven) என்பதில் மேலுலகம், விண்மீன், வெளிச்சம், வால்நட்சத்திரம், சூரியன், கோள்கள், கிரகணம், சந்திரன், ராசி, காற்று, வான் (Sky), மேகம், வானவில், இடி மின்னல் எனப் பல அமைகின்றன (மேற்படி). இவையொவ் வொன்றிலும் பல கருத்தமையும். சான்றாக, வால்நட்சத்திரம் (Comet) என்பதைக் காணலாம். இதில் நம்பிக்கை வயப்பட்ட குறியீட்டுப்பொருளமைவது, தமிழிலக்கிய இயைபும் கொள்வதை இங்கே ஒப்பிட்டுக் கருதலாம்.

வால் நட்சத்திரம், தீய சகுனம்; போரையும் அதைத் தொடர்ந்து வரும் பஞ்சம், கொள்ளைநோய் ஆகியவற்றையும் முன்னுணர்த்துகிறது. கவி மில்டன், சாத்தானை இவ்வால் நட்சத்திரமாகச் சுட்டுகிறார். அரசர் / ஆட்சியாளரின் வீழ்ச்சிக்கு இது உற்பாதமாகிறது. பூமியதிர்ச்சி, வறட்சி, அண்டம் இருளல், உலகஇறுதி என்பன இதனால் முன் சுட்டப்படுகின்றன. மற்றொரு நிலையில் (குறுகிய கால) ஒளிநிறை ஊழியம் குறியீட்டுப் பொருளாகிறது. கிறித்தவம், இயேசுபிறப்புக்கு (கிறிஸ்துமஸ்) நட்சத்திரம் என்ற நிலையில் இதனைக் குறியீடாக்குகிறது (Dictionary of Symbols and Imagery, p. 109). 'எரிபாம்பு', 'புகையும் விண்மீன்' என மெக்சிகோ நாட்டினர் வால்நட்சத்திரத்தைக் குறிப்பிட்டனர். பழைய மெக்சிகோ, பழைய பெரு ஆகிய நாடுகளின் மதகுருக்களும், நிமித்திகர்களும் வால்நட்சத்திரம் தோன்றுவதைக் கவனித்து, துரதிருஷ்டமான பல்வகையான அழிவுகளைச் சுட்டும் தீ நிமித்தமாகக் கணித்து உணர்த்தினர். ஜூலியஸ் சீசரின் கொலைக்கு முன் ஒரு வால்நட்சத்திரம் தோன்றியது குறிக்கப்படுகிறது. (The Penquin Dictionary of Symbols, p. 226). புதிய தொடக்கம், எதிர்காலத்தில் நம்பிக்கை என நேர்ப்பார்வைப் பொருண்மையும் வால்நட்சத்திர வரவால் கருதப்படுவதும் காணப்படுகிறது. முக்கியமான பெரிய மனிதரின் பிறப்பு - இறப்புக்கும் இது அடையாளமாகிறது. அரசன் ஆர்தர், கிறிஸ்து ஆகியோர் பிறப்பு இதனால் சுட்டப்படுவதுண்டு (1000 Symbols, p.17).

பழந்தமிழிலக்கியம் தரும் சில குறிப்புகள் இப் பொருண்மையில் உலகளாவிய சிந்தனை ஒருமையைப் புலப்படுத்துகின்றன. 'தூமம்', 'புகைக்கொடி' ஆகிய சொற்களால் வால்நட்சத்திரம் குறிக்கப்படுகின்றது; மழையின்மை / வறட்சி என்பன இதனால் வரும் தீமையின் பரிமாணங்களாக உய்த்து உணரப்படுமாறு குறிப்புகளமைகின்றன. (வால்நட்சத்திரம் வந்தாலும் மழைவளம் குன்றாமை என எதிர்நிலை உணர்த்தலாக அமைகிறது):

**மைம்மீன் புகையினும் <u>தூமம்</u> தோன்றினும்**<br>
**தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும் . . . .**<br>
**பெயல் பிழைப்பு அறியாப் புன்புலத்ததுவே** *(புறம். 117.1. . . 7)*

> **கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
> **விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும். . .**
> **தூன்முதிர் கொண்மூப் பெயல்வளம் சுரப்ப. . .** *(சிலம்பு. 10.102 . . . 105)*

என்பன சான்றாம். மேலுள்ள கருத்துகளோடு வேறுபடுத்திக் காணும்போது, வால்நட்சத்திரத் தோற்றத்தால் மட்டுமன்றி சனி, வெள்ளிக்கோள்களின் நிலையாலும் இப்பாங்கு அமையும் என்பதால், அந்நிலையும் தீமைக்குக் குறியீடாகத் தமிழ்மரபில் இணைத்துக் கொள்ளத்தக்கது. மேலும், எரிகொள்ளி (meteor) வீழ்தல் / நட்சத்திரம் விழுதல் என்பனவும் பழந்தமிழிலக்கியத்தில் தீமை, அழிவு, மன்னன் இறப்பு எனும் நிமித்தக் குறியீடாகின்றமை ஒப்பிடற்குரியது (சங்க இலக்கியத்தில் நிமித்தக் குறியீடுகள், ஜெ. சரஸ்வதி, **சங்கப்புலவரின் பல்துறை அறிவு**, (பதி) ந. கடிகாசலம், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2004, பக்.70-72). வால்நட்சத்திரம் கேட்டுக்குக் குறியீடாவது கம்பராமாயணத்திலும் தொடர்வதும் சுட்டத்தக்கது (**தூமகேது** புவிக்கு எனத் தோன்றிய. . . . கடுங் கேடு எனும் நாமம். . . . அயோ. 114); இதனால் இது இந்தியக் கருத்தாகப் பரிணாமம் கொள்கிறது எனலாம்.

## அணுகுதல்

தமிழிலக்கியத்தில் குறியீடுகளை இனங்காண, இலக்கணங்கள், உரைகள் போன்றன வழிமுறை கூறல் புலப்பட்டிலது. மேனாட்டிலக்கியத் திறனாய்வின் தொடர்புடன் புனைவியல் படைப்பாக்கச் சார்பில் குறியீட்டியல் பற்றிய சிந்தனைகள் தரப்படுகின்றன. ஆங்கிலத்திலமையும் 'குறியீடு அகராதி'களும் திட்டவட்டமான வரையறை அமைத்தில. தொடர்பு, ஒப்புமை ஆகிய இரண்டு அடிப்படைகளில் குறியீடு உருவாகுவதாகவும் பயிற்சியால் நிலைபெறுவதாகவும் உணரலாம். விடுகதை பற்றிய விளக்கத்தில், 'ஒப்பொடு புணர்ந்த உவமம், தோன்றுவது கிளந்த துணிவு என்று, பிசிவகை இரண்டு' என்பது (தொல். 1432) இப்புரிதலுக்கு உதவுகிறது.

## தொடர்பு

தொடர்பு அடிப்படையாகும்போது, (I) சொல் - **பொருள்** தொடர்பு என்பது முன்னிற்கின்றது. (1) ஒரு சொல்லின் நேர்ப் பொருள்/ சுட்டுப்பொருள் (denotation) அதன் குறிப்புப்பொருளுடன் (connotation) இணைவதில் இச் சொல் - குறியீட்டுத் தொடர்பை உணரலாம். நிறம் பற்றிய சொற்களாக அமையும் கறுப்பு, சிவப்பு என்பன, கோபம் எனும் பொருளைத் தரும்போது குறியீடு எனும் மதிப்புப் பெறுகின்றமை சான்று. **கறுப்பும் சிவப்பும்** வெகுளிப் பொருள என்பது தொல்காப்பியம் (தொல். 855). நெருப்பு, இரத்தம் ஆகியவற்றின் நிறமான சிவப்பு, கோபத்தையும் எதிர்ப்புணர்வையும் குறிக்கிறது (1000 Symbols, p.343). நிறக்குறியீடு எனும் வகைப்பாட்டை இவ்வடிப்படையில் உருவமைத்துக் கொள்ளலாம். இதன் உலகளாவிய பாங்கையும் இயைத்துக்காண இயலும். பிறவற்றிலும், வாள் - ஒளி (தொல். 850), தாள் - முயற்சி (குறள் 212) என்பதுபோல், தொடர்ந்து தேரமுடியும்.

(2) **அடை** - சொல் தொடர்பு என்பது மற்றொரு வகையாகக் கொள்ளப்படுகின்றது. பெயரைச் சிறப்பிக்க வருவன அடை. அவ் அடையால் பொருட்பெயர் ஒரு கருத்துப்பரிமாணத்தை வெளிப்படுத்தும்போது குறியீடாகக் கொள்ளலாம். தொடர்ந்த ஆளுகை, குறியீட்டை நிலைப்படுத்தும். கொடி (flag) பற்றிய இலக்கியக் குறிப்புகளில் 'வெற்றி' அடையாகப் பயில்தலை இங்குச் சான்றாக்கலாம்.

> **வான் தோய் வெல்கொடி** *(பதிற். 69.1)*
> **மலைநீர், வென்றெழு கொடியில் தோன்றும்** *(மலைபடு. 582)*
> **விசய வெல்கொடி உயரி** *(முல்லை. 91)*

மகரவெல்கொடி மைந்தன் சேனை (சிலம்பு. 8.10)

மின்னுமணி நாகம் வெல்கொடிமேல். . . (பாரதவெண். 73)

இவற்றிலிருந்து, 'வெற்றி' என்பதைக் கொடிக்குறியீடாகக் கொள்ள முடிகின்றது. மேலும் அடைத்தொடரின் அடிப்படையில் இக்கொடி, புகழ் -

புலவுப் படக் கொன்று மிகை தோல் ஒட்டிப்
புகழ் செய்து எடுத்த விறல் சால் நன் கொடி (மதுரை.370–371)

போர் -

கொள்ளும் கொடியெடுத்துக் கொற்றவையும்
கொடுமரமுன் செல்லும் போலும் (சிலம்பு 12.14.4)

எனப் பிற பொருண்மைக்கும் குறியீடாகக் கொள்ளமுடிகிறது. (Flag.... Victory of eternal values; triumph over death - 1000 Symbols, p. 280).

(3) சொற்பொருளைக் கூறும் முறையால், குறியீடு உணரப்பட முடிவதுண்டு. கண், கல்வியறிவுக்கு, கண்ணோட்டத்துக்குக் குறியீடாவது சான்று. நேர்நிலை எதிர்நிலை ஆகிய இரு பாங்கிலும் இது வெளியிடப்படுகிறது.

கண்ணுடையர் என்பவர் கற்றோர் (குறள். 393)

கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் (குறள்.577)

கண் அறிவுக்குறியீடாக அமைவது உலகளாவிய கருத்தாகும். (It is only natural that the eye, the organ of visual perception, should almost universally be taken as a symbol of intellectual perception - The Penguin dictionary of Symbols, p.362). கண்ணோட்டம் அவ்வாறு அமைந்தது புலப்பட்டிலது.

(4) சொற்பொருள் பயன்பாட்டுச் சூழல், குறியீட்டை உணர அடிப்படையாதலும் உண்டு. வான் / வானம் என்பன மழைக்கு, மழைவளத்துக்குக் குறியீடாக அமைவதைச் சான்றாக்கலாம். வள்ளுவர் வான்சிறப்பு (அதி. 2) என்பதும், 'யார் யார்க்கும் வான் இன்று அமையாது ஒழுக்கு' (குறள் 20) என்று அச் சூழல் பயன்படுத்துவதும் சுட்டத் தக்கன. இப்பாங்கு,

கான் உயர் மருங்கில் கவலை அல்லது
வானம் வேண்டா வில் ஏர் உழவர் (அகம். 193.1–2)

என, சங்க இலக்கியத்திலேயே அமைந்துவிடுகிறது.

(5) சொற்பொருள் விளக்கம் கையாளப்படுமிடத்தில், குறியீட்டுத்தன்மை புலப்படுத்துவது மற்றொன்று. வில், சொல்லுக்குக் குறியீடாகிறது.

வல்லவன் தைஇய வாக்கு அமை கடுவிசை
வில்லினான் எய்தலோ இலர்மன் ஆயிழை
வில்லினும் கடிது அவர் சொல்லுள் பிறந்த நோய் (கலி. 137.9–11)

விவிலியம் அம்பைச் சொல்லுக்குக் குறியீடாகக் கொள்ளச் செய்கிறது (... வார்த்தைகளாகிய தங்கள் அம்பை நாணேற்றுகிறார்கள் - சங். 64.4).

6) சொற்பொருள் - செயல் தொடர்பு காரணமாகக் குறியீடு அமைதல் அடுத்த வகையாகும். கை - செய்கையை உணர்த்தி, உதவிக்கு, (பாதுகாப்புக்கு)க் குறியீடாகிறது.

உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு (குறள். 788)

தன் கையே தனக்கு உதவி (பழமொழி)

(In India hand prints on walls, doors or objects are a form of protection - 1000 Symbols, p.159).

7) சொற்பொருள் புலப்படுத்தும் **பண்பு / தன்மை** என்பன அப்பொருளுக்குக் குறியீட்டுப் பாங்கு வழங்குகின்றன. குடை பாதுகாப்புக் குறியீடாவது இதற்குச் சான்றாகும். வெண்கொற்றக் குடை, நீதிக்கும் குறியீடாகிறது (White umbrella of a king, that symbolizes justice - R.S. Pillai, Cilappatikaram, p.132).

எறித்தரு கதிர் தாங்கி ஏந்திய குடை நீழல்... (கலி. 9.1)

ஒத்த பொருள் பெறும் சொல்லும், ஒருபொருள் பல சொல் - இப்பாங்கினதாம். வெண் கொற்றக் குடையைக் குறிக்கும் கவிகை என்பது சான்று வழங்கும்.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ் தங்கும் உலகு (குறள். 389)

(II) சொற்பொருள் நிலையன்றிப் **பிறவகை தொடர்பும்** குறியீடு காண இடம் அளிப்பதும் தெரிகிறது.

8) **அடையாளப்** பொருள் குறியீடாவது, தனிநிலையில் கருதத்தக்கது. அரசுக்கு மலர்கள் குறியீடாவது, பொறிகள் / சின்னங்கள் குறியீடாவது போன்றன இங்கமையும்.

போந்தை வேம்பே ஆர் என வருஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும் - (தொல். 1006.4-5)

என்ற நூற்பா, மூவேந்தர்க்குரிய அடையாளப்பூவைத் தருகின்றது. யதேச்சையாகவோ, காரணத்துடனோ அமையும் இத்தொடர்பு, தெரிநிலையாக வெளிப்பட்டு இங்கமைகிறது. வேறாக, குறிப்பாக, உணர்த்தப்படலும் அமையக் கூடும். கால்கழி கட்டில் இறப்பைக் குறிப்பாகச் சுட்டுவது இந்நிலை.

பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்
கால் கழி கட்டில் கிடப்பி
தூவெள் அறுவை போர்ப்பித் திலதே (புறம். 286. 3-5)

அக, புறத்திணையில் துறைகளுக்கு வரும் அடையாள மலர்கள் / தாவரங்கள் என்பனவற்றையும் இங்கே கருதுதல் தகும்.

(III) **இலக்கிய மரபு** காரணமாக, கோட்பாடுகள் வகுக்கப்பட்டமையும் நிலையில், நிலமும் பொழுதுமான முதற் பொருள்கள், உரி சார்ந்த கருத்தாக்கங்கள் என்பன, பல்வகைக் கருப்பொருட்களால் உணர்த்தப்படுவது தனி வகையாகும். அடிப்படையில், உலகளாவிய தன்மை புலப்படினும் தமிழுக்குரியது எனச் சிறப்புநிலையில் கொள்ளத்தக்கதாக இவைபோன்றனவற்றைக் கருதலாம். தாவரங்கள், விலங்கினங்கள் குறியீட்டடிப்படை வழங்குவது பொதுமையாகும்.

9) குறிஞ்சி நிலத்தை உணர்த்தக் குறிஞ்சித் தாவரம் வருதல் வெளிப்படையான தெளிவான குறியீடாகும்.

சாரல், கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே (குறு. 40.3-4)

ஆண்டலைப்புள் வறண்ட நில (பாலை)க் குறியீடாகிறது.

ஆண்டலை வழங்கும் கான்உணங்கு கடுநெறி (பதி. 25.8)

10) பருவகாலங்கள் அவ்வக்காலப் பயிர் - தாவரத்தன்மையால் குறிக்கப்படுவது உலகளாவிய தொல்படிவ (arche type) நிலையுமாகும். பனிக்காலம் அவரை பூத்தலாலும், இளவேனில் அதிரல் பூத்தலாலும் உணர்த்தப்படுகின்றன. இதனால் இம்மலர்களை அவ்வக் காலக் குறியீடுகளாகக் கொள்ளலாம்.

**கொழுங்கொடி அவரை பூக்கும்**
**அரும்பனி அற்சிரம் வாரா தோரே** (குறு.. 82.5–6)
**முதிரா வேனில் எதிரிய அதிரல். . . .** (நற். 337.3)

'காரும் மாலையும் முல்லை' (தொல். 952.1) எனத் தொல்காப்பியம் கூறுவதில் பருவகாலமும், நாட்பொழுதும் தாவரக் குறிப்புடன் அமைவது இங்குக் குறிப்பிடத்தக்கது. விடியற்காலக் குறியீடாகச் சேவலும், அன்னமும், மாலைப்பொழுதின் குறியீடாக ஆம்பல் குழலும், கொன்றைக் குழலும் அமைவது, பிற கருப்பொருட்களும் காலக் குறியீட்டுப் பாங்கு கொள்வதை வழங்கும்.

**குடுமி நெற்றி நெடுமரச் சேவல்**
**தலைக்குரல் விடியல் போகி. . .** (அகம். 87.5–6)

**அன்னம் கரைய. . . . . . .**
**இரவுத்தலைப் பெயரும் ஏம வைகறை** (மது. 675....686)

**ஆம்பல் அம் தீம்குழல் தெள்விளி பயிற்ற . . .**
**துனைஇய மாலை துன்னுதல் காணூஉ** (குறி. 222....230)

**கோவலர், கொன்றை அம் தீம்குழல் மன்றுதோறு இயம்ப,**
**உயிர் செலத் துனைதரும் மாலை. . . .** (நற். 364. 9–11)

(11) உணர்வுகளும், மன அனுபவங்களுமாகப் புலப்படும் உரிப்பொருள் அவ்வந் நிலம், பொழுது, கருப்பொருட்களைக் குறியீடாகக் கொள்கின்றன. சான்றாக, நெய்தல் நிலத்தாவரங்களான அடும்பு, அரலை என்பனவும் இரங்கல் / வருத்தம் எனத் துன்பக் குறிப்புத் தருவது காணப்படுகிறது. சான்று : -

**படிவ மகளிர் கொடிகொய்து அழித்த**
**பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒருசிறை** (நற். 272. 2–3)

**அரலை மாலை சூட்டி**
**ஏமுற்றன்று இவ் அழுங்கல் ஊரே** (குறு. 214.6–7)

நீராடுதல், அருவியாடுதல், குறிஞ்சி உரியை உணர்த்துகின்றன. பெயர்நிலையுடன் வினைநிலையும் குறியீடு காண அடிப்படை யாதலும் இங்குக் கருதலாம்.

**ஆர்க வெற்பன் மார்பு புணையாக**
**கோடுஉயர் நெடுவரைக் கவாஅன் பகலே**
**பாடுஇன் அருவி ஆடுதல் இனிதே** (குறு. 353.1.3)

**கடும்புனல் மந்த காவிரிப் பேரியாற்று**
**நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல**
**நடுங்கு அஞர் தீர முயங்கி. . . .** (அகம். 62. 9 – 11)

சிலப்பதிகாரத்தின் குன்றக் குரவை, அருவியாடியும் சுனைகுடைந்தும் அலவுற்று வரும் குறமகளிரைக் காட்டுவதும் (சிலம்பு. 24.1.2) இங்கு இணைத்துக் கருதுதற்குரியது.

(IV) **வாழ்வியல் சிந்தனைகள்** - பண்பாடு, நம்பிக்கை, சமயம் என்பனவும் குறியீடுகள் உருவாவதற்கும், குறியீடுகள் தேரப்பட்டு இனங் காணப்படுவதற்கும் அடிப்படையாக அமைவது தெளிவுபடுகின்றது.

12) பண்பாடு என்பதில் புலிப்பல் தாலி வீரக்குறியீடாகவும், ஏழடி பின் செல்லுதல் மரியாதைக் குறியீடாகவும் அமைதலை இங்குக் கருதல் கூடும்.

**புலிப்பல் கோத்த புலம்பு மணித் தாலி** *(அகம். 7.18)*

**காலின் ஏழ்அடிப் பின்சென்று** *(பொரு. 166)*

13) நம்பிக்கை அடிப்படையில், இருள், அளறு என்பன நரகம் என்பதற்குக் குறியீடாகின்றமை சான்று.

**அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை**
**ஆர் இருள் உய்த்துவிடும்** *(குறள். 121)*

**உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண**
**அண்ணாத்தல் செய்யாது அளறு** *(குறள். 255)*

14) தொன்மங்கள் குறியீடாக உருவாகுவது நம்பிக்கை, சமயம், பழங்கதை எனப் பல தளங்களில் அமைய வாய்ப்புண்டு. கற்பிதங்களாக அமையும் அசுணம், அமுதம், அருந்ததி, அன்றில், ஆளி எனப் பட்டியல் நீளும். இவற்றில் தமிழ்வேரும் இந்திய வேரும் காண முடியும். அக்குரன், அரக்கு இல் என இதிகாசச் சார்புடையன, வள்ளல் தன்மை, அழிவு / நிலையின்மைக்கு முறையே குறியீடாவதற்குப் பழங்கதைச் சார்பு அடிப்படையாகும்.

**அக்குரன் அனைய கைவண்மையையே** *(பதி. 14.7)*

**அரக்கில்லுள், பொய்யற்ற ஐவரும் போயினார் இல்லையே**
**உய்வதற்கு உய்யா இடம்** *(பழ. 234)*

அசுணம், அன்றில், ஆளி போன்றன கற்பிதச் சார்பின் உயிரினங்களாக (legendary creatures) அமைகின்றன. எளிதில் அழிந்துவிடக் கூடியதாக அசுணம் - மென்மை / நொய்மைக்கும் (நற்.304. 8-9; கலி. 143.10-12); இணைபிரியாமை - பிரியின் உயிர்வாழாமை என அன்றில் - அன்பு, பிணைப்புக்கும் (நற்.124. 1-2; கலி. 131. 28),

**ஆளி நன்மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி** *(பொரு. 139-140)*

என ஆளி வலிமைக்கும் குறியீடாகின்றன. இவை தமிழ் மரபுக்குரியன எனக் கருதலாம். அமுதம், அருந்ததி போன்றன இந்திய மரபினவாகலாம். இறவாமை / நிலைபேறு என்பன அமுதுக்கும், கற்பு அருந்ததிக்கும் குறியீட்டுப் பொருளாகின்றன.

**வாயடை அமிர்தம் நின் மனத்தகத்து அடைதர**
**மூவா மரபும் ஒவா நோன்மையும்**
**சாவா மரபின் அமரர்க்கா. . . .** *(பரி. 2.69-71)*

**அருந்ததி அனைய கற்பின்** *(ஐங். 442 . 4)*

15) பொருட்பெயர்கள் குறியீடாக நிற்பதுடன், அவற்றின் சார்புடைய வினைவடிவங்களும் பொருண்மைத் தொடர்பால் குறியீடாக உணரப்படுகின்றமையும் தனித்துச் சுட்டற்குரியது. பனிக்காலத்து அவரை பூத்தல் (குறு. 82.5-6), இளவேனிற் காலத்து ஈங்கை தளிர்த்தல் (நற்.86.7-9) என்பன எதிர்பார்ப்பைக் குறிக்கின்றன. ஆம்பல் கூம்புதலும்

(குறு. 122. 2-3), ஆன்மணிக் குரலொலித்தலும் (நற்.364.7-11) துன்பத்தையும் மாலைக் காலத்தையும் சுட்டுகின்றன. இடம் வீழ்தல் (இடப்பக்கம் விழுதல்) இழிவு / சிறப்பின்மையைத் தருகின்றது (அகம். 29.2-4).

16) சொல், வினை என்பதுடன் குறைச் சொற்றொடரும் (phrase) பொருண்மைத் தொடர்பால் குறியீடாகின்றமை காணப்படுகிறது. மரபுத் தொடர் (idiom), பழமொழி (proverb) என்பன குறியீட்டுத் தன்மை புலப்படுத்துதற்கு இங்கு அடிப்படை அமைகின்றது எனலாம். உமிக்குற்றுக்கைவருந்துதல் (பழ.348) - பயனின்மை; இருதலைப் புள்ளின் ஓர் உயிர் (அகம். 12.4-5) - நட்பு / பிரிவின்மை; இருதலைக் கொள்ளி. . . . உறவி (எறும்பு) (அகம். 339. 6 - 10) - உறுதியின்மை / துன்பம்; எழுகுளிறு மிதித்த ஒரு பழம் (குறு.24. 3-5) - சிதைவு / அழிவு, நாய் சிவிகை ஏற்றுவித்தல் (திருவா. 51. 9.3) - தகுதியின்மை எனப் பல இப்பாங்குப் புலப்படுத்துகின்றன.

தொடர்பு அடிப்படைக் குறியீடாகச் சுட்டப்பட்ட இவ்வகைப்பாடுகள், விரிவுக்கும் மயங்குதலுக்கும் இடமளிக்கக் கூடும்.

### ஒப்புமை

உவமை, உருவகம், உள்ளுறை என ஒப்புமை அடிப்படையில் அமையும் வெளியீடுகளில், குறியீட்டுத் தேர்ச்சிக் களன் அமைகின்றது.

எல்லா உவமையும் குறியீடாகாது. உவமை-உவமிக்கப்படும் பொருள் என்ற ஒப்புமை பார்க்கப்படாது, உவமை-பொதுத்தன்மை எனப் பார்த்து, அருவமான தன்மை, பண்பு என்பன உணர்த்தப்படும் பொருண்மையாகக் கொள்ளப்படுவது இங்குப் புலப்படுகின்றது. “பகைமன்னன் போல் இளவேனில் வந்தது” என்பதால் இளவேனில், துன்பத்துக்குக் குறியீடாகிறது.

**பீடு இலா அரசன் நாட்டு ஏதிலான் படைபோல**
**இறுத்தந்தது இளவேனில்** *(கலி. 27, 7-8)*

நிலம் பொறுமைக்குக் குறியீடாதல் (குறள். 151), ஊற்றுக்கோல் உதவிக்குக் குறியீடாதல் (குறள். 415), எலி இழிவுக்கும் தீயமுயற்சிக்கும் குறியீடாதல் (புறம். 190.1-3), கடல் கீழ்மைக்குக் குறியீடாதல் (பழ.90) எனப் பலவாகச் சான்றமையும்.

உவமையின் செறிவாக அமையும் உருவகத்திலும், அருவப் பண்பு நிலை விளக்கம் பெறும்போது குறியீட்டுப்பாங்கு புலப்படுகிறது.

**காமக் கணிச்சி உடைக்கும் நிறை என்னும்**
**நாணுத் தாழ் வீழ்த்த கதவு** *(குறள். 1251)*

என்பதில் கணிச்சி, தாழ், கதவு என மூன்று குறியீடுகள் காமம், நாணம், நிறை எனும் பண்புவிளக்கி வருகின்றன. உவமை, உருவகம் என இரண்டிலும் ஒரே குறியீடு தேரப்படமுடிவதுமுண்டு: கடல், காமத்திற்குக் குறியீடாவது சான்று:

**கடலன்ன காமம் உழந்தும். . . .** *(குறள். 1137)*

**காமக்கடல் மன்னும் உண்டே . . .** *(குறள். 1164)*

சொல்வலை (புறம். 252.5), கங்குல் வெள்ளம் (குறு. 387.5), பிறவிப் பெருங்கடல் (குறள். 10), உரனென்னும் தோட்டி (குறள்.24), குணமென்னும் குன்று (குறள். 29), அருட்செல்வம் (குறள். 241), ஏமப்புணை (குறள். 306), கற்புக்கனல், அருள்மாரி, பகை வெள்ளம், காமச்சுறவு (திருவா.24.4.6) எனப் பல, உருவக அடிப்படையில் குறியீட்டைத் தேரக் களன் வழங்கும்.

உள்ளுறை பாத்திரக் குறியீட்டுக்கு இடம் தரல், மேற்கண்ட பகுப்புகளிலிருந்து வேறுபடுகின்றது. உணர்வு, ஒழுக்கம் என்பனவற்றில் ஒப்புடைமை காட்டப்படினும், அகப்பாடலின் நோக்கமாக, கூற்றில் உத்தியாக வருவதால் தனித்தன்மை கொள்கின்றது. விலங்கு, வேறு வல் உயிரின வகைகள் தலைவனுக்கும், பயிரினம், மென் பறவையினங்கள், சிறு உயிரினங்கள் தலைவி- பிற பெண்டிர்க்கும் குறியீடாவது முழுப்பார்வையில் உறுதிசெய்யப்படலாம். "வயலைச் செங்கொடி களவன் அறுக்கும்" (ஐங். 25.2) என்பது மருதச் சூழலில் பாத்திரங்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்தும். "சேற்று நிலை முனைஇய செங்கட் காரான்" (அகம். 46.1), "பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்து" (அகம். 36.1) என்ற தொடக்கமும், அவற்றால் சிதைக்கப்படும்-உண்ணப்படும் நீர்த் தாவரங்கள் அதே மருதச் சூழல் குறிப்பிட்ட பாத்திரங்களையும் செயற்பாட்டையும் உணர்த்தித் தொடர்வதும் இங்குச் சுட்டற்குரியன. முதலை (ஐங். 5;41), யாமை (அகம். 256), மந்தி (நற்.251), நாரை (நற். 35) போன்று பல தலைவனுக்கும்; வாழை (நற். 251), மாவடி (கலி. 84), மஞ்ஞை (நற். 288), நெருஞ்சி (குறு. 315), நாவல் கனி (நற். 35) போன்று பல தலைவிக்கும் குறியீடாகி வருவது புலப்படுகின்றது. தோழி, பாணன், பரத்தை எனப் பிற மாந்தர்க்கும் இவ்வாறு பார்த்தல் இயலும்.

### சில சிந்தனைகள்

இவை தவிர ஒப்புமை அடிப்படையில் குறியீட்டை உணர வேறுகளங்களும் இடம் தரலாம். கதைமாந்தர்-பாத்திரம் என்பது அவற்றுளொன்று. கண்ணகி கற்புக்குறியீடாதல், பாரி வள்ளன்மைக் குறியீடாதல், சகுனி-கூனி எதிர்மைக் குறியீடாதல் போன்றன சான்று. நிகழ்ச்சி, கதை என விரிகளன்கள் இவற்றிற்கு இடம்தரும். விலங்குக் கதைகள், எடுத்துக்காட்டுக் கதைகள் என மனித ஆக்கத்தோடு தரப்படும் பிற கதைவகைகளும் இங்குக் கொள்ளப்படலாம். கனவுக் குறியீடுகள் தனிவகையமைப்பதும் கருதத்தக்கது.

எல்லாவகை இலக்கியக் களனுக்கும் ஒரேவகையான அணுகு முறை குறியீட்டைக் காண்பதில் அமையக்கூடும் என்பதில்லை. சமய இலக்கியம், சித்தர் பாடல் போன்றன வெவ்வேறுவிதமான அணுகுதலை வேண்ட வாய்ப்புளது. "தோன்றுவது கிளந்த துணிவு" எனத் தொடர்போ ஒப்புமையோ இல்லாத பாங்கு தனித்த தேடுதல் சிந்தனைக்குரியது.

குறியீடுகளை இனம்காணும் வழிமுறைகளும் அதற்குத் தளம் வழங்கும் களங்களும் மேலாய்வில் இன்னும் விரியலாம். பொதுமைப்படத்தக்க அளவுகோல்களுடன், ஊகம், உள்ளுணர்வு (intuition) எனத் தனிப்பட்டு, படைப்போன் / சுவைப்போன் / திறனாய்வோன் பார்வையில் வருவன உள்ளமை இதற்குக் காரணமாகும்.

அனுபவம், பின்புல அறிவு ஆகியவற்றின் போதாமை, குறியீடு அடையாளங் காணப்படாமற் போவதற்கு வாய்ப்புத் தந்துவிடக் கூடும். மற்றொரு மொழியையோ பண்பாட்டையோ "மாதிரி"யாக்கி மட்டுமே குறியீடுகளை இனங்கண்டுவிட முடியும் என்பதும் பொருந்தாததாம்.

முதற்பார்வையிலேயே தென்பட்டுவிடுதல் ஒருபால் அமையும் எனினும், மறுபார்வை / மீண்டும் மீண்டும் பயில்தல் என்பதால் தெரிதல் என்பது, குறியீட்டை எளிமை-ஆழம் எனும் இரு எல்லைகளிலும் கொண்டுபோவது கண்கூடு.

சுருக்கம், **செறிவு** என்பனவற்றிற்கும் மேலாக, தெளிவின்மை, இருண்மை என்ற பான்மைகளால் **பொருள்**சுட்டி அகராதிப்படுத்த முடியாதபடி - வரையறைக்குள் அகப்படுத்த இயலாவாறு அமையும் குறியீடுகள் படைப்பாளியின் விளக்கத்தை வேண்டி நிற்கும். அல்லது, கனவு, காண்போனால் முழுமையாக விளங்கிக்கொள்ளப்படா நிலை

அமைவது போல, குறியீடும் புலப்பாடு பெறாது அமைந்துவிட முடியும். இதனால், குறியீடு முதன்மை பெறுகிறதேயன்றி அதன் பொருளோ விளக்கமோ அல்ல என்ற எண்ணம் எழுகிறது.

குறியீடு உருவாகுதல், குறியீடாகப் பயன்கொள்ளப்படுதல், குறியீடாக வெளிப்படக்கூடுவதைத் தேருதல்-தேடுதல் எனப் பன்முகப் பார்வையும் வேண்டப்படுவதாகத் தோன்றுகிறது.

**புலன்களால் உணரக் கூடிய பண்பும் வடிவும் பயனும் உள்ள உண்மையான அல்லது கற்பனையான எப்பொருளும் குறியீடு ஆகலாம்; பெரும்பாலும் அருவமானது, உணரமுடிந்தும் எளிதில் காட்ட முடியாத தன்மை போன்றன தேவை காரணமாகவும் நயம் கருதியும் குறியீடு வாயிலாகப் புலப்படுகின்றன; பலசொல்லால் விளக்கப்படவேண்டியதை அவ்வாறன்றித் தர, நேரடியாகக் கூறுவதைத் தவிர்த்து மொழிய, மறைத்துத் தர, குறியீடு பதிலியாகிறது.**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகம். | அகநானூறு |
| ஆசார. | ஆசாரக்கோவை |
| இன்னா. | இன்னாநாற்பது |
| ஐங். | ஐங்குறுநூறு |
| ஐந்.எழு. | ஐந்திணை எழுபது |
| ஐந்.ஐம். | ஐந்திணை ஐம்பது |
| கட.வா | கடவுள் வாழ்த்து |
| கம்ப.அயோ. | கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் |
| கம்ப.ஆரண். | கம்பராமாயணம் ஆரண்ய காண்டம் |
| கம்ப.கிட். | கம்பராமாயணம் கிட்கிந்தா காண்டம் |
| கம்ப.சுந். | கம்பராமாயணம் சுந்தர காண்டம் |
| கம்ப.பால. | கம்பராமாயணம் பாலகாண்டம் |
| கம்ப.யுத். | கம்பராமாயணம் யுத்த காண்டம் |
| கலி. | கலித்தொகை |
| களவழி. | களவழி நாற்பது |
| கார். | கார் நாற்பது |
| குறள். | திருக்குறள் |
| குறி. | குறிஞ்சிப் பாட்டு |
| குறு. | குறுந்தொகை |
| சிலப். | சிலப்பதிகாரம் |
| சிறு. | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | சீவகசிந்தாமணி |
| சூளா. | சூளாமணி |
| சுந்.தேவா. | சுந்தரர் தேவாரம் |
| தனிப். | தனிப்பாடல்கள் |
| திணை. | திணைமொழி ஐம்பது |
| திணைமாலை. | திணைமாலை நூற்றைம்பது |
| திரி. | திரிகடுகம் |
| திருக்கோ. | திருக்கோவையார் |
| திருஞா.தேவா. | திருஞானசம்பந்தர் தேவாரம் |
| திருநா.தேவா. | திருநாவுக்கரசர் தேவாரம் |
| திருமுரு. | திருமுருகாற்றுப்படை |
| திருவா. | திருவாசகம் |
| தொல். | தொல்காப்பியம் |
| நற். | நற்றிணை |
| நாலடி. | நாலடியார் |
| நாலா. | நாலாயிர திவ்வியப்பிரபந்தம் |
| நான். | நான்மணிக்கடிகை |
| நெடு. | நெடுநல்வாடை |
| பட். | பட்டினப்பாலை |
| பதி. | பதிற்றுப்பத்து |
| பரி. | பரிபாடல் |
| பழமொழி. | பழமொழி நானூறு |
| பார். | பார்க்க |
| புறம். | புறநானூறு |
| பெரிய. | பெரியபுராணம் |
| பெருங். | பெருங்கதை |
| பெரும். | பெரும்பாணாற்றுப் படை |
| பொரு. | பொருநராற்றுப்படை |
| மணி. | மணிமேகலை |
| மது. | மதுரைக் காஞ்சி |
| மலை. | மலைபடுகடாம் |
| முல். | முல்லைப்பாட்டு |
| மே.காண். | மேலும் காண்க |

***************

# களநூல்கள் - காலவரிசை

| | |
|---|---|
| கி.மு. 300 | தொல்காப்பியம். |
| கி.மு. 300-கி.பி. 100 | பத்துப்பாட்டு, எட்டுத்தொகை,(கலி, பரிபாடல் தவிர). |
| கி.பி. 100-200 | கலித்தொகை, பரிபாடல், திருக்குறள். |
| கி.பி 200-300 | சிலப்பதிகாரம். |
| கி.பி. 300-400 | நான்மணிக் கடிகை, திரிகடுகம், முதுமொழிக் காஞ்சி. |
| கி.பி. 400-500 | இனியவை நாற்பது, இன்னா நாற்பது, களவழி நாற்பது; காரைக்காலம்மை, திருமூலர். |
| கி.பி. 500-600 | ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை, கார் நாற்பது, சிறுபஞ்சமூலம், ஏலாதி; மணிமேகலை; முதல் மூன்று ஆழ்வார். |
| கி.பி.600-700 | நாலடியார், பழமொழி, ஆசாரக் கோவை; சம்பந்தர், அப்பர், ஐயடிகள் காடவர் கோன்; திருப்பாண் ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார்; பாண்டிக் கோவை. |
| கி.பி.700-800 | பெருங்கதை; முத்தொள்ளாயிரம்; இறையனார் அகப் பொருள்; சுந்தரர், சேரமான் பெருமாள், அதிராவடிகள், இளம்பெருமானடிகள்; குலசேகரர், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார். |
| கி.பி.800-900 | °சீவகசிந்தாமணி, கம்பராமயணம், வளையாபதி, பாரத வெண்பா, நந்திக்கலம்பகம், திவாகரம், தமிழ் நெறி விளக்கம், புறப்பொருள் வெண்பா மாலை; மாணிக்கவாசகர்; நம்மாழ்வார், மதுரகவி ஆழ்வார். |
| கி.பி. 900-1000 | குண்டலகேசி, நீலகேசி, சூளாமணி; பிங்கலம்; 9-ஆம் 11-ஆம் திருமுறையின் பிறர் சிலர். |
| கி.பி. 1000-1100 | 9-ஆம் திருமுறையின் கருவூர்த் தேவர், 11-ஆம் திருமுறையின் நம்பியாண்டார் நம்பி; கல்லாடம். |
| கி.பி. 1100-1200 | சேக்கிழார் பெரியபுராணம். |

### அகராதியின் அமைப்பு

தமிழிலக்கியங்களை (கி.பி. 12-ஆம் நூ. வரை) அடிப்படையாக்கித் திரட்டப்பட்ட குறியீடுகள் இங்கு அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. முதல் வருகையின் அடிப்படையில் தலைப்புச்சொல் தேர்ந்து கொள்ளப்பட்டுள்ளது. குறியீடாக அமையும் தலைப்புச் சொல், ஒலிபெயர்ப்பு, ஆங்கில இணைச்சொல் / விளக்கத்துடன் அமைக்கப்பட்டுள்ளது. அரிய சொல்லாயின் தமிழில் பொருள் (அடைப்புக்குறியுள்) தரப்பட்டுள்ளது. குறியீட்டுப் பொருண்மைகள், கால அடிப்படையில் நிரல்படுத்தப்பட்டு, எண்ணிட்டு, சான்றுடன் அமைக்கப்பட்டுள்ளன. தலைப்புச்சொல்லோடு ஒத்த பொருளுடைய சொல், தொடர், தொடர்புடைய வெளியீடு என்பன, தொடர்ந்து (தமிழெழுத்துகளால் குறிக்கப்பெற்றுத்) தரப்பட்டுள்ளன. குறியீட்டகராதிகள் வழி பெறப்பட்ட ஒப்புநோக்குதற்கான பொருண்மைகள் வாய்ப்புக்கேற்ப இறுதியில் தரப்படுகின்றன.

### இணைப்பு

அகர வரிசையில் அமையாத துணைத்தலைப்புச் சொற்களின் பட்டியல் (அடைப்புக் குறிக்குள் தலைப்புச் சொல்லுடன்) இணைப்பாகத் தரப்பெற்றுள்ளன.

# Transliteration of Tamil

## உயிரெழுத்துகள் — Vowels

| குறில் Short | | நெடில் Long | |
|---|---|---|---|
| அ... | ... a | ஆ... | ... ā |
| இ... | ... i | ஈ... | ... i |
| உ... | ... u | ஊ... | ... u |
| எ... | ... e | ஏ... | ... e |
| ஒ... | ... o | ஓ... | ... ō |

ஐ... ... ai

ஔ... ... au

ஃ... ... k̲

## மெய்யெழுத்துகள் — Consonants

| வல்லினம் Hard | | மெல்லினம் Soft | | இடையினம் Medial | |
|---|---|---|---|---|---|
| க்... | ... k | ங்... | ... ṅ | ய்... | ... y |
| ச்... | ... c | ஞ்... | ... ñ | ர்... | ... r |
| ட்... | ... ṭ | ண்... | ... ṇ | ல்... | ... l |
| த்... | ... t | ந்... | ... n | வ்... | ... v |
| ப்... | ... p | ம்... | ... m | ழ்... | ... l̲ |
| ற்... | ... r̲ | ன்... | ... n̲ | ள்... | ... ḷ |

# அ

**அக்காரம்** Akkāram **(sugar, sugarcane)**

(1) **இனிமை** - sweetness
*'.. .. .. .. அக்காரம் யாவரே தின்னினும் கையாதாம் கைக்குமாம் தேவரே தின்னினும் வேம்பு'* (நாலடி.112)

(2) **விருப்பு / அன்பு** – liking, love
*'ஆணமில் நெஞ்சத்து' அணிநீலக் கன்ணார்க்குக் காணமிலாதார் கடுஅனையர் - காணவே செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார் அக்காரம் அன்னார் அவர்க்கு'* (நாலடி.374)

**மே.காண், 'கரும்பு'**

**அக்கு (உருத்திராட்சம்)** Akku **(bead worn by ascetics)**

(1) **துறவு, புனிதம்** - penance, holy
*'அக்கினொடும் என்பணிந்த அழகன் தன்னை அறுமுகனோடு ஆனை முகற்கப்பன் தன்னை'* (திருநா.தேவா.413: 5-6)

(ஆ) **மணி** Maṇi

(2) **தூய்மை** - pure
*'மாசிலாத மணிதிகழ் மேனிமேல்'* (பெரிய.141: 1)

**அக்குரன்** Akkura<u>n</u> **(a liberal chief)**

(1) **வண்மை** - liberality
*'அக்குரன் அனைய கைவண்மையையே'* (பதி.14: 7)

**அகரம்** Akaram **(letter 'a')**

(1) **முதல், அடிப்படை, தொடக்கம், அசல் (மூலம்)** - first, basic, starting, original
*'எழுத்து எனப்படுப, அகர முதல் னகர இறுவாய்....'* (தொல். 1)

(2) **தோற்றுவாய், இறைமை** - origin, divinity
*'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு'* (குறள். 1)

**(ஒப்பு)** <u>Alpha</u> **தொடக்கம், பிறப்பு, படைப்பு, முதன்மை; படைப்பாளி, கடவுள்.**

**அகரனகரம்** Akara<u>n</u>akaram **(letters a – z)**

(1) **முதலும் இறுதியும், முழுமை** - first and last, whole
*'எழுத்து எனப்படுப அகர முதல் னகர இறுவாய் முப்பஃது என்ப....'* (தொல். 1)

**(ஒப்பு)** <u>Alpha and Omega</u> **முதலும் இறுதியும், முழுமை.**

**அகல்** Akal **(hollow earthern lamp)**

(1) **ஒளி** - light
*'வாடையொடு நிவந்த ஆய்இதழ் தோன்றி சுடர்கொள் அகலின் சுருங்குபிணி அவிழ'* (அகம்.235: 7-8)

**அகில்** Akil **(eagle wood tree)**

(1) **நறுமணம்** - fragrance
*'அகில் சுடு கானவன் உவல் சுடு கமழ் புகை'* (நற்.282: 7)

(2) **வளமை** - flourish
*'கொல்லைப் புனத்த அகில்சுமந்து கல்பாய்ந்து வானின் அருவி ததும்பக் கவினிய நாடன் நயமுடையன் என்பதனான் நீப்பினும் வாடன் மறந்தன தோள்'* (ஐந்.எழு.2)

(3) **கருமை** - black
*'குணதிசை மருங்கில் காரகில் துறந்து'* (சிலப்.4: 36)

(ஆ) **பூழில்** Pū<u>l</u>il
**நறுமணம்** - fragrance
*'சாத்த மரத்த பூழில் எழு புகை கூட்டு விரை கமழும் நாடன்'* (ஐங்.212: 1-2)

(இ) **காகதுண்டம்** Kākatuṇṭam
**நறுமணம்** - fragrance
*'கழுமிய காக துண்டம் கமழ்தொறும் காள மேகம்'* (சூளா.1109: 1)

**அங்காடி** Aṅkāṭi **(Market)**

(1) **வளம்** - prosperous

'அகல் அங்காடி அசை நிழல் குவித்த பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை' (நற்.258: 7-8)

(2) ஒலி - sound
'கொளக் கொளக் குறையாது, தரத் தர மிகாது, கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி, ஆடு துவன்று விழவின், நாடு ஆர்த்தன்றே மாடம் பிறங்கிய மலி புகழ்க் கூடல் நாள் அங்காடி நனந்தலைக் கம்பலை' (மது.426-430)

(ஆ) ஆவணம் Avaṇam
(1) வளம் - fertile
'மல்லல் ஆவண மறுகு உடன் மடியின்' (அகம்.122: 3)

**அங்கி** Aṅki **(fire)**
(1) வேள்வி - sacrifice
'அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும் ஆவுதி நறும் புகை முனைஇ' (பட்.54-55)

(ஆ) அழல் Alal
(2) வேள்வி, வழிபாடு - sacrifice, worship
'மனைவியர், நிறைவயின், வசி தடி சமைப்பின், சாலார்; தானே தரிக்க என, அவர் அவி உடன் பெய்தோரே, அழல் வேட்டு' (பரி. 5: 38-41)

மே.காண், 'நெருப்பு'

**அங்கை நெல்லி** Aṅkai nelli **(berry in the palm)**
(1) இனிமை / எளிமை – sweet, simple
'அங்கை நெல்லியின் பழத்திடை அமுதே' (சுந்.தேவா.690: 3)

மே.காண், 'நெல்லி'

**அச்சாணி (axle)** பார். **'ஆணி'**

**அசுணம்** Acuṇam **(a legendary animal)**
(1) நொய்ம்மை - fragile
'அசுணம் கொல்பவர் கை போல் நன்றும், இன்பமும் துன்பமும் உடைத்தே' (நற்.304: 8-9)

(ஆ) மான் Mān
(2) மென்மை - soft
'மறையின் தன் யாழ் கேட்ட மானை அருளாது, அறை கொன்று மற்று அதன் ஆர் உயிர் எஞ்ச, பறை அறைந்தாங்கு, ஒருவன் நீத்தான்' (கலி. 143: 10-12)

**அசோகம்** Acōkam **(a tree)**
(1) சிவப்பு நிறம் – red colour
'அழல்நகுவன அலர்நெரிதர அசைநிலைய அசோகம்' (சூளா.432: 4)

(ஆ) பிண்டி Piṇṭi
சிவப்பு நிறம் – red colour
'எரி நிற நீள் பிண்டி இணர் இனமெல்லாம்' (திணைமாலை.63: 1)
(2) உயர்ச்சி
'ஓங்கு பிண்டி சண்பகம் ஊழி நாறு நாகமும்' (சீவக.149: 3)
(3) சமண சமயம்
'வாரா கதியுரைத்த வாமன் மலர்ததைந்த காரார் பூம் பிண்டிக் கடவுள் நீ அன்றே' (சீவக.1247: 3-4)

(இ) பிண்டி வீழ்தல் Piṇṭi vīltal (the piṇṭi tree falling)
(4) இறப்பு, தீமை, துன்பம் – death, evil, sorrow
'தொத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்தது' (சீவக. 223: 1)

(ஈ) பிண்டி வீழ்தல் - கன்று வளர்தல் Piṇṭi vīltal – kaṉṟu vaḷartal (fallen papal tree – young sprout)
சீவகன் பிறப்பு, எண்மரை மணத்தல் – good omen
'தொத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்த துளண் முத்தனி மாலை முழக்கிட னாக ஒத்ததன் றாள் வழி யேமுளை யோங்குபு வைத்தது போல வளர்ந்ததை

யன்றே' (சீவக.1: 223)
'நன்முற நின்மக னாம்நறு மாலைகள் அன்னவ னால்அம ரப்படும் தேவியர் நன்முளை நின்மகன் ஆக்கம் அதாம்; எனப் பின்னத னால்பயன் பேசலன் விட்டான்' (சீவக.1: 225)

(ஈ) <u>அசோகு சாய்தல்</u> Acōku cāytal (the Acōku tree falling)

**தீமை, துன்பம்** – evil, sorrow
'சீர்மலி அசோகு தன்கீழ் இருந்த நம்தேவர் மேலே வேரொடு சாய்ந்து வீழக் கண்டனம்' (பெரிய.28.637)

<u>அஞ்செழுத்து</u> Añceḻuttu **(five letters)**

(1) **துன்பம் களைதல், பாகுபாடின்மை** – remove affliction, indiscriminate
'நல்லவர் தீயவர் எனாது நச்சினர் செல்லல் கெடச்சிவ முத்து காட்டுவ கொல்ல நமன்தமர் கொண்டு போமிடத்து அல்லல் கெடுப்பன அஞ்செழுத்துமே' (திருஞான.தேவா.551)

(2) **மந்திரம்** – holy chant
'.. .. .. .. அரன் அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்' (பெரிய.1: 5.159)

(3) **சிறப்பு** - excellence
'ஓங்கிச் சிறந்த அஞ்செழுத்தும்' (பெரிய.16: 10)

(4) **புகழ்** - fame
'பன்னும் பெருமை அஞ்செழுத்தும்' (பெரிய.16: 12)

<u>அட்ட புட்பம்</u> Aṭṭapuṭpam **(five flowers)**

(1) **வழிபாடு, பண்புநலன்** – worship, virtue
'அட்ட புட்பம் அவை கொளுமாறு கொண்டு அட்ட மூர்த்தி அனாதி தன்பாலணைந்து அட்டுமாறு செய்கிற்ப அதிகை வீரட்டனார் அடிசேரும் அவர்களே' (திருநா.தேவா.155)

<u>அட்டமி நாள்</u> Aṭṭami nāḷ **(eighth day of waning moon)**

(1) **சிறப்பு** – special
'பண்ணார் பதினெண் கணங்கள்தம் அட்டமிநாள் கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய்' (திருஞான.தேவா.3583: 3-4)

<u>அடி</u> Aṭi **(foot)**

(1) **அருள்/ஆதாரம்** - grace/basis
'சாவா மரபின் அமரர்க்காச் சென்ற - .. .. .. .. நின் அடி தலை உற வணங்கினேம்' (பரி.2: 71-74)

(2) **உய்தி / உய்வு** - redemption
'மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி' (பரி. 3: 2)

(3) **அடைக்கலம்** - refuge
'நின்அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின் நின்அடி உள்ளி வந்தனென்' (திருமுரு. 278-279)

(4) **மாட்சி / மாண்பு, இறைமை** - glorious / dignity, divinity
'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்' (குறள். 3)

(5) **பாதுகாப்பு, ஆதாரம்** - protection, basic
'குடி தழீஇக் கோல்ஓச்சும் மாநில மன்னன் அடி தழீஇ நிற்கும் உலகு' (குறள். 544)

(ஆ) <u>அடிசேர்தல்</u> Aṭicērtal (reach the feet)

(6) **அடைக்கலம்** - refuge
'இடு துனி கை ஆறா என், துயர் கூரச் சுடும், இறை; ஆற்றிசின், அடிசேர்ந்து! சாற்றுமின்' (பரி. 8: 78-79)

(7) **பணிவு** - humility
'மாண மறந்து உள்ளா நாணிலிக்கு இப்போர் புறம் சாய்ந்து காண்டைப்பாய் - நெஞ்சே! உறழ்ந்து இவனைப் பொய்ப்ப விடேஎம் என நெருங்கின், தப்பினேன் என்று அடி சேர்தலும் உண்டு!' (கலி. 89: 12-15)

(8) **தாபரமாகக் கொள்ளுதல்** - shelter
'வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல' (குறள்.4)

(9) **பிறப்பு நீக்கம்** - avoid birth / salvation
'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடிசேரா தார்' (குறள்.10)

(இ) **<u>அடிபொருந்துதல்</u>** Aṭiporuntutal (reach the feet)

(10) **பணிவு** - humility
'வந்து அடி பொருந்தி முந்தை நிற்பின், தண்டமும் தணிதி, நீ பண்டையின் பெரிதே' (புறம்.10: 5-6)

(ஈ) **<u>அடி தொழுதல்</u>** Aṭitoḻutal (worship the feet)

(11) **மதிப்பு, மரியாதை** - honour, respect
'அன்னை என நினைஇ, நின் அடி தொழுதெனம்' (பரி.13: 61)

(உ) **<u>அடி உறைதல்</u>** Aṭi uṟaital (dwell at the feet)

(12) **அருள்** - grace
'அடி உறை அருளாமை ஒத்ததோ, நினக்கு?' (கலி.54: 4)

(13) **அடிமை/பணிவு** - slave / humility
'ஆடு கொள் வென்றி அடு போர் அண்ணல் .. .. .. .. .. வாயில் விடாது கோயில் புக்கு, எம் பெருங் கோக் கிள்ளி கேட்க, இரும் பிசிர் ஆந்தை அடியுறை எனினே' (புறம்.67: 1-12)

(14) **சார்பு** - dependent
'துளி நசைப் புள்ளின் நின் அளி நசைக்கு இரங்கி, நின் அடி நிழல் பழகிய அடியுறை' (புறம்.198: 25-26)

(ஊ) **<u>அடி வீழ்தல்</u>** Aṭi vīḻtal (fall at the feet)

(15) **இரத்தல்** - beg
'அவன் நின் திருந்து அடிமேல் வீழ்ந்து இரக்கும், நோய்தீர்க்கும் மருந்து நீ ஆகுதலான்' (கலி.63: 10-11)

(எ) **<u>அடிபணிதல்</u>** Aṭipaṇital (pay obeisance to the feet)

(16) **அடைக்கலம் / பணிவு** - refuge/ humbleness
'என்னை நீ செய்யினும் உரைத்தீவார் இல்வழி, முன் அடிப் பணிந்து, எம்மை உணர்த்திய வருதிமன்' (கலி.73: 14-15)

(ஏ) **<u>அடி தொடுதல்</u>** Aṭi toṭutal (touch the feet)

(17) **வணங்குதல்** - bow down
'ஐய! சூளின், அடி தொடு குன்றொடு வையைக்குத் தக்க மணல் சீர் சூள் கூறல்!' (பரி.8: 70-71)

(ஐ) **<u>அடி நோக்குதல்</u>** Aṭi nōkkutal (look at the feet)

(18) **நாணம்** - shyness
'தொடி நோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி அஃதுஆண்டு அவள்செய் தது' (குறள்.1279)

(ஒ) **<u>ஏழடிப் பின் செல்லுதல்</u>** Eḻaṭip piṉ cellutal (going along seven steps)

(19) **மதிப்பு / சிறப்பு** - honour/excellence
'காலின் ஏழ் அடிப் பின் சென்று' (பொரு. 166)

(ஓ) **<u>தாள்</u>** Tāḷ (foot)

(20) **அருள்** - grace
'நின்னின் சிறந்த நின் தாள் இணையவை' (பரி.4: 62)

(21) **முயற்சி** - effort
'ஆள் இல் பெண்டிர் தாளின் செய்த நுணங்கு நுண் பனுவல் போல' (நற்.353: 1-2)

(22) **செயல்திறம்** - efficiency
'தொடங்கு வினை தவிரா, அசைவு இல் நோன் தாள்' (அகம்.29: 1)

(23) **உழைப்பு** - hard work
'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' (குறள். 212)

(ஔ) **<u>தாள் தொழுதல்</u>** Tāḷ toḻutal (worship the feet)

(24) **இறைமை** - divinity
*'தாள் தொழு தண் பரங்குன்று'* (*பரி*.8: 82)

(25) **பணிவு** - humility
*'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்'* (*குறள்*.2)

**(க) <u>தாள் சேர்தல்</u>** Tāḷ cērtal (reach the feet)

(26) **அடைக்கலம்** - refuge
*'தனக்குஉவமை இல்லாதான்தாள் சேர்ந்தார்க்கு அல்லால் மனக்கவலை மாற்றல் அரிது'* (*குறள்*.7)

**(ங) <u>தாள் வணங்குதல்</u>** Tāḷ vaṇaṅkutal (bowing at the feet)

(27) **பணிவு** - humbleness
*'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை'* (*குறள்*.9)

**(ச) <u>சேவடி</u>** Cēvaṭi (foot)

(28) **கடவுட்டன்மை** - divinity
*'தாமரை புரையும் காமர் சேவடி'* (*குறு. கட.வா*: 1)

(29) **தூய்மை** - purity
*'மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி'* (*பரி*.3: 2)

**(ஞ) <u>இறையவன் இணையடி</u>** Iraiyavaṉ iṇaiyaṭi

(30) **வினைத்துன்ப நீக்கம்** – removal of karma
*'வினையிருள் அடுவன விரிகதிர் இயல்பொடு கனையிருள் கடிவன கடுநவை அடுவன மனையிருள் நெறிபெற மதிகெட அடைவன வினையமெய் இறையவன் இணையடி இவையே'* (*நீலகேசி*.455)

**(ட) <u>பாதம் அணைதல்</u>** Pātam aṇaital
**அடைக்கலம்**
*'மெள்ளல் இல்லாப் பெரியோய் நின் இணையில் பாதம் அணைவல் யான்'* (*நீலகேசி*.136: 4)

**(ண) <u>பாதம் தொழுதல்</u>** Pātam toḻutal
**பணிவு**
*'சொல்லற் கரிய பெரியோய் நின் தோமில் பாதம் தொழுவல் யான்'* (*நீலகேசி*.138: 4)

(ஒப்பு) <u>Feet</u> **அடிப்படை, அடிமை நிலை, ஒப்படைப்பு, வாழ்க்கை ஆதாரம்.**

**<u>அடிமை</u>** Aṭimai **(slave)**

(1) **அஃறிணை** - non-human
*'குடிமை ஆண்மை இளமை மூப்பே அடிமை வன்மை விருந்தே குழுவே .. .. .. .. முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம் உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும் அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்'* (*தொல்*.540)

(2) **செயலின்மை** - actionless
*'மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்தி விடும்'* (*குறள்*. 608)

**<u>அடும்பு</u>** Aṭumpu **(a plant)**

(1) **இரங்கல்** - pine
*'படிவ மகளிர் கொடி கொய்து அழித்த பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒரு சிறை'* (*நற்*.272: 2-3)

(2) **தலைவி** - heroine
*'அடும்பு அவிழ் அணிமலர் சிதைஇய மீன் அருந்தி, தடந்தாள் நாரை இருக்கும் எக்கர்'* (*குறு*.349: 1-2)

**<u>அண்டிரன்</u>** Aṇṭiraṉ **(a liberal chief)**

(1) **வண்மை** - liberality
*'மழைக் கணம் சேக்கும் மா மலைக் கிழவன், வழைப் பூங் கண்ணி வாய் வாள் அண்டிரன்'* (*புறம்*.131: 1-2)

**<u>அணங்கு</u>** Aṇaṅku **(a deity)**

(1) **அச்சம்** - fear

'அணங்கே விலங்கே கள்வர்தம் இறைஎனப் பிணங்கல் சாலா அச்சம் நான்கே' (தொல். 1202)

(2) வலிமை - strength
'கடுந்திறல் அணங்கின் நெடும்பெருங் குன்றத்து' (அகம்.378: 22)

**அணல்** Aṇal **(moustache / beard)**

(1) ஆண்மை, ஆளுமை, வீரம் - manliness, headship, bravery
'அடி புனை தொடுகழல், மை அணல் காளை' (புறம்.83: 1)

**அணிலாடு முன்றில்** Aṇilāṭu munṟil **(squirrel in the courtyard)**

(1) பொலிவின்மை, தனிமை - desolate, lonely
'மக்கள் போகிய அணில் ஆடு முன்றிற் புலப்பில் போலப் புல்லென்று அலப்பென்' (குறு.41: 4-5)

**அணு** Aṇu **(atom)**

(1) சிறுமை / நுண்மை – small, minute
'அணு எனச் சிறியது ஆங்கு ஓர் ஆக்கையும் உடையன் ஆனான்' (கம்ப.யுத்.2128: 4)

**அணை** Aṇai **(bed)**

(1) உறக்கம், இன்னலக்காப்பு, மென்மை - sleep, safety, soft
'வெறி உற விரிந்த அறுவை மெல் அணைப் புனிறு நாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச' (நற்.40: 5-6)

(ஆ) கூந்தல் அணை kūntal aṇai (hair bed)

(2) காம இன்பம், மென்மை - passion, softness
'இரும் பல் கூந்தல் மெல் அணை ஒழிய' (நற்.366: 7)

(இ) அரவணை Aravaṇai (snake bed)

(3) ஆதாரம், இருக்கை - basis, seat
'பாடு இமிழ் பரப்பகத்து அரவணை அசைஇய' (கலி. 105: 71)

(ஈ) பாப்பணை Pāppaṇai (snake bed)

(4) இறையிருப்பு - divine presence
'பாப்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்' (பெரும். 373)

(உ) சேக்கை Cēkkai (bed)

(5) இருப்பிடம் / இருக்கை - seat
'தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண், மின் அவிர் சுடர் மணி ஆயிரம் விரித்த கவை நா அருந் தலைக் காண்பின் சேக்கைத் துளவம் சூடிய அறிதுயிலோனும்' (பரி.13: 26-29)

(6) காம இன்பம் / வேட்கை - passion/desire
'மாசு இல் வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்' (கலி.24: 6-7)

(7) மென்மை - soft
'இலங்குமாண் அவிர்தூவி அன்ன மென்சேக்கையுள்' (கலி.13: 15)

(8) காதல், வளமை - love, prosperity
'பல்படை நிவந்த வறுமையில் சேக்கை, பருகு வன்ன காதலொடு திருகி' (அகம்.305: 5-6)

(9) உறக்கம் / இன்பம் துய்த்தல் - sleep, having pleasure
'ஆய்தொடி மகளிர் நறுந்தோள் புணர்ந்து, கோதையின் பொலிந்த சேக்கைத் துஞ்சி' (மது. 712-713)

(ஊ) வரி அதள் சேக்கை Vari ataḷ cēkkai (tiger skin bed)

(10) உயர்வு - esteem
'காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது, வரி அதள் படுத்த சேக்கை' (அகம்.58: 3-4)

(எ) பள்ளி Paḷḷi (bed)

(11) ஆழ்ந்த சிந்தனை/ உறக்கமின்மை - deep thought, sleeplessness
'எழினி வாங்கிய ஈர்அறைப் பள்ளியுள் .. .. .. .. மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது' (முல். 64-67)

(ஏ) <u>மான் தோல் பள்ளி</u> Mān tōl paḷḷi (deer skin bed)

(12) **பிறப்பு, தூய்மை** - birth, purity
*'மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி, ஈன்பிணவு ஒழியப் போகி'* (பெரும். 89-90)

(ஐ) <u>உழை அதட் பள்ளி</u> Uḻai ataṭ paḷḷi (deer skin bed)

(13) **காப்பு** - safety
*'இலை வேய் குரம்பை உழை அதட் பள்ளி .. .. .. .. சிலையுடைக் கையர் கவலை காப்ப'* (மது. 310-312)

(ஒ) <u>மிதி அதட் பள்ளி</u> Miti ataṭ paḷḷi (leather bed stuffed with wool)

(14) **பாதுகாப்பு** - safety
*'துய்ம் மயிர் அடக்கிய சேக்கை அன்ன, மெய் உரித்து இயற்றிய மிதி அதட் பள்ளி, தீத் துணையாகச் சேந்தனிர் கழிமின்'* (மலை. 418-420)

(ஓ) <u>பரற் பெய் பள்ளி</u> Parar pey paḷḷi (bed of small stones)

(15) **வருத்தம் / தனிமை** - suffering, lonelyness
*'பரற் பெய் பள்ளி பாய் இன்று வதியும் உயவல் பெண்டிரேம் அல்லேம்மாதோ'* (புறம்.246: 9-10)

(ஔ) <u>படுக்கை</u> Paṭukkai (bed)

(16) **மயக்கம் / துன்பம்** - confusion / suffering
*'செந்நெல் அரிநர் கூர் வாட் புண்ணுறக் காணார் முதலொடு போந்தென, பூவே படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத் தன்னுறு விழுமம் அறியா'* (நற்.275: 1-4)

(க) <u>கட்டில்</u> Kaṭṭil (cot)

(17) **அன்பு, காதல்** - love
*'குறுங்காற் கட்டில் நறும்பூஞ் சேக்கை பள்ளி யானையின் உயிர்த்தனன் நசைஇ, புதல்வற் றழீஇயினன் விறலவன் புதல்வன்தாய் அவன் புறம் கவைஇயினளே'* (குறு.359: 3-6)

(18) **அரசமைதி / உயர்வு** - royalty / lofty
*'அரசு உவா அழைப்பக் கோடு அறுத்து இயற்றிய அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து'* (பதி. 79: 13-14)

(19) **சிறப்பு / மேன்மை, அரச உரிமை, ஆட்சி உரிமை** - excellence / superiority, royalty, rights
*'உயர்ந்த கட்டில், உரும்பு இல் சுற்றத்து'* (மலை. 550)

(ங) <u>பாயல்</u> Pāyal (bed)

(20) **இறப்பு** - death
*'கள்ளி போகிய களரி மருங்கின் வெள்ளிடைப் பொத்திய விளை விறகு ஈமத்து, ஒள் அழற் பள்ளி பாயல் சேர்த்தி, ஞாங்கர் மாய்ந்தனன், மடந்தை'* (புறம்.245: 3-6)

(21) **இன்பம், இணைவு** - pleasure, joining
*'கழனி ஊரன் மகள், இவள்; பழன ஊரன் பாயல் இன் துணையே'* (ஐங்.96: 3-4)

(22) **உறக்கம் / இன்பம்** - sleep / pleasure
*'புரையோர் உண்கண் துயில் இன்பாயல்'* (பதி.16: 18)

(23) **காம இன்பம்** - pleasure
*'அராக் காமம், ஆர் பொழிற் பாயல் வரையகத்து, இயைக்கும் வரையா நுகர்ச்சி'* (பரி.8: 40-41)

(ச) <u>பதுமத்துப் பாயல்</u> Patumattup pāyal (lotus bed)

(24) **இறையிருப்பு** - divine presence
*'மறுஅறு கற்பின் மாதவர் மனைவியர் நிறைவயின் வழாஅது நிற் சூலினரே; நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ் சுனைப் பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்; பெரும்பெயர் முருக!'* (பரி.5: 46-50)

(ஞ) <u>அமளி</u> Amaḷi (bed)

(25) **காம இன்பம், இணைவு** - pleasure, joining
'காமக் கணிச்சியால் கையறவு வட்டித்து, சேமத் திரை வீழ்த்துச் சென்று, அமளி சேர்குவோர்' (பரி.10: 33-34)

(26) **உறக்கம், ஓய்வு** - sleep, rest
'அமளித் துஞ்சும் அழகுடை நல்இல்' (பெரும். 252)

(ட) <u>பாய்</u> Pāy (mat)

(27) **உறக்கம்** - sleep
'முன்றில் கிடந்த பெருங் களியாற்கு அதள் உண்டாயினும், பாய் உண்டாயினும், யாது உண்டாயினும், .. .. .. .. .. யார்க்கும் ஈய்ந்து, துயில் ஏற்பினனே' (புறம்.317: 2-3, 7)

**(ண)** **<u>ஆயிரம் தலையுடை பாயல்</u>** Āyiram talaiyuṭai pāyal

(28) **வலிமை / திறல்** – strength, ability
'ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல் பாயல் பள்ளிப் பலர் தொழுதேத்த' (சிலப்.11: 37-38)

(த) **<u>நாக அணை</u>** Nāka aṇai

(29) **திருமால்**
'நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில் ஆற்றல் அணைமேல் அவனும் காண்கிலா' (திருஞான.தேவா.31: 1-2)

(ந) **<u>பஞ்சணை</u>** Pañcaṇai

(30) **காம இன்பம்**
'நேசனைக் காணா இடத்தில் நெஞ்சாரவே துதித்தல் ஆசானை எவ்விடத்தும் அப்படியே வாச மனையாளைப் பஞ்சணையில்' (தனிப்.59: 1-3)

(ப) **<u>பூவணை</u>** Pūvaṇai
**இன்பம்**
'அரிப்பறை அனுங்க ஆர்க்கும் மேகலைக் குரலோடு ஈண்டிப் புரிக்குழல் புலம்ப வைகிப் பூவணை விடுக்கலானே' (சீவக.2082: 3-4)

(ம) **<u>பூளை அணை</u>** Pūḷai aṇai
**மென்மை**
'பூளை மெல்லணை மேல் புரளும் கொலோ' (சீவக.1628: 4)

(ய) **<u>பொன் திகழ் கட்டில்</u>** Pon̲ tikal̲ kaṭṭil

(31) **அரசத்தன்மை** - royalty
'பொன் திகழ் பள்ளிக் கட்டில் புரவலன் துயில மாடே' (பெரிய.476: 5-6)

(ர) **<u>பொங்கணை</u>** (**படுக்கை**) Poṅkaṇai
**இன்பம்** - pleasure
'பூவுக இளையவர் திளைத்த பொங்கணைப் பாவுசெந் துகிலிடைப் பள்ளி போலுமே' (சூளா.756: 3-4)

(ல) **<u>மலர்ப்பள்ளி</u>** Malarppaḷḷi
**மென்மை**
'மெய்யனை திரையின் வேலை மென்மலர்ப் பள்ளி ஆன' (கம்ப.யுத்.888: 3)

**(ஒப்பு)** <u>Bed, Pillow, Couch</u>
**அன்பு, ஆடம்பரம், ஆழ் சிந்தனை, இரகசியம், உறக்கம், ஓய்வு, கடவுளின் நிறை தன்மை, தகுதி, திருமணம், நடுநிலைமை, பிரதிபலிப்பு, பிறப்பு, வளமை; இறப்பு, உடல் நலக்கேடு, கடுந்துயரம், காதல் துயரம்; இணைந்து வாழ்தல்.**

**அணை (dam) பார். 'கற்சிறை'**

**<u>அணையை விட்ட உரவுநீர் வெள்ளம்</u>**

Aṇaiyai viṭṭa uravunīr veḷḷam **(dam water flooding)**

(1) **களிப்பு, வேகம்** – joy, speed
'இரவுதான் பகலாய்த் தோன்ற எதிரெழுந்தணையை விட்ட உரவுநீர் வெள்ளம் போல ஓங்கிய களிப்பில் சென்றார்' (பெரிய.3509: 5-8)

அதர்

<u>அதர்</u> Atar (way)

(1) **அச்சம், கொடுமை** - fear, cruelty
*'துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர் அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை'* (நற்.33: 6-7)

(2) **மயக்கம் / குழப்பம்** - confusion
*'அயம்திகழ் நறுங் கொன்றை அலங்கல் அம் தெரியலான் இலங்கு எயில் எயப் பிறந்த எரிபோல, எவ்வாயும், கனைகதிர் தெறுதலின், கடுத்து எழுந்த காம்புத் தீ மலை பரந்து தலைக் கொண்டு முழங்கிய முழங்கு அழல் மயங்கு அதர் மறுகலின், மலை தலைக் கொண்டேன்'*
(கலி.150: 1-5)

(ஆ) <u>கவலை</u> Kavalai

(3) **அரியதன்மை** - rare
*'ஏர் தரலுற்ற இயக்கு அருங் கவலை'* (நற்.79: 4)

(4) **அச்சம்** - fear
*'பிறை மருள் வான் கோட்டு அண்ணல் யானை, சினம் மிகு முன்பின், வாம் மான், அஞ்சி இனம் கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை'*
(அகம்.115: 13-15)

(5) **மயக்கம்** - confusion
*'கடுவளி எடுத்த கால்கழி தேக்கிலை நெடுவிளிப் பருந்தின் வெறிஎழுந் தாங்கு, விசும்புகண் புதையப் பாஅய், பலஉடன் அகல்இடம் செல்லுநர் அறிவுகெடத் தாஅய், கவலை கரக்கும் காடு அகல் அத்தம்'*
(அகம்.299: 5-9)

(இ) <u>ஆறு</u> Āṟu

(6) **கொடுமை, வெம்மை, துன்பம்** - cruelty, heat, suffering
*'எறும்பி அளையின் குறும்பல் சுனைய உலைக்கல் அன்ன பாறை ஏறி, கொடுவில் எயினர், பகழி மாய்க்கும் கவலைத்து என்ப, அவர்தேர் சென்ற ஆறே'*
(குறு.12: 1-4)

(7) **மயக்கம்** - confusion
*'தூறுஅதர் பட்ட ஆறு மயங்கு அருஞ்சுரம்'* (கலி.5: 3)

(8) **அச்சம்** - fear
*'கரிகாய்ந்த கவலைத்தாய், கல்காய்ந்த காட்டகம், வெரு வந்த ஆறு என்னார்'* (கலி.150: 11-12)

(9) **வழி** - path
*'அறியாமையின் நெறிதிரிந்து ஒராஅது, ஆற்றுஎதிர்ப் படுதலும் நோற்றதன் பயனே'*
(பொரு. 58-59)

(ஈ) <u>நெறி</u> Neṟi

(10) **கொடுமை** - cruelty
*'கோட்டு மா வழங்கும் காட்டக நெறியே'* (ஐங்.282: 5)

(11) **அச்சம்** - fear
*'அஞ்சுவரு நெறியிடைத் தமியர் செல்மார்'* (அகம்.157: 9)

(12) **முறை** - order
*'அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே'* (புறம்.184: 5)

(உ) <u>கடம்</u> Kaṭam

(13) **துன்பம், வறட்சி, வெம்மை** - tragic, drought, heat
*'நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த் தண்ணிய ஆயினும், வெய்யமன்ற - மடவரல் இன்துணை ஒழியக் கடம் முதிர் சோலைய காடு இறந்தோர்க்கே'*
(ஐங். 328)

(ஊ) <u>அத்தம்</u> Attam

(14) **வறட்சி** - drought
*'நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை இயம் புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்'* (ஐங்.377: 1-2)

(15) **மயக்கம் / குழப்பம்** - confusion
*'நெறி மயக்குற்ற நிரம்பா நீடு அத்தம்'* (கலி.12: 7)

(16) **கொடுமை, பாதுகாப்பின்மை** - horrid, unsafe
*'வாள்கண் வானத்து என்றூழ் நீள்இடை, ஆள்கொல் யானை அதர்பார்த்து அல்கும் சோலை அத்தம் மாலைப் போகி'*
(அகம்.325: 18-20)

(எ) <u>வழி</u> Vaḻi

(17) **மயக்கம், மருட்சி** - confusion, perplexity

'வழி மயக்குற்று மருடல் நெடியான்' (பரி.தி.13: 5)

(18) பிறப்பு, வாழ்க்கை - birth, life
'வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதொருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல்' (குறள்.38)

(ஏ) புது வழிப்படுத்தல் Putu valippatuttal (find new way)

(19) அறிவாற்றல் - efficient knowledge
'சேயாறு செல்வாம் ஆயின், இடர் இன்று, களைகலம் காமம், பெருந்தோட்கு என்று, நன்றுபுரிந்து எண்ணிய மனத்தை ஆகி முரம்புகண் உடைய ஏகி, கரம்பைப் புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்!' (குறு.400: 1-5)

**அதிரல்** Atiral **(wild jasmine)**

(1) இளவேனில் - spring
'முதிரா வேனில் எதிரிய அதிரல்' (நற்.337: 3)

(2) இரவு - night
'எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்' (அகம்.157: 6)

(3) போர் / வீரம் - war / bravery
'கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி' (அகம்.215: 4-5)

(4) இன்பம் - pleasure
'நன்முகை அதிரல் போதொடு, குவளைத் தண்நறுங் கமழ்தொடை வேய்ந்த, நின் மண்ஆர் கூந்தல் மரீஇய துயிலே' (அகம்.223: 14-16)

(5) பலி / தியாகம், அழிவு - sacrifice, destruction
'உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல் நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்' (அகம்.289: 2-3)

**அந்தரத்து எழுதிய எழுத்து** Antarattu elutiya eluttu **(letter written in the sky)**

(1) இன்மை - nothingness, negation, non-existance
'அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்' (தொல்.1092: 20-21)

**அம்பறாத்தூணி** **(quiver)** பார். 'தொடை'

**அம்பி** **(boat)** பார். 'நாவாய்'

**அம்பு** (arrow) பார். 'தொடை'

**அமணர் நற்குணங்களிலிருந்து தீக்குணத்தவராதல்** Amaṇar narkuṇaṅkaḷiliruntu tīkkuṇattavarātal

(1) தீமை, அழிவு - evil, destruction
'முந்தைய உரையில் கொண்ட பொறைமுதல் வைப்பும் விட்டுச் சிந்தையில் செற்றம் முன்னாம் தீக்குணத் தலை நின்றார்கள்' (பெரிய.2537: 5-8)

**அமணர் தம்மில் மாறுபாடு கொண்டு ஊறு செய்தல்** Amaṇar tammil mārupāṭu koṇṭu ūru ceytal

(1) தீமை, அழிவு - evil, destruction
'வந்தவாறு அமணர் தம்மில் மாறுகொண்டு ஊறு செய்ய' (பெரிய.2537: 3-4)

**அமணர் தமக்குத் தாமே சினந்து கலகம் செய்தல்** Amaṇar tamakkut tāmē cinantu kalakam ceytal

(1) தீமை, அழிவு - evil, destruction
'கந்தியர் தம்மில் தாமே கனன்றெழு கலாங்கள் கொள்ள' (பெரிய.2537: 1-2)

**அமரர்** Amarar **(devas)**

(1) இறவாமை - immortality
'சாவா மரபின் அமரர்க்காச் சென்றநின்' (பரி. 2: 71)

(2) சிறப்பு - greatness
'அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன்' (பரி. 5: 51)

(3) வீரம் - valour
'பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த' (புறம்.55: 3)

(4) புகழ் - fame
'செல்லா நல்லிசை அமரர் காப்பின்' (பட். 184)

(ஆ) தேவர் Dēvar

(5) **உயர்வு, மேன்மை** - greatness
'தேவரனையர் புலவருந் தேவர் தமரனையர் ஓரூர் உறைவார் - தமருள்ளும் பெற்றன்னர் பேணி வழிபடுவார் கற்றன்னர் கற்றாரைக் காத லவர்' (நான். 76)

(6) **தெய்வத்தன்மை** - divine
'.. .. .. .. பெருவரைமேற் றேன்றேவர்க் கோக்கு மலைநாட! வாரலோ வான்றேவர் கொட்கும் வழி' (திணை.10: 2-4)

(இ) வானவர் Vāṉavar

(7) **அழிவின்மை**
'மாயாத வானவர்க்கும் மற்று ஒழிந்த மன்னுயிர்க்கும்' (கம்ப.ஆரண்.52: 2)

**அமரர் அலர்மழை சிந்துதல்** Amarar alarmaḻai cintutal

(1) **நன்மை** – goodness / blessing
'ஏர் அணங்கு இளம்பெரும் தேவி நாளுறச் சீர் அணங்கு அவிர் ஒளித் திவிட்டன் தோன்றினான் நீர் அணங்கு ஒளிவளை நிரந்து விம்மின ஆர் அணங்கு அலர்மழை அமரர் சிந்தினார்' (சூளா.72)

**அமுதசுரபி** Amutacurapi **(bowl of plenty)**

(1) **பெருக்கம், குறைவின்மை** - increase / not wanting
'ஆபுத்திரன் கை அமுதசுரபி என்னும் மாபெரும் பாத்திர மடக்கொடி கேளாய்' (மணி.11: 44-45)

(ஆ) ஓடு Oṭu

(2) **வளமை, சுரத்தல்** – prosper, yield
'நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது வாங்குநர் கையகம் வருத்துதலல்லது தான்றொலை வில்லாத் தகைமையதென்றே' (மணி.14: 13-15)

(இ) பாத்திரம் Pāttiram

(3) **பசித்துயர் தீர்த்தல், புரத்தல் / ஓம்புதல்** – provide, protect
'தன் கைப்பாத்திரம் அவள்கைக் கொடுத்ததால் .. .. .. ஆங்கவர் பசிதீர்த்து அந்நாடொட்டு வாங்குகை வருந்த மன்னுயிர் ஓம்பலின்' (மணி.14: 16, 22-23)

(4) **கொடை, ஈகை** - benevolence
'பாத்திர தானமும் பைந்தொடி செய்தியும்' (மணி.19: 49)

(ஈ) பிச்சைப் பாத்திரம் Piccaip pāttiram

(5) **குறைவுபடாத் தன்மை**
'பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஏற்ற பிச்சைப் பாத்திரப் பெருஞ்சோற்று அமலை அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன் திறத்து வழிப்படூஉம் செய்கை போல வாங்குகை வருந்த மன்னுயிர்க் களித்துத் தான் தொலைவில்லாத் தகைமை நோக்கி' (மணி.17: 1-6)

(உ) கடிஞை Kaṭiñai

(6) **தெய்வத்தன்மை**
'தீதின்றாக கோமற் கீங்கீ தையக் கடிஞை அம்பல மருங்கோர் தெய்வம் தந்தது திப்பிய மாயது யானைத் தீநோய் அரும்பசி கெடுத்த தூறுடை மாக்கட்கு உயிர்மருந்து இதுவென' (மணி.19: 150-154)

**அமுதம் / அமுது** Amutam **(ambrosia)**

(1) **சுவை** - taste
'ஏனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமுதம் புரையுமால் எமக்கு என' (தொல்.1092: 12-13)

(2) **உப்பு, உயிர்** - salt, life
'கடல் விளை அமுதம் பெயற்கு ஏற்றாஅங்கு உருகி உகுதல் அஞ்சுவல்' (நற்.88: 4-5)

(3) **பால்** - milk
'.. .. .. புதல்வர்ப் பயந்து பணைத்து ஏந்து இளமுலை அமுதம் ஊற' (மது. 600-601)

(4) **காம இன்பம்** – pleasure

'ஏந்தொத் தலர்ந்த முலையின் அமிர்தன்ன சாயல் வேந்தற்கு அமுதாய் விளையாடுதற்கு ஏதுவாமே' (சீவக.பதிகம்.8: 3-4)

(ஆ) <u>அமுது உண்ணல்</u> Amutu uṇṇal (to eat ambrosia)

(5) **நிலைபேறு, நீண்டநாள் வாழ்வு** - stability, long life
'அமுதம் உண்க, நம் அயல் இலாட்டி' (நற்.65: 1)

(6) **செல்வம்** - wealth
'இசையின் கொண்டான், நசை அமுது உண்க என' (புறம்.399: 21)

(7) **இறவாமை** - immortality
'விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்' (சிலப்.12: 22)

(இ) <u>அமிழ்து / அமிழ்தம்</u> Amiltu/Amiltam (ambrosia)

(8) **இனிமை** - sweet
'அமிழ்து பொதி செந் நா' (குறு.14: 1)

(9) **பெறற்கருமை** - rare
'அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆக' (குறு.83: 1)

(10) **நீர்** - water
'அமிழ்து திகழ் கருவிய கணமழை தலைஇ' (பதி.17: 12)
**உப்பு, உயிர்** - salt, life
'கடல் விளை அமிழ்தின் கணம் சால் உமணர்' (அகம்.169: 6)

(11) **இன்பம்** - pleasure
'அமிழ்தத் தன்ன கமழ்தார் மார்பின்' (அகம்.332: 13)

(12) **மழை** - rain
'வான் நின்று உலகம் வழங்கி வருதலால் தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று' (குறள்.11)

(13) **உணவு** - food
'செம்முது செவிலியர் கைம்முதல் தழீஇய சாலி வாலவிழ் பாலொடு கலந்த தமனிய வள்ளத்து அமிழ்தம் அயிலாள்' (பெருங்.உஞ்.54: 25-27)

(14) **பால்** - milk
'அம்பொன் வள்ளத்து அமிழ்துபொதி அடிசில்' (பெருங்.உஞ்.46: 294)

(15) **அருள்** – grace
'பொருது போந்துலாம் போதரித் தடங்கண் அமிழ்து சேர்ந்தன அகஇதழ் நாண் இறக்கமொடு' (பெருங்.இலா.3: 99-100)

(ஈ) <u>அமிர்து / அமிர்தம்</u> Amirtu / Amirtam

(16) **இனிமை** - pleasure
'அமிர்து பொதி துவர்வாஅய்' (பதி.16: 12)
**இறவாமை** - immortality
'வாயடை அமிர்தம் நின் மனத்தகத்து அடைத்தர, மூவா மரபும் ஓவா நோன்மையும் சாவா மரபின் அமரர்க்காச் சென்ற நின்' (பரி. 2: 69-71)

(17) **இன்பம், உவகை** - pleasure
'அரிவையர் அமிர்த பானம் உரிமை மாக்கள் உவகை அமிர்து உய்ப்ப' (பரி.8: 120-121)

(18) **காம இன்பம்** - pleasure
'சென்னித் தாமத்துப் பன்மலர்த் தாதுக இரந்துபின் எய்தும் இன்சுவை அமிர்தம் புணரக் கூடின் போகமும் இனிதென' (பெருங்.இலா.7: 89-91)

(19) **சொல்லினிமை** – sweet words
'எடுத்தனன் தழீஇ இன்னுரை அமிர்தம் கொடித்தேர்த் தானைக் கோமான் கூறி' (பெருங்.மகத.26: 88-89)

(20) **ஊடல்** - sulking
'தணப்பில் வேட்கை தலைத்தலை சிறப்ப உணர்ப்புள்ளுறுத்த ஊடல் அமிர்த்தது' (பெருங்.இலா.11: 20-21)

(21) **அறம்** - virtue
'புழுகுருக மெய்காட்டிப் பொல்லாத போக்கி அழகுருவு கொண்டாள் அற அமிர்தம் உண்டாள்' (நீலகேசி.133: 3-4)

(22) **குணமாலை** – acharacter in the epic Civaka cintamaṇi
'விண்ணோர் உலகின்னொடு மிந்நிலத்து இல்லாப் பெண்ணார் அமிர்தே அவன் பெற்ற அமிர்தே' (சீவக.4: 1065.3-4)

(உ) <u>அங்கணத்துள் உக்க அமிழ்து</u>

(23) **வீண் / பயனின்மை**

'அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தார் அல்லார்முன் கோட்டி கொளல்' (குறள்.720)

(ஊ) புல்லிடை உகுத்த அமுது
வீண் / பயனின்மை
'கல்வியும் இளமையும் கணக்கு இல் ஆற்றலும் வில் வினை உரிமையும் அழகும் வீரமும் எல்லை இல் குணங்களும் பரதற்கு எய்திய புல்லிடை உகுத்த அமுது ஏயும்போல் என்றாள்' (கம்ப.அயோ.155)

(ஊ) மூவா மருந்து Mūvā maruntu
(24) முதுமையின்மை
'மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலின்' (சிலப்.2: 46)

(ஒப்பு) Ambrosia நிலைபேறு

**அயிர்** Ayir **(incense)**

(1) **வெண்மை** – white
'குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு' (சிலப்.4: 35)

**அயிராணி** Ayirāni **(wife of Indiran)**

(1) **கற்பு, புகழ்** – chastity, fame
'அரும்பெறல் கற்பின் அயிராணி அன்ன பெரும்பெயர்ப் பெண்டிர் எனினும்' (நாலடி.381: 1-2)

**அயிரை** Ayirai **(a small fish)**

(1) **தலைவி** - heroine
'குண கடற் திரையது பறைதபு நாரை .. .. .. .. அயிரை ஆர் இரைக்கு அணவந்தாஅங்குச் சேயள் அரியோட் படர்தி' (குறு.128: 1-4)
(2) **சிறிய அளவு** - small
'சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையால் பெரிய பொருள்கருது வாரே - விரிபூ விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு வராஆல் வாங்கு பவர்' (பழமொழி. 372)

**அரக்கர் (Asura) பார். 'அவுணர்'**

**அரக்கு** Arakku **(shellac)**

(1) **சிவப்பு நிறம்** - red colour
'அவ் வளை வெரிநின் அரக்கு ஈர்த்தன்ன செவ் வரி இதழ சேண் நாறு பிடவின்' (நற்.25: 1-2)
(2) **மென்மை, அழிவு** - tender
'மெல் அரக்கின் உருகிஉக வெந்தழாயில் வேய்கேனோ' (கம்ப.சுந்.324: 4)

**அரக்கு இல்** Arakku il **(wax house)**

(1) **அழிவு** - destruction
'குரைத்துக் கொளப்பட்டார் கோளிழுக்குப் பட்டுப் புரைத்தெழுந்து போகினும் போவர் - அரக்கில்லுள் பொய்யற்ற ஐவரும் போயினார் இல்லையே உய்வதற் குய்யா விடம்' (பழமொழி. 234)
(2) **பொய்ம்மை** - deceiving
'ஒட்டாக் கிளைஞரை நட்பினுள் கெழீஇய ஐயிரு பதின்மர் அரக்கின் இயற்றிய பொய் இல் அன்ன பொறியிவன் புணர்க்கும்' (பெருங்.உஞ்.33: 8-10)

(ஆ) அரக்கு இல் எரி சூழ்தல்
Arakku il eri cūḻtal (burning of the wax house)
(3) **அழிவு, சூழ்ச்சி** - destruction, intrigue
'ஐவர் என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா, கைபுனை அரக்கு இல்லைக் கதழ் எரி சூழ்ந்தாங்கு' (கலி. 25: 1-2)

**அரசமரம் (pipal tree) பார். 'அரை மரம்'**

**அரசன் (king) பார். 'இறை'**

**அரண் (fort) பார். 'எயில்'**

**அரம்** Aram **(saw)**

(1) **இடையூறு / தடை, திண்மை** - obstruction, firmness
'கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன் அடுமுரண் தேய்க்கும் அரம்' (குறள்.567)

(2) **அழிவு** - destruction
'அரம் பொருத பொன் போல தேயும் உரம்பொழுது உட்பகை உற்ற குடி' (குறள். 888)
(3) **கூர்மை, பண்பின்மை** - sharp, bad conduct
'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர் மக்கட்பண்பு இல்லா தவர்' (குறள்.997)
(4) **சீராகுதல்** - reform
'தராதலத்தின் உள்ள தமிழ்க் குற்றம் எல்லாம் அராவும் அரம் ஆயிற்று அன்றே இராவணன் மேல்' (கம்ப.பால.4: 1-2)

**(ஒப்பு)** File, Saw **உணர்வுகள், கடும் உழைப்பு, பண்பட்ட கருத்துகள், மூடநம்பிக்கையற்ற எண்ணங்கள், விடாமுயற்சி.**

**அரலை** Aralai **(a flower)**
(1) **வருத்தம்** - suffer
'அரலை மாலை சூட்டி, ஏமுற்றன்று - இவ் அழுங்கல் ஊரே' (குறு.214: 6-7)

**அரவு (snake) பார். 'பாம்பு'**

**அரவு உமிழ் மணி** Aravu umil̲ maṇi **(snake's gem)**
(1) **ஒளி** - light
'அருவிதந்த அரவு உமிழ் திருமணி பெருவரைச் சிறுகுடி மறுகுவிளக் குறுத்தலின், இரவும் இழந்தனள்' (அகம்.192: 11-13)
(2) **எச்சரிக்கை / விலக்கு** - caution/avoidance
'அரவு உமிழ் மணியின் குறுகார்' (புறம்.294: 8)

**அரிமா** Arimā **(lion)**
(1) **அச்சமின்மை** - fearlessness
'உரும்பு இல் உள்ளத்து அரிமா வழங்கும்' (நற்.112: 4)
(2) **வலிமை** - strength
'அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்' (பட். 298)
(3) **கொள்கை** - principle
'உடுக்கை உலறி உடும்பழிந்த கண்ணும் குடிப்பிறப்பாளர் தம் கொள்கையில் குன்றார் இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா கொடிப்புல் கறிக்குமோ மற்று' (நாலடி.141)
(4) **முயற்சி** - effort, perseverence
'ஈனமாய் இல்லிருந்து இன்றி விளியினும் மானம் தலைவருவ செய்பவோ - யானை வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்தாள் அரிமா மதுகை அவர்' (நாலடி.198)
(5) **செயல்திறன் / தலைமை** – efficience, headship
'அரிமா வளைந்த நரிமாப் போல இகன்முனை வேட்டுவர் இடுக்கண் செய்ய' (பெருங்.உஞ்.56: 25-26)

**(ஆ) அரிமான்** Arimān̲
(6) **வீரம்** - valour / powerful
'வியல் உளை அரிமான் மறம் கெழு குருசில்!' (பதி.88: 15)
(7) **சினம்** - anger
'செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால்' (சிலப்.12: 10.2)

**(இ) உளைமான்** Uḷaimān̲
(8) **வலிமை** - strength
'உளைமான் துப்பின், ஓங்கு தினைப் பெரும் புனத்து' (அகம்.102: 1)

**(ஈ) மடங்கல்** Maṭaṅkal
(9) **சினம்** - anger
'மடங்கலின் சினைஇ, மடங்கா உள்ளத்து' (புறம்.71: 1)
**வன்மை / வலிமை** - strength
'சடங்கலா மகட்கிள மாந்தளிரே முத்தம் பொரியச் சகிக்குமாவன் மடங்கலா னையைப் பாயுமாறு போல் சீறுதென்றல் வருமா' (தனிப்.714: 1-2)
(10) **வெற்றி**
'வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து' (பெரிய.643: 1-2)

**(உ) அரி** Ari
**சினம்** – anger

'பொரு கரியொடு சின அரியிடை' (பெரிய.10.82)

(11) கம்பீரம்
'ஆளர் ஐவர் தமைத்தோய்ந்த கற்புடைய பாஞ்சாலி அணைந்த வீமன் வாள் அரிபோல் அருகிருக்க மலய வெற்பில்' (தனிப்.484: 3-5)

(ஊ) <u>அரிக்குருளை</u> Arikkuruḷai

(12) சிறப்பு, புகழ் – greatness, fame
'சிறந்த நல்தவத்தால் தேவி திருமணி வயிற்றின் மைந்தன் பிறந்தனன் உலகம் போற்றப் பேர் அரிக்குருளை அன்னான்' (பெரிய.1: 3.17)

(எ) <u>அரியேறு</u> Ariyēṟu

(13) எழுச்சி - rise, active
'ஆர்கொல்பொர அழைத்தார் என்று அரியேற்றில் கிளர்ந்து' (பெரிய.9.11)

(14) ஆற்றல் – strong, powerful
'செங்கண்வயக் கோளரியேறு அன்ன திண்மைத் திண்ணனார்' (பெரிய.10.56)

(ஏ) <u>சீயம்</u> Cīyam

வலிமை, மிகுசினம் - strength, anger
'சேண் உயர் கொடியது வய வெஞ் சீயமால்' (கம்ப.யுத்.1322: 2)

(15) உயர்வு, மேன்மை
'நீ தரக் கொள்வென் யானே இதற்கு இனி நிகர் வேறு எண்ணின் நாய் தரக் கொள்ளும் சீயம் நல் அரசு என்று நக்கான்' (கம்ப.யுத்.943: 3-4)

(ஐ) <u>சீயக்கொடி</u> Cīyakkoṭi

(16) வெற்றி - victory
'வீணை என்று உணரின் அஃது அன்று விண் தொடும் சேண் உயர் கொடியது வய வெஞ் சீயமால்' (கம்ப.யுத்.1322: 1-2)

(ஒ) <u>சிங்கம்</u> Ciṅkam

(17) பெருமை – proud
'சிங்கம் அனையார் திருமுடியின் மேற்குவித்த' (பெரிய.28. 172)
தலைமை - headship
'திடமுக் கடவா ரணமுகைத்த தேவே தேவ சிங்கமே' (தனிப்.478: 13-14)

(18) வெற்றி - victory
'திருந்தலரி கலையடக்கும் கிளுவைமரு தப்பசெய சிங்கம் என்னை' (தனிப்.722: 1-2)

(19) பேராற்றல் – strong, powerful
'தீரசந்தி ரகாவி யிடக்கயா சிங்கவுத்தண்ட தூர்த் தாண்ட னேரண' (தனிப்.738: 5-6)

(ஒப்பு) <u>Lion</u> அரச மேன்மை, ஆண்மை, ஆரோக்கியம், ஆற்றல், காலம், கிறித்து, தலைமை, தூய்மை, நடுநிலைமை, நன்றி, பரிவு, பலம், பாதுகாப்பு, புகழ், பூமி, பெருந்தகைமை, மீட்பு, வலிமை, வளமை, விழிப்புணர்வு, வெற்றி; ஆபத்து, இறப்பு, உணர்ச்சிவேகம், கடுஞ்சீற்றம், காட்டியல்பு, கீழுலகம், கொடுஞ்செயல், செருக்கு, பாலியல், பேராசை; தீமையை விரட்டுதல்.

அருகம்புல் **(cynodon grass)** பார். **'அறுகை'**

## <u>அருங்கலம்</u> Aruṅkalam (crown)

(1) அரசமைதி - royalty
'அருங்கலம் உலகின் மிக்க அரசர்க்கே உரிய அன்றிப் பெருங்கலம் உடையரேனும் பிறர்க்கவை பேசலாகா' (சூளா.1015: 1-2)

## <u>அருந்ததி</u> Aruntati (a star)

(1) கற்பு - chastity
'அருந்ததி அனைய கற்பின்' (ஐங்.442: 4)

(ஆ) <u>செம்மீன்</u> Cemmīn

(2) சிறப்பு - greatness
'விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த செம்மீன் அனையள்'

(பதி. 31: 27-28)

(இ) <u>மீன்</u> Mīn

(3) **கற்பு** - chastity
*'வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து வாழ்நாள் அறியும் வயங்குசுடர் நோக்கத்து மீனொடு புரையும் கற்பின்'* (பதி. 89: 17-20)

(ஈ) <u>சாலினி</u> Cālini

(4) **கற்பு, கடவுட்டன்மை** - chastity, divinity
*'வடவயின், விளங்கு ஆல், உறை எழு மகளிருள் கடவுள் ஒரு மீன் சாலினி ஒழிய, அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்; மறு அறு கற்பின் மாதவர் மனைவியர் நிரைவயின் வழாஅது நிற் சூலினரே'*
(பரி. 5: 43-47)

(உ) <u>வடமீன்</u> Vaṭamīn

(5) **கற்பு, கடவுட்டன்மை** - chastity, divinity
*'வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்'* (கலி. 2: 21)

(6) **நன்மை, கற்பு, குற்றமின்மை**
*'தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்'* (சிலப்.1: 27)

(7) **தூய்மை**
*'வழுவில் வாலொளி வடமீன் காட்டி'* (பெருங்.உஞ்.48: 97)

(ஊ) <u>வானத்து அணங்கு அருங்கடவுள்</u> Vānattu aṇaṅku aruṅ kaṭavuḷ

(8) **அழகு** - beauty
*'.. .. .. .. வானத்து அணங்கு அருங் கடவுள் அன்னோள்'*
(அகம்.16: 17-18)

(எ) <u>சிறுமீன்</u> Cirumīn
**கற்பு** - chastity
*'பெருநல் வானத்து வடவயின் விளங்கும் சிறுமீன் புரையும் கற்பின்'* (பெரும். 302-303)

(ஏ) <u>சாலி</u> Cāli
**கற்பு** - chastity
*'.. .. .. .. வானத்துச் சாலி ஒருமீன் தகையாளைக் கோவலன்'* (சிலப்.1: 50-51)

(ஐ) <u>வட நெடு வான்மீன்</u> Vaṭa neṭu vānmīn
**கற்பு**
*'மனைமருங் கடகு மாள வடநெடு வான மீனே அனையவர்'* (பெரிய.13.13)

(ஒ) <u>விழுமீன்</u> Viḻumīn
**கற்பு**
*'வடபால் மருங்கில் சுடர்மீக் கூரிய கற்புடை விழுமீன் காணக் காட்டி'* (பெருங்.இலா.3: 125-126)

## <u>அருந்ததி</u> Aruntati **(a mountain)**

(1) **பெருமை / சிறப்பு, கடவுட்டன்மை**
*'சுடர்த் தொகைய தொழுவோர்க்கு எல்லாம் வரன் அதிகம் தரும் தகைய அருந்ததி யாம் நெடு மலையை வணங்கி அப்பால்'* (கம்ப.கிட்.761: 6-8)

## <u>அருந்திறல் பிரிந்த அயோத்தி</u>
Aruntiṟal pirinta ayōtti **(Ayodya left by Rama)**

(1) **துன்பம்** - sorrow
*'அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப் பெரும்பெயர் மூதூர் பெரும் பேதுற்றதும்'* (சிலப்.13: 65-66)

## <u>அரும்பெறல் மாமணி பெருங்கடல் வீழ்த்தோர்</u>

(1) **இழப்பு, துன்பம்**
*'ஆங்கவள் உரைகேட்டு அரும்பெறன் மாமணி ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று'* (மணி.2: 72-73)

## <u>அருவி</u> Aruvi **(cascade)**

(1) **ஒளி, வெண்மை** - bright, white
*'வாலியோன் அன்ன வயங்கு வெள் அருவி'* (நற்.32: 2)

(2) **மிகுதி, பெருக்கம்** - excess, increase
'நயம் பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது, கண்ணீர் அருவியாக அழுமே, தோழி!' (நற்.88: 7-9)

(3) **தூய்மைப்படுத்துதல்** - purification
'கல் மிசை அருவியின் கழூஉஞ் சாரல்' (நற்.151: 4)

(4) **விரைவு** - speed
'குன்றுஇழி அருவியின் வெண்தேர் முடுக' (குறு.189: 2)

(5) **தூய்மை** - pure
'.. .. .. .. .. பாம்பின் தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவி' (குறு.235: 1-2)

(6) **வளமை** - prosperous
'மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி அருவியின் விளைக்கும் நாடனொடு' (குறு.371: 2-3)

(7) **உயர்வு** - high
'மாஅல் அருவித் தண் பெருஞ் சிலம்ப!' (ஐங்.238: 3)

(8) **அழகு** - beauty
'வாள் வனப்பு உற்ற அருவி' (ஐங்.312: 3)

(9) **அசைவு, இயக்கம்** - movement, action
'வரை மிசை இழிதரும் அருவியின், மாடத்து வளி முனை அவிர்வரும் கொடி நுடங்கு தெருவில்' (பதி. 47: 3-4)

(10) **வளம்** - wealth
'நெறி நீர்அருவி அசும்பு உறு செல்வம்' (பரி .8: 128)

(11) **தண்மை** - cool
'காதலர் - எயிறு ஏய்க்கும் தண் அருவி நறு முல்லை' (கலி. 32: 16)

(12) **உயர்வு / சிறப்பு** - high / excellence
'இலங்கும் அருவித்து; இலங்கும் அருவித்தே; வானின் இலங்கும் அருவித்தே' (கலி. 41: 18-19)

(ஆ) <u>அருவி ஒலித்தல்</u> Aruvi olittal (resounding waterfall)

(13) **மகிழ்தல்** - enjoyable
'நெடு நீர் அருவிய கடும் பாட்டு ஆங்கண்; பிணி முதல் அரைய பெருங் கல் வாழைக் கொழு முதல் ஆய் கனி மந்தி கவரும் நல் மலை நாடனை நயவா, யாம், அவன் நனி பேர் அன்பின், நின் குரல் ஓப்பி, நிற் புறங்காத்தலும் காண்போய், நீ?' (நற். 251: 1-6)

(இ) <u>அருவியாடுதல்</u> Aruviyāṭutal (bathe in the waterfall)

(14) **இன்பம், இனிமை, மகிழ்ச்சி** - pleasure, sweetness, happyness
'ஆர்கலி வெற்பன் மார்பு புணைஆக, கோடுஉயர் நெடுவரைக் கவாஅன் பகலே, பாடுஇன் அருவி ஆடுதல் இனிதே' (குறு.353: 1-3)

(15) **புத்துணர்ச்சி** - freshness
'விண் தோய் வரை, பந்து எறிந்த அயா வீட, தண் தாழ் அருவி, அரமகளிர் ஆடுபவே' (கலி.40: 22-23)

(ஒப்பு) <u>Waterfall</u> **தொடர் இயக்கநிலை; நிலையாமை.**

<u>அரைத்த மஞ்சள்</u> Araitta mañcaḷ

(1) **அழிதல்** - perish
'நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே நன்றி இல்வினையே துணிந்து எய்த்தேன் அரைத்த மஞ்சள் அதாவதை அறிந்தேன் அஞ்சினேன் நமரானவர் தம்மை' (சுந்.தேவா.185: 1-4)

**மே.காண். 'மஞ்சள்'**

<u>அரைமரம்</u> Araimaram **(pipal tree)**

(1) **பௌத்த சமயம்** - Buddhism
'முழுத்தாளதாய்ப் பள்ளி முற்றத்தோர் அரைமரத்தின் குழுக்கொம்பர் பிடித்தொருகாற் குஞ்சித்து நின்றுதான்' (நீலகேசி.269: 3-4)

**அலவன் (crab) பார். 'களவன்'**

<u>அலவனை அன்னம் அருளல்</u>

Alavaṉai aṉṉam aruḷal

(1) **நன்மை** – goodness

'ஓடும் திரைகள் உதைப்ப உருண்டுருண்டாடும் அலவனை அன்னம் அருள்செய நீடிய நெய்தலம் கானல் நெடுந்தகை வாடி இருந்தான் வருங்கல நோக்கா' (சீவக. 516)

**அலை** (wave) பார். **'திரை'**

**அவரை பூத்தல்** Avarai pūttal **(flowering of avarai – a bean)**

(1) **எதிர்பார்ப்பு, பனிக்காலம்** - hope, winter
'கொழுங்கொடி அவரை பூக்கும் அரும்பனி அச்சிரம் வாரா தோரே' (குறு.82: 5-6)

**அவல்** Aval **(ditch, valley)**

(1) **தாழ்ச்சி, இழிநிலை** - degradation
'சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே; அவல் இழியினும், மிசை ஏறினும் அவணது அறியுநர் யார்?' (புறம்.102: 2-5)

**அவீசி** Avīci **(a city)**

(1) **தீமை** - evil
'வீய்ந்தது இன்மையின் வெய்ய அவீசிதான் காந்தி பாலி இரங்கக் கலகனைப் போழ்ந்து கோடல் பொருந்தலது ஒக்குமே' (நீலகேசி.546: 2-4)

**அவுணர்** Avuṇar **(asura)**

(1) **கொடுமை, கொலை, மாயம்** - cruelty, murder, illusion
'கொன்று உணல் அஞ்சாக் கொடுவினைக் கொல்தகை மாய அவுணர் மருங்கு அறத் தபுத்த வேல்' (பரி.5: 6-7)

(ஆ) **அரக்கர்** Arakkar

(2) **கொடுமை / வன்மை** - cruelty
'வல் அரக்கரின் மால் வரை போய் விழுந்து' (கம்ப.அயோ.511: 1)

(3) **துன்பம்** - sorrow
'வேதனை அரக்கர் ஒரு மாயை விளைவித்தார்' (கம்ப.கிட்.864: 1)

(4) **ஆற்றல் / வலிமை** – power, strength
'திண் திறல் அரக்கர்தம் செருக்குச் சிந்துவான்' (கம்ப.சுந்.1057: 1)

**அழல்** (fire) பார். **'அங்கி', 'நெருப்பு'**

**அழல் பட்ட புண்ணில் அருவி ஆரம் படுதல்** Aḻal paṭṭa puṇṇil aruvi āram paṭutal

(1) **துன்பம் நீங்குதல்** - relief
'கட்டழல் கதிய புண்ணில் கருவரை அருவி ஆரம் பட்டது போன்று நாய்கன் பரிவுதீர்ந்து இனியர் சூழ' (சீவக. 583: 1-2)

**அளை** Aḷai **(cave)**

(1) **பாதுகாப்பு** - safety
'எய்ம் முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின் செய்யும் மேவல் சிறுகட் பன்றி .. .. .. .. .. .. பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென, .. .. .. .. .. .. கல் அளைப் பள்ளி வதியும் நாடன்!' (நற்.98: 1-7)

(2) **இருள்** - darkness
'ஏ கல் அடுக்கத்து இருள் அளைச் சிலம்பின்' (அகம்.52: 5)

(3) **புலப்பாடின்மை** - invisible
'மாய இருள் அளை மாய் கல் போல' (அகம்.258: 7)

(ஆ) **முகை** Mukai

(4) **இருள்** - darkness
'ஏ கல் அடுக்கத்து இருள் முகை இருந்த' (நற்.116: 10)

(5) **எதிரொலி** - echo
'பாடு இமிழ் விடர் முகை முழங்க' (நற்.156: 9)

(6) **மறைதல்** - to hide
'விடர் முகைச் செறிந்த வெஞ் சின இரும் புலி' (நற்.158: 5)

(7) **அச்சம்** - fear
'அஞ்சு வரு விடர் முகை ஆர் இருள் அகற்றி' (அகம்.272: 4)

(இ) **முழை** Muḻai

(8) **எதிரொலி** - echo

'மத நனி வாரணம் மாறுமாறு அதிர்ப்ப, எதிர்குதிர் ஆகின்று ஆர்ப்பு, மலை முழை'
(பரி. 8: 20-21)

(ஈ) <u>வரை கிழிப்பு</u> Varai kilippu
(9) இருள் - darkness
'வரை கிழிப்பன்ன மை இருள் பரப்பி' (நற்.154: 2)

(ஒப்பு) <u>Cave, Cavern</u> இதயம், இரகசியம், உலகம், கடவுளர் உறைவிடம், கருவறை, தொடக்கம், நிலைபேறு, பாதுகாப்பு, பிறப்பு, மறுபிறப்பு, மறைவிடம், மனித அறிவு, மீட்பு, வளமை; இருள், இறப்பு, எச்சரிக்கை, கீழுலகத்தின் வாயில், சூழ்ச்சி, புதைவு, பொய்ம்மை, மயக்க நிலை.

**<u>அழற்குட்டம்</u>** Alarkuttam
(1) சினம் - anger
'ஈண்டழற் குட்டம் போல வெரியெழத் திருகி நோக்கி'
(சீவக.1079: 1)

**<u>அற்றவர் அருநிதியம் பெறுதல்</u>**
(1) மகிழ்ச்சி - joy
'அற்றவர்கள் அருநிதியம் பெற்றார் போல் அருமறையோர் முற்றவுளம் களிகூர முன்னின்று கூத்தாடி'
(பெரிய.25.18)

**<u>அறல்</u> (மணல்) Aral (black sand)**
(1) நுண்மை - minute
'நுண்ணறல் போல நுணங்கிய வைங்கூந்தல்' (ஐந்.ஐம்.27: 2)

**<u>அறுகை</u> Arukai (cynodon grass)**
(1) பிணிப்பு - bond
'மணி வார்ந்தன்ன மாக்கொடி அறுகைப் பிணங்கு அரில் மென்கொம்பு பிணையொடு மாந்தி' (குறு.256: 1-2)
(2) வளமை - fruitful
'கொழுங்கொடி அறுகையும் குவளையும் கலந்து விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப் பாருடைப்பனர் போல் பழிச்சினர் கைதொழ ஏரொடு நின்றோர் ஏர்மங்கலமும்' (சிலப்.10: 132-135)

(ஆ) <u>அறுகு</u> Aruku
(3) வளம் - thrive
'அறுகு சிறுபூளை நெல்லொடுதூஉய்ச் சென்று'
(சிலப்.9: 43)

(இ) <u>புண்ணியப் புல்</u> Punniyap pul
(4) உயர்வு, மதிப்பு
'வெண்ணிற மலரும் தண்ணறும் சாலியும் புண்ணியப் புல்லும் பொன்னொடு முறைமையின்'
(பெருங்.இலா.4: 152-153)

**<u>அறுபது</u>** Arupatu
(1) தாத்துவிகம் - concept
'அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நான்கும் துறுபறித்து அளைய நோக்கிச் சொல்லிற்று ஒன்றாகச் சொல்லார்'
(சுந்.தேவா.926: 1-2)

**<u>அறுமீன்</u> Arumin (a star)**
(1) உயர்வு - high
'அறுமீன் பயந்த அறம் செய் திங்கள் செல் சுடர் நெடுங்கொடி போல' (நற்.202: 9-10)

(ஆ) <u>ஆரல்மீன்</u> Aralmin
(2) அழகு - beauty
'அரவுக்கண் அணியுறழ் ஆரல்மீன் தகையொப்ப' (கலி. 64: 4)

(இ) <u>ஆஅல்</u> Āal
(3) சிறப்பு - greatness
'அகல் இரு விசும்பின் ஆஅல் போல' (மலை. 100)

(ஒப்பு) <u>Star</u> கடல் தெய்வங்கள், பால் வேறுபாடற்ற ஒற்றுமை.

**<u>அறுமூன்று</u>** Arumūnru
(1) வித்தைகள் - knowledge
'அறுமூன்றும் நான்மூன்றும் ஆனார் போலும்'
(திருநா.தேவா.820: 2)

**அறை** Arai **(cow-shed)**

(1) **வளம்** - fertile
'துறுகாழ் வல்சியர் தொழுஅறை வெளவி, கன்றுடைப் பெருநிரை மன்றுநிரை தரூஉம், நேரா வன்தோள் வடுகர் பெருமகன், பேர்இசை எருமை நல்நாட்டு உள்ளதை' (அகம்.253: 16-19)

**அன்றில்** Anril **(a bird)**

(1) **பிரிவின்மை** - inseperable
'ஒன்று இல் காலை அன்றில் போலப் புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை' (நற்.124: 1-2)

(2) **காதல்** - love
'இன் துணை அன்றில் இரவின் அகவாவே' (கலி.131: 28)

(3) **தலைவி** - heroine
'தெண்கடல் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்து ஒண் தடங்கண் டுஞ்சற்க ஒள்ளிழாய் நண்படைந்த சேவலும் தன்னருகில் சேக்குமால் என்கொலோ பூந்தலை அன்றில் புலம்பு' (ஐந்.ஐம்.41)

(ஆ) **சேவல் (ஆண் அன்றில்)** Cēval

(4) **தலைவன்** - hero
'தெண்கடல் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்து ஒண் தடங்கண் டுஞ்சற்க ஒள்ளிழாய் நண்படைந்த சேவலும் தன்னருகில் சேக்குமால் என்கொலோ பூந்தலை அன்றில் புலம்பு' (ஐந்.ஐம்.41)

**அன்னம்** Annam **(swan)**

(1) **உயர்வு** - high
'விசும்பு ஆடு அன்னம் பறை நிவந்தாங்கு' (குறு.205: 2)

(2) **விரைவு** - speed
'நிரை பறை அன்னத்து அன்ன, விரை பரிப் புல் உளைக் கலிமா மெல்லிதின் கொளீஇய' (அகம்.234: 3-4)

(3) **ஊக்கம்** - encouragement
'அம் கண் மால் விசும்பு புதைய, வளி போழ்ந்து, ஒண் கதிர் ஞாயிற்று ஊறு அளவாத் திரிதரும் செங் கால் அன்னத்துச் சேவல் அன்ன' (மது. 384-386)

(4) **விடியல் / வைகறை** - dawn
'அன்னம் கரைய, .. .. .. .. .. இரவுத் தலைப் பெயரும் ஏம வைகறை' (மது. 675, 686)

(5) **பயணம் / புலம் பெயர்தல்** - travel, migrate
'அன்னச் சேவல்! அன்னச் சேவல்! .. .. .. .. .. .. குமரிஅம் பெருந் துறை அயிரை மாந்தி, வடமலைப் பெயர்குவை ஆயின்' (புறம்.67: 1-7)

(6) **வெண்மை / தூய்மை** white / pure
'தூய மால்வரைச் சோதியில் மூழ்கியொன்றாய அன்னமும் காணாது அயர்க்குமால்' (பெரிய.மு.கா.7: 3-4)

(ஆ) **அன்னம் துணையோடு ஆடுதல்** Annam tuṇaiyōṭu āṭutal

(7) **இன்பம்** - pleasure
'அன்னம் துணையோடு ஆடக் கண்டு நென்னல் நோக்கி நின்றார் ஒருவர் நென்னல் நோக்கி நின்றார் அவர்நம் பொன்னேர் சுணங்கில் போவார் அல்லர்' (சிலப்.7.45)

(இ) **அரைச அன்னம்** Araica annam (royal swan)

(8) **சீவகன்**
'விரைசெய் தாமரை மேல்விளையாடிய அரைச அன்னம் அமர்ந்துள ஆயினும்' (சீவக.1401: 1-2)

(ஈ) **அன்ன ஊர்தி** Anna ūrti (Brahma)

(9) **அறிவு** - wisdom
'அன்ன ஊர்தியை முதல் ஆம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம்' (கம்ப.ஆரண்.55: 3)

(உ) **அனம்** Anam

(10) **அழகு** - beautiful
'பொற்பு அன ஊர்தியை உள்ளாது ஒழுகின்னா' (இன்னா.கட.வா: 2)

(ஒப்பு) Swan அழகு, அறிவாற்றல், ஆன்மா, இணைவு, உண்மையான காதல், உயர்குடிப்பிறப்பு, காலம், தனிமை, துறவிகள், தூய்மை, நிலைபேறு, பகுத்தறிவு, பெண், மீட்பு, முனிவர்கள், மெய்ம்மை சார்ந்த தூய்மை, மேன்மை, வளமை; இறப்பு.

**அன்னிமிஞிலி** Anniminili **(a lady who fought for justice)**

(1) **பழிதுடைத்தல், துயரம்/துக்கம்/சூள்** - remove blame, sorrow / vow
*'வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின், கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள், சினத்தின் கொண்ட படிவம் மாறாள், மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன், செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர் இன்னுயிர் செகுப்பக் கண்டு சினம்மாறிய அன்னி மிஞிலி போல, மெய்ம்மலிந்து, ஆனா உவகையேம் ஆயினெம்'* (அகம்.262: 5-13)

**அன்னை** Annai **(mother)**

(1) **அன்பு, இனிமை** - love, sweetness
*'அன்னை போல இனிய கூறியும்'* (நற்.28: 3)

(2) **பாதுகாப்பு** - safety
*'பாவை அன்ன நிற் புறங்காக்கும் சிறந்த செல்வத்து அன்னையும் துஞ்சினள்'* (நற்.182: 3-4)

(3) **சிறப்பு / உயர்வு** - greatness / high
*'இன் உயிர் கழியினும் உரையல், அவர் நமக்கு அன்னையும் அத்தனும் அல்லரோ?'* (குறு.93: 2-3)

(4) **மேன்மை / மதிப்பு** - superiority/ honour
*'அம்ம வாழி, - தோழி! - அன்னைக்கு உயர்நிலை உலகமும் சிறிதால்'* (குறு.361: 1-2)

(ஆ) **தாய்** Tāy

(5) **பாதுகாப்பு** - safety
*'தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர்'* (கலி. 48: 10)

(6) **இறப்பு / தியாகம்** - death / sacrifice
*'தாய் சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு'* (ஐங்.24: 1)
**சிறப்பு**
*'தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டகைசால்'* (திருக்கோ.16: 204. 1)

(7) **இரக்கம், அன்பு**
*'தாய் என உயிர்க்கு நல்கி தருமமும் தகவும் சால்பும்'* (கம்ப.கிட்.353: 1)

(8) **கருணை**
*'தாயே அனைய கருணையான் துணையை ஏதும் தகைவு இல்லா'* (கம்ப.சுந்.1171: 1)
**அருள் / இரக்கம்**
*'காய்வ செயினும் குழவிக்கண் கவன்று கழிகண்ணோட்டத்தால் தாய் தன் முலையில் அமுதூட்டும் தகையன் அறவோன் தானென்று'* (நீலகேசி.134: 1-2)

(இ) **ஈன்றாள்** Inrāḷ

(9) **சிறப்பு, கடவுட்டன்மை, மேன்மை** – greatness, divine, superiority
*'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை கொண்டானின் துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின் ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை ஈன்றாளோடு எண்ணக் கடவுரு மில்.* (நான். 57)

(ஈ) **மகன் காண் தாய்** Makan kāṇ tāy

(10) **விரைவு, விருப்பம்**
*'மகக்காண் தாயின் மிகப்பெரிது விதும்பி'* (பெருங்.வத்.7: 40)

(ஒப்பு) Mother அறிவுநுட்பம், இதயம், இரக்கம், இரத்த உறவு, உணவூட்டம், ஊழ், கடல், சந்ததிகளின் இணைவு, படைப்பு, பாதுகாப்பு, பூமி, பெண்மை, மறுபிறப்பின் சுழற்சி, முழுமை, வாழ்க்கைத் தத்துவம், வாழ்வின் மூலம், வளமை; இறப்பு.

**அனிச்சம்** Aniccam **(a flower)**

(1) **மென்மை** - soft
'மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள்.90)

(2) **நொய்ம்மை** – tender / fragile
'ஐய ஆம் அனிச்சப் போதின் அதிகமும் நொய்ய ஆடல்' (கம்ப.பால.1077: 1)

(3) **தண்மை / குளிர்ச்சி** - cool
'தாமே தமக்கொப்பு மற்றில்லவர் தில்லைத் தண்ணனிச்சப் பூமேல் மிதிக்கிற் பதைத்தடி பொங்கு நங்காயெரியும்' (திருக்கோ.16: 228.1-2)

**அனுமன்** Anuman **(Hanuman)**

(1) **ஆண்மை, வீரம்** – manliness, valour
'ஆண் தொழில் அனுமன் அவரொடு ஏகினான்' (கம்ப.சுந்.1063: 1)

(ஆ) **மாருதி** Māruti

(2) **வலிமை, அறிவுத்திறன்** – power, intelligence
'மாருதி இன்னம் செல்லின் மற்று இவன் அன்றி வந்து சாருநர் வலியோர் இல்லை என்பது சாரும் அன்றே ஆர் இனி ஏகத் தக்கார்? அங்கதன் அமையும் ஒன்னார் வீரமே விளைப்பரேனும் தீது இன்றி மீள வல்லான்' (கம்ப.யுத்.923)

# ஆ

**ஆ** Ā **(cow)**

(1) **நன்மை** - good
'ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும்' (தொல்.1123)

(2) **பயன், வளமை** - use, prosperous
'பல்ஆ பயந்த நெய்யின்' (குறு.210: 2)

(3) **அமைதி / சாந்தம்** - peace
'ஆ முனியா ஏறு போல், வைகல் பதின்மரைக் காமுற்றுச் செல்வாய்' (கலி. 108: 49-50)

(4) **ஈகை** - benevolence
'இரவலர் கன்றாக ஈவார் ஆவாக விரகிற் சுரப்பதாம் வண்மை' (நாலடி.279: 1-2)

(5) **பாதுகாத்தல் / புரத்தல்** – protect / provide
'அந்நாள் அவனை ஓம்பிய நல் ஆ' (மணி.15: 2)

(6) **பிறரைப் பேணல்** – care of others
'தன்னலம் பிறர்தொழத் தான் சென்றெய்தி ஈனா முன்னம் இன்னுயிர்க்கு எல்லாம் தான்முலை சுரந்து தன்பால் ஊட்டலும்' (மணி.15: 6-8)

(ஆ) **கூழை ஆ** Kūlai ā (dwarf cow)

(7) **துன்பம்** - suffer
'இரைக்கும் வாடை இருள் கூர் பொழுதில், துளியுடைத் தொழுவின் துணிதல் அற்றத்து, உச்சிக் கட்டிய கூழை ஆவின் நிலை என, ஒருவேன் ஆகி உலமர, கழியும், இப்பகல் மடி பொழுதே' (நற்.109: 6-10)

(இ) **சேதா** Cētā (brown cow)

(8) **தலைவன்** - hero
'கன்று கால்யாத்த மன்றப் பலவின் வேர்க் கொண்டு தூங்கும் கொழுஞ் சுளைப் பெரும் பழம் குழவிச் சேதா மாந்தி' (நற்.213: 2-4)

(9) **தலைவி** - heroine
'சிலம்பின் மேய்ந்த சிறு கோட்டுச் சேதா அலங்கு குலைக் காந்தள் தீண்டி, தாது உக, கன்று தாய் மருளும் குன்ற நாடன்' (நற்.359: 1-3)

(ஈ) **ஓர்ஆன்** Or ān (lone cow)

(10) **வறுமை** - poverty
'ஓர்ஆன் வல்சிச் சீறில் வாழ்க்கை' (குறு.295: 4)

(உ) **ஈற்று ஆ** Irru ā (recently calved cow)

(11) **விரைவு** - speed
'கன்று சேர்ந்தார்கண் கத ஈற்றாச் சென்றாங்கு' (கலி.116: 8-9)

(12) **தாய்மை** - motherhood

'ஈற்று ஆ விருப்பின் போற்றுபு நோக்கி, நும் கையது கேளாஅளவை, ஒய்யென'
(பொரு. 152-153)

**(ஊ) <u>சூல் ஆ</u>** Cūl ā (pregnant cow)

(13) **துன்பம்** - suffer
'விடிந்த பொழுதினும் இல்வயின் போகாது, கொடுந்தொழுவினுள் பட்ட கன்றிற்குச் சூழும் கடுஞ்சூல் ஆ நாகுபோல், நிற்கண்டு நாளும், நடுங்கு அஞர் உற்றது என் நெஞ்சு'
(கலி. 110: 12-15)

(எ) <u>பசு</u> Pacu (cow)

(14) **பெண்மை / மென்மை** - feminity / softness
'பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்' (ஐங்.271: 3)

(ஏ) <u>பெற்றம்</u> Perram (cow)

(15) **வலியின்மை** - strengthless
'வலி இல் நிலைமையான் வல் உருவம் பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று' (குறள். 273)

(ஐ) <u>மாடு</u> Māṭu (cattle)

(16) **செல்வம்** - wealth
'கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு மாடுஅல்ல மற்றை யவை'
(குறள். 400)

(ஒ) <u>மையா</u> **(காட்டுப்பசு)** Maiyā

(17) **வெறுப்பு** - aversion
'பட்டாங்குத் தூயர் பழிச்சற் குரியராய் ஒட்டின் றுயர வுலகத்தோர்- கட்டளை யாம் வெறுக்கை யின்றி யமையாரா மையாவின் ஆம் வெறுக்கை நிறக் வுடம்பு' (இன்னிலை.19)

**(ஓ) <u>கன்றகல் புனிற்றா</u>** Kanrakal punirrā

(18) **செயலறல்**
'போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர் காதலின் நோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்'
(பெரிய.10.112)

**(ஔ) <u>கன்று காண் கறவை</u>**
Kan̲ru kāṇ karavai

(19) **விரைவு, பாசம் / அன்பு** – speed, love
'வாசவ தத்தையை வகையுளிக் காண்கெனத் தேச மன்னன் திறத்துளிக் கூறக் கன்றுகாண் கறவையின் சென்றவட் பொருந்தி'
(பெருங்.இலா.10: 39-41)

**(க) <u>கன்றொழி கறவை</u>** Kanroli karavai

(20) **கவலை** - sorrow
'கவலை உள்ளமொடு கங்குல் போகிய வயந்தக குமரன் வந்து காட்டொதுங்கிக் கன்றொழி கறவையின் சென்றவண் எய்தி'
(பெருங்.உஞ்.56: 144-146)

**(ங) <u>தனிக்கன்றுள்ளிய புனிற்றா</u>**
Tanikkanrulliya punirrā

(21) **விரைவு**
'தனிக்கன்று உள்ளிய புனிற்றாப் போல விரைவில் செல்லும் விருப்பினன் ஆகி'
(பெருங்.இலா.18: 10-11)

**மே.காண். 'ஆன்'**

(ஒப்பு) <u>Cow</u> **அதிர்ஷ்டம், அமைதி, அன்பு, உணவூட்டம், கடவுட்டன்மை, செல்வம், தாய் பூமி, தாய்மை, தியாகம், நன்மை, நிறைவு, படைப்பு, புனிதம், பொருளாதார இலாபம், பொறுமை, மறுபிறப்பு, மின்னல், மென்மை, வளமை, வெளிச்சம்; நெருப்பு, பாலியல் எண்ணங்கள்.**

**ஆகாயம் (sky) பார். 'வான்'**

## <u>ஆடு</u> Āṭu (aries)

(1) **வலிமை** - strength
'திண் நிலை மருப்பின் ஆடு தலை ஆக' (நெடு. 160)

(2) **தீமை, துன்பம், இறப்பு, அச்சம்** - evil, sufferings, death, fear
'ஆடு இயல் அழல் குட்டத்து ஆர் இருள் அரை இரவில், முடப்

பனையத்து வேர் முதலாக் கடைக் குளத்துக் கயம் காய, .. .. .. .. அது கண்டு யாமும் பிறரும் பல்வேறு இரவலர், .. .. .. .. அழிந்து நெஞ்சம் மடி உளம் பரப்ப, அஞ்சினம்; எழு நாள் வந்தன்று, இன்றே; .. .. .. .. .. மேலோர் உலகம் எய்தினன்;' (புறம்.229)

**மே.காண். 'தகர்', 'வெள்ளை'**

(ஒப்பு) Aries, Ram **அமைதி, ஆண்மை, ஆற்றல், சூரிய ஆற்றல், தியாகம், தூண்டுதிறம், தொடக்கம், படைப்பு, மீட்பு, வளமை.**

**ஆடூஉ** Aṭūu **(male)**

(1) **பெருமை, உரன் / வலிமை** - proud, strength
'பெருமையும் உரனும் ஆடூஉ மேன' (தொல்.1044)

(2) **கொடுமை** - cruelty
'வெப்புடை ஆடூஉச் செத்தனென்மன்' (பதி.86: 4)

**(ஆ) ஆண்** Aṇ

(3) **வலிமை, ஆண்மை** - strength, virility
'கல்வியென் என்னும், வல்ஆண் சிறாஅன்' (புறம்.346: 3)

(4) **வீரம்** - valour
'ஆண்அணி புகுதலும், அழிபடை தாங்கலும்' (சிறு. 211)

**(இ) ஆடவர்** Aṭavar

(5) **செயல்திறன்** - work efficiency
'வினையே ஆடவர்க்கு உயிரே' (குறு.135: 1)

(6) **ஆள்வினைமை** - enthusiasm
'அருள் அன்று ஆக, ஆள்வினை, ஆடவர் பொருள் என வலித்த பொருள் அல் காட்சியின்' (அகம்.75: 1-2)

**ஆடை (dress) பார். 'உடுக்கை'**

**ஆண்டலை** Aṇṭalai **(legendary bird with human head)**

(1) **தீமை** - evil, bad
'ஆண்டலை வழங்கும் கான் உணங்கு கடு நெறி' (பதி.25: 8)

**மே.காண். 'கூகை ஒலித்தல்'**

**ஆண்களின் கண் மற்றும் தோள் இடம் துடித்தல்** Aṇkaḷiṉ kaṇ maṟṟum tōḷ iṭam tuṭittal

(1) **தீமை, இறப்பு, அழிவு, துன்பம்** – evil, death, destruction, sorrow
'.. .. .. .. வயவர் தோளும் நாட்டமும் இடம் துடிக்கின்றன' (கம்ப.ஆரண்.430: 1-2)

**ஆண் யானைகளின் தந்தம் ஒடியப்பெறுதல்** Aṇ yāṉaikaḷiṉ tantam oṭiyappeṟital

(1) **தீமை, இறப்பு, அழிவு** – evil, death, destruction
'.. .. .. .. பெருங் கவுள் வேழம் ஒடியுமால் மருப்பு' (கம்ப.ஆரண்.431: 1-2)

**ஆணி** Aṇi **(axle)**

(1) **அடிப்படை, முதன்மை** - basic, first
'உலகிற்கு ஆணியாகப் பலர் தொழ' (நற்.139: 1)

(2) **ஆதாரம்** - basis / foundation
'உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து' (குறள். 1032)

(3) **உறுதி** - strong
'ஆணியாக் கொண்ட கருமம் பதிற்றாண்டும் பாணித்தே செய்ப வியங்கொள்ளின் - காணி பயவாமல் செய்வாரார் தஞ்சாகா டேனும் உயவாமல் சேறலோ இல்' (பழமொழி. 168)

(4) **நிலைத்த தன்மை** – stable, permenant
'நீள் நிலாவின் இசை நிறை தன் குலத்து ஆணி ஆய பழி வர அன்னது' (கம்ப.ஆரண்.1045: 1-2)

(5) **வலிமை** – strength

'ஆணி போல நீ ஆற்ற வலியைகாண்' (திருநா.தேவா.1017: 1)

(6) **அறம்** - virtue
'சேண் உயர் தருமத்தின் தேவை செம்மையின் ஆணியை அன்னது நினைக்கல் ஆகுமோ' (கம்ப.அயோ.1103: 1-2)

(ஆ) **அச்சு** Accu

(7) **உதவி, காவல், பாதுகாப்பு** - help, secure, safety
'எருதே இளைய; நுகம் உணராவே; சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே; அவல் இழியினும், மிசை ஏறினும், அவணது அறியுநர் யார்? என உமணர் கீழ்மரத்து யாத்த சேம அச்சு அன்ன, இசை விளங்கு கவி கை நெடியோய்' (புறம்.102: 1-6)

(8) **உயிர்** - life
'பண்டம் அறியார் படுசாந்தும் கோதையும் கண்டு பாராட்டுவார் கண்டிலர்கொல் - மண்டிப் பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் குத்தும் முடைச்சாகாடு அச்சிற்று உழி' (நாலடி.48)

(இ) **அச்சாணி** Accāṇi

(9) **திட்பம், ஆதாரம்** - firmness, source
'உருவு கண்டு எள்ளாமை வேண்டும் உருள் பெருந்தேர்க்கு அச்சு ஆணி அன்னார் உடைத்து' (குறள். 667)

(ஈ) **பகலாணி** Pakalāṇi

(10) **நடுவுநிலைமை, உறுதி** - impartial, strong
'தத்தமக்குக் கொண்ட குறியே தவமல்ல செத்துக சாந்து படுக்கமனன் - ஒத்துச் சகத்தனாய் நின்றொழுகும் சால்பு தவமே நுகத்துப் பகலாணி போன்று' (பழமொழி. 339)

(ஒப்பு) Axle / Axis, Nail **ஆணி, ஆதாரம், இணைப்பு, இலிங்க உரு, ஈட்டி, உலக அச்சு, துருவம், தூண், நிலைத்தன்மை, நூற்பு ஆணி, பாதுகாப்பு, முதுகெலும்பு, மையம், விடாப்பிடி; ஊடுருவுதல், தீமையை விரட்டுதல்.**

**ஆதன்** Ātaṉ

(1) **அறிவின்மை** - foolishness
'ஆத னாற்குறந் தாங்கெழு வான்றும்ம' (நீலகேசி.212: 1)

**ஆதிரை** Ātirai (a star)

(1) **முதன்மை** - prime
'ஆதியன் ஆதிரையன் அனலாடிய ஆரழகன்' (திருஞா.தேவா.2557: 1)

**ஆதிரை** Ātirai

(1) **கற்பு**
'வான் தரு கற்பின் மனியுறை மகளிரில் தான் தனியோங்கிய தகைமையள் அன்றோ ஆதிரை நல்லாள்' (மணி.15: 77-79)

**ஆந்தை (owl) பார். 'கூகை'**

**ஆபுத்திரன்** Āputtiran (cowson)

(1) **உணவுக்கொடை**
'மாயிரு ஞாலத்து மன்னுயிர் ஓம்பும் ஆருயிர் முதல்வன் தன்முன் தோன்றி' (மணி.14: 32-33)

**ஆம்பல்** Āmpal (a water flower)

(1) **வளம் / செழுமை** - fertility
'ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்து' (நற்.200: 6)

(2) **தண்மை** - cool
'ஆம்பல் மலரினும் தான்தண் ணியளே' (குறு.84:5)

(3) **தலைவி** - heroine
'அணி நடை எருமை ஆடிய அள்ளல் மணி நிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்' (ஐங்.96: 1-2)

(4) **பரத்தை** - prostitute
'துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு ஈர்ந்தண் எருமை' (அகம்.316: 1-3)

(5) **கீழ்மக்கள்** – low born
'ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும் விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா பெருநீரார் கேண்மை கொளினு நீரல்லார் கருமங்கள் வேறு படும்'
(நாலடி.236)

(6) **அறியாமை** - ignorance
'விரிகதிர் வெண்மதியும் மீன் கணமுமாமென்றே விளங்கும் வெள்ளைப் புரிவளையும் முத்துங்கண்டு ஆம்பல் பொதியவிழ்க்கும் புகாரே எம்மூர்'
(சிலப்.7.5)

(7) **நெய்தல் திணை** - seashore region
'தோடு உடைந்தன ஆம்பலும்'
(சூளா.20: 3)

(8) **சிவப்பு நிறம்** – red colour
'தீவிரி ஆம்பலில் சிவந்த வாயினன்' (சூளா.77: 3)

(ஆ) <u>ஆம்பல் கூம்புதல்</u> Ᾱmpal kūmputal (āmpal – with closed petals)

(9) **மாலைக்காலம், துன்பம்** - evening, suffering
'குண்டுநீர் ஆம்பலும் கூம்பின இனியே வந்தன்று வாழியோ மாலை' (குறு.122: 2-3)

<u>ஆம்பல்</u> Ᾱmpal **(a melody)**

(1) **இனிமை** - sweetness
'ஆம்பல்அம் தீம்குழல் தெள்விளி பயிற்ற, .. .. .. .. துனைஇய மாலை துன்னுதல் காணூஉ'
(குறி. 222, 230)

<u>ஆம்பி</u> Ᾱmpi **(mushroom)**

(1) **இல்லாமை / வறுமை** - poverty
'ஆடு நனி மறந்த கோடு உயர் அடுப்பின் ஆம்பி பூப்ப'
(புறம்.164: 1-2)

**(ஒப்பு)** <u>Mushroom</u> **நீண்ட நாள் வாழ்வு; அவநம்பிக்கை, கெட்ட செய்தி, சுற்றித்திரிபவர், நிலையற்ற தன்மை.**

<u>ஆமான்</u> Ᾱmān **(bison)**

(1) **பொருள் வளம்** - wealth
'எரி கான்றன்ன பூஞ்சினை மராஅத்து, தொழுதி போக வலிந்து அகப்பட்ட மட நடை ஆமான், கயமுனிக் குழவி'
(மலை. 498-500)

<u>ஆமை</u> Ᾱmai

(1) **பேதைமை / அறியாமை** – foolishness / ignorance
'கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை நிலையறியாது அந்நீர் படிந்து ஆடியற்றே'
(நாலடி.331: 1-2)

(2) **அடக்கம்** – self control
'பொருந்தலால் பல்லி போன்றும் போற்றலால் தாயர் ஒத்தும் அருந்தவர் போன்று காத்தும் அடங்கலால் ஆமை போன்றும்'
(சீவக.1895: 1-2)

<u>ஆயிரம்</u> Ᾱyiram **(thousand)**

(1) **மிகுதி** - excess
'அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம்கண் ஏய்க்கும் கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்'
(கலி. 105: 15-16)

**(ஒப்பு)** <u>Thousand</u> **நிலைபேற்றிற்கான வாழ்த்து, நீள்தன்மை.**

<u>ஆர்</u> Ᾱr **(the mountain ebony)**

(1) **அரசக்குறியீடு** - royalty
'போந்தை வேம்பே ஆர் என வரூஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்' (தொல்.1006: 4-5)

(2) **சோழர்** - chola
'.. .. .. .. ஆர மார்பின் சிறு கோற் சென்னி ஆரேற்றன்ன'
(நற்.265: 5-6)

**(ஆ)** <u>**ஆரங்கண்ணி**</u> Ᾱraṅkaṇṇi
**சோழர்**
'ஆரங் கண்ணிச் சோழன் மூதூர்'
(சிலப்.பதிகம்:12)

**(இ)** <u>**தார்**</u> **(ஆத்தி மாலை)** Tār
**சோழர்**

'தண்தரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்' (பெரிய.608: 3-4)

**ஆரம்** Āram **(sandalwood)**

(1) **நறுமணம்** - fragrance
'குறவர் கொன்ற குறைக் கொடி நறைப் பவர் நறுங் காழ் ஆரம் சுற்றுவன அகைப்ப' (நற்.5: 3-4)

(2) **தண்மை** - cool
'மன்உயிர் அறியாத் துன்அரும் பொதியில் சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப வேனிலானே தண்ணியள்' (குறு.376: 1-3)

(ஆ) **சாந்து** Cāntu
**நறுமணம்** - fragrance
'கமழ் நறுஞ் சாந்தின் அவரவர் திளைப்ப' (பரி. 17: 24)

(3) **வளமை** - fertile
'சாந்து தலைக்கொண்ட ஓங்கு பெருஞ் சாரல்' (நற்.328: 9)

(4) **புகழ்**
'புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி ஊட்டி' (திணை.ஐம்.1: 1)

(இ) **சாந்தம்** Cāntam
**நறுமணம்** - fragrance
'சாந்தம் போகிய தேம் கமழ் விடர் முகை' (நற்.261: 8)
**வளமை** - fertility
'சாந்தம் பொறைமரம் ஆக, நறைநார் வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து எந்தையும் எதிர்ந்தனன் கொடையே' (அகம்.282: 9-12)

(ஈ) **சந்து** Cantu

(5) மேன்மை
'சுரும்பிவர் சந்தும் தொடுகடன் முத்தும் வெண் சங்குமெங்கும் விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம் வியன் கங்கை என்னும்' (திருக்கோ.16: 248. 1-2)

(ஒப்பு) Sandalwood அயல்வரவு, கடவுட்டன்மை, கடவுள் வழிபாடு, சடங்குகள், நறுமணம், விலைமதிப்பு, விழாக்கள்.

**ஆரல்** Āral **(a fish)**

(1) **நீர் உயிர் / ஆன்மா** - water creature / soul
'பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை கதிர்மூக்கு ஆரல் களவன் ஆக நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்' (அகம்.246: 1-3)

**ஆல்** (banyan tree) பார். **'ஆலம்'**

**ஆல் அமர் செல்வன்** Āl amar celvaṉ **(Shiva)**

(1) **வெற்றி** - victory
'ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிறல்' (கலி.81: 9)

(ஆ) **அருந்தவ முதல்வன்** Aruntava mutalvaṉ

(2) **புகழ்ச்சி, பொய்யாமை** - fame, truth
'ஐயம் தீர்ந்து யார் கண்ணும் அருந் தவ முதல்வன்போல் பொய் கூறாய் என நின்னைப் புகழ்வது கெடாதோதான்' (கலி. 100: 7-8)

(இ) **முக்கட் செல்வன்** Mukkaṭ celvaṉ

(3) **புகழ்** - fame
'ஞாலம் நாறும் நலம்கெழு நல்இசை, நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்' (அகம்.181: 15-16)

(ஒப்பு) Shiva உலகின் சமன்நிலை, தியானத்தின் உச்சநிலை, படைப்பு, புலனுணர்வு, வானுலக நிலைபேறாக்கம்; அழிவு, இருள், கடுமை, சினம்.

**ஆலத்து இலை** Ālattu ilai

(1) தாங்குதல் - support
'ஆலத்து இலையான் அரவின் அணை மேலான்' (நாலா.177: 1)

**ஆலம்** Ālam **(banyan tree)**

(1) **கடவுட்டன்மை** - divinity
'நெடு வீழ் இட்ட கடவுள் ஆலத்து'
(நற்.343: 4)

(2) **தொன்மை, கோசர்** - ancient, totem of kōcar
'தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய நால் ஊர்க் கோசர்'
(குறு.15: 2-3)

(3) **விரிவு / பரப்பு** - broad / spread
'அழல் புரை குழை கொழு நிழல் தரும் பல சினை ஆலமும், கடம்பும், நல் யாற்று நடுவும்'
(பரி. 4: 66-67)

(4) **முன்னோர் / மூத்தோர் / மரபு** - ancestors / elders / tradition
'முழு முதல் தொலைந்த கோளி ஆலத்துக் கொழு நிழல் நெடுஞ்சினை வீழ் பொறுத்தாங்கு, தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது, நல் இசை முதுகுடி நடுக்கு அறத் தழீஇ'
(புறம்.58: 2-5)

(5) **பேரளவு** - huge
'எமரிது செய்க எமக்கென்று வேந்தன் தமரைத் தலைவைத்த காலைத் - தமரவற்கு வேலின்வா யாயினும் வீழார் மறுத்துரைப்பின் ஆலென்னிற் பூலென்னு மாறு' (பழமொழி. 268)

(ஆ) **ஆலமரம்** Ālamaram

(6) **தந்தைமை** - fatherhood
'சிதலை தினப்பட்ட ஆல மரத்தை மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக் குதலைமை தந்தைகட் தோன்றிற்றான் பெற்ற புதல்வன் மறைப்பக் கெடும்' (நாலடி.197)

(இ) **ஆல்** Āl

(7) **அழிவின்மை, நிலைபேறு** - not destroyed, stable
'மும்முறை உலகம் எல்லாம் முற்றுற முடிவது ஆன அம்முறை ஐயன் வைகும் ஆல் என நின்றது அம்மா' (கம்ப.சுந்.737: 3-4)

(8) **அறம்** - virtue
'ஆல் அதனில் அறம் நால்வர்க்கு அளித்தார் போலும்'
(திருநா.தேவா.1117: 3)

(ஒப்பு) Banyan Tree **அளவின்மை, கட்டுறுதி, நிலைபேறு, விரிவு.**

**ஆலம்வித்து**

(1) **சிறுமை, மிகுபயன், சிறிய அளவு** - small, minute, abundance
'உறக்கும் துணையதோர் ஆலம்வித்து ஈண்டி இறப்ப நிழல் பயந்தாஅங் - கறப்பயனும்'
(நாலடி.38: 1-2)

(ஆ) **ஆல் அமர் வித்து** Āl amar vittu

(2) **குறுகிய தன்மை** – dwarfed appearance
'காலம் நுனித்து உணர் காசிபன் என்னும் வால் அறிவற்கு அதிதிக்கு ஒரு மகவு ஆய் நீல நிறத்து நெடுந்தகை வந்து ஓர் ஆல் அமர் வித்தின் அருங்குறள் ஆனான்' (கம்ப.பால.419)

(இ) **ஆலமும் வித்தும்** Ālamum vittum

(3) **ஆற்றல், செறிவு** - controlled capacity
'ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்' (கம்ப.யுத்.203: 4)

**ஆலம்வீழ்** Ālamvīḻ

(1) **தாங்குதல்** - support
'கோல் அஞ்சி வாழும் குடியும் குடிதழீஇ ஆலம்வீழ் போலும் அமைச்சனும்' (திரி.33: 1-2)

**ஆலமரம் (banyan tree) பார். 'ஆலம்'** .

**ஆலி** Āli **(hail stone)**

(1) **தண்மை** - cool
'நீலத்து அன்ன நீர்பொதி கருவின், மாவிசும்பு அதிரமுழங்கி, ஆலியின் நிலம் தண்ணென்று கானம் குழைப்ப'
(அகம்.314: 1-3)

**ஆவி (life, soul) பார். 'உயிர்'**

**<u>ஆவி</u>** Āvi **(vapour)**

(1) **நிலையாமை, அழிவு** - transitoriness, destruction
'எள் அற இயற்றிய நிழல் காண் மண்டிலத்து உள் ஊது ஆவியின் பைப்பய நுணுகி, மதுகை மாய்தல் வேண்டும்' (அகம்.71: 13-15)

(2) **நுண்மை, வெண்மை, மென்மை** – minute, white, soft
'ஆவி நுண் துகில் யாப்புறுத் தாயினும் சாவது உறுதியான் தப்பிய பின்றை' (பெருங்.உஞ்.36: 64-64)

(3) **மெல்லிய தன்மை**
'பானீர் நெடுங்கடல் பனிநாள் எழுந்த மேனீர் ஆவியின் மெல்லி தாகிய' (பெருங்.இலா.7: 154-155)

**<u>ஆவிரை</u>** Āvirai **(a flower)**

(1) **அழிவு / நிலையாமை** - destruction / transitoriness
'பொன்நேர் ஆவிரை புதுமலர் மிடைந்த பல்நூல் மாலைப் பனைபடு கலிமா' (குறு.173: 1-2)

(2) **அழகு, காமம்** - beautiful, passion
'அணி அலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின் பிணையல் அம் கண்ணி, மிலைந்து, மணி ஆர்ப்ப, ஓங்கு பெரும் பெண்ணை மடல் ஊர்ந்து' (கலி. 139: 8-10)

(3) **அன்பு** - love
'பூளை, பொலமலர் ஆவிரை - வேய் வென்ற தோளாள் எமக்கு ஈத்தபூ' (கலி.138: 18-19)

**<u>ஆழி</u>** Āḻi **(wheel)**

(1) **வலிமை** - strength
'வள் வாய் ஆழி உள் வாய் தோயினும்' (நற்.78: 8)

(2) **ஆட்சி / ஆளுமை** - reign/rule
'ஆழி முதல்வ!' (பரி. 2: 19)

(3) **அறம்** - virtue
'அற ஆழி அந்தணன்' (குறள்.8)

(4) **அருள்** - grace
'ஒரருள் ஆழியை உலகுடை ஒருவனை' (சூளா.216: 2)

(5) **வருத்துதல்** - affliction
'பகை அணங்காழியும் பால்வெண் சங்கமும்' (சிலப்.11: 47)

(6) **வெற்றி**
'வடிவார் சோதி வலத்துறையும் சுடர் ஆழியும் பல்லாண்டு' (நாலா.2: 5-6)

(7) **ஒளி, ஆளுகை** - light, reign
ஆழி திகழ் திருச்சக்கர'த்தி'யிற் பொலிகின்ற செஞ்சுடர் த்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடிகுடி ஆட்செய்கின்றோம்' (நாலா.7: 1-4)

(8) **விறல், வெற்றி**
'வென்றி மிகு நரகன் உரம் அது அழிய விசிறும் விறல் ஆழித் தடக் கையன்' (நாலா.1239: 1-2)

(ஆ) **<u>திகிரி</u>** Tikiri

(9) **அறம்** - virtue
'அறந் தெரி திகிரிக்கு வழியடை ஆகும்' (பதி. 22: 4)

(10) **வெற்றி** - victory
'வலம் படு திகிரி வாய் நீவுதியே' (கலி. 7: 14)

(11) **சுழற்சி, மனமயக்கம்**
'இருவர் நெஞ்சமும் இடைவிடல் இன்றித் திரிதரல் ஓயாது திகிரியில் சுழல' (பெருங்.உஞ்.33: 199-200)

(12) **குற்றமின்மை**
'மறுவற உணர்ந்தனை மலமறு திகிரியை' (சீவக.2563: 1)

(இ) **<u>நேமி</u>** Nēmi

(13) **நிழல்/பாதுகாப்பு** - shade/safety
'தாமரைப் பொகுட்டு நின்நேமி நிழலே!' (பரி. 3: 94)

(14) **இறைத்தன்மை / அருள்** - divinity / grace
'தண் அளி கொண்ட அணங்குடை நேமி மால்!' (பரி. 13: 6)

(15) **வெற்றி** - victory
'வலம்புரி வய நேமியவை' (பரி. 15: 59)

(16) **புகழ்** - fame
'பொரு முரண் மேம்பட்ட பொலம் புனை புகழ் நேமி' (கலி. 104: 9)

(17) **காலம்**
'வடம் கலந்த மாலை மார்ப கால நேமி காலனே' (நாலா.789: 7)

(ஈ) <u>சகடக்கால்</u> Cakaṭakkāl

(18) நிலையாமை, மாறும் இயல்பு – transitoriness, change
'துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப் பகடு நடந்தகூழ் பல்லாரோடு உண்க அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம் சகடக்கால் போல வரும்' (நாலடி.2)

(உ) <u>சக்கரத்தாழி</u> Cakkarattāḻi

(19) வளைவு, ஆட்சி, ஆளுகை, அதிகாரம் – curve, rule, power
'வள வயலூரன் மருளுரைக்கும் மாதர் வளைஇய சக்கரத் தாழி' (ஐந்.எழு.54: 1-2)

(ஊ) <u>ஆழிக்கால்</u> Āḻikkāl

(20) மாற்றம் - change
'ஆக்கமும் கேடும் யாக்கை சார்வா ஆழிக்காலில் கீழ்மேல் வருதல் வாய்மையாம் என மனத்தின் நினைஇ' (பெருங்.மகத.6: 34-36)

(எ) <u>உருளும் சகடம்</u> Uruḷum cakatam

(21) வஞ்சம்
'மருதின் நடந்து நின் மாமன் செய் வஞ்ச உருளுஞ் சகடம் உதைத்தருள் செய்குவாய்' (சிலப்.12: 23)

(ஏ) <u>ஏகத்திகிரி</u> Ekattikiri

(22) ஒப்பின்மை, தலைமை
'நாகத்து அன்ன நன்னகர் வரைப்பின் ஏகத் திகிரி இருநிலத்து இறைவன்' (பெருங்.உஞ்.48: 83-84)

(ஐ) <u>சக்கரம் Cakkaram</u>

(23) காலம்
'கனைநெடுங் கதழ்பரிக் காலச் சக்கரமும் போல்' (சீவக.1839: 2)

(24) பிறவி
'பிறவிச் சக்கரமிது பெரிதும் அஞ்சினான்' (சூளா.2072: 1)

(ஒ) <u>மாயச்சகடு</u> Māyaccuvaṭu

(25) அழிவு
'பேயின் முலை உண்ட பிள்ளை இவன் முன்னம் மாயச் சகடும் மருதும் இறுத்தவன்' (நாலா.163: 1-2)

(ஓ) <u>தனித்திகிரி</u> Taṉittikiri

(26) ஒப்பின்மை, வலிமை – uncomparable, strength
'விரிகதிர் பரப்பி உலக முழுதாண்ட ஒரு தனித் திகிரி உரவோற் காணேன்' (சிலப்.4: 1-2)

(ஒப்பு) <u>Wheel, Chakra</u> ஆற்றல், உடலின் ஆற்றல் மையம், எட்டுத் திசைகள், எதிர்கால நிலை, கடந்த நிலை, காலம், சூரியன், நிலைபேறு, நீதி, புதுப்பித்தல், போர்வீரர், மறுபிறப்பு, முழுமையான முடிவுற்ற நிலை, வாழ்க்கை, வாழ்வின் மாற்றம், விதி, விஷ்ணு, வெட்டும் ஆயுதம்; சித்திரவதை.

## <u>ஆள்</u> Āḷ (man)

(1) கணவன் - husband
'ஆள் இல் பெண்டிர் தாளின் செய்த நுணங்கு நுண் பனுவல் போல' (நற்.353: 1-2)

(2) ஆண்மை - virility
'தலை துமிந்து எஞ்சிய ஆள் மலி யூபமொடு' (பதி.67: 10)

(3) மதிப்பு - honour
'குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும், ஆள் அன்று என்று வாளின் தப்பார்' (புறம்.74: 1-2)

## <u>ஆளி</u> Āḷi (a fabulous animal)

(1) வலிமை - strength
'ஆளி நன் மான் அணங்குடைக் குருளை மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி' (பொரு. 139-140)

(2) ஆண்மை, வலிமை
'ஆண்தகை ஆளி மொய்ம்பின் ஐயநீர் அளித்த செல்வம்' (கம்ப.கிட்.627: 3)

(3) விறல் / வெற்றி, சினம்

'பெருவிறல் ஆளி என்னப் பிறங்கெரி சிதற நோக்கி' (பெரிய.3.17)

(ஆ) வயமா Vayamā
திறல் / வலிமை
'சீயம் ஆயிரம் செகுத்திடும் திறலது வயமா' (சூளா.724: 1)

**ஆற்றில் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதர்** Ārril keṭuttuk kuḷattinil tēṭiya ātar
(1) **பயனின்மை** - useless
'தேற்றப்படத் திருநல்லூர் அகத்தே சிவன் இருந்தால் தோற்றப்படச் சென்று கண்டுகொள்ளார் தொண்டர் துன்மதியால் ஆற்றில் கெடுத்துக் குளத்தினில் தேடிய ஆதரைப் போல் காற்றில் கடுத்து உலகெல்லாம் திரிதர்வர் காண்பதற்கே' (திருநா.தேவா.891)

**ஆறு** (river) பார். 'புனல்'

**ஆறு** (way) பார். 'அதர்'

**ஆறு** Āru (six)
(1) **வித்தியா தத்துவங்கள்** – philosophical concepts
'அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நன்கும் துறுபறித்து அனைய நோக்கி' (சுந்.தேவா.926: 1-2)
(2) **ஆறு குற்றங்கள்**
'அஞ்சும் ஒன்றி ஆறுவீசி நீறுபூசி மேனியில்' (திருஞா.தேவா.2022: 1)
(3) **மறையின் அங்கங்கள்**
'நாவில்நாலர் உடல் அஞ்சினர் ஆறர் ஏழோசையர்' (திருஞான.தேவா.2428: 3-4)
(4) **ஆறு சுவை**
'ஆறுகொலாம் அவர் அங்கம் படைத்தன ஆறுகொலாம் அவர்தம் மகனார் முகம் ஆறுகொலாம் அவர் தார்மிசை வண்டின்கால் ஆறுகொலாம் சுவை ஆக்கின தாமே' (திருநா.தேவா.976: 3-4)

**ஆறொன்று** (ஏழு) Āronru (six and one, seven)
(1) **இசை** - melody
'ஐயிரண்டும் ஆறொன்றும் ஆனார் போலும்' (திருநா.தேவா.820: 1)

**ஆன் அஞ்சு** Āṉ añcu
(1) **சிறப்பு, புனிதம்** – great, holy
'ஆன் அஞ்சு ஆடலன் ஆடானை' (திருஞான.தேவா.3017: 2)

**ஆன் சாணம்** Āṉ cāṇam
(1) **நன்மை** - good
'நலம் மலி ஆன் சாணத்தால் நன்கு திரு மெழுகிட்டு' (பெரிய.21.44)

**ஆன் மணிக்குரல்** Āṉ maṇikkural (resounding bells of cattle)
(1) **வருத்தம், துன்பம், இனிமை** - suffer, sorrow, sweetness
'உரும் இசை அறியாச் சிறு செந் நாவின் ஈர் மணி இன் குரல் ஊர் நனி இயம்ப, பல் ஆ தந்த கல்லாக் கோவலர் கொன்றைஅம் தீம் குழல் மன்று தோறு இயம்ப, உயிர் செலத் துனைதரும் மாலை' (நற்.364: 7-11)

**ஆன்ஏற்று ஒருத்தல்** Āṉērru oruttal
(1) **வலிமை** - strong
'வான்ஏறு வானத்(து) உரற, வயமுரண் ஆன்ஏற்(று) ஒருத்தல் அதனோ(டு) எதிர்செறுப்ப' (கார்.10: 1-2)

**ஆனிடை அழித்த புள்** (பசுக்கூட்டத்தினிடையே காரிப்புள் எழுதல்) Āṉiṭai aḻitta puḷ
(1) **தீமை** – evil (omen)
'கானிடை இனநிரை காவல் போற்றுமின் ஆனிடை அழித்தபுள் என்று கூறினர்' (சீவக.1849: 3-4)

**ஆனை** (elephant) பார். 'யானை'

<u>ஆனை வெம்போரில் குறுந்தூறு</u> Āṉai vempōril kuṟuntūṟu

(1) துன்பம், அலைப்புறுதல் – suffering
'ஆனை வெம்போரில் குறுந்தூறு எனப் புலனால் அலைப்புண் டேனை' (திருவா.6: 21.1-3)

## இ

<u>இங்குலிகக் குன்று</u> Iṅkuḷikak kuṉṟu

(1) சிவப்பு நிறம் – red colour
'செவ்வரைச் சென்னி அரிமானோடு அவ்வரை ஒல்கி உருமிற்கு உடைந்தற்றால்' (களவழி.35: 1-2)

<u>இட்டசித்தி</u> Iṭṭacitti

(1) புனிதம், சிறப்பு, கடவுட்டன்மை – holy, special, divine
'விண்ணோர் ஏத்தும் வியத்தகு மரபில் புண்ணிய சரவணம் பவகாரணியோடு இட்ட சித்தி எனும் பெயர் போகி' (சிலப்.11: 93-95)

<u>இட்டிகை</u> Iṭṭikai **(brick)**

(1) பயனின்மை - uselessness
'மறுமையொன் றுண்டோ மனப்பட்ட எல்லாம் பெறுமாறு, செய்ம்மினென் பாரே - நறுநெய்யுள் கட்டி யடையைக் களைவித்துக் கண்சொரீஇ இட்டிகை தீற்று பவர்' (பழமொழி. 108)

(ஒப்பு) <u>Brick</u> இணைப்பு, நிலைபேறு, படைப்பு, பிறப்பு, வலிமை; கணத்தில் அழியும் தன்மை, கொடுமை, சார்புத்தன்மை.

<u>இடக்கண் துடித்தல்</u> (பெண்) Iṭakkaṇ tuṭittal

(1) நன்மை, (சீவகன்) வருகை - good omen
'எல்லிருள் கனவில் கண்டேன் கண்ணிடன் ஆடும் இன்னே' (சீவக.1909: 1)

<u>இடத்தோள்</u> Iṭatōḷ

(1) உதவி, துணை - help, support
'மன்னருள் மன்னர் மனத்தில் தேறி இடத்தோள் அன்ன இடற்கரும் காதல் உரிமைத் தேவியர்க்கு ஒருமீக் கூரிய பட்டத் தேவிக்குப் பட்டதை எல்லாம்' (பெருங்.உஞ்.47: 149-152)

<u>இடம் வீழ்தல்</u> Iṭam vīḻtal **(fall on the left side)**

(1) சிறப்பின்மை / இழிவு - degradation / low
'கிடந்துஉயிர் மறுகுவ தாயினும் இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த தாழ்வில் உள்ளம் தலைத்தலைச் சிறப்ப' (அகம்.29: 2-4)

இடி **(thunder)** பார். **'உரும்'**

<u>இடுதேளிடல்</u> Iṭutēḷiṭal

(1) தீமை, துன்பம், பழி - evil, sorrow
'கடுக்கும் என் நெஞ்சம் கனவினால் என்கை பிடித்தனன் போயோர் பெரும்பதியுள் பட்டேம் பட்ட பதியில் படாததொரு வார்த்தை இட்டனர் ஊரார் இடுதேள் இட்டென்றன்மேல் கோவலற்கு உற்றதோர் தீங்கென்றது' (சிலப்.9: 45-49)

<u>இடைமகன் கொன்ற மரம்</u> Iṭaimakaṉ koṉṟa maram

(1) துன்பம் - affiction
'இடைமகன் கொன்ற இன்னா மரத்தினேன் தந்த துன்பக் கடலகத்து அழுந்த வேண்டா களைக இக்கவலை என்றான்' (சீவக.1914: 3-4)

<u>இண்டம்</u> (புதர்) Iṇṭam

(1) நெருக்கம், தீமை – dense, evil

'இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த இருடீகேசன் தனக்கு' (நாலா.5: 3-4)

**இதயம் (heart)** பார். **'நெஞ்சம்'**

**இந்து (ஈச்சம்பழம்)** Intu **(dates)**

(1) **கருமை நிறம்** - black colour
'இந்தின் கருவண்ணம் கொண்டன்(று) எழில்வானம்' (கார். 40: 3)

**இப்பி** Ippi **(pearl-oyster shell)**

(1) **வளமை** - prosperity
'பல் மீன் கொள்பவர் முகந்த இப்பி நார் அரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்' (அகம்.296: 8-9)

(2) **வெண்மை** - white
'மறிகடல் ஓங்கி வெள்ளிப்பியும் சுமந்து' (திருஞான.தேவா.3777: 6)

(3) **இலக்கம் (ஒளி)** - shine
'நலந்திகழும் இலங்கு இப்பி' (திருஞான.தேவா.1830: 2)

**மே.காண். 'முத்தம்'**

(ஒப்பு) Shell, Cowrie Shell, Scallop Shell, Conch **அதிர்ஷ்டம், அரசத்தன்மை, உடல், கடவுட்டன்மை, கருவாய், கீர்த்தி, செல்வம், தன்மானம், நற்பேறு, நிலைபேறு, பிறப்பு, புனிதத்தன்மை, பெண்மைக் கொள்கை, மறுபிறப்பு, மறைபொருள், மூலமுதல், யாத்திரை, வளமை, வாழ்க்கைப்பயணம்.**

**இமை** Imai

(1) **காவல், பாதுகாப்பு** - protection
'எண்ணுதற்கு ஆக்க அரிது இரண்டு மூன்று நாள் விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள் கண்ணினைக் காக்கின்ற இமையின் சாத்தனர்' (கம்ப.பால.439)

**இமைக்கும் அளவு** Imaikkum aḷavu **(wink)**

(1) **காலச் சிறுமை, விரைவு** - short time, quick
'இமைக்கும் அளவில்தம் இன்னுயிர்போம் மார்க்கம்' (நாலடி.323: 1)

**இமையம்** Imaiyam **(Himalaya)**

(1) **உயர்வு** - high
'ஞெமை ஓங்கு உயர் வரை இமையத்து உச்சி' (நற்.369: 7)

(2) **பெரும்புகழ், அசைவின்மை** - praise, stable
'.. .. .. .. பேரிசை இமயமும் துளக்கும் பண்பினை' (குறு. 158: 4-5)

(3) **கடவுட்டன்மை** - divinity
'கடவுள் நிலைஇய கல் ஓங்கு நெடு வரை வட திசை எல்லை இமயம் ஆக' (பதி. 43: 6-7)

(4) **மேன்மை** - superiority
'வரை அளந்து அறியாப் பொன் படு நெடுங் கோட்டு இமயம் சூட்டிய ஏம விற்பொறி' (புறம்.39: 13-15)

(5) **அழகு** - beauty
'எழில்பெறும் இமயத்து இயல்புடை அம்பொன்' (திருவா.2: 140)

(ஆ) வடவரை Vaṭavarai (mountain in the North)

(6) **தொன்மை, முதிர்ச்சி** - antiquity, old
'தொன்று முதிர் வட வரை வணங்கு வில் பொறித்து' (அகம்.396: 17)

**(ஈ)** வடபெருங்கல் Vaṭa peruṅkal

(7) **எல்லை / பாதுகாப்பு** - border, safety
'தென் குமரி வட பெருங்கல் குண குட கடலா எல்லை' (புறம்.17: 1-2)

**(உ)** இமயமலை Imayamalai

**கடவுட்டன்மை** - divine
'முடிமன்னர் மூவரும் காத்தோம்பும் தெய்வ வட பேரிமய மலையில் பிறந்து' (சிலப்.29: 2.1-2)

(ஊ) <u>இமகிரி</u> Imakiri
(8) **உயர்ச்சி** - high
'வானுயர் இமகிரி மருங்கி னென்று' (சூளா.825.2)

**<u>இயந்திரப் படிவம்</u>** Iyantirap paṭivam
(1) **உயிரின்மை** - lifeless
'இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்' (கம்ப.சுந்.565: 3)

**<u>இயற்கை அல்லன தோன்றுதல்</u>** Iyaṟkai allana tōnṟutal **(unnatural happenings)**
(1) **தீமை** - bad, evil
'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும், இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும், காவலர்ப் பழிக்கும், இக் கண் அகல் ஞாலம்' (புறம்.35: 27-29)

**இரத்தம் (blood) பார். 'குருதி'**

**<u>இரவம்</u>** Iravam **(a plant)**
(1) **பாதுகாப்பு / தீமை நீக்கம்** - safety, avoidance of evil
'தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ .. .. .. .. பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகைப் புண்ணே' (புறம்.281: 1-9)

**இரவு (night) பார். 'கங்குல்'**

**இருட்டு (darkness) பார். 'இருள்'**

**<u>இருட்டறையின் மலடு கறந்து எய்தல்</u>** Iruṭṭaṟaiyin malaṭu kaṟantu eytal
(1) **பயனின்மை** - useless
'அப்போதைக்கு அப்போதும் அடியவர்கட்கு ஆரமுதாம் ஆரூரரை எப்போதும் நினையாதே இருட்டறையின் மலடு கறந்து எய்தவாறே' (திருநா.தேவா.1223: 5-8)

**<u>இரு தலைக் கொள்ளி</u>** Iru talaik koḷḷi **(brand burning at both ends)**
(1) **துன்பம்** - sorrow
'இரு தலைக் கொள்ளி இடை நின்று வருந்தி' (அகம்.339: 9)

**<u>இரு தலைப் புள்</u>** Iru talaip puḷ **(fabulous bird with two heads)**
(1) **நட்பு / பிரிவின்மை** - friendship/inseperable
'யாமே, பிரிவு இன்று இயந்த துவரா நட்பின், இரு தலைப் புள்ளின் ஓர் உயிரம்மே' (அகம்.12: 4-5)

**<u>இருந்தை</u>** Iruntai
(1) **கருமை நிறம், அறிவிலார்** - black colour, foolish
'பாலால் கழீஇப் பலநாள் உணக்கினும் வாலிதாம் பக்கம் இருந்தைக்கு இருந்தன்று' (நாலடி.258: 1-2)

**<u>இரும்பு</u>** Irumpu **(iron)**
(1) **வலிமை** - strength
'இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை' (நற்.249: 1)
(2) **மேன்மை / அரிய தன்மை** - superiority / rare
'நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன் இரும் புடைப் பழவாள் வைத்தனன்' (புறம்.316: 5-6)
(3) **கொடுமை / இரக்கமின்மை** – cruel, pityless
'இரும்பினால் இயன்ற நெஞ்சத்து இவர்களோ இருந்து காண்க' (சீவக.678: 2)

(ஆ) <u>அயில்</u> Ayil
(4) **ஆற்றல்** - ability
'நல்லார் நலத்தை உணரின் அவரினும் நல்லார் உணர்ப பிறருணரார் - நல்ல மயிலாடு மாமலை வெற்பமற்று என்றும் அயிலாலே போழ்ப அயில்'

(பழமொழி. 8)

(இ) <u>காய்ச்சிய இரும்பு</u> Kāycciya irumpu

(5) **செம்மை நிறம்**
'மீச்செலும் மேகம் எல்லாம் விரி சுடர் இலங்கை வேவ காய்ச்சிய இரும்பு மானச் சேந்து ஒளி கஞல்வ காணாய்' (கம்ப.யுத்.787: 3-4)

(ஈ) <u>காயிரும்பு</u> Kāyirumpu

(6) **வெம்மை**
'காயிரும்பு அனைய வெய்யோன் கருமணி வண்ணன் தன்மேல்' (சூளா.1451: 1)

(ஒப்பு) <u>Steel, Iron</u> **அதிர்ஷ்டம், ஆயுதங்கள், ஆற்றல், இணைப்பு, இரவு, உண்மை, உறுதி, எளிமை நயம், கருமை, நடுநிலைமை, நம்பிக்கை, நிலைபேறு, நீடிப்புத்தன்மை, நீண்ட வாழ்நாள், நீதி, பண்புயர்வு, பாதுகாப்பு, புதன்கோள், போர்க்கவசம், வலிமை, வளமை; இருள், எளிதில் அடங்காமை, கடிய தன்மை, கடினத்தன்மை, கொடுமை, தண்டனை, வளையாத தன்மை.**

<u>இருவேரி</u> **(வெட்டிவேரும் விலாமிச்சை வேரும்)** Iruvēri

(1) **நறுமணம்** - fragrance
'நறையும் நாகமும் முறையிரு வேரியும்' (பெருங்.உஞ்.50: 22)

<u>இருள்</u> Iruḷ **(darkness)**

(1) **கருமை** - black
'இருள் நிறப் பன்றியை ஏனம் என்றலும்' (தொல்.1568: 6)

(2) **அச்சம்** - fear
'நரை உரும் உரறும் நாம நல் இருள்' (நற்.122: 5)

(3) **மயக்கம்** - confusion
'மழை அமைந்து உற்ற மால் இருள் நடுநாள்' (நற்.281: 7)

(4) **மறைத்தல்** - hide
'கனை இருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்' (நற்.383: 7)

(5) **துன்பம்** - sorrow
'ஞாயிற்று முன்னர் இருள் போல மாய்ந்தது என் ஆயிழை உற்ற துயர்' (கலி. 145: 65-66)

(6) **செறிவு / வன்மை** - dence
'இவன் அல்லா நெஞ்சம் உறப் பூட்டக் காய்ந்தே வல் இருள் நீயல் அது பிழையாகும் என' (பரி.6: 99-100)

(7) **பகை** - enmity
'ஈண்டு நீர்மிசைத் தோன்றி இருள் சீக்கும் சுடரேபோல் வேண்டாதார் நெஞ்சு உட்க வெருவந்த கொடுகையும்' (கலி.100: 1-2)

(8) **இரவு** - night
'வாராய் நீ புறம்மாற, வருந்திய மேனியாட்கு ஆர் இருள் துணையாகி அசைவளி அலைக்குமே' (கலி. 121: 11-12)

(9) **மாலைக்காலம்** - evening
'அருளாய் ஆகலோ கொடிதே; இருள் வர சீறியாழ் செவ்வழி பண்ணி' (புறம்.144: 1-2)

(10) **தீமை** - evil
'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' (குறள். 5)

(11) **அழிவு, நரகம்** - destruction, hell
'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும்' (குறள். 121)

(12) **மறம்** - unrighteousness
'மற இருள் இரிய மன்னுயிர் ஏமுற' (மணி.21: 165)

(20) **அறியாமை** - ignorance
'உண்மை மாலீர்த்து இருள்கடிந்து சாரையம் புண்விலங்கச் சார்பொருளைப் போற்றினோர்' (இன்னிலை.41:1-2)

(21) **அறிவின்மை** - ignorance
'அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர் நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்' (பெரிய.1: 5.159)

(22) **அஞ்ஞானம்** - ignorance
'தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற பொங்கிய இருளை ஏனைப்

புறைருள் போக்குகின்ற' (பெரிய.1: 10.2-3)

(23) அமங்கலம் - inauspicious
'மங்கல மரபிற் றல்லா மயங்கிருள் மறைந்து போக' (சூளா.1548: 5-6)

(24) மாயை
'இருள்கடிந்து அருளிய இன்ப ஊர்தி' (திருவா.2: 123)

(25) அடர்வு
'மொய்காட்டும் இருள் வாங்கி முகம்காட்டும் தேர் இரவி' (பெரிய.783)

(ஆ) இருள் பரத்தல் Irul parattal

துன்பம் - sorrow
'கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்தனவே' (சிலப்.7: 41)

(இ) இருள் விளக்குகளைச் சூழ்தல் Irul viḷakkukaḷaic cūḻtal

(26) தீமை, அழிவு, இறப்பு – evil, destruction, death
'விரியுமால் விளக்கினை விழுங்குமால் இருள்' (கம்ப.சுந்.373: 4)

(ஒப்பு) Darkness அறியாமை, இன்னல், இடையூறு, இழிவு, இறப்பு, கொடிய தீர்ப்பு, சிக்கல், தீமை.

## இல்லம் Illam (clearing nut tree)

(1) கார்காலம் - rainy season
'முல்லை வைந் நுனை தோன்ற, இல்லமொடு பைங் காற் கொன்றை மென் பிணி அவிழ, .. .. .. கருவி வானம் கதழ் உறை சிதறி, கார் செய்தன்றே, கவின் பெறு கானம்' (அகம்.4: 1-8)

## இல்லின் படுகாழ் Illin paṭukāḻ (தேற்றாங்கொட்டை)

(1) மாசு நீக்குதல், தெளிவித்தல் make clear, clear
'சொல்லின் நுண்பொருள் காட்டி இல்லின் படுகாழ்ப் படுத்துத் தேய்வை உறீஇக் கலுழி நீக்கும் கம்மியர் போல மகர வீணையின் மனமாசு கழீஇ' (பெருங்.உஞ்.35: 215-218)

(ஆ) தேறு Tēṟu

தெளிவித்தல்
'தேறுபடு சின்னீர் போலத் தெளிந்து' (மணி.23: 142)

## இலங்கை Ilaṅkai

இலங்கை நகரமும் அதைச் சுற்றியுள்ள மதில்களும் திசையும் அழலுதல் Ilaṅkai nakaramum ataic cuṟṟiyuḷḷa matilkaḷum ticaiyum aḻalutal

தீமை, அழிவு, இறப்பு – evil omen
'திரியுமால் இலங்கையும் மதிலும் திக்கு எலாம்' (கம்ப.சுந்.373: 1)

## இலவம் Ilavam (red flowered silk cotton tree)

(1) சிவப்பு / செம்மை நிறம் - red colour
'இலமலர் அன்ன அம்செந் நாவின்' (அகம்.142: 1)

(ஆ) இலவு Ilavu

(2) மென்மை - softness
'இலவினார் மாதர் பாலே இசைந்து நான் இருந்து பின்னும்' (திருநா.தேவா.2858: 1)

## இள மங்கையர் தீபம் கலசம் ஏந்தி வந்து எதிர்கொள்ள மதுரை மன்னன் எழுந்தருளுதல் Iḷa maṅkaiyar tīpam kalacam ēnti vantu etirkoḷḷa maturai mannaṉ eḻuntaruḷutal

(1) திருமணம்
'கதிர் ஒளித் தீபம் கலசம் உடன் ஏந்திச் சதிர் இள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு எங்கும் அதிரப் புகுதக் கனாக் கண்டேன்' (நாலா.560)

## இளமை Iḷamai (youth)

(1) நிலையாமை - transitoriness

'.. .. .. .. இளமையது அருமையும்'
(தொல்.987)

(2) **அரிய தன்மை** - rare
'பெறலரும் இளமை பெற்றுப் பேரின்பம் உற்றார் அன்றே'
(பெரிய.402)

**(ஒப்பு)** Youth **ஆளுமை, உள்ளுணர்வு, சூரிய உதயம், தலைவன், மகன், விழிப்புணர்வு, வீரம்.**

**இளவேனில்** Iḷavēṉil **(spring season)**

(1) **இனிமை** - pleasure, joy
'குருகு இரை தேரக் கிடக்கும் - பொழிகாரில் இன் இளவேனில், இது அன்றோ வையை?'
(பரி. 6: 76-77)

(2) **இன்பம், அழகு, புதுமை** - pleasure, beautiful, newness
'போது அவிழ் மரத்தொடு பொருகரை கவின் பெற, நோதக வந்தன்றால், இளவேனில் மேதக'
(கலி. 26: 7-8)

(3) **துன்பம்** - suffer
'.. .. .. .. பீடு இலா அரசன் நாட்டு ஏதிலான் படை போல, இறுத்தந்தது இளவேனில்'
(கலி. 27: 7-8)

(4) **நன்மை** - good
'நயந்தார்க்கோ, நல்லைமன், இளவேனில்!' (கலி. 32: 13)

**(ஒப்பு)** Spring **இளமை, இனிமை, காதலீடுபாடு, பசுமை, புதுமை, மறுபிறப்பு, மீட்பு, மென்மை, வளர்ச்சி; அறியாமை.**

**இறக்கை, இறகு (feather, wing) பார். 'சிறகு'**

**இறவு** Iṟavu **(prawn)**

(1) **உயிர்ப்பு, இயக்கம்** - lively, action
'திரை முதிர் அரைய தடந் தாட் தாழைச் சுறவு மருப்பு அன்ன முட் தோடு ஒசிய, இறவு ஆர் இனக் குருகு இறை கொள இருக்கும்'
(நற்.131: 4-6)

(2) **வளமை** - prosperity
'நத்தொடு, நள்ளி, நடை இறவு, வய வாளை, வித்தி அலையில் விளைக! பொலிக! என்பார்'
(பரி. 10: 85-86)

(3) **வளைவு** - curve
'மடங்கிறவு போலும்யாழ்ப் பண்பில்லாப் பாண! தொடங்குறவு சொற்றுணிக்க வேண்டா - முடங்கிறவு பூட்டுற்ற வில்லேய்க்கும் பூம்பொய்கை யூரன்பொய் கேட்டுற்ற கீழ்நாள் கிளர்ந்து' (திணைமாலை.131)

**(ஆ) இறா** Iṟā

(4) **வளம்** - prosperity
'பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த கொக்கு உகிர் நிமிரல் மாந்தி, எல் பட, அகல் அங்காடி அசை நிழல் குவித்த பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை'
(நற்.258: 5-8)

**வளைவு** - curve
'கூனிறாக் கண்டாலும் கொள்ள முடியாதேற் றுக்கந்துக்கம்'
(நீலகேசி.256: 3)

**இறை** Iṟai **(king)**

(1) **அச்சம்** - fear
'அணங்கே விலங்கே கள்வர்தம் இறையென பிணங்கல் சாலா அச்சம் நான்கே' (தொல்.1202)

(2) **பற்றுக்கோடு** - support
'அஞ்சல் என்ற இறை கைவிட்டென' (நற்.43:8)

(3) **நடுவுநிலைமை** - justice
'ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும் தேர்ந்து செய்வஃதே முறை' (குறள்.541)

(4) **பாதுகாப்பு, தலைமை** - safety, headship
'இறைகாக்கும் வையகம் எல்லாம் அவனை முறைகாக்கும் முட்டாச் செயின்' (குறள்.547)

**(ஆ) அரசர்** Aracar

(5) **தலைமை** - chief
'ஐவகை மரபின் அரசர் பக்கமும்'
(தொல்.1021: 2)

(6) **முறைமை** - order

*'முறையுடை அரசன் செங்கோல் அவையத்து'* (குறு.276: 5)

(7) **ஆட்சி, அறம்** - governing, righteousness
*'நல்அற நெறி நிறீஇ உலகு ஆண்ட அரசன் பின்'* (கலி. 129: 4)

(இ) <u>அரசு</u> Aracu

(8) **வெற்றி** - victory
*'முரசு பாடு அதிர ஏவி, அரசு படக் கடக்கும் அருஞ்சமத்தானே'* (ஐங்.426: 3-4)

(9) **ஆளுகை** - govern
*'ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும், மூத்தோன் வருக என்னாது, அவருள் அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்'* (புறம்.183: 5-7)

(10) **நிலைத்தன்மை** - stability
*'அரசு நிலை தளர்க்கும் அருப்பமும் உடைய'* (மலை. 378)

(ஈ) <u>மன்னன் / மன்னவன்</u> <u>Mannan</u> / <u>Mannavan</u>

(11) **கடமை** - duty
*'கடன் அறி மன்னர் குடை நிழற் போல'* (நற்.146: 4)

(12) **சிறப்பு, அறம்** - excellence, virtue
*'அறம் புரி செங்கோல் மன்னனின் தாம் நனி சிறந்தன போலும்'* (ஐங் 290: 1-2)

(13) **நிலைத்தன்மை, ஆட்சி** - stability, governing
*'மாயா மன்ன! உலகு ஆள் மன்னவ!'* (பரி. 3: 85)

(14) **வெற்றி, புகழ், ஒழுக்கம்** - victory, fame, discipline
*'வெல்புகழ் மன்னவன், விளங்கிய ஒழுக்கத்தால்'* (கலி. 118: 1)

(15) **காவல், பாதுகாப்பு** - security, safety
*'தன் உயிர் போலத் தழீஇ உலகத்து மன் உயிர் காக்கும் இம்மன்னனும் என்கொலோ'* (கலி. 143: 52-53)

(16) **நீதிமுறைமை** - justice
*'.. .. .. முறைபுரிந்து அறன்நெறி பிழையாத் திறன்அறி மன்னர்'* (அகம்.188: 3-4)

(17) **அச்சம்** – fear
*'உருகெழு மன்னர் ஆர்எயில் கடந்து'* (புறம்.392: 6)

(18) **தகுதி** - qualification
*'பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந்தனனே'* (புறம்.340: 9)

(19) **வீரம்/மானம்** - brave / dignity
*'புறப் புண் நாணி, மறத் தகை மன்னன் வாள் வடக்கிருந்தனன்'* (புறம்.65: 10-11)

(உ) <u>வேந்தன் / வேந்து</u> Vēntan

(20) **கடுமுனைப்பு** - great effort
*'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்'* (தொல்.1013: 2)

(21) **வெற்றி** - victory
*'வெம் முரண் யானை விறற் போர் வேந்தே'* (ஐங்.467: 5)

(22) **வலிமை** - strength
*'வெந்திறல் வேந்தே! இவ் உலகத்தோர்க்கே'* (பதி.37: 13)

(23) **வளமை** - prosperity
*'எக்கர் இட்ட குப்பை வெண்மணல் வைப்பின் யாணர் வளம்கெழு வேந்தர்'* (அகம்.181: 13-14)

(24) **பெருமை** - proud
*'நாடு கெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே'* (புறம்.35: 12)

(25) **அறம், வீரம்** - virtue, brave
*'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்'* (புறம்.62: 7)

(26) **உரிமை** - authority
*'முரசு கெழு வேந்தர் அரசு கெழு திருவே'* (புறம்.75: 12)

(27) **அறிவாற்றல்** - efficient knowledge
*'அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே'* (புறம்.184: 5)

(28) **புகழ்** - fame
*'அடுதிறல் உயர் புகழ் வேந்தே!'* (மது.130)

(ஒப்பு) <u>Emperor, King</u>
**அறிவாற்றல், ஆட்சி, ஆற்றல், உயர் விழிப்புணர்வு, உரிமை, கடுமுனைப்பு, சாதனை, சான்றொழுங்கு, தன்னடக்கம், தியாகம், நிலையான தன்மை, நீதி, பலம், பாதுகாப்பு, புனிதத்தன்மை, வலிமை, வளமை, வெற்றி.**

## ஈ

ஈ I

(1) **இழிவு** - low
'நிலத்துறும் கமலத்தை நேடும் வண்டதீ தலைக்குறை கமலத்தைச் சாரும் தன்மைபோல்' (தனிப்.31: 3-4)

<u>ஈக்கால்</u> Ikkāl

(1) **சிறிய அளவு** - a little
'நாய்க்கால் சிறுவிரல்போல் நன்குஅணியர் ஆயினும் ஈக்கால் துணையும் உதவாதார் நட்புஎன்னாம்' (நாலடி.218: 1-2)

<u>ஈங்கை</u> Iṅkai **(a tree)**

(1) **மாரிக்காலம்** - rainy season
'மாரி ஈங்கை மாத் தளிர் அன்ன' (அகம்.75: 17)

(ஆ) <u>ஈங்கை தளிர்த்தல்</u> Iṅkai taḷirttal (sprouting of Iṅkai)

(2) **இளவேனில்** - spring season
'.. .. .. .. ஈங்கை நல் தளிர் நயவர நுடங்கும் முற்றா வேனில் முன்னி வந்தோரே' (நற்.86: 7-9)

**ஈச்சம்பழம் (dates) பார். 'இந்து'**

<u>ஈச்சிறகு</u> Ecciraku

(1) **சிறிய அளவு** - a little
'.. .. .. .. யாக்கைக்குஓர் ஈச்சிறகு அன்னதோர் தோல் அறினும் வேண்டுமே காக்கை கடிவதுஓர் கோல்' (நாலடி.41)

**ஈட்டி (spear) பார். 'வேல்'**

<u>ஈமம் சேர் மாலை</u> Emam cēr mālai

(1) **இழிவு** - low
'ஈமம் சேர் மாலை போல இழிந்திடப் பட்டது அன்றே' (சீவக.210: 3)

<u>ஈயல்</u> Iyal **(winged white ant / termite)**

(1) **வலிமையின்மை / புன்மை** - strengthless, low
'நெடுங் கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி எல்லு முயல் எறிந்த வேட்டுவன் கவல' (நற்.59: 2-3)

(2) **விரைந்தழிதல், நுண்மை, மிகுதி** - succeptible, minute, excess
'நுண் பல சிதலை அரிது முயன்று எடுத்த செம் புற்று ஈயல் போல, ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோரே!' (புறம்.51: 9-11)

(ஆ) <u>சிதல்</u> Cital

(3) **அழிவு**
'காழ் சோர், முது சுவர்க் கணச் சிதல் அரித்த' (சிறுபா.133)

(இ) <u>சிதலை</u> Citavai

(4) **அழிவு, பாழ், சிதைவு**
'ஊர்எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ், .. .. .. .. .. குயில்காழ் சிதைய மண்டி, அயில்வாய்க் கூர்முகச் சிதலை வேய்ந்த போர்மடி நல்இறைப் பொதியி லானே!' (அகம்.167: 10, 18-20)

(5) **இறுதி, வாணாள் சிறுமை, அழிவு, மிகுதி**
'மண்ணுள்வாழ் சிதலைச் சாதி மற்றவை வாழு நாள்கள் எண்ணியாங்கு இகந்த பின்னை இறகுபெய் தெழுங்கள் போலாம்' (சூளா.1446: 1-2)

(ஈ) <u>ஈயல் கணம்</u> Eyal kaṉam

(3) **திறன்** - tact
'புற்றகத்து ஒடுங்கி முற்றிய காலை ஈரம் பார்க்கும் ஈயல் கணம் போல் நேரம் பார்த்து நெடுந்தகைக் குரிசிலை மீட்டிடம் பெற்றுக் கூட்டிடம் கூடி' (பெருங்.உஞ்.57: 72-75)

(ஒப்பு) <u>Termite</u> **இரகசிய அழிவு.**

## உ

**உச்சி (peak) பார். 'சிமை'**

<u>உடம்பு</u> Uṭampu **(body)**

(1) **நிலையாமை / அழிவு** - transitoriness / destruction

'ஒளிறு ஏந்து மருப்பின் களிறு மாறு பற்றிய தேய்புரிப் பழங் கயிறு போல, வீவதுகொல் என் வருந்திய உடம்பே?'
(நற்.284: 9-11)

(ஆ) <u>யாக்கை</u> Yākkai

(2) **நிலையாமை / இறப்பு** - transitoriness / death
'கூற்று அடூஉ நின்ற யாக்கை போல' (பதி.13: 11)
**நிலையாமை, அழிவு**
'படுமழை மொக்குளின் பல்காலும் தோன்றிக் கெடுமிதோர் யாக்கையென்று எண்ணி' (நாலடி.27:1-2)

(3) **அரியது, பயன்** – rare, useful
'அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்' (நாலடி.34:1)

(இ) <u>உயிர் இன்றி வாழும் யாக்கை</u> Uyir inri vālum yākkai

(4) **இயக்கமின்மை** - motionless
'மன்னரை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணும் காலை இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்' (பெரிய.15.29)

(ஈ) <u>உயிர் இழந்த யாக்கை</u> Uyir ilanta yākkai

(5) **அசைவற்ற நிலை, இயக்கமின்மை** - inactive
'இன்னுயிர் இழந்த யாக்கையின் இருந்தனள் துன்னியது உரைத்த சுதமதி' (மணி.7: 133-134)

(உ) <u>உடலில் ஒளி தோன்றுதல்</u> Uṭalil oḷi tōnrutal

(6) **நன்மை, வெற்றி** - goodness, victory
'ஆளி ஏறனையவன் அணிபொன் மேனிமேல் நீள் ஒளி தவழ்ந்தது' (சூளா.1218: 1-2)

**(ஒப்பு)** <u>Body</u> **ஆன்மா, வலிமை, வளமை; இறப்பு.**

**உடல் (body)** பார். **'உடம்பு'**

**<u>உடுக்கை</u>** Uṭukkai **(dress, cloth)**

(1) **பாதுகாப்பு** - safety
'வளை நரல் பௌவம் உடுக்கை ஆக' (நற். கட.வா: 2)

(2) **இன்றியமையாமை** - necessity
'உடுக்கை மருந்துறையுள் உண்டியோ டின்ன கொடுத்துக் குறைதீர்த்த லாற்றி - விடுத்தின்சொல் ஈயாமை யென்ப எருமை எறிந்தொருவர் காயக்கு லோபிக்கு மாறு' (பழமொழி. 338)

(ஆ) <u>சிவந்த உடுக்கை</u> Civanta uṭukkai (red colour dress)

(3) **முருகன்** - Muruga
'குன்றி ஏய்க்கும் உடுக்கை' (குறு. கட.வா: 3)

(4) **உவகை** - happy
'தோள் புதிது உண்ட பரத்தை இல் சிவப்புற நாள் அணிந்து, உவக்கும் சுணங்கறை யதுவே' (பரி. 9: 19-20)

(இ) <u>இருள் உடுக்கை</u> Iruḷ uṭukkai (dark dress)

(5) **செல்வம்** - wealth
'புதை இருள் உடுக்கைப் பொலம் பனைக்கொடியோற்கு' (பரி. 2: 22)

(ஈ) <u>மாசு உண் உடுக்கை</u> Mācu uṇ uṭukkai (soiled dress)

(6) **ஏழ்மை** - poverty
'மாசு உண் உடுக்கை, மடி வாய், இடையன்' (புறம்.54: 11)

(உ) <u>சிதாஅர் உடுக்கை</u> Citār uṭkkai (torn dress)

(7) **வறுமை** - poverty
'சிதாஅர் உடுக்கை, முதாஅரிப் பாண!' (புறம்.138: 5)

(ஊ) <u>ஆடை</u> Āṭai

(8) **மறைத்தல்** - hide
'ஆடையான் மூஉய் அகப்படுப்பேன்' (கலி.142: 26)

(எ) <u>துவர் ஆடை</u> Tuvar āṭai (saffron robe)

(9) **வீரம்** - brave
'துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்' (நற்.33: 6)

(10) **அழகு** - beautiful
'அம் துவர் ஆடைப் பொதுவனோடு' (கலி.102: 37)

(ஏ) **<u>பொலம் புரி ஆடை</u>** Polam puri āṭai (golden dress)

(11) **வளமை** - prosperity
'பொலம் புரி ஆடை! வலம்புரி வண்ண!' (பரி.3: 88)

(ஐ) **<u>ஒன்றன் கூறு ஆடை</u>** Oṉṟan kūṟu āṭai (single dress)

(12) **வறுமை** - poverty
'ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும் ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை' (கலி. 18: 10-11)

(ஒ) **<u>நிலந்தோய ஆடை உடுத்தல்</u>** Nilantōya āṭai uṭuttal (flowing attire), (wearing dress touching the floor)

(13) **பெருமிதம்** - sense of pride
'இருநிலம் தோயும் விரிநூல் அறுவையர்' (பதி. 34: 3)

(14) **மேன்மை**
'புறங்கால் தாழ்ந்து போர்வை முற்றி நிலம்தோய்பு உடுத்த நெடுநுண் ஆடையர் தானை மடக்கா மான மந்தர் அண்ணாந்து இயலா ஆன்றுபுரி அடக்கத்து' (பெருங்.உஞ்.32: 63-66)

(ஓ) **<u>துகில்</u>** Tukil

(15) **அழகு** - beautiful
'பிறை நுதல் பொறித்த சிறு நுண் பல் வியர் அம் துகில் தலையில் துடையினள்' (நற்.120: 7-8)

(16) **நுண்மை** - minute
'வீடுறு நுண் துகில் ஊடு வந்து இமைக்கும்' (நற்.366: 2)

(ஔ) **<u>கலிங்கம்</u>** Kaliṅkam

(17) **வளமை** - prosperity
'நீர்ப்படு பருந்தின் இருஞ்சிறகு அன்ன, நிலம்தின் சிதாஅர் களைந்த பின்றை, நூலாக் கலிங்கம் வால் அரைக் கொளீஇ' (பதி. 12: 19-21)

(க) **<u>காழகம்</u>** Kāḻakam

(18) **தலைமை** - chief
'நிரைதொடி நல்லவர் துணங்கையுள் தலைக் கொள்ள, கரையிடைக் கிழிந்த நின் காழகம் வந்து உரையாக்கால்?' (கலி. 73: 16-17)

(ங) **<u>காழகம் நீத்தல்</u>** Kāḻakam nīttal (lose the garment)

(19) **இறப்பு, தீமை** - death, evil
'களிறு மேல் கொள்ளவும், காழகம் நீப்பவும்' (புறம்.41: 9)

(ச) **<u>உடை</u>** Uṭai

(20) **அழகு** - beautiful
'பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய நீல நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை' (கலி. 124: 2-4)

(ஞ) **<u>கரை பறைந்த உடை</u>** Karai paṟainta uṭai (border torn dress)

(21) **வறுமை** - poverty
'பண்டுஅறி வாரா உருவொடு, என் அரைத் தொன்றுபடு துளையொடு பருஇழைபோகி, நைந்துகரை பறைந்த என் உடையும், நோக்கி, .. .. .. நிரயத்து அன்னஎன் வறன்களைந்து' (புறம்.376: 9-15)

(ட) **<u>சீரை</u>** (மரவுரி) Cīrai

(22) **தவம், துறவு** - asceticism, penance
'சீரை தைஇய உடுக்கையர்' (திருமுரு.126)

(ண) **<u>பட்டு உடை</u>** Paṭṭu uṭai (silk dress)

(23) **வளமை** - prosperity
'பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னற் சிதாஅர் நீக்கி, தூய கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி' (பொரு. 153-155)

உடுக்கை

(ண) <u>சிதர்வை</u> Citarvai (worn out dress)

(24) **வறுமை** - poverty
'நில்லா உலகத்து நிலைமை தூக்கி, அந்நிலை அணுகல் வேண்டி, நின்அரைப் பாசி அன்ன சிதர்வை நீக்கி, ஆவி அன்ன அவிர்நூற் கலிங்கம் இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குஉடன் உடீஇ'
(பெரும். 466-470)

(த) <u>கூறை கொள்தல்</u> Kūrai Koḷtal (get clothes)

(25) **புகழ்** - fame
'உருத்தெழு ஞாட்பினுள் ஒன்னார் தொலையச் செருக்கினால் செய்கல்லார் செய்வாரே போலத் தருக்கினால் தம்மிறைவன் கூழுண் பவரே கருக்கினால் கூறைகொள் வார்' (பழமொழி. 321)

(ந) <u>அரத்தம் உடுத்தல்</u> Arattam ututtal

(26) **பூப்புற்றல்** - mensturation
'அரத்தம் உடீஇ அணிபழுப்பப் பூசிச் சிரத்தையாற் செங்கழுநீர் சூடிப் பரத்தை நினைநோக்கிக் கூறினு நீமொழியல் என்று மனைநோக்கி மாண விடும்'
(திணைமாலை.144)

(ப) <u>கூறை கோட்படுதல்</u> Kūrai kōṭpaṭutal

(27) **தீமை, இறப்பு, இழிவு**
'கோவலன் கூறுமோர் குறுமகன் தன்னால் காவல் வேந்தன் கடிநகர் தன்னில் நாறைங் கூந்தல் நடுங்கு துயரெய்தக் கூறைகோட் பட்டு .. .. .. .. நனவு போல நள்ளிருள் யாமத்துக் கனவு கண்டேன் கடிதீங்கு உறுமென' (சிலப்.15: 95-106)

(ம) <u>இடையிலே உடுத்திய ஆடை நெகிழ்ந்து, கையினிடத்தே அசைதல்</u> Iṭayile uṭuttiya āṭai nekiḻntu, kaiyiniṭatté acaital (waist dress becoming loose)

(28) **தீமை** – evil omen
'ஒளிக்காசு ஒருபால் தோன்றத் துயில்பதத்து அசைந்த அம்துகில் கையகத்து அசைய நெகிழ்ந்த நீரில் கண்கை ஆக'
(பெருங்.மகத.24: 178-180)

(ம) <u>துவர் ஆடை போர்த்தல்</u>
Tuvar āṭai pōrttal

(29) **துறவு**
'துன்னம் செய்து ஆடையைத் துவர் தோய்த்துக் கொட்டியும் பொன்னம் செய்பத் தங்கப் புகையூட்டிக் கைசெய்து தன்னமும் அளித்தாய தலைசொறியு யிடையிலையா லென்னவற்றினாம் பயனை யெனக்கறிய உரையென்றாள்' (நீலகேசி.270)

(ய) <u>உடை துறத்தல்</u> Utai turattal

(30) **சமண சமயம்**
'உடை துறந்தவர்களும் உடை துவர் உடையாரும்'
(திருஞான.தேவா.185: 1)

(ர) <u>எரி படு துகில்</u> Eri paṭu tukil

(31) **அழிவு**
'எரி படு துகிலின் நொய்தின் இற்றது கடி கா என்றார்'
(கம்ப.சுந்.749: 4)

(ல) <u>கல் தோய் கலிங்கம்</u> Kal tōy kaliṅkam

(32) **சூளுறவு, உறுதி**
'உற்றோன் உற்ற உறுகண்டீர்க்கென கல்தோய் கலிங்கம் கட்டிய கச்சையன்' (பெருங்.உஞ்.46: 96-97)

(வ) <u>கொடிபடு கூறை</u> Koṭipaṭu kūrai

(33) **கடுமை / கொடுமை**
'கொள்ளி மாலையும் கொடிபடு கூறையும் அகலும் .. .. .. கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே' (நீலகேசி.30: 2,4)

(ழ) <u>சீரை</u> (மரவுரி) Cīrai

(34) **தவம்**
'பொரு அருங் குமரரும் போயினார் புறம் திரு அரைத் துகில் ஒரீஇ சீரை சாத்தியே' (கம்ப.அயோ.440: 3-4)

(ள) <u>செங்கூறை</u> Ceṅkūṟai

(35) **பௌத்த சமயம்**
'குலம்பொய்யே எனக் கூறும் செங்கூறையாய்' (நீலகேசி.534: 3)

(ற) <u>செம்படர்</u> Cempaṭar
**பௌத்த சமயம்**
'சிறையின் மிகுமால் இது செம்படர்கள் இறைவன் உறையும் இடமாம் எனலும்' (நீலகேசி.464: 3-4)

(ன) <u>தூத்துகில் வீசல்</u> Tūttukil vīcal

(36) **சமாதானம், போர் நிறுத்தம்**
'விடுகணை சென்று தேர்மால் பின்முனை வீழ்தலோடும் தொடுகழல் குருசில் நோக்கித் தூத்துகில் வீசினானே' (சீவக.1863: 3-4)

(i) <u>தொடு</u> (தோலாடை) Toṭu

(37) **வேடம்** - hypocricy
'படைப்பெளிதாற் கேடரிதாற் பல கள்வர் நவையாரால் உடைக்கியைந்த ஒலியிற்றால் ஊன் தருவார்க்கு உணர்த்துமால் விடக்கமர்ந்த உள்ளத்தாய் வேடமும் அறிவிக்கும் தொடர்ப்பாடும் பெரிதென்றால் தொட்டை நீ பூணியோ' (நீலகேசி.273)

(ii) <u>பீதக ஆடை</u> Pītaka āṭai (golden dress)

(38) **மாண்பு** - honour
'உடுத்துக் களைந்த நின் பீதக ஆஅடை உடுத்துக் கலந்ததுண்டு' (நாலா.9: 1-2)

(iii) <u>புலித்தோலாடை</u> Pulittōlāṭai

(39) **மறம் / வீரம்**
உடைமேல் 'உரவன் புலியின் உரி தோலாடை படநாகம்' (திருஞான.தேவா.13: 1-2)

(iv) <u>பொலம்பூ ஆடை</u> Polampū āṭai

(40) **பொலிவு**
'பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய' (சிலப்.11: 50)

(v) <u>பொன் திகழ் அறுவை</u> Poṉ tikaḻ aṟuvai
**பொலிவு**
'பொன் திகழ் அறுவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி' (பெரிய.3.11)

(vi) <u>பொன்னாடை போர்த்தல்</u> Poṉṉāṭai pōrttal

(41) **சிறப்பு**
'பெரு நீராட்டணி பெட்கும் பொழுதெனச் செம்பொன் படத்துப் பேறுவலித்து இருந்த' (பெருங்.உஞ்.39: 4-5)

(vii) <u>ஆடை போர்த்தல்</u> Āṭai Pōrttal

(42) **மானம், கற்பு**
'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ ஆடையது போர்த்துக் கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி' (சிலப்.7: 25)

(viii) <u>வெண்துகில்</u> Veṇṭukil

(43) **வெற்றி**
'வெண் துகிலிட்ட விசய முரசம்' (பெருங்.39: 24)

(44) **மங்கல அறிவிப்பு**
'நறுவெண் சாந்தொடு மாலை அணிந்து மறுவில் வெண்துகில் மருங்கணி பெறீஇ' (பெருங்.இலா.2: 35-36)

(ix) <u>வெள்ளணி</u> Veḷḷaṇi

(45) **பிறந்த நாள்**
'வெள்ளணி அணிந்த ஞான்றே வேந்தர்தம் முடியில் கொண்ட' (சீவக.614: 1)

(ஒப்பு) Cloth, Clothes, Dress, Garment அலங்காரம், அறிவாற்றல், ஆன்ம ஆற்றல், உடல், கலாச்சாரம், கவர்ச்சித்திறம், குறிப்பிட்ட தொழில், செல்வ வளம், தனிச்சிறப்பு, துணை, நிலைபேறு, பெண்மை, மறைத்தல்; உண்மையை மறைத்தல், பாலியல், மாறுபடும் தன்மை, வாழ்வில் புதிய நிலைக்குச் செல்லுதல்.
வெண்மை ஆடை - தூய்மை.

**உடுக்கை இழந்தவன் கை** Uṭukkai iḻantavaṉ kai

(1) நட்பு
'உடுக்கை இழந்தவன் கை போல் ஆங்கண் இடுக்கண் களைவதாம் நட்பு' (குறள்.788)

(ஆ) **உடையழி காலை உதவிய கை** Uṭaiyaḻi kālai utaviya kai

(1) நட்பு
'நயந்த நண்பின் அன்னர் நோக்கி உடையழி காலை உதவிய கைபோல் நடலை தீர்த்த நண்பனது இயல்பென' (பெருங்.நர.3: 38-40)

**உடும்பு** Uṭumpu **(a type of big lizard)**

(1) பற்றுக்கோடு - support
'பார் பக வீழ்ந்த வேருடை விழுக் கோட்டு உடும்பு அடைந்தன்ன நெடும் பொரி விளவின்' (நற்.24: 1-2)

(2) பிடிப்பு - grip
'அரக்கு விரித்தன்ன செந்நில மருங்கின் பரற் தவழ் உடும்பின் கொடுந் தாள் ஏற்றை' (மலை. 507-508)

(3) வலிமை, விடாப்பிடி - strong, stubbern
'வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும்பு என்ன நீங்கான்' (பெரிய.10.116)

**உடை (dress)** பார். **'உடுக்கை'**

**உப்பு** Uppu **(salt)**

(1) நிலையாமை - transitoriness
'உவர் விளை உப்பின் குன்று போல் குப்பை மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கை' (நற்.138: 1-2)

(2) வளமை, செல்வம் - prosperity, wealth
'தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து, பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி' (நற்.183: 1-2)

(3) மதிப்பு/இன்பம் - honour/pleasure
'.. .. .. .. நின் மெய்வாழ் உப்பின் விலைஎய் யாம் என' (அகம்.390:10-11)

(4) சுவை - taste
'குப்பைக் கீரை கொய்கண் அகைத்த முற்றா இளந் தளிர் கொய்துகொண்டு, உப்பு இன்று, நீர் உலையாக ஏற்றி, மோர் இன்று, அவிழ்ப் பதம் மறந்து, பாசடகு மிடைந்து' (புறம்.159: 9-12)

(5) அளவு - limit
'உப்பு அமைந்தற்றாற் புலவி அது சிறிது மிக்கற்றால் நீள விடல்' (குறள்.1302)

(6) சுவை, உவகை, இன்பம் – pleasure, joy, enjoyment
'உப்பமை காமத்துப்பின் அவரிடம் உரைத்தும் அன்றே' (சீவக.107: 4)

(ஆ) **உப்பு இயல் பாவை** Uppu iyal pāvai (salt doll)

(7) நிலையாமை - transitoriness
'உப்பு இயல் பாவை உறை உற்றதுபோல, உக்கு விடும் என் உயிர்' (கலி.138.16-17)

(இ) **உப்பு ஒய் சகடம்** Uppu oy cakaṭam (salt cart)

(8) நிலையாமை, அழிவு - transitoriness, destruction
'இருங்கரை நின்ற உப்பு ஒய் சகடம் பெரும்பெயல் தலைய வீஇந்தாங்கு' (குறு.165: 3-4)

(ஈ) **உப்புச் சிறை** Uppuc ciṟai
நிலையாமை, அழிவு

'கடும்புனல் நெருங்க உடைந்துநிலை ஆற்றா உப்புச் சிறைபோல் உள்நெகிழ்ந்து உருகி' (பெருங்.மகத.20: 120-121)

(உ) <u>நீருறும் உப்பு</u> Nirurum uppu

(9) **நிலையாமை, அழிவு, உருக்கம்**
'நெருப்புறு வெண்ணெயும் நீருறும் உப்பும் எனவிங்ஙனே பொருப்புறு தோகை புலம்புறல் பொய்யன்பர் போக்குமிக்க' (திருக்கோ.22: 315. 1-2)

(ஒப்பு) <u>Salt</u> **அறிவு, அழியாமை, ஒப்பந்தம், சுவை, தியாகம், தூய்மை, நலம், பாதுகாப்பு; அழிதல், கசப்பு, தரிசு, துரதிருஷ்டம், வளனின்மை; கண்ணீர், வியர்வை, உடம்பு, பெண்மை, வாழ்க்கை.**

<u>உமி</u> Umi

(1) **குறை, பயனின்மை, வீண்** – defect, useless
'நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும் நெல்லுக்கு உமிஉண்டு நீர்க்கு நுரைஉண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு' (நாலடி.221)

<u>உமிக்குற்றல்</u> Umikkurral **(pounding husk)**

(1) **பயனின்மை, வீண், துன்பம்** - useless, waste, suffer
'தமக்குற்ற தேயாகத் தம்மடைந்தார்க் குற்ற தெமக்குற்ற தென்றுணர விட்டக்கால் என்னாம் இமைத்தருவி பொன்வரன்றும் ஈர்ங்குன்ற நாட உமிக்குற்றுக் கைவருந்து மாறு'(பழமொழி. 348)

<u>உயிர்</u> Uyir **(soul)**

(1) **இன்றியமையாமை, சிறப்பு** - necessity, greatness
'உயிரினும் சிறந்த நாணும் நனி மறந்து' (நற்.17: 8)

(2) **நட்பு** - friendship
'உயிர் ஓரன்ன செயிர் தீர் நட்பின்' (நற்.72: 3)

(3) **இனிமை** - sweetness
'நின் நயந்து உறைவி இன் உயிர் உள்ளாய்' (நற்.168:7)

(4) **பெறற்கருமை** - rare
'.. .. .. .. நீசெல்வது, அந் நாள் கொண்டு இறக்கும், இவள் அரும்பெறல் உயிரே' (கலி. 5: 18-19)

(5) **நிலைபேறு, அழிவின்மை/அழிவு** - immortality, stability/destruction
'பொருள்மாலையாளரை உள்ளி, மருள் மாலை மாயும் என் மாயா உயிர்' (குறள். 1230)

(6) **ஆதாரம்** - support
'வளைகோல் இழுக்கத்து உயிராணி கொடுத்தாங்கு' (சிலப்.22: 4)

(ஆ) <u>ஆவி</u> Āvi

(7) **முதன்மை / முக்கியம்** – important / prime
'மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம் கண்ணும் ஆவியும் ஆம் பெருங்காவலான்' (பெரிய.1: 3.14)
**இன்றியமையாமை, அருமை**
'ஆவி அனைய அரும்புதல்வன்' (பெரிய.68.11)

(8) **அருமை/ இனிமை/ விருப்பம்**
'ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க்கு அடுத்த தென்னோ' (பெரிய.10.174)

(இ) <u>உடம்பொடு உயிர்</u> Uṭampōṭu uyir

(9) **ஒற்றுமை, இணைவு**
'உடம்பொடும் உயிரிடை மிடைந்த ஒற்றுமை வேற்றுமை விகற்பில்' (நீலகேசி.64: 1)

(ஈ) <u>உடம்பும் உயிரும்</u> Uṭampum uyirum

(10) **இணைமை, ஒற்றுமை, பிரியாமை**
'உடம்பினொடு உயிரில் பின்னி ஒருவயின் நீங்கல் செல்லா' (சீவக.556: 1)

(உ) <u>காயமும் ஆவியும்</u> Kāyamum āviyum

(11) **இணக்கம்**
*'காயமும் ஆவியும் நீங்கள் சிற்றம்பல வன்கயிலை'* (திருக்கோ.16: 207. 1)

(ஒப்பு) <u>Soul, Spirit</u> **ஆதாரம், இணைவு, இயக்க ஆற்றல், உயிர்ப்பு, உள்ளுறை ஆற்றல், உளச்சான்று, ஒற்றுமை, சீர்மை, சுவாசம், நிலைபேறு, பாதுகாப்பு, புலப்பாடின்மை, முழுமை, வாழ்வியல் ஆற்றல்.**

<u>**உயிர் எழுத்து**</u> Uyir eluttu

(1) **இயக்கம்** - active
*'இழைக்கும் எழுத்துக்கு உயிரே ஒத்தியால்'* (சுந்.தே.1010: 1)

<u>**உரல்**</u> Ural **(mortar)**

(1) **வலிமை** - strength
*'உரற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய'* (குறு.232: 4)

(ஒப்பு) <u>Mortar</u> **கல்வி, பாலியல்**

<u>**உரும்**</u> Urum **(thunder)**

(1) **கொடுமை** - cruelty
*'காலொடு பட்ட மாரி மால் வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே'* (நற்.2: 9-10)

(2) **வலிமை** - strength
*'உர உரும் உரறும் நீரின்'* (நற்.238: 8)

(3) **வேகம், ஆற்றல், அழிவு, கார்காலம்** - speed, ability, destruction, rainy season
*'நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்கும் கடுவிசை உருமின் கழறுகுரல் அளைஇக் காலொடு வந்த கமஞ்சூல் மாமழை!'* (குறு.158: 1-3)

(4) **ஊக்கம்** - encouragement
*'உரும் எனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்'* (அகம்.61: 6)

(5) **கடுமை** - fierceness
*'இளையது ஆயினும் இளை அரா எறியும் அரு நரை உருமின்'* (புறம்.58: 6-7)

(6) **கொலை** - killing
*'கார் எதிர் உருமின் உரறி, கல்லென, ஆர் உயிர்க்கு அலமரும் ஆராக் கூற்றம்!'* (புறம்.361: 1-2)

(7) **வன்கண்மை, வெம்மை, சினம்** - cruel, heat, anger
*'வலியின் தப்பும் வன்கண் வெஞ்சினத்து உருமும்'* (குறி. 254-255)

(ஆ) <u>ஏறு</u> Eru

(8) **முழக்கம்** - rumbling
*'தழங்கு குரல் ஏறொடு முழங்கி, வானம்'* (நற்.7: 5)

(9) **வலிமை, கார்காலம்** - strength, rainy season
*'சிலை வல் ஏற்றொடு செறிந்த இம் மழைக்கே'* (நற்.112: 9)

(10) **அழிவு, கொலை** - destruction, killing
*'ஈர்ங் குரல் உருமின் ஆர் கலி நல் ஏறு பாம்பு கவின் அழிக்கும் ஓங்கு வரை பொத்தி, மையல் மடப் பிடி இனைய, கை ஊன்றுபு இழிதரு களிறு எறிந்தன்றே'* (நற்.114: 9-12)

(11) **ஆற்றல்** - power
*'மரம் தின்னூஉ வரை உதிர்க்கும் நரை உருமின் ஏறு அனையை'* (மது. 62-63)

(இ) <u>இடி</u> Iṭi

(12) **முழக்கம், அச்சம்** - rumbling, fear / frighten
*'புலியொடு பொருத புண் கூர் யானை நற் கோடு நயந்த அன்பு இல் கானவர் விற் சுழிப்பட்ட நாமப் பூசல் உருமிடை கடிஇடி கரையும்'* (நற்.65: 5-8)

(13) **கார்காலம்** - rainy season
*'காரெதிர் கலிஒலி கடிஇடி உருமின் இயம் கறங்க'* (கலி. 105: 24)

(14) **கடுமை** - fierceness
*'கடிதுஇடி உருமொடு கதழ் உறை சிதறி'* (அகம்.162: 5)

(15) **வலிமை** - strength

'உரம்தலைக் கொண்ட உரும் இடி முரசமொடு' (திருமுரு. 121)

(ஈ) <u>உருமு</u> Urumu

(16) **சினம்** - angry / anger
'உருமுச் சிவந்து எறியும் ஓங்கு வரை ஆறே!' (நற்.255: 11)

(உ) <u>இடி வீழ்தல்</u> Iṯi viḻtal (thunderbolt)

(17) **தீமை, அழிவு**
'.. .. .. .. உயர் வான் இடியும் வீழ்ந்திடும்' (கம்ப.ஆரண்.431: 2-3)

(ஒப்பு) <u>Thunder, Thunderbolt</u> **ஆக்கம், ஆற்றல், கடவுளரின் குரல், செழிப்பு, படைப்பாற்றல், வளமை, வேகம்; அழிவு, கொடுமை, சினம்.**

**உரோகிணி (a star) பார். 'சகடம்'**

## <u>உலக்கை</u> Ulakkai (pestle)

(1) **திண்மை** - firmness
'பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை' (குறு.238: 1)

(2) **மாட்சி, மாண்பு** - greatness
'தொடி மாண் உலக்கைத் தூண்டு உரல் பாணி' (அகம்.9: 12)

(ஆ) <u>**உலக்கைமேல் காக்கை**</u>
Ulakkaimēl kākkai (crow on the pestle)

(3) **நிலையின்மை, வீண்** - transitoriness, waste
'நிலத்தின் மிகையாம் பெருஞ்செல்வம் வேண்டி நலத்தகு வேந்தருள் நல்லாரைச் சார்ந்து நிலத்து நிலைகொள்ளாக் காலரே காணின் உலக்கைமேல் காக்கையென் பார்' (பழமொழி. 157)

(ஒப்பு) <u>Pestle</u> **இலிங்க உரு, உழவு, நோய்களை நீக்குதல்; இறப்பு.**

## <u>உலகம்</u> Ulakam (world)

(1) **நிலையாமை / நிலைபேறின்மை** - transitoriness
'பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே' (தொல்.1024)

(2) **விரிவு** - broad, wide
'நனி இரும் பரப்பின் இவ் உலகுடன் உறுமே' (ஐங்.409: 4)

(3) **பேரளவு** - huge
'வருக என வேண்டும் வரிசையோர்க்கே பெரிதே உலகம்; பேணுநர் பலரே' (புறம்.207: 6-7)

(4) **அழிவின்மை, உறுதி** - stable, strong
'உலப்பி லுலகத் துறுதியை நோக்கிக் குலைத்தடக்கி நல்லறம் கொள்வார்க் கொளுத்தல் மலைத்தழு துண்ணாக் குழவியைத் தாயர் அலைத்துப்பால் பெய்து விடல்' (பழமொழி. 363)

(ஆ) <u>நிலம்</u> Nilam (land)

(5) **பேரளவு** - huge
'மா நிலம் சேவடி ஆக' (நற்.கட.வா: 1)

(6) **நிலைபேறு** - stable
'நிலம் புடைபெயர்வதாயினும்' (நற்.289: 2)

(7) **அளவின்மை / எல்லையின்மை** - limitless / boundless
'நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கின் அளப்பு அரியையே' (பதி. 14: 1-2)

(8) **பெண்** - woman
'நிலமகள் அழுத காஞ்சியும்' (புறம்.365: 10)

(9) **பொறுமை** - patience
'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை' (குறள். 151)

(இ) <u>நிலம் புடைபெயர்தல்</u> Nilam puṭaipeyartal (become topsy – turvy)

(10) **அரியதன்மை, இயல்பின்மை** - rare, unnatural
'நிலம்புடை பெயரினும் .. .. ..' (குறு.373: 1)

(ஈ) <u>ஞாலம்</u> Ñālam (earth)

(11) **பேரளவு** - huge

'இருங் கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவி' (நற்.157: 1)

(12) புரத்தல், பொறை - protect, patience
'நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்து உள' (பரி.4: 28)

(13) பயனுடைமை, தாய்மை, விரிவு - usefulness, motherhood, wide
'பல் பயம் உதவிய பசுமை தீர் அகல் ஞாலம் புல்லிய புனிறு ஒரீஇப் புது நலம் ஏர்தர' (கலி. 29: 3-4)

(உ) <u>உலகு</u> Ulaku

(14) பேரளவு - huge
'உலகு கிளர்ந் தன்ன உருகெழு வங்கம்' (அகம்.255: 1)

(ஊ) <u>கிடக்கை</u> Kiṭakkai

(15) விரிவு - wide
'இமிழ் கடல் வளைஇய ஈண்டு அகன் கிடக்கை' (புறம்.19: 1)

(எ) <u>உலகம் கம்பித்தல்</u> Ulakam kampittal (quake)

(16) தீமை, அழிவு, இறப்பு
'ஓடியுமால் மருப்பு உலகமும் கம்பிக்கும்' (கம்ப.ஆரண்.431: 2)

(ஒப்பு) <u>World</u> எல்லையற்ற பேரளவு, நிலைபேறு, பெருஞ்சிறப்பு.

## <u>உலை</u> Ulai (boiling pot)

(1) துன்பம்
'கொலைஞர் உலைஏற்றித் தீமடுப்ப ஆமை நிலைஅறியாது அந்நீர் படிந்துஆடி அற்றே' (நாலடி.331: 1-2)

## <u>உலைக்கல்</u> Ulaikkal (anvil)

(1) வெம்மை - heat
'உலைக்கல் அன்ன பாறை ஏறி' (குறு.12: 2)

(2) வலிமை - strength
'உலைக்கல் அன்ன வல்லாளன்னே' (புறம்.170: 17)

(ஒப்பு) <u>Anvil</u> அறிவாற்றல், ஆற்றல், உலகம், சக்தி, நீர், பெண்மைக்கொள்கை, பொருண்மை, வளமை, விளைவளம்.

## <u>உழவர்</u> Uḻavar (farmer)

(1) புலவர் - poets
'செது மொழி சீத்த செவி செறு ஆக, முது மொழி நீரா, புலன்நா உழவர் புது மொழி கூட்டுண்ணும்' (கலி.68: 3-5)

(2) உழைப்பு - hard work
'முகவை இன்மையின் உகவை இன்றி, இரப்போர் இரங்கும் இன்னா வியன்களத்து, ஆள்ஆழிப் படுத்த வாள்ஏர் உழவ' (புறம்.368: 11-13)

(ஆ) <u>மள்ளர்</u> Maḷḷar

(3) வலிமை
'வன்னிலை மள்ளர் உகைப்ப எழுந்த மரக்கோவை' (பெரிய.14.3)

## <u>உழவு</u> Uḻavu (ploughing)

(1) பயன், காமம் - yield, lust
'கரும்பு எல்லாம் நின் உழவு அன்றோ?' (கலி. 64: 14)

(2) செம்மைப்படுத்துதல் - reform
'முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கி, பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய், இடுமுறை நிரம்பி, ஆகுவினைக் கலித்து, பாசிலை அமன்ற பயறுஆ புக்கென' (அகம்.262: 1-4)

(3) மெய்ம்மை
'மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்தி' (திருநா.தேவா.2921: 1-2)

## <u>உழிஞை</u> Uḻiñai (a flower)

(1) மருதத்திணை - marutam
'உழிஞை தானே மருதத்துப் புறனே' (தொல்.1010)

(2) எயிற்போர் - beseige
'முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் அனைநெறி மரபிற்றாகும் என்ப' (தொல்.1011)

(3) வெற்றி - victory

'பொன் புனை உழிஞை வெல் போர்க் குட்டுவ!' (பதி. 22: 27)

(4) **மென்மை / நொய்ம்மை** - soft, fragile
'பூ அல்ல; பூளை, உழிஞையோடு, யாத்த புன வரை இட்ட வயங்கு தார்ப் பீலி' (கலி.140: 4-5)

**உழுந்தின் காய்** Uluntin kāy **(a bean)**

(1) **பனிக்காலம்** - winter
'இரும்பனிப் பருவத்து மயிர்க்காய் உழுந்து' (நற்.89: 5)

**உழைக்கலம்** Ylaikkalam **(side bowls)**

(1) **மங்கலம்** - auspicious
'மங்கல உழைக்கலம் மருங்கு சேர்ந்தன' (சூளா.88: 2)

**உளி** Uḷi **(chisel)**

(1) **கூர்மை** - sharp
'கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி' (குறு.304: 1)

(ஒப்பு) Chisel **அகநிலைக்கூறு, ஆக்க சக்தி, இயற்படிவம், ஒழுக்கம், தனித்தன்மை, பொருளின் தன்மைக்கூறு, வடிவமைத்தல்.**

**உறந்தை** Urantai **(a city)**

(1) **சோழர்** - chola
'மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து, அறம் கெட அறியாதாங்கு' (நற்.400: 7-8)

(2) **வளமை** - prosperity
'வளம் கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை' (குறு.116: 2)

(3) **புகழ்** - fame
'கெடல் அரு நல் இசை உறந்தை அன்ன' (அகம். 369: 14)

**உன்னநிலை** Unnanilai **(Unnam, a tree, looked to for omen)**

(1) **நிமித்தம்/வீரம்** - omen / bravery
'வீரர் உடல் வேந்தடுக்கிய உன்ன நிலையும்' (தொல்.1006: 8)

(ஆ) **உன்னம் சாய்தல்** Unnam cāytal (withering of Unnam)

(2) **தீமை** - bad, evil
'புன் கால் உன்னம் சாய, தெண் கண் வறிது கூட்டு அரியல் இரவலர்த் தடுப்ப' (பதி. 40: 17-18)

## ஊ

**ஊசல்** Ucal **(swing)**

(1) **அசைவு / இயக்கம்** - movement/action
'ஊசல் உறு தொழில் பூசல் கூட்டா' (நற்.90: 10)
'அசை வரல் ஊசல் சீர் அழித்து, ஒன்று பாடித்தை' (கலி. 131: 34)

(2) **போக்கு வரவு** - go forward and backward
'உழையர் கூவ புக்கு ஏகு எனப் பெயர்வது ஓர் ஊசலின் உளதாகும்' (கம்ப.சுந்.292: 5-6)

(3) **நிலையாமை, அசைவு** - transitoriness, oscillation
'உறுகயிறு ஊசல் போல ஒன்று விட்டு ஒன்று பற்றி மறுகயிறு ஊசல் போல வந்து உலவு நெஞ்சம் பெறுகயிறு ஊசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்து அறுகயிறு ஊசல் ஆனேன் அதிகை வீரட்டனீரே' (திருநா.தேவா.107)

(ஒப்பு) Pendulum, Swing **அசைவு, அன்பு, காதல், காலம், நீதித்தராசு, வாழ்க்கை; இறப்பு.**

**ஊசி** Uci **(needle)**

(1) **கூர்மை** - sharp
'அரம் தின் ஊசித் திரள் நுதி அன்ன, திண் நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்' (அகம். 199: 8-9)

(ஆ) **கொற்சேரி ஊசி விற்பார்** Korcēri ūci virpār

(2) **வீண், பயனின்மை** – waste, useless
'கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொற்சேரி

நுண் துளைத் துன்னூசி விற்பாரின் என்றானும் வேறல்லை பாண! வியலூரன் வாய்மொழியைத் தேற எமக்குரைப்பாய் நீ' (ஐந்.ஐம்.21)

**(ஒப்பு)** Needle, Pin **அதிர்ஷ்டம், அன்பு, இலிங்க உரு, எச்சரிக்கை, கட்டுப்பாடு, காதல், திருமணம், தையல்காரன், பெண்மை, மதிப்பு.**

**ஊஞ்சல் (swing)** பார். **'ஊசல்'**

**ஊதுலைக்குருகு** Utulaikkuruku **(bellows)**

(1) **நெட்டுயிர்ப்பு** - deep breath
*'ஊது உலைக் குருகின் உள் உயிர்த்து'* (நற்.125: 4)

**(ஆ)** **உலை வாங்கு மிதிதோல்**
Ulai vāṅku mititōl

(2) **துன்பம்** - suffer
*'உலை வாங்கு மிதிதோல் போலத் தலைவரம்பு அறியாது வருந்தும்'* (குறு.172: 6-7)

**(இ)** **துருத்தி** Turutti

(3) **நெட்டுயிர்ப்பு** - deep breath
*'.. .. .. கொல்லன் விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிரா'* (அகம்.224: 2-3)

**(ஒப்பு)** Bellows **ஆன்மீக வாழ்வு, உயிர்ப்பு, வாழ்க்கை.**

**ஊமன்** Uman **(dumb)**

(1) **இயலாமை** - inability
*'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில் கையில் ஊமன் கண்ணின் காக்கும் வெண்ணெய் உணங்கல் போல'* (குறு.58: 3-5)

(2) **துன்பம்** - suffer
*'மாரி இரவின் மரம் கவிழ் பொழுதின், ஆர் அஞர் உற்ற நெஞ்சமொடு, ஒராங்குக் கண் இல் ஊமன் கடற் பட்டாங்கு'* (புறம்.238: 15-17)

**(ஆ)** **ஊம்** Um

(3) **குறைபாடு, சிறப்பின்மை** - deficiency, nonglorious
*'சிறப்பு இல் சிதடும் உறுப்பு இல் பிண்டமும் கூனும், குறளும், ஊமும், செவிடும், மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு எண் பேர் எச்சம் என்று இவை எல்லாம் பேதைமை அல்லது ஊதியம் இல்'* (புறம்.28: 1-5)

**(இ)** **ஊமை** Umai

(4) **வாய்திறவாமை/பேசாமை** - mute
*'ஊமை எண்கின் குடாவடிக் குருளை'* (மலை. 501)

**(ஒப்பு)** Dumbness **இயல்பற்ற நிலை, தண்டனை, படைப்பின் ஆரம்ப நிலை.**

**ஊமையரோடு செவிடர் வார்த்தை**

Umaiyarōṭu ceviṭar vārttai

(1) **வீண்** - futile
*'மற்று இருந்தீர்கட்கு அறியலாகா மாதவன் என்பது ஓர் அன்பு தன்னை உற்று இருந்தேனுக்கு உரைப்பது எல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தை'* (நாலா.617: 1-4)

**ஊர்தி** Urti **(vehicle / mount)**

(1) **விரைவு** - speed
*'கால் கிளர்ந்தன்ன ஊர்தி'* (பதி.தி.1: 6)

**(ஆ)** **கருடச்சேவல் ஊர்தி**
Karuṭaccēval ūrti (Kite)

(2) **ஆண்மை, உயர்வு** - virility, high
*'ஆயிர அணர் தலை அரவு வாய்க் கொண்ட சேவல் ஊர்தியும், செங்கண் மாஅல்!'* (பரி. 3: 59-60)

**(இ)** **யானை ஊர்தி** Yānai ūrti (Elephant)

(3) **வலிமை / ஆற்றல்** - strength / power
*'ஊர்ந்ததை - எரி புரை ஓடை இடை இமைக்கும் சென்னி, பொரு*

சமம் கடந்த புகழ் சால், வேழம்' (பரி.21: 1-2)

(ஈ) <u>ஏற்று ஊர்தி</u> Erru ūrti (Bull)

(4) **மேன்மை** - superiority
'வெரு . வந்த ஆறு என்னார், விழுப்பொருட்கு அகன்றவர் உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன' (கலி. 150: 12-13)

(5) **சிவன்**
'ஊர்தி வால் வெள் ஏறே; சிறந்த சீர் கெழு கொடியும் அவ் ஏறு என்ப' (புறம்.கட.வா.3-4)

(உ) <u>ஒருகால் ஊர்தி</u> Orukāl ūrti (single wheel)

(6) **இயக்கம்/விரைவு** - action/speed
'பல்பூந் தண்பொழில் பகலுடன் கழிப்பி, ஒருகால் ஊர்திப் பருதிஅம் செல்வன்'(அகம்.360: 1-2)

(ஊ) <u>பிணிமுக ஊர்தி</u> Piṇimuka ūrti (Peocock)

(7) **வலிமை** - strength
'மணி மயில் உயரிய மாறா வென்றி, பிணிமுக ஊர்தி, ஒண் செய்யோனும்'. (புறம்.56: 7-8)

(ஒப்பு) <u>Vehicle, Riding</u> **சாகசம், சிறப்புத் திறமை, பெருமை, மெய்யுறு புணர்ச்சி, மேன்மை, விரைவு, வெற்றி.**

## <u>ஊழி</u> Uli (aeon)

(1) **நெடுமை** - long
'நாள் இடைச் சேப்பின், ஊழியின் நெடிதே!' (ஐங்.482: 4)

(ஒப்பு) <u>Aeon</u> **அளவிடற்கருமை, ஆளுருவாக்குதல், எல்லையின்மை, கடவுளின் கருத்து எடுத்துக்காட்டு, நிலைபேறுடைமை.**

## <u>ஊற்று</u> Urru (spring)

(1) **நீர்மை/அன்பு** - liquid state/love
'கல் ஊற்று ஈண்டல கயன் அற, வாங்கி, இரும் பிணர்த் தடக் கை நீட்டி, நீர் நொண்டு, பெருங் கை யானை பிடி எதிர் ஓடும்' (நற்.186: 1-3)

(2) **வலிமை** - strength
'குறுங்காழ் உலக்கை ஓச்சி, நெடுங்கிணற்று வல்ஊற்று உவரி தோண்டி' (பெரும். 97-98)

(3) **உதவி, பயன்** – help, use
'உறுபுனல் தந்துஉலகு ஊட்டி அறுமிடத்தும் கல்ஊற்று உழியுறும் ஆறேபோல் - செல்வம் பலர்க்குஆற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்குஆற்றிச் செய்வர் செயற்பால் அவை' (நாலடி.185)

(ஆ) <u>ஊற்று நீர்</u> Urru nīr (spring water)

(4) **மிகுதி** - excess
'மறப்பேன்மன் யான்; இஃதோ, நோயை இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போல மிகும்' (குறள்.1161)

(5) **அறிவு** - knowledge
'தொட்டனைத்து ஊறும் மணற் கேணி மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு' (குறள். 396)

(ஒப்பு) <u>Spring, Fountain</u> **அறிவு நுட்பம், ஆறுதல், ஆன்ம சக்தி, இளமை, உண்மை, உயிர்மூலம், கன்னிமை, தாய்மை, நற்பேறு, நிலைபேறு, பிறப்பு, புனிதம், மருத்துவ இயல்பு, மீட்பு, முழுமை, வருங்கால வாழ்க்கை, வழிபாடு, வளமை, விளைவளம்; இறப்பு; தூய்மைப்படுத்துதல்.**

## <u>ஊற்றுக்கோல்</u> Urrukkōl (staff)

(1) **உதவி, பாதுகாப்பு** - help, safety
'இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்றே ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்' (குறள்.415)

(ஆ) <u>ஊற்றங்கோல்</u> Urraṅkōl

(2) **உதவி, துணை** - help, support
'நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்து ஒல்லை உயிர்க்கூற்றங் கோலாகி' (சிறுபஞ்.57: 1-2)

(இ) <u>தொடித்தலை விழுத்தண்டு</u>
Toṭittalai viluttaṇṭu

(3) **முதுமை** – ageing
'தொடித் தலை விழுத் தண்டு ஊன்றி, நடுக்குற்று, இரும் இடை மிடைந்த சில சொற் பெரு மூதாளரேம் ஆகிய எமக்கே?' (புறம்.243: 12-14)

(ஒப்பு) <u>Crutch</u> **ஆதரவு, ஆதாரம், உதவி, சார்பு, நம்பிக்கை, பலக்குறைவு, முதுமை.**

<u>ஊனம்</u> Ūnam **(meat mincing block – wood)**

(1) **சிதைவு** - injury
'வளை தலை யாத்த தாழ் கரும் பாசவர் எஃகு ஆடு ஊனம் கடுப்ப, மெய் சிதைந்து'
(பதி. 67: 16-17)

## எ

<u>எட்டு</u> Eṭṭu

(1) **குணம்** - quality
'எட்டு கொலாம் அவர் ஈறில் பெருங்குணம் எட்டு கொலாம் அவர் சூடும் இனமலர் எட்டு கொலாம் அவர் தோளினை யாவன எட்டு கொலாம் திசை ஆக்கின தாமே'
(திருநா.தேவா.978)

(2) **கலைகள்** - arts
'மண்ணிடை ஐந்தினர் ஆறினர் அங்கம் வகுத்தனர் ஏழிசை எட்டிருங் கலைசேர்'
(திருஞான.தேவா.3771: 3-4)

<u>எட்டுத்திசைகளும் அதிர்தல்</u>
Eṭṭuticaikaḷum atirtal

(1) **தீமை, அழிவு, இறப்பு**
'திசையிரு நான்கும் அதிர்ந்திடும் அன்றி' (சிலப்.20: 4)

(ஆ) <u>மாதிரம் துடித்தல்</u> Mātiram tuṭittal
**தீமை, அழிவு**
'.. .. .. .. மாதிரம் துடித்தன'
(கம்ப.சுந்.298: 5)

(இ) <u>திக்கு எலாம் எரிதல்</u> Tikku elām erital
**தீமை, அழிவு, இறப்பு**
'திரியுமால் இலங்கையும் மதிலும் திக்கு எலாம் எரியுமால் கந்தர்ப்ப நகரம் எங்கணும்' (கம்ப.சுந்.373: 1-2)

<u>எண்-எழுத்து</u> Eṇeluttu **(number-letter)**

(1) **கல்வி** - education
'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு' (குறள்.392)

<u>எண்கு</u> Eṇku **(Bear)**

(1) **வலிமை** - strength
'வன் கை எண்கின் வய நிரை பரக்கும்' (அகம்.15: 16)

(2) **பெரியார்** - men of status
'பெரியாரைச் சார்ந்தார்மேல் பேதைமை கந்தாச் சிறியார் முரண்கொண் டொழுகல் - வெறியொலி கோநா யினம்வெரூஉம் வெற்ப! புலம்புகின் தீநாய் எழுப்புமாம் எண்கு' (பழமொழி. 292)

(ஒப்பு) <u>Bear</u> **அச்சம், அருவருப்பு, ஆபத்து, தீமை, பிடிவாத நிலை, முரட்டுக்குணம், வலிமை, வன்முறை, விடாப்பிடி.**

<u>எண்ணெய் ஆடுதல்</u> Eṇṇey āṭutal

(1) **தீமை, அழிவு** - evil omen
'எயிறு நிலத்து வீழவும், எண்ணெய் ஆடவும்' (புறம்.41: 8)

(ஆ) <u>இராவணன், தன் பத்துத் தலைகளிலும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு, கழுதை மற்றும் பேய்கள் பூட்டிய தேரின்மேல் ஏறி, சிவந்த ஆடை அணிந்தவனாய்த் தென்திசை நோக்கிச் செல்லுதல்</u> Irāvaṇan, tan pattut talaikaḷilum eṇṇey tēyttuk koṇṭu

kalutai marrum pēykal pūttiya tērin mēl erI, civanta ātai anintavanāyt tenticai nōkkic cellutal

(2) **தீமை, அழிவு, இறப்பு** – evil omen
'எண்ணெய் பொன் முடிதொறும் இழுகி ஈறு இலாத் திண் நெடுங் கழுதை பேய் பூண்ட தேரின்மேல் அண்ணல் அவ் இராவணன் அரத்த ஆடையன் நண்ணினன் தென்புலம் நசைஇல் கற்பினாய்!' (கம்ப.சுந்.368)

<u>**எண்ணெய் சுண்ணம் தூவுதல்**</u> Enney cunnam tūvutal

(1) **மகிழ்ச்சி** - joy
'கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில் எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிட' (நாலா.13: 2-3)

<u>**எய்**</u> Ey **(Porcupine)**

(1) **கடினம்** - hard
'எய்ம் முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்' (நற்.98: 1)

(ஒப்பு) <u>Porcupine</u>
**கண்மூடித்தனமான சீற்றம்.**

<u>**எயில்**</u> Eyil **(wall)**

(1) **நிலைபேறு** - stable
'மன் எயிலுடையோர் போல' (நற்.150: 5)

(2) **காவல்/பாதுகாப்பு** - security/safety
'அம்புடைஆர் எயில் உள் அழித்து உண்ட' (பதி.20: 19)

(ஆ) <u>**ஓர்எயில்**</u> Or eyil (lone fort)

(3) **வறுமை/நலிவு** - poverty/ decline
'.. .. .. உடைமதில் ஓர் எயில் மன்னன் போல' (நற்.43: 10-11)

(இ) <u>**தூங்கெயில்**</u> Tūnkeyil (hanging fort)

(4) **காவல், பாதுகாப்பு** - security, safety
'கடவுள் அஞ்சி வானத்து இழைத்த தூங்கெயில் கதவம் காவல் கொண்ட' (பதி. 31`: 18-19)

(5) **வலிமை** - strength
'ஒன்னார் உட்கும் துன் அருங் கடுந் திறல் தூங்கு எயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்' (புறம்.39: 5-6)

(ஈ) <u>**அரணம்**</u> Aranam (fort)

(6) **பாதுகாப்பு** - safety
'கடிப்புக் கண் உறூஉம் தொடித்தோள் இயவர், அரணம் காணாது, மாதிரம் துழைஇய நனந்தலைப் பைஞ்ஞிலம் வருக, இந்நிழல் என' (பதி.17: 7-9)

(உ) <u>**அரண்**</u> Aran

(7) **பாதுகாப்பு** - safety
'முனை கைவிட்டு முன்னிலைச் செல்லாது, தூ எதிர்த்து பெறாஅத் தா இல் மள்ளரொடு தொல் மருங்கு அறுத்தல் அஞ்சி, அரண் கொண்டு, துஞ்சா வேந்தரும் துஞ்சுக' (பதி.81: 33-36)

(8) **காவல்** - security
'அம்பு துஞ்சும் கடி அரணால்' (புறம்.20: 16)

(ஊ) <u>**சுவர்**</u> Cuvar

(9) **பிரிவு** - seperation
'தாள் வலம்படுப்பச் சேட் புலம் படர்ந்தோர் நாள் இழை நெடுஞ் சுவர் நோக்கி' (அகம்.61: 3-4)

(10) **தனிமை** - lonely
'சேண்உறை புலம்பின் நாள்முறை இழைத்த திண்சுவர் நோக்கி' (அகம்.289: 9-10)

(11) **உறுதி/திண்மை** - strong / firm
'காழ் சோர், முது சுவர்க் கணச் சிதல் அரித்த' (சிறு. 133)

(எ) <u>**மதில்**</u> Matil

(12) **உறுதி, வலிமை, திண்மை** - strong, power, firm
'வந்து மதுரை மதில் பொரூஉம் வான் மலர் தாஅய், அம் தண் புனல் வையை யாறு' (பரி. 12: 9-10)

(13) **காவல்** - security
*'நெடு நீர் மலி புனல், நீள் மாடக் கூடல் கடி மதில் பெய்யும் பொழுது'*
(*பரி*. 20: 106-107)

(14) **பாதுகாப்பு** - safety
*'உடை மதில் ஓர் அரண் போல, அஞ்சுவரு நோயொடு துஞ்சாதோனே!'* (*அகம்*.45: 18-19)

(ஏ) <u>**காப்பு**</u> Kāppu

(15) **காவல்** - security
*'அருங்கடிக் காப்பின் அகல்நகர் ஒருசிறை'* (*அகம்*.311: 2)

(16) **திண்மை** - firmness
*'புலிப் பொறிப் போர்க் கதவின் திருத் துஞ்சும் திண்காப்பின்'*
(*பட்*. 40-41)

(ஐ) <u>**கோட்டை**</u> Kōṭṭai

(17) **பாதுகாப்பு** - safety
*'விடர்ப் புலி பொறித்த கோட்டை'*
(*புறம்*.174: 17)

(ஒ) <u>**சிறை**</u> Ciṟai
**பாதுகாப்பு**
*'சிறையில்லா மூதூரின் வாயில் காப்பு இன்னா'* (*இன்னா*.23: 1)

(ஒப்பு) <u>Wall, Fort</u> **அடைக்கலம், அறிவாற்றல், உரிமை, உயர்வு, காதல், பாதுகாப்பு, பிரிவு, வளமை, விழிப்புணர்வு, வீடுபேறு.**

## <u>எருக்கு</u> Erukku **(Yarcum)**

(1) **காமம்** - lust / passion
*'மடலே காமம் தந்தது; அலரே மிடை பூ எருக்கின் அலர் தந்தன்றே'* (*நற்*.152: 1-2)

(2) **எளிமை / புன்மை** - simple
*'புல் இலை எருக்கம் ஆயினும், உடையவை கடவுள் பேணேம் என்னா'* (*புறம்*.106: 2-3)

(3) **அறிவிலார், அழிவு, கல்லாமை** - ignorant, destruction, illiterate
*'எல்லாத் திறத்தும் இரப்பப் பெரியாரைக் கல்லாத் துணையார்தாம் கைப்பிடித்தல் சொல்லின் நிறைந்தார் வலையினாய்! அஃதால் எருக்கு மறைந்துயானை பாய்ச்சி விடல்'* (*பழமொழி*. 62)

(ஆ) <u>**எருக்கங் கண்ணி சூடுதல்**</u>
Erukkaṅ kaṇṇi cūṭutal (wearing yarcum wreath)

(4) **காமம்** - lust / passion
*'பூ எனக் குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப .. .. .. காமம் காழ்க்கொளினே'* (*குறு*.17)

**எருமை (buffalo) பார். 'காரான்'**

## <u>எலி</u> Eli **(Rat)**

(1) **புன்மை** - low
*'இல் எலி வல்சி வல் வாய்க் கூகை'* (*அகம்*.122: 13)

(2) **தீய முயற்சி** - bad effort
*'விளை பதச் சீறிடம் நோக்கி, வளை கதிர் வல்சி கொண்டு, அளை மல்க வைக்கும் எலி முயன்றனையர் ஆகி'*
(*புறம்*.190: 1-3)

(3) **சிறுமை** - smallness, mean
*'புலி பார்த்து ஒற்றிய களிற்று இரை பிழைப்பின், எலி பார்த்து ஒற்றாதாகும்'* (*புறம்*.237: 16-17)

(4) **பகை/அழிவு** - enmity / destruction
*'ஒலித்தக்கால் என் ஆம் உவரி எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்'* (*குறள்*.763)

(ஆ) <u>**எலிக்கணம்**</u> Elikkaṇam

(5) **(விரைந்த) அழிவு**
*'பைவரி நாகத் தைவாய்ப் பிறந்த ஒலிப்புயிர் பெற்ற எலிக்கணம் போல ஒழிந்தோர் ஒழியக் கழிந்தோர் காணா'*
(*பெருங்.உஞ்*.56: 273-275)

(ஒப்பு) <u>Rat, Mouse</u> **அதிர்ஷ்டம், நன்றியறிதல், புத்திசாலித்தனம்; அழிவு, அற்பமான நிலை, இறப்பு, கோழைத்தனம், தீமை, தூய்மையற்ற நிலை, பகட்டு, வறுமை, வெற்றாரவாரம்.**

**எலும்பு (bone) பார். 'என்பு'**

**எலும்பு மாலை** Elumpu mālai

(1) **அழிவு**
'என்பொடு கொம்பொடு ஆமை இவைமார்பு இலங்க எருதேறி ஏழை உடனே' (திருஞான.தேவா.2653: 1-2)

(ஆ) **அக்கு** Akku
**அழிவு**
'அக்கினார் அமுதுண்கலன் ஓடுமே' (திருஞான.தேவா.2854: 7-8)

**எழிலி** Elili **(cloud)**

(1) **கடவுட்டன்மை / புனிதம்** - divinity / holy
'உலகிற்கு ஆணியாகப் பலர் தொழ, பல வயின் நிலைஇய குன்றின் கோடுதோறு ஏயினை, உரைஇயரோ! - பெருங் கலி எழிலி!' (நற்.139: 1-3)

(2) **தண்மை** - cool
'தலை நாட்கு எதிரிய தண் பத எழிலி' (நற்.362: 3)

(3) **வளமை** - prosperity
'வறந்த ஞாலம் தெளிர்ப்ப வீசிக் கறங்கு குரல் எழிலி கார் செய்தன்றே' (ஐங்.452: 1-2)

(4) **மழை** - rain
'பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி (புறம்.173: 5)

(5) **அழகு** - beautiful
'இருங்கடன் மாந்திய ஏர்கொள் எழிலி' (திணை.ஐம்.26: 1)

(ஆ) **கார்** Kār

(6) **தண்மை** - cool
'தனி திரு தண் கார் தலைஇ' (நற்.316: 9)

(7) **விரைவு** - speed
'நின்னே உள்ளி வந்தனென் - நல் நுதல் அரிவை! - காரினும் விரைந்தே' (ஐங்.492: 4-5)

(8) **அழகு** - beautiful
'எஃகு இடை தொட்ட, கார்க் கவின் பெற்ற ஐம்பால் போல்' (கலி. 32: 1)

(9) **வளமை** - prosperity
'கார்புகன்று எடுத்த சூர்புகல் நனந்தலை' (அகம்.303: 5)

(இ) **கொண்மூ** Koṇmū

(10) **பயன்** - use
'ஒளிறு வாள் பொருப்பன் உடல் சமத்து இறுத்த களிறு நிரைத்தவைபோல் கொண்மூ நெறிதர, .. .. .. .. வண்மைபோல் வானம் பொழிந்த நீர்' (பரி. 22: 1-2, 8)

(11) **வளமை** - prosperity
'ஞாலம் வறம் தீரப் பெய்ய, குணக்கு ஏர்பு, காலத்தில் தோன்றிய கொண்மூப் போல்' (கலி. 82: 1-2)

(12) **இயக்கம்** - action
'பெய்து வறிது ஆகிய பொங்குசெலற் கொண்மூ' (அகம்.125: 9)

(13) **மேன்மை / வளர்ச்சி** - superiority / development
'ஆர் கலி யாணர்த் தரீஇய, கால் வீழ்த்து, கடல்வயின் குழீஇய அண்ணல்அம் கொண்மூ' (புறம்.205: 10-11)

(ஈ) **கொண்டல்** Koṇṭal

(14) **பயன், வளமை** - use, prosperity
'பயன்நிலம் குழைய வீசி, பெயல்முனிந்து, விண்டு முன்னிய கொண்டல் மாமழை' (அகம்.235: 4-5)

(உ) **மஞ்சு** Mañcu

(15) **நிலையாமை** - unstable
'.. .. .. யாக்கை மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே நிலையாது நீத்து விடும்' (நாலடி.28)

(16) **கருமை**
'மஞ்சே என வீழ் மறலிக் கிறைநீள்' (பெரிய.8.18)

(ஊ) **வானம்** Vānam
**அழகு** - beautiful
'தடமென் பணைத்தோளி! நீத்தாரொ வாரார் மடநடை மஞ்ஞை அகவக் கடன் முகந்து மின்னோடு வந்தது எழில் வானம்' (ஐந்.எழு.16: 1-3)

(எ) <u>பருவக் கொண்மூ</u> Paruvak koṇmū

(17) கொடை, உதவி
'பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு ஒருமையின் உரிமையின் உதவி' (தனிப்.92: 5-6)

(ஏ) <u>மேகம்</u> Mēkam

(18) கொடை, வண்மை
'புள்ளி மால் வரை பொன் என நோக்கி வான் வெள்ளி வீழ் இடை வீழ்த்தெனத் தாரைகள் உள்ளி உள்ள எலாம் உவந்து ஈயும் அவ் வள்ளியோரின் வழங்கின மேகமே' (கம்ப.பால.16)

(ஒப்பு) <u>Cloud</u> அருளுடைமை, அறிவாற்றல், அன்பு, உறக்கம், தனிமை, தெய்வத்தன்மை, நிலையற்ற தன்மை, நிறைவு, நீர், பண்புடைமை, மகிழ்ச்சி, மறைவெளியீடு, முன்னுணர்வு, வளமை, வானுலகம்.

<u>எழினி</u> Eḻiṉi **(a liberal chief)**

(1) நடுவுநிலைமை, பாதுகாப்பு - justice, safety
'.. .. .. .. வெம்போர் நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி முனையான் பெருநிரை போலக் கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே' (குறு.80: 4-7)

எழுத்து **(letter)** பார். **'எண்-எழுத்து'**

<u>எழுகுளிறு மிதித்த ஒரு பழம்</u>

Eḻukuḷiṟu mititta oru paḻam **(a fruit treaded by seven crabs)**

(1) சிதைவு, அழிவு, துன்பம் - decline, destruction, sorrow
'.. .. .. வெண் கோட்டு அதவத்து எழு குளிறு மிதித்த ஒரு பழம் போலக் குழைய' (குறு.24: 3-5)

<u>எழுது சித்திரங்கள்</u> Eḻutu cittiraṅkaḷ

(1) செயலின்மை / இயக்கமின்மை – inactive / motionless
'இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே' (நாலா.283: 7-8)

<u>எழுமீன்</u> Eḻumīṉ **(seven stars)**

(1) கடவுட்டன்மை - divinity
'கைதொழு மரபின் எழுமீன் போல' (நற்.231: 2)

மே.காண். **'அருந்ததி'**

<u>எள்</u> Eḷ **(sesame)**

(1) சிறுமை / புன்மை - small / low, simple
'அடை இடைக் கிடந்த கை பிழி பண்டம், வெள் எட் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட வேளை வெந்தை, வல்சி ஆக, பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும் உயவல் பெண்டிரேம் அல்லேம்மாதோ' (புறம்.246: 6-10)

(2) சிறுமை / சிறிய அளவு - small / little
'எட் பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும், உட்பகை உள்ளது ஆம் கேடு' (குறள். 889)

(ஆ) <u>எள்</u> (எட்பூ) Eḷ

(3) வெண்மை, விளக்கம் – white, bright
'எட்பூ நிறத்தொடு கட்காமுறுத்தும் விளங்கறல் வெள்ளியின் வீசுறும் என்றதன்' (பெருங்.மகத.12: 71-72)

(4) அழகு - beautiful
'எள் ஒத்த கோல மூக்கின் ஏந்திழை ஒருத்தி முன்கை' (கம்ப.பால.928: 1)

<u>எறும்பி அளை</u> Eṟumpi aḷai **(anthill)**

(1) சிறுமை/குறுமை - small / narrow
'எறும்பி அளையின் குறும் பல் சுனைய' (குறு.12: 1)

மே.காண். **'புற்றம்'**

<u>எறும்பி</u> Eṟumpi **(ant)**

(1) உழைப்பு - hard work

'நுண் பல் எறும்பி கொண்டு அளைச் செறித்த வித்தா வல்சி, வீங்கு சிலை, மறவர் பல் ஊழ் புக்குப் பயன் நிரை கவர' (அகம்.377: 3-5)

(ஆ) <u>எறும்பு</u> Erumpu

(2) **முன்னறிதிறம், நுட்பம்** - anticipation, subtle, minute
'பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி, முட்டை கொண்டு வன் புலம் சேரும் சிறு நுண் எறும்பின் சில் ஒழுக்கு ஏய்ப்ப' (புறம்.173: 5-7)

(3) **பேதைமை, வீண்முயற்சி** - foolish, futile
'ஆகாது எனினும் அகத்துநெய் உண்டாகின் போகாது எறும்பு புறம்சுற்றும் - யாதும் கொடாஅர் எனினும் உடையாரைப் பற்றி விடாஅர் உலகத்து அவர்' (நாலடி.337)

(4) **ஆக்கம், செயல்** - active
'நந்தெறும்பு தூக்கணம் புள்காக்கை என்றிவைபோல் தம்கருமம் நல்ல கடைப்பிடித்து' (ஆசார.100: 1-2)

(இ) <u>உறவி</u> Uravi

(5) **உறுதியின்மை/வலுவின்மை** - weak
'ஆள்வினைக்கு எழுந்த அசைவுஇல் உள்ளத்து ஆண்மை வாங்க, காமம் தட்ப, அகைபடு நெஞ்சம்! கண்கண் அகைய, இருதலைக் கொள்ளி இடைநின்று வருந்தி, ஒருதலைப் படாஅ உறவி போன்றனம்' (அகம்.339: 6-10)

**(ஒப்பு)** <u>Ant</u> **அடக்கம், அறிவாற்றல், இயல்புணர்ச்சி, கடும் உழைப்பு, சீரான தன்மை, செயலறிவு, பணிவு, புத்திகூர்மை, பெருக்கத்தன்மை, வரிசைமுறை, வலிமை; குறுகிய மனப்பான்மை, பொறாமை, வலுவற்ற இயல்பு.**

<u>எறும்பிடை நாங்கூழ்</u> Erumpiṭai nāṅkūl

(1) **துன்பம்** - trouble
'எறும்பிடை நாங்கூழ் எனப் புலனால் அரிப்புண்டு அலந்த வெறுந் தமியேனை விடுதி கண்டாய்' (திருவா.6: 25.1-3)

**எறும்பு (ant) பார். 'எறும்பி'**

<u>எறுழ்</u> Erul **(a red flower)**

(1) **நன்மை / இன்பம்** - goodness/pleasure.
'வரு மழைக்கு எதிரிய மணி நிற இரும் புதல் நறை நிறம் படுத்த நல் இணர்த் தெறுழ் வீ' (நற்.302: 4-5)

<u>என்பு</u> Enpu **(bone)**

(1) **நெகிழ்ச்சி** - melt
'உருகுபவை போல் என்பு, குளிர் கொளீஇ' (பொரு. 78)

(2) **வலிமை** - strength
'உரிவை தைஇய ஊன்கெடு மார்பின் என்புஎழுந்து இயங்கும் யாக்கையர்' (திருமுரு. 129-130)

(3) **அன்பு** - love
'என்பி லதனை வெயில் போலக் காயுமே அன்பி லதனை அறம்' (குறள். 77)

(4) **வறுமை** - poverty
'உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின் கடும்பின் கடும் பசி களையுநர்க் காணாது' (புறம்.68: 1-2)

**(ஒப்பு)** <u>Bone</u> **அழிவின்மை, ஆதாரம், உறுதி, சிறந்த பண்பு, மீட்பு, வலிமை, வாழ்க்கை; இறப்பு.**

## ஏ

<u>ஏர்</u> Er **(plough)**

(1) **உழைப்பு** - hard work
'கல் அறுத்து இயற்றிய வல்உவர்க் கூவல், வில் ஏர் வாழ்க்கை, சீறூர் மதவலி நனி நல் கூர்ந்தனன் ஆயினும்' (புறம்.331: 1-3)

(2) **வீரம் / மறம்** - bravery
'இரைமுரசு ஆர்க்கும் உரைசால் பாசறை, வில்ஏர் உழவின்நின் நல்இசை உள்ளி' (புறம்.371: 12-13)

(3) **புலமை** - poetic ability

'வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க சொல்ஏர் உழவர் பகை' (குறள். 872)

(4) **உழவு, உழவர்** - ploughing, farmer
'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை' (குறள். 1031)

(ஆ) <u>ஓர் ஏர்</u> Or ēr

(5) **தனிமை/துன்பம்** - lonely / sorrow
'ஈரம்பட்ட செவ்விப் பைம் புனத்து ஓர்ஏர் உழவன் போல பெருவிதுப்பு உற்றன்றால், நோகோயானே' (குறு.131: 4-6)

(இ) <u>நாஞ்சில்</u> Nāñcil

(6) **உழவு, விளைவளம்** - ploughing, growth / fertility
'நிலம் கண் வாட, நாஞ்சில் கடிந்து' (பதி. 19: 17)

(7) **வளைவு** - bend
'வாய் வாங்கும் வளை நாஞ்சில்' (பரி. 1: 5)

(8) **பயன்** - use
'வறன் உழு நாஞ்சில் போல், மருப்பு ஊன்றி நிலம் சேர' (கலி. 8: 5)

(9) **வலிமை, வளமை** - strength, fertile
'கொடு மிடல் நாஞ்சிலான் தார் போல் மராத்து' (கலி. 36: 1)

(10) **வெற்றி** - victory
'அடல் வெந் நாஞ்சில் பனைக் கொடியோனும்' (புறம்.56: 4)

(ஈ) <u>நாஞ்சில் துஞ்சுதல்</u> Nāñcil tuñcutal (idle plough)

(11) **வறட்சி, வளனின்மை** - drought
'நாடு வறம் கூர, நாஞ்சில் துஞ்ச' (அகம்.42: 5)

(உ) <u>உழுபடை</u> Ulupaṭai

(12) **பயன்** - use
'பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே' (புறம்.35: 25-26)

(ஊ) <u>பகடு</u> Pakaṭu
**உழைப்பு, வளமை**
'துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப் பகடு நடந்தகூழ் பல்லாரோடு உண்க' (நாலடி.2: 1-2)

(ஒப்பு) <u>Plough</u> **அமைதி, அரசத்தன்மை, ஆண்மைக் கொள்கை, இனப்பெருக்கம், உழைப்பு, கடமை ஒப்படைப்பு, கடவுட்டன்மை, நிறைவு, படைப்பு, பயன், புனிதம், மறுசுழற்சி, வளமை, விளைவளம்; கருமத்தில் கண்ணாயிருத்தல்.**

## <u>ஏழு</u> Ēlu

(1) **ஊழி, இசை** - aeon, music
'ஏழு கொலாம் அவர் ஊழி படைத்தன ஏழு கொலாம் அவர் கண்ட இருங்கடல் ஏழு கொலாம் அவர் ஆளும் உலகங்கள் ஏழு கொலாம் இசை ஆக்கினதாமே' (திருநா.தேவா.977)

## <u>ஏற்றியல்</u> Ērriyal (Taurus)

(1) **வலிமை** - strength
'உருகெழு வெள்ளி வந்து ஏற்றியல் சேர' (பரி. 11: 4)

(ஒப்பு) <u>Taurus</u> **அமைதி, உழவு, உறுதி, செயல்முறை அறிவு, தடுமாற்றமின்மை, தியாகம், நேர்மை, படைப்பு, பரந்த மனப்பான்மை, பற்றின்மை, புரிந்து கொள்ளும் திறன், மழை, மிகு உணர்ச்சி, விளைவளம், வெற்றி.**

## <u>ஏறு</u> Ēru (male animal)

(1) **பீடு, பெருமிதம், வீரம்** - greatness, bravery
'வாணுதல் கணவ! மள்ளர் ஏறே!' (பதி. 38: 10)

(2) **வலிமை, தலைமை** - strength, chief
'வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு' (அகம்.146: 1)

(3) **மிடுக்கு, ஆளும் தன்மை**

'ஆளரி ஏறு போல்வார் அவரை முன் போக்கிப் பின்னே' (பெரிய.3.12)

(ஆ) <u>வெள்ளேறு</u> Veḷḷēṟu

(4) **மனைவி உயிருடன் இருத்தல், மகன் பிறப்பு** – wife being alive; birth of son
'வாய்ந்த வைகறை வையக வரைப்பின் நாற்கடல் உம்பர் நாக வேதிகைப் பாற்கடல் பரப்பில் பனித்திரை நடுவண் வாயும் கண்ணும் குளம்பும் பவளத் தாயொளி பழித்த அழகிற் றாகி விரிகதிர்த் திங்களோடு வெண்பளிங்கு உமிழும் உருவொளி உடைத்தாய் உட்குவரத் தோன்றி வயிரத்து அன்ன வைந்நுனை மருப்பில் செயிர்படு நோக்கமொடு சிறப்பிற்கு அமைந்ததோர் வெண்தார் அணிந்த வெள்ளேறு கிடந்த வண்டார் தாதின் வெண் தாமரைப்பூ அங்கண் வரைப்பின் அமரிறை அருள்வகைப் பொங்குநிதிக் கிழவன் போற்றவு மணப்ப மங்கலங் கதிர்த்த வங்கல் உழாகத்துத் தெய்வ மகடூஉ மெய்வயிற் பணித்துப் பையுள் தீரக் கைவயிற் கொடுத்தலும்' (பெருங்.வத்.5: 65-80)

(இ) <u>இளமையான இடபக்கன்று கழகத்தினை அழிக்க அங்குள்ளவர் சிதறி ஓடி, நிழலில்லாத மரங்களில் ஏறி நிற்றல்</u> Iḷamaiyāṉa iṭapakkaṉṟu kaḻakattiṉai aḻikka aṅkuḷḷavar citaṟi ōṭi, niḻalillāta maraṅkaḷil ēṟi niṟṟal (young bull)

(5) **தீமை, துன்பம்** – evil omen
'மழவிடை இளங்கன் றொன்று வந்துநங் கழகந் தன்னை உழறிடச் சிதறி ஓடிஒருவருந் தடுக்க அஞ்சி விழவொரு புகலு மின்றி மேதினி தன்னை விட்டு நிழலிலா மரங்க ளேறி நின்றிடக் கண்டோம் என்பார்' (பெரிய.28: 640)

<u>ஏறு கொண்டு எறியும் பணை</u> (ஏறுகோட்பறை) Eṟu koṇṭu eṟiyum paṇai (a drum)

(1) **முல்லைத் திணை** - pastoral
'ஏறு கொண்டு எறியும் பணைக் கோவலர்' (சூளா.14: 1)

# ஐ

**<u>ஐந்து</u>** Aintu (five)

(1) **ஐம்பூதங்கள்** - five elements
'நீர், நிலம், தீ, வளி, விசும்போடு ஐந்தும்' (பதி. 24:15)

(2) **ஐம்பொறிகள்** - five sense organs
'ஐந்து இருள் அற நீக்கி, நான்கினுள் துடைத்து' (பரி. 4: 1)

(3) **ஐவகை நிலங்கள்** – five regions
'மண்ணிடை ஐந்தினர் ஆறினர் அங்கம்' (திருஞான.தேவா.3771: 3)

(ஆ) <u>அஞ்சு</u> Añcu
**ஐம்புலன்கள்**
'அஞ்சும் ஒன்றி ஆறுவீசி நீறுபூசி மேனியில்' (திருஞான.தேவா.2022: 1)
**ஐம்பூதங்கள்**
'நாவில்நாலர் உடல் அஞ்சினர்' (திருஞான.தேவா.2428: 3)

(ஒப்பு) <u>Five</u> **ஆங்கில உயிரெழுத்துகள், ஐந்து இதழ்களை உடைய மலர்கள், ஐந்து கோள்கள் (புதன், வெள்ளி, செவ்வாய், வியாழன், சனி), ஐந்து செயல்கள் (விருப்பம், உண்மை, நம்பிக்கை, பணிவு, அன்பு), ஐந்து நிறங்கள் (வெண்மை, கறுப்பு, நீலம், சிவப்பு மஞ்சள்), ஐந்து பருவங்கள், ஐம்புலன்கள், ஐந்து முனைகளை உடைய நட்சத்திரம்.**

**<u>ஐந்தை</u>** (கடுகு) Aintai (mustard)

(1) **சிறுமை** - smallness
'வெறுமை இடத்தும் விழுப்பிணிப் போழ்தும் மறுமை மனத்தாரே ஆகி - மறுமையை ஐந்தை அனைத்தானும் ஆற்றிய காலத்துச்

சிந்தியார் சிற்றறிவினார்' (நாலடி.329)

**ஐயவி** Aiyavi **(white mustard)**

(1) **மங்கலம்** - auspiciousness
'ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணி' (நற்.40: 7)

(2) **மருத்துவ குணம் / புனிறு** - healing, recency of delivery
'கடும்புடைக் கடுஞ் சூல் நம் குடிக்கு உதவி, நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள் காழ் விளங்கு நகர் விளங்கக் கிடந்தோட் குறுகி, புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து' (நற்.370: 2-5)

(3) **சிறுமை / சிறிய அளவு** - small quantity
'ஐயவி அன்ன சிறு வீ ஞாழல்' (குறு.50: 1)

(4) **பாதுகாப்பு, காவல்** - safety, security
'நீயே, ஐயவி புகைப்பவும் தாங்காது, ஒய்யென, உறுமுறை மரபின் புறம் நின்று உய்க்கும் கூற்றத்து அனையை'
(புறம்.98: 15-17)

(ஆ) **கடிப்பகை** Kaṭippakai

(5) **சிறிய அளவு** - small
'கடிப்பகை அனைத்தும், கேள்வி போகா, குரல் ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்' (மலை. 22-23)

(6) **நுண்மை** - minute
'கடிப்பகை நுண்கலுங் கவிரிதழ்க் குறுங்கலும்' (சிலப்.30: 57)

**ஐயிரண்டு** Aiyiraṇṭu

(1) **திசைகள்** - directions
'ஐயிரண்டும் ஆறொன்றும் ஆனார் போலும்' (திருநா.தேவா.820: 1)

**ஐவர்** Aivar **(the five)**

(1) **ஐந்து கோள்** - five planets
'ஞாயிறும், திங்களும், அறனும், ஐவரும்' (பரி. 3: 4-10)

(2) **பாண்டவர்** - Pāṇṭavās
'ஐவர் என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா' (கலி. 25: 3)

(3) **ஐம்பூத தேவர்கள்** - gods of five elements
'ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப' (திருமுரு. 254)

(4) **ஐம்பெருங் குழுவினர்** - the administrating group of five
'பொலம் பூண் ஐவர் உட்படப் புகழ்ந்த மறம் மிகு சிறப்பின் குறுநில மன்னர்' (மது. 775-776)

(5) **ஐம்புலன்கள்** – five senses
'மெய்வரையான் மகள் பாசன்றன்னை விரும்ப உடல் வாழும் ஐவரை ஆசறுத்து ஆளும் என்பர் அதுவும் சரதமே' (திருஞான.தேவா.188: 5-8)



**ஒட்டகம்** Oṭṭakam **(camel)**

(1) **விரைவு** - speed
'குறும்பொறை உணங்கும் ததர்வெள் என்பு கடுங்கால் ஒட்டகத்து அல்குபசி தீர்க்கும்' (அகம்.245: 17-18)

(2) **உயர்ச்சி** - high
'ஓங்கு நிலை ஒட்டகம் துயில்மடிந் தன்ன' (சிறு. 154)

(ஒப்பு) Camel **அமைதி நிலை, ஆசியா, ஊர்தி, செயலறிவு, தகுதி, தன்னடக்கம், பணிவு, மறைமுகத்தன்மை; இறப்பு, காமவெறி, சீற்றம், செருக்கு, தடுமாற்ற இயல்பு, பேராசை, முட்டாள்தனம்.**

**ஒருமுலை அறுத்த திருமாவுண்ணி**

Oru mulai aṟutta tirumāvuṇṇi **(a woman who severed her breast)**

(1) **இன்னல், துன்பம்** - affliction, suffer
'எரி மருள் வேங்கைக் கடவுள் காக்கும் குருகு ஆர் துழனியின் இதணத்து ஆங்கண், ஏதிலாளன் கவலை கவற்ற, ஒருமுலை அறுத்த திருமாவுண்ணிக் கேட்டோர் அனையர் ஆயினும், வேட்டோர்

அல்லது, பிறர் இன்னாரே'
(நற்.216: 6-11)

**ஒளி** Oḷi **(light)**

(1) கடவுட்டன்மை - divinity
'வெஞ்சுடர் ஒளியும் நீ; திங்களுள் அளியும் நீ' (பரி. 3: 67)

(2) காவல், விழிப்புணர்வு, பாதுகாப்பு - security, awareness, safety
'ஒளிதிகழ் ஞெகிழியர், கவணையர், வில்லர் களிறு என ஆர்ப்பவர், ஏனல் காவலரே' (கலி. 52: 13-14)

(3) கல்வியறிவு - knowledge
'ஒளியோர் பிறந்த இம் மலர் தலை உலகத்து' (புறம்.53: 9)

(4) நன்மதிப்பு - honour
'.. .. .. பாசறை உளன் என வெரூஉம் ஓர்ஒளி வலன் உயர் நெடுவேல் என்னை கண்ணதுவே' (புறம்.309: 5-7)

(5) புகழ் - fame
'மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃது இன்றேல் மன்னாவாம் மன்னர்க்கு ஒளி' (குறள். 556)

(6) பெருமை - glory
'ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு அஃதிறந்து வாழ்தும் எனல்' (குறள். 971)

(ஒப்பு) Light அடிப்படை மூலம், அறிவுத்திறம், அறிவுநுட்பம், அறிவுறுத்தல், அன்பு, ஆண்மைக் கொள்கை, ஆற்றல், ஆன்மீகத் தூய்மை, ஒழுக்கப்பண்பு, கடந்த காலம், கடவுள், கனவுகள், சூரியன், தூய்மை, தொடக்கம், நம்பிக்கை, படைப்பாற்றல், பார்வை, பிரகாசித்தல், மகிழ்ச்சி, மெய்ப்பொருள், வளமை, வாழ்க்கை, வானியல் ஆற்றல், விரிவுறுதல், வீடுபேறு.

**ஒன்பது** **(nine)**

(1) பண்கள் – musical notes
'பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர் பத்தர்' (திருஞான.தேவா.3771: 5)

# ஓ

**ஓங்கல்** (வானம்பாடி) Oṅkal **(skylark)**

(1) நீர்வளம்
'கள்ளின் இடும்பை களியறியும் நீர்இடும்பை புள்ளினுள் ஓங்கல் அறியும்' (நான். 97:1-2)

**ஓடம்** **(boat)** பார். 'நாவாய்'

**ஓடு** Oṭu **(begging bowl)**

(1) வளம்
'வளத்தினால் மிக்க ஓடு வெளவினேன் அல்லேன்' (பெரிய.2.27)

(2) இரத்தல் - beg
'ஓடே கலன் உண்பதும் ஊரிடு பிச்சை' (திருஞான.தேவா.1616: 1)

மே.காண். 'கடிஞை'

**ஓடு நீரினை ஓட்டைக் குடத்து மூடி வைத்தல்** Oṭu nīriṉai ōṭṭaik kuṭattu mūṭi vaittal

(1) அறிவின்மை - foolish
'ஓடு நீரினை ஓட்டைக் குடத்து அட்டி மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே' (திருநா.தேவா.2778: 3-4)

**ஓணம்** Oṇam **(a star)**

(1) நன்மை - goodness
'மாயோன் மேய ஓண நல் நாள்' (மது. 591)

(ஆ) திருவோணம்

(2) நன்னாள், கொண்டாட்டம் – auspicious day, celebration
'.. .. .. திருவோணத் திருவிழவில் அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனை' (நாலா.6: 3-6)

**ஓணான்** **(chameleon)** பார். 'ஓதி'

**ஓதம்** Otam **(wave, billow)**

(1) தடுமாற்றம், வருத்தம் - staggering, suffer

'இருங் கழி ஓதம் போல் தடுமாறி' (கலி. 123: 18)

(2) துன்பம்
'ஓதம் போல உடன்றுடன்று நையநீ ஒண் தாமரை' (சீவக.1586: 3)

**ஓதி** Oti **(chameleon)**

(1) **வேனிற்காலம்** - spring season
'வேனில் ஓதிப் பாடு நடை வழலை' (நற்.92: 2)

(2) **மாற்றம்** - change
'வேனில் ஓதி நிறம் பெயர் முது போத்து' (நற்.186: 5)

(3) **நன்மை** - goodness
'வேதின வெரிநின் ஓதிமுது போத்து ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்' (குறு.140: 1-2)

(4) **அகலாமை** - without leaving
'வற்றல் மரத்த பொற் தலை ஓதி' (அகம்.145: 3)

**(ஒப்பு)** Chameleon **அன்பு, ஏற்புத்தன்மை, மாறும் இயல்பு; பீதியியல்பு.**

**ஓமை** Omai **(a tree)**

(1) **வெப்பம்** - heat
'உவர் எழு களரி ஓமை அம் காட்டு வெயில் வீற்றிருந்த வெம்பு அலை அருஞ் சுரம்' (நற்.84: 8-9)

(2) **பாதுகாப்பு** - safety
'ஓமைஅம் பெருங்காட்டு வரூஉம் வம்பலர்க்கு ஏமம் செப்பும் என்றூழ் நீள் இடை' (அகம்.191: 9-10)

(3) **வறட்சி** - drought
'நிழல்இல் ஓமை நீர்இல் நீள்இடை' (அகம்.223: 8)

**(ஆ)** **ஓமையம் பெருங்காடு** Omaiyam peruṅkāṭu (jungle of ōmai trees)

(4) **துன்பம்** - sorrow
'ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு இன்னா என்றி ராயின்' (குறு.124: 2-3)

**ஓரி ஒலித்தல்** Ori olittal **(howl of jackal)**

(1) **தீமை** – bad omen
'ஊமைக் கூகையும் ஓரியும் உறமுறழ் கதிக்கும் .. .. .. தீமைக்கே இடனாயதோர் செம்மலை உடைத்தே' (நீலகேசி.29: 2-4)

**ஓலை** Olai **(palm – leaf)**

(1) **ஆவணம்** - document
'கயிறு பிணி குழிசி ஓலை கொண்மார் பொறி கண்டு அழிக்கும் ஆவணமாக்களின்' (அகம்.77: 7-8)

(2) **பாதுகாப்பு** - safety
'மறப் புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும், உறைப்புழி ஓலை போல, மறைக்குவன் - பெரும நிற்குறித்து வரு வேலே' (புறம்.290: 6-8)

(3) **செய்தி** - news
'முழுதுடன் முன்னே வகுத்தவன் என்று தொழுதிருந்தக் கண்ணே ஒழியுமோ அல்லல் இழுகினா னாகாப்ப தில்லையே முன்னம் எழுதினான் ஓலை பழுது' (பழமொழி. 160)

**ஓவம்** Ovam **(picture, portrait)**

(1) **அழகு** - beautiful
'ஓவத்து அன்ன இடனுடை வரைப்பின்' (நற்.182: 2)

(2) **வினைத்திறன்** - work efficiency
'ஓவத்து அன்ன வினை புனை நல் இல்' (பதி. 61: 3)

(3) **குறிப்பு** - note (suggestive)
'முன்னம் காட்டி, முகத்தின் உரையா ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒற்றி' (அகம்.5: 19-20)

**(ஆ)** **ஓவியம்** Oviyam

(4) **அழகு** - beautiful
'பூந்துகில் மரீஇய ஏந்துகோட்டு அல்குல், அம்மாசு ஊர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு புனையா ஓவியம் கடுப்ப, புனைவு இல் தளிர் ஏர் மேனி' (நெடு. 145-148)

(இ) **ஒவு** Ovu

(5) **காட்சி இனிமை** - beauty perception
'ஓவுக் கண்டன்ன இரு பெரு நியமத்து' (மது. 365)

(ஒப்பு) Painting **உண்மை ஈடுபாடற்ற தன்மை, கட்டுப்பாடற்ற தன்மை, கழிகாமம், தந்திரம், பொய்ம்மை, மாயத்தோற்றம், முட்டாள்தனம்.**

## க

**கங்குல்** Kaṅkul **(night)**

(1) **துயில்** - sleep
'.. .. .. .. மனையோள் கங்குல் ஒலி வெள் அருவி ஒலியின் துஞ்சும்' (நற்.77: 6-7)

(2) **இருள்** - darkness
'ஆர் இருட் கங்குல் அவர்வயின்' (குறு.153: 4)

(3) **கருமை** - black
'மா இருங் கங்குலும், விழுத் தொடி சுடர் வர' (பதி.81: 10)

(4) **இறப்பு** - death
'மன்பதை எல்லாம் மடிந்த இருங் கங்குல்' (கலி.65: 3)

(5) **தீமை** - evil
'இரை நசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல் .. .. .. .. தீங்கு செய்தனையே ஈங்கு வந்தோயே' (அகம்.112: 4, 8)

(6) **கையாறு / துன்பம்** - suffering
'கடவுள் வழங்கும் கையறு கங்குலும்' (மது. 651)

(ஆ) **யாமம்** Yāmam

(7) **துயில், மயக்கம்** - sleep, confusion
'உறை மயக்குற்ற ஊர் துஞ்சு யாமத்து' (நற்.262: 3)

(8) **இருள்** - darkness
'நள்ளிருள் யாமத்து இல் எலி பார்க்கும்' (குறு.107: 3)

(9) **அச்சம்** - fear
'நள்ளென் யாமத்து, 'ஐ' எனக் கரையும் அஞ்சுவரு பொழுதினானும்' (குறு.261: 4-5)

(இ) **இரவு** Iravu (night)

(10) **இருள் / அச்சம்** - darkness / fear
'அரவு இரை தேரும் ஆர் இருள் நடு நாள் இரவின் வருதல் அன்றியும்' (நற்.285: 1-2)

(11) **இடும்பை / துன்பம்** - suffering
'இரவின் வரூஉம் இடும்பை நாம் உய' (நற்.393: 8)

(12) **துன்பம், பிரிவு** - suffering, seperation
'இன்பமும் இடும்பையும், புணர்வும் பிரிவும், நன் பகல் அமையமும் இரவும் போல' (அகம்.327: 1-2)

(ஈ) **எல்லி** Elli

(13) **இருள், கருமை** - darkness, black
'எல்லி அன்ன இருள் நிறப் புன்னை' (நற்.354: 5)

(உ) **அல்கல்** Alkal

(14) **மயக்கம் / மருட்சி / பொய்ம்மை** - confusion, false
'.. .. .. .. அல்கல், பொய்வலாளன் மெய் உற மரீஇய, வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட' (குறு.30: 1-3)

(ஊ) **எல்** El

(15) **இருள்** - darkness
'பொழுதும் எல்லின்று' (குறு.161: 1)

(எ) **அரையிரவு** Arai iravu

(16) **இருள்** - darkness
'ஆர் இருள் அரை இரவில்' (புறம்.229: 2)

(ஏ) **நடுநாள்** Naṭunāḷ

(17) **இருள்** - darkness
'ஆர் இருள் நடுநாள் வருதி' (குறு.141: 7)

(ஐ) <u>இரவு வானவில் தோன்றுதல்</u>

Iravu vāṉavil tōṉṟutal

(18) **தீமை, அழிவு** - evil omen
'இடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழும் கடுங்கதிர் மீனிவை காண்பென் காணெல்லா'
(சிலப்.20: 6-7)

(ஒப்பு) <u>Night, Midnight</u> **இரகசியம், உறக்கம், கருமை, கருவில் இருக்கும் நிலை, கனவு, கேட்டல், செழுமை, தனிமைநிலை, நட்பு, நிலைபேறு, பெண்ணியல்பு, மயக்கநிலை; அறிவிழந்த நிலை, இருள், இறப்பு, கீழுலகம், சதித்திட்டம், சிக்கல், சூது, தீமை, தீய எண்ணங்கள், துன்பமேற்கிற நிலை, தெளிவற்ற நிலை, தொந்தரவு, பில்லி சூனியம்.**

<u>**கங்கை**</u> Kaṅkai **(Ganga)**

(1) **காமப் பெருக்கு** – flooding passion
'வாஅன் இழிதரும் வயங்கு வெள் அருவிக் கங்கைஅம் பேர் யாற்றுக் கரை இறந்து இழிதரும் சிறை அடு கடும் புனல் அன்ன, என் நிரை அடு காமம் நீந்துமாறே'
(நற்.369: 8-11)

(2) **மேன்மை / உயர்வு** - superiority
'மீன் ஆரம் பூத்த வியன் கங்கை நந்திய வானம் பெயர்ந்த மருங்கு ஒத்தல்' (பரி.16: 36-37)

(3) **செவ்வி / நிறைவு** - perfectness, fullness
'வளமழை மாறிய என்றூழ்க் காலை, மன்பதை எல்லாம் சென்று உண, கங்கைக் கரை பொரு மலி நீர் நிறைந்து தோன்றியாங்கு, எமக்கும் பிறர்க்கும் செம்மலை ஆகலின்' (புறம்.161: 5-8)

(4) **வளமை** - prosperity
'இமையவர் உறையும் சிமையச் செவ்வரை, வெண்திரை கிழித்த, விளங்குசுடர் நெடுங்கோட்டுப் பொன்கொழித்து இழிதரும் போக்குஅருங் கங்கைப் பெருநீர் போகும் இரியல் மாக்கள்'
(பெரும். 429-432)

(5) **களவு** - conjugal love
'திங்கள்மாலை வெண்குடையான் சென்னி செங்கோலது ஓச்சிக் கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி'
(சிலப்.7.2)

(6) **விரைவு** - speed, swift
'கடுவரல் கங்கைப் புனலாடிப் போந்த' (சிலப்.29: 2.3)

(7) **கடவுட்டன்மை, புனிதம்** – divine, holy
'கங்கை என்னும் கடவுள் திரு நதி'
(கம்ப.அயோ.619: 1)

(8) **தூய்மை** - purity
'தூ நறுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்து வந்தாரோ' (பெரிய.518: 5-6)

(9) **விரிவு** - spreading
'சுரும்பிவர் சந்தும் தொடுகடன் முத்தும் வெண் சங்குமெங்கும் விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம் வியன் கங்கையென்னும்' (திருக்கோ.16: 248. 1-2)

(10) **மங்கலம்** - auspicious
'கங்கையின் களிற்றின் உச்சிக் கதிர்மணிக் குடத்தில் தந்த மங்கல வாச நன்னீர் மணிநிறங் கழீஇயது ஒப்ப' (சீவக.623: 1-2)
**புனிதம்** - holy
'பெரு நீர்த் திரை எழு கங்கையிலும் பெரியதோர் தீர்த்த பலம் தருநீர்ச் சிறுச்சண்ணம் துள்ளம் சோரத் தளர்நடை நடவானோ' (நாலா.95: 5-8)

(ஆ) <u>**கங்கைப் புனலாடல்**</u>

<u>Kaṅkaip punalāṭal</u>

**தூய்மை** - purification
'கடுவரல் கங்கைப் புனலாடிப் போந்த' (சிலப்.29: 2.3)

(இ) <u>**கங்கையாடல்**</u> Kaṅkaiyāṭal

(11) **தூய்மை, பாவம் தொலைத்தல் / புண்ணியம்** – removing sin
'மணிமேகலையை வான் துயருறுக்கும் கணிகையர் கோலம் காணாது ஒழிகெனக் கோதைத் தாமம் குழலொடு களைந்து போதித் தானம் புரிந்து அறம் கொள்ளவும் என்வாய்க் கேட்டோர்

இறந்தோர் உண்மையின் நன்னீர்க் கங்கை ஆடப் போந்தேன்' (சிலப்.27: 105-110)

கட்டு Kaṭṭu

(1) குறி - sign
'கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்' (தொல். 1061)

(2) குறி / குறிப்பு - sign, note
'குன்ற நாடன் பிரிவின் சென்று, நல் நுதல் பரந்த பசலை கண்டு, அன்னை செம் முது பெண்டிரொடு நெல் முன் நிறீஇ, கட்டின் கேட்கும் ஆயின்' (நற்.288: 4-7)

கட்டில் (cot) பார். 'அணை'

கடம்பு Kaṭampu (a tree)

(1) கார்காலம் - rainy season
'கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி' (நற்.34: 8-9)

(2) மீயாற்றல் – supernatural power
'அணங்குடைக் கடம்பின் முழுமுதல் தடிந்து' (பதி.17: 4-5)

(3) இறைமை - divine
'ஆலமும், கடம்பும், நல் யாற்று நடுவும், கால் வழக்கு அறுநிலைக் குன்றமும், பிறவும், அவ்வவை மேவிய வேறு வேறு பெயரோய்' (பரி.4: 67-69)

(4) அழகு - beautiful
'உருள் இணர்க் கடம்பின் ஒலி தாரோயே' (பரி.5: 81)

(5) புகழ் - fame
'புல வரை அறியாத புகழ் பூத்த கடம்பு அமர்ந்து' (பரி.19: 2)

(6) முதிர்வின்மை - youthfulness
'முந்நீரினுள் புக்கு மூவாக் கடம்பு எறிந்தாள்' (சிலப்.17.31)

(ஆ) கடம்பு தடிதல் Kaṭampu taṭital

(7) பகையொறுத்தல் - extricate enemy
'இடம் கவர் கடும்பின் அரசு தலை பனிப்ப, கடம்பு முதல் தடிந்த கடுஞ்சின வேந்தே' (பதி.12: 2-3)

(இ) கடப்பம் Kaṭappam

கார்காலம், இறைமை – winter, god-hood
'கார்க்கடப்பம் தாரெங் கடவுள் வருமாயின்' (சிலப்.24: 14.4)

கடல் Kaṭal (sea)

(1) கருமை - black
'மால் கடல் திரையின் இழிதரும் அருவி' (நற்.17: 2)

(2) வலிமை - strength
'உரவுக் கடல் உழந்த பெரு வலைப் பரதவர்' (நற்.63: 1)

(3) பேரளவு, காதல் - huge, large, love
'காதல்தானும் கடலினும் பெரிதே' (நற்.166: 10)

(4) ஒலி - sound
'எல் இமிழ் பனிக்கடல், மல்கு சுடர்க் கொளீஇ' (நற்.67: 8)

(5) விரிவு - broad, wide
'.. .. .. .. .. விரி திரைக் கடல் பெயர்ந்தனைய ஆகி' (நற்.259: 8-9)

(6) தண்மை / குளிர்ச்சி - cool
'திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப' (நற்.331: 8)

(7) வளமை - prosperity
'.. .. .. .. முழங்கு கடல் திரை தரு முத்தம் வெண் மணல் இமைக்கும்' (ஐங்.105: 1-2)

(8) அளப்பருமை / ஆழம் - unmeasurable / depth
'மகர மறி கடல் வைத்து நிறுத்து, புகழ்சால் சிறப்பின் இருதிறத்தோர்க்கும் அமுது கடைய' (பரி. தி.1: 64-68)

(9) நிறையாமை - unfilling
'மண்டு நீர் ஆரா மலி கடல் போலும் நின் தண்டாப் பரத்தை தலைக்கொள்ள' (கலி. 73: 19-20)

(10) அழிவு - destroy
'மலிதிரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின், மெலிவு இன்றி, மேல்சென்று, மேவார் நாடு இடம்பட' (கலி.104: 1-2)

(11) கடவுட்டன்மை, புனிதம் - divinity, holy
'பெருங் கடற்தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என் திருந்திழை மென்தோள்

மணந்தவன்' (கலி.131: 1-2)

(12) **காமம்** - passion
'காமக் கடல் அகப்பட்டு' (கலி.139.17)

(13) **அச்சம்** - fear
'உருகெழு பெருங்கடல் உவவுக் கிளர்ந்தாங்கு' (அகம்.201: 9)

(14) **பிறவி** - birth
'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடி சேராதார்' (குறள்.10)

(15) **கீழ்மை** – mean, low
'மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும் உப்பொழிதல் செல்லா ஒலிகடல்போல் - மிக்க இனநலம் நன்குடைய வாயினும் என்றும் மனநலம் ஆகாவாம் கீழ்' (பழமொழி.90)

(16) **நீங்கா இன்பம்** - pleasure
'சொல்லாமை நோக்கிக் குறிப்பறியும் பண்பில் தம் இல்லாளே வந்த விருந்தோம்பிச் செல்வத்து இடரின்றி ஏமாந் திருந்தாரே நாளும் கடலுள் துலாம் பண்ணினார்' (பழமொழி.330)

(17) **பிறவித் துன்பம்**
'எத்துணையானும் இயைந்த அளவினால் சிற்றறம் செய்தார் தலைப்படுவர் - மற்றைப் பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின்னறிதும் என்பார் அறிந்தார் பழிகடல் அத்துள்' (நாலடி.272)

(18) **நீலநிறம்** - blueness
'இலங்கையில் எழுந்த சமரமும், கடல்வணன் தேர் ஊர் செருவும் பாடி' (சிலப்.26: 238-239)

(19) **ஒழுக்கம்** – good conduct
'தாமார்ந்த சீலக் கடலாடிச் சங்கினத்துள்' (சீவக.3040: 3)

(20) **இன்பம்** - joy
'திருவிற் றிகழ்காமத் தேன்பருகித் தேவர் பொருவற் கரிய புலக்கடலுள் ஆழ்ந்தார்' (சீவக.3141: 3-4)

(21) **மிக்க துன்பம்** – excess sorrow
'துன்பக் கடலகத்து அழுந்த வேண்டா' (சீவக.1914: 4)

(ஆ) <u>பாற்கடல்</u> Pārkaṭal

(22) **இறையிருப்பு** - presence of god
'தன் உரு உறழும் பாற்கடல் நாப்பண், மின் அவிர் சுடர் மணி ஆயிரம் விரித்த, கவை நா அருந் தலைக் காண்பின் சேக்கைத் துளவம் சூடிய அறிதுயிலோனும்' (பரி.13: 26-29)

(23) **அருள்**
'அத்தர் தந்த அருட்பாற் கடலுண்டு' (பெரிய.25: 1)

(24) **வெண்மை**
'வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே' (நாலா.439: 1-2)

(இ) <u>கடலுக்கு எல்லை தோன்றுதல்</u> Kaṭalukku ellai tōnṟutal

(25) **அரிய தன்மை, இயல்பின்மை** - rare, unnatural
'இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்' (குறு.373: 2)

(ஈ) <u>கடல் ஆடுதல்</u> Kaṭal āṭutal

(26) **புனிதத்தன்மை, நன்மை** - holy, good
'மலி ஓதத்து ஒலி கூடல், தீது நீங்க, கடல் ஆடியும்' (பட்.98-99)

(உ) <u>கடலைத் தூர்த்தல்</u> Kaṭalait tūrttal

(27) **ஆற்றல்** - power
'.. .. .. .. கடல் தூர்க்குவனே' (பட்.271)

(ஊ) <u>திரை</u> Tirai

(28) **பொலிவு** -
'பொம்மற் படு திரை நம்மோடு ஆடி' (நற்.96: 4)

(29) **ஒலி / முழக்கம்** - sound,
'இழை அணி அல்குல் விழவு ஆடு மகளிர் முழங்கு திரை இன் சீர் தூங்கும்' (நற்.138: 9-10)

(30) **விரிவு** - broad
'விரிதிரை நீக்குவான், வியன்குறிப்பு - ஒத்தனர்' (கலி.106: 19)

(31) **வளமை** - prosperity
'வரைய சாந்தமும், திரைய முத்தமும்' (புறம்.58: 11)

(எ) பௌவம் Pauvam

(32) **தண்மை, பேரளவு** - cool, huge, large
'*தண் பெரும் பௌவ நீர்த் துறைவற்கு*' (நற்.291: 5)

(33) **எல்லையின்மை** - limitless, boundless
'*கரை காணாப் பௌவத்து, கலம் சிதைந்து ஆழ்பவன்*' (கலி.134: 24)

(ஏ) மாநீர் Mānīr

(34) **கருமை** - black
'*மணிக் கேழ் அன்ன மா நீர்ச் சேர்ப்ப*' (குறு.49: 2)

(ஐ) முந்நீர் Munnīr

(35) **வள்ளன்மை/ வண்மை** - liberality
'*கொளக் குறைபடாமையின், முந்நீர் அனையை*' (பதி.90: 16)

(36) **கடவுட்டன்மை** - divinity
'*அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்*' (அகம்.207: 1)

(37) **வலிமை** - strength
'*செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி*' (அகம்.212: 18)

(38) **ஆழம், பேரளவு, அளவின்மை** - depth, huge, limitless
'*இரு முந்நீர்க் குட்டமும், .. .. அவை அளந்து அறியினும், அளத்தற்கு அரியை*'
(புறம்.20: 1,5)

(39) **கருமை** - black
'*இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து*' (திருமுரு.293)

(40) **இயக்கம்** - active
'*மணிநிற நெய்தல் இருங்கழிச் சேர்ப்பன் அணிநலமுண்டு அகன்றோனென்று கொலெம் போற்றிணி மணல் எக்கர் மேல் ஓதம் பெயரத் துணிமுந்நீர் துஞ்சாதது*' (ஐந்.எழு.58)

(41) **வளமை, பயன்** – prosperous, usefull
'*கண்திரள் முத்தம் பயக்கும் இருமுந்நீர்*' (ஐந்.எழு.59: 1)

(42) **நல்வினை**
'*செய்வினை என்னும் முந்நீர்த் திரையிடை முளைத்துத் தேங்கொள்*' (சீவக.3145: 1)

(ஒ) ஆழி Āḻi

(43) **அழிவு** - destruction
'*ஊழி ஆழிக்கண், இருநிலம், உரு கெழு கேழலாய் மருப்பின் உழுதோய் எனவும்*'
(பரி.3: 23-24)

(44) **பிறப்பு / வாழ்க்கை** - birth, life
'*அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு பிற ஆழி நீந்தல் அரிது*' (குறள்.8)

(46) **கொடை**
'*மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா*' (திருஞான.தேவா.573: 2)

(ஓ) ஓதம் Otam

(45) **அழிவு** - destruction
'*ஓதம் சுற்றியது ஊர் என, ஒருசார்*' (பரி.7: 29)

(ஔ) உவரி Uvari

(46) **மிகுதி** - excess
'*ஒலித்தக்கால் என்ஆம் உவரி எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்*' (குறள். 763)

(க) நீர் Nir

**வளமை**
'*நீரான் வீறெய்தும் விளைநிலம் நீர்வழங்கும் பண்டத்தாற் பாடெய்தும் பட்டினம் - கொண்டாளும்*' (நான். 86:1-2)

**அச்சம்**
'*நாமநீர் வேலி உலகிற்கு அவனளிபோல்*' (சிலப்.1: 8)

(ங) அளக்கர் Aḷakkar

**வளம்**
'*வளத்தொடும் பல ஆறு மடுத்தலால் அளக்கர் போன்றன ஆவண வீதிகள்*' (பெரிய.94: 3-4)

(ச) மத்துறு கடல் Matturu kaṭal

(47) **கலக்கம்**
'*மத்துறு கடலின் தத்துறு நெஞ்சினர்*' (பெருங்.உஞ்.56: 272)

மே.காண். 'புனல்'

(ஒப்பு) Sea, Ocean அறிவு, ஆழங்காண முடியாத உண்மை, இயக்க நிலை, இறைமை, குறிக்கோள், சுதந்திரம், செல்வம், தனிமை, தூய்மை, நிலைபேறு, பிறப்பு, மறுபிறப்பு, மறைவடக்கம், மிகப் பரந்த நிலை, வளமை, வாழ்வு; இறப்பு, கேளாத்தன்மை, கொடிய தன்மை, தூய்மையற்ற நிலை.

**கடல் எல்லை காணும் காக்கை** Kaṭal ellaik kāṇum kākkai

(1) **இயல்பின்மை** - impossible
*'முனைவனாய் மூர்த்தி அல்லான் மூடுமே மாசும் என்பாய் கனைகடல் எல்லை காணும் காக்கை ஒத்தாய்கொல் என்றாள்'* (நீலகேசி.431: 3-4)

**கடல்தரங்கம்** Kaṭaltaraṅkam **(sea waves)**

(1) **ஒலி** - noise
*'அரவச் சேனை கடல்தரங்கம்'* (பெரிய.3801: 3)

**கடிஞை** Kaṭiñai **(bowl)**

(1) **ஈகை / கொடை** - benevolence
*'நினைத்த திதுவென்றந் நீர்மையை நோக்கி மனத்த தறிந்தீவார் மாண்டார் - புனத்த குடிஞை யிரட்டும் குளிர்வரை நாட! கடிஞையில் கல்லிடுவா ரில்'* (பழமொழி.375)

(2) **இரத்தல்** - beg
*'பிச்சை ஏற்ற பெய்வளை கடிஞையில்'* (மணி.பதி.63)

**கடிமரம்** Katimaram **(totem tree)**

(1) **காவல்** - security
*'வடி மணி அணைத்த பணைமருள் நோன் தாள், கடி மரத்தான் களிறு அணைத்து நெடு நீர துறை கலங்க'* (பதி.33: 2-4)

**கடுகு** **(mustard)**

(1) **சிறுமை** – smallness
*'.. .. .. செம்பொன் மேருவினைக் கட்டாகக் கட்டிக் கடுகள வாய்நிறை காட்டவல்ல'* (தனிப்.611: 2-3)

**கடை** **(shop)** பார். 'அங்காடி'

**கடைக்குளம் காய்தல்** Kaṭaikkuḷam kaytal

(1) **தீமை** - evil
*'ஆடு இயல் அழல் குட்டத்து ஆர் இருள் அரை இரவில், முடப் பனையத்து வேர் முதலாக் கடைக் குளத்துக் கயம் காய, .. .. .. .. கனை எரி பரப்ப, கால் எதிர்பு பொங்கி, ஒரு மீன் வீழ்ந்தன்றால், விசும்பினானே; .. .. .. மேலோர் உலகம் எய்தினன்'* (புறம்.229)

**கண்** Kaṇ

(1) **கண்ணோட்டம்** - sympathy, compassion
*'அம் சில் ஓதி என் தோழி தோட் துயில் நெஞ்சின் இன்புறாய் ஆயினும், அது நீ என் கண் ஓடி அளிமதி - நின் கண் அல்லது பிறிது யாதும் இலளே'* (நற்.355: 8-11)

(2) **காமம்** - passion
*'கண்தர வந்த காம ஒள்எரி'* (குறு.305: 1)

(3) **அன்பு** - love
*'போது இல் வறுங்கூந்தல், கொள்வதை, நின்னை யாம் ஏதிலார் கண்சாய'* (கலி.80: 22-23)

(4) **அருள்நோக்கம்** - grace
*'ஆயிழாய்! நின் கண் பெறின் அல்லால், இன் உயிர் என் கண் எவனோ, தவறு?'* (கலி.88: 8-9)

(5) **அறிவு, கல்வி** - knowledge, education
*'கல்லாது மிதிர்ந்தவன் கண் இல்லா நெஞ்சம் போல்'* (கலி.130: 6)

(6) **நோக்கம் / இன்றியமையாமை** - necessity
*'பசி தினத் திரங்கிய இரும்பேர் ஒக்கற்கு ஆர்பதம் கண்ணென மாதிரம் துழைஇ'* (புறம்.370: 3-4)

(7) **எண், எழுத்து / கல்வி** - number, letter / education
*'எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ் விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு'* (குறள்.392)

(8) **சிறப்பு / ஆளுமை** - excellence
*'புலப்பேன்கொல் - புல்லுவேன் கொல்லோ - கலப்பேன்கொல் - கண் அன்ன கேளிர் வரின்'* (குறள்.1267)

(9) **செல்வம்** - wealth
*'முழவொலி முந்நீர் முழுதுடன் ஆண்டார் விழவூரில் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும் இழவென் றொருபொருள் ஈயாதான் செல்வம் அழகொடு கண்ணி னிழவு'* (பழமொழி.217)

(10) **சிறப்பு, அருமை** - important
*'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை கொண்டானின் துன்னிய கேளிர் பிறரில்லை* (நான். 57:1-2)

(11) **கருணை** - grace
*'கண்நுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி'* (திருவா.1: 21)

(ஆ) **<u>கண் ஆடல்</u>** Kaṇ aṭal

(12) **நன்மை, தலைவன் வரவு** - good,
*'நுண் ஏர் புருவத்த கண்ணும் ஆடும்'* (ஐங்.218: 1)

(இ) **<u>நெற்றிக்கண்</u>** Neṟṟikkaṇ

(13) **உயர்வு, மேன்மை, சிறப்பு** - high, superiority, excellence
*'பிறை நுதல் விளங்கும் ஒரு கண் போல, வேந்து மேம் பட்ட பூந் தார் மாற'* (புறம்.55: 5-6)

(ஈ) **<u>முக்கண்</u>** Mukkaṇ

(14) **இறைமை** - divinity
*'உமைஅமர்ந்து விளங்கும், இமையா முக்கண், மூஎயில் முருக்கிய, முரண்மிகு செல்வனும் நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து, நூறுபல் வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து'* (திருமுரு.153-156)

(உ) **<u>கண்ணின் கருமணி</u>** Kaṇṇiṉ karumaṇi

(15) **பாதுகாப்பு, அருமை** - safety, worthy, valuable
*'கண்ணுள் மணியே போல் காதலால் நட்டாரும் எண்ணுந் துணையிற் பிறராகி நிற்பரால் எண்ணி உயிர்கொள்வான் வேண்டித் திரியினும் உண்ணுந் துணைகாக்கும் கூற்று'* (பழமொழி.135)

(ஊ) **<u>கண் இன்மை</u>** Kaṇ iṉmai

(16) **அழகின்மை / ஊனக்குறியீடு** – ugly, handicap
*'கண் இல் ஒருவன் வனப்பு இன்னா'* (இன்னா.16: 3)

(எ) **<u>இடக்கண் ஆடல்</u>** Iṭakkaṇ āṭal

(17) **நன்மை** – good omen
*'உருவவேற் கண்ணாய்! ஒருகால் தேர்ச் செல்வன் வெருவி வீந்து உக்க நீள் அத்தம் - வருவர் சிறந்து பொருள் தருவான் சேட்சென்றார் இன்றே இறந்து கண் ஆடும் இடம்'* (திணைமாலை.80)

(ஏ) **<u>கண்மணி</u>** Kaṇmaṇi pupil (apple of one's eye)

(18) **இன்றியமையாமை, சிறப்பு** – worthy of love
*'கண்மணி அனையாற்குக் காட்டுக என்றே'* (சிலப்.13: 75)

(19) **அன்பன்** – very much loved person
*'மனங்கவல்வின்றி மனையகம் புகுந்தென் கண்மணி அனையான் கடிதீங்குறுகென'* (மணி.16: 47-48)

(20) **நட்பு** - friendship
*'கண்மணி அன்ன திண் நட்பாளன்'* (பெருங்.இலா.8: 170)

(ஐ) **<u>கனல் ஆடு கண்</u>** Kaṉal āṭu kaṇ

(21) **அழிப்புச்செயல்** - destroy
*'கறை உடையான் கனல் ஆடுகண்ணால் காமனைக் காய்ந்தவன் காட்டுப் பள்ளி'* (திருஞான.தேவா.161: 5-6)

(ஒ) <u>கண் சிவத்தல்</u> Kaṇ civattal

(22) சினம் - anger
'ஓடரி சிதறிய ஒள்ளரி மழைக்கண் ஊடெரி உமிழும் ஒளியே போலச் சிவப்பு உள்ளுறுத்துச் செயிர்ப்பு முந்துறீஇ' (பெருங்.இலா.16: 16-18)

(ஓ) <u>கண்ணிடனாடல்</u> (ஆண்) Kaṇṇiṭanāṭal

(23) தீமை, துன்பம் – evil omen
'வயிரம் வேய்ந்தமணி நீண்முடி வாலொளி வானவன் செயிரில் தீர்ந்த செழுந்தாமரைக் கண்ணிடனாடலும் உயிரனானை நினைந்தானுற்ற தோதியி னோக்கினான் மயிலனார்க்குப் படி வைத்தவன் மால்விசும்பேறினான்' (சீவக.4: 1156)

(ஔ) <u>கண் வலனாடல்</u> (ஆண்) Kaṇ valanāṭal

(24) நன்மை – good omen
'நெறியின் நல்கின புள்ளும் நிமித்தமும்; இறைவன் கண் வலன் ஆடிற்று இயைந்தரோ' (சீவக.2168: 3-4)

(க) <u>கண்களில் நீர்த்துளி தோன்றுதல்</u> Kaṇkaḷil nīrttuḷi tōṉṟutal (tear in eye)

(25) துன்பம் - sorrow
'போதன புணரரி நெடுங்கண் புனல்வரப் பூந்துகிற் புடையா வேதனை பெரிதுடைத் தடிகள் விளிகவிப் பிறப்பென உரைத்தாள்' (நீலகேசி.73: 3-4)

(ங) <u>திருக்கண்</u> (நெற்றிக்கண்) Tirukkaṇ

அழிவு
'முந்நீர் சூழ்ந்த நஞ்சம் உண்ட முதல்வர் மதனன்றன் தென்நீர் உருவம் அழியத் திருக்கண் சிவந்த நுதலினார்' (திருஞான.தேவா.3461: 1-4)

(ஒப்பு) <u>Eye</u> அறிவாற்றல், அன்பு, ஆன்ம பலம், உரிமை, உலகம், உள்ளுணர்வு, ஒற்றர், சன்னல், தியானநிலை, நிலைபேறு, நீதி, பாதுகாப்பு, புரிந்து கொள்ளும் திறன், வாழ்வு, விழிப்புணர்வு.
நெற்றிக்கண் - அழிவு.
நீல நிறக் கண்கள் - அறியாமை, கருவுற்றிருத்தல், காதல், சிற்றின்பத் தோய்வு, வானுலகக் கடவுளர்.
பச்சை நிறக் கண்கள் - சிறந்த நம்பிக்கை, நம்பிக்கைக்கு ஒவ்வாத நிலை, பொறாமை, வளமை.
சிவப்பு நிறக் கண்கள் - அழுகை, எரிதல், குடிப்பழக்கம், நெருப்பு.
ஒரு கண் - ஒளி, சுடும் இயல்பு, மனித நிலைக்குக் கீழ்ப்பட்ட தன்மை.
இரு கண்கள் - இரட்டைத் தன்மை, உடல் மற்றும் ஆன்மா.
மூன்று கண்கள் - கடவுள் தன்மை, செயலறிவு, படைப்பு.
பல கண்கள் - இரவு மற்றும் விண்மீன்கள்.
கண்கட்டு - அடிமைத்தனம், அறியாமை, குருடு, நடுநிலைமை.
வலது கண் - சூரியன் மற்றும் எதிர்காலம்.
இடது கண் - சந்திரன் மற்றும் இறந்த காலம்.

<u>கண்டல்</u> Kaṇṭal **(a plant)**

(1) பாதுகாப்பு - safety
'கண்டல் வேலி நும் துறை கிழவோற்கே' (நற்.54: 11)

<u>கண்டிகை</u> Kaṇṭikai **(an ornament)**

(1) அழகு - beauty
'காமர் கண்டிகை தன்னொடு பின்னிய தூமணித் தோள்வளை தோளுக்கு அணிந்து' (சிலப்.6: 89-90)

(ஆ) <u>கண்டிகை ஆரம்</u> Kaṇṭikai āram

(2) துறவு - renunciation
'ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே பாரம் ஈசன் பணிஅலது ஒன்றிலார்' (பெரிய.144: 1-2)

**கண்ணகி** Kannaki **(a lady)**

(1) **கற்பு** - chastity
'கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்' (சிலப்.15: 143-144)

(2) **புகழ்** - fame
'கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள், வாட்டருஞ்சீர்க் கண்ணகி நல்லாளுக்குற்ற குறையுண்டென்று' (சிலப்.9: 40-41)

(3) **பெருமை / புகழ்** - greatness
'பீடுகெழு நங்கை பெரும்பெயர் ஏத்தி' (சிலப்.23: 195)

**கண்ணன்** Kannan

(1) **கருமை நிறம்** – dark colour
'கண்ணன் என்னும் கருந்தெய்வம்' (நாலா.627: 1)

**கண்ணாடி (mirror) பார். 'கணாடி'**

**கண்ணீர்** Kannir **(tear)**

(1) **துன்பம், ஆற்றாமை** - suffering
'தம்மோன் கொடுமை நம் வயின் எற்றி, நயம் பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது, கண்ணீர் அருவியாக அழுமே, தோழி!' (நற்.88: 6-9)

(2) **அன்பு / நெகிழ்ச்சி** - love
'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கண்நீர் பூசல் தரும்' (குறள்.71)

(3) **வெம்மை / துன்பம்** - heat / suffering
'இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி' (குறு.4: 2)

(4) **உவகை/ மகிழ்ச்சி** - pleasure / joy
'வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன் களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர் நோன் கழை துயல்வரும் வெதிரத்து வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே' (புறம்.277: 2-6)

(5) **இறப்புத் துயரம்** - sorrow on demise
'அஞ்சுவந் தன்று, இம் மஞ்சுபடு முதுகாடு; நெஞ்சுஅமர் காதலர் அழுத கண்ணீர் என்புபடு சுடலை வெண்நீறு அவிப்ப' (புறம்.356: 4-6)

(ஆ) **கண்பனி** Kanpani

(6) **பிரிவுத்துன்பம்** – sorrow on seperation
'இதழ் அழிந்து ஊறும் கண்பனி, மதர்எழில் பூண்ஆக வனமுலை நனைத்தலும் காணார் கொல்லோ - மாணிழை! - நமரே?' (குறு.348: 4-6)

(7) **இன்பம் / மகிழ்ச்சி** - pleasure
'கண் பனி நிறுத்தல் எளிதோ - நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கே?' (அகம்.97: 16-23)

**(ஒப்பு)** Tear **ஆனந்தப் பெருக்கு, இரக்கம், மெல்லியல்பு, வளமை; இறப்பு, துன்பம், அச்சம், மன அழுத்தம், மன உலைவு, வலிமையின்மை.**

**கணந்துள்** Kanantul **(a bird)**

(1) **தனிமை** - loneliness
'பார்வை வேட்டுவன் படு வலை வெரீஇ, நெடுங் கால் கணந்துள்அம் புலம்பு கொள் தெள் விளி சுரம் செல் கோடியர் கதுமென இசைக்கும்' (நற்.212: 1-3)

(2) **முன்னறிவித்தல்** - foretell
'நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்' (குறு.350: 5-6)

**கணவிரம்** Kanaviram **(a flower)**

(1) **சிவப்பு நிறம்** - red colour
'கல்லுடைக் குறும்பின் வயவர் வில் இட, நிண வரிக் குறைந்த நிறத்த அத்ர்தொறும், கணவிர மாலை இடூஉக் கழிந்தன்ன புண் உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்' (அகம்.31: 7-10)

(ஆ) **கணவிரி** Kanaviri

(2) **வளமை** - prosperity

'சினைவளர் வேங்கை, கணவிரி காந்தள், .. .. .. .. வேய் பயில் சோலை அருவி தூர்த்தர'
(பரி.11: 20-23)
சிவப்பு நிறம்
'கணவிரி மாலை கைக்கொண்டென்ன நிணநீடு பெருங்குடர் கையகத்து ஏந்தி'
(மணி.5: 47-48)

(இ) கணவீரம் Kaṇavīram
(3) தண்மை, கடவுட்டன்மை, வழிபாடு - cool, divinity, worship
'சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து, பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை துணைஅற அறுத்துத் தூங்க நாற்றி, நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி' (திருமுரு.235-238)

**கணாடி** Kaṇāṭi **(mirror)**
(1) மங்கலம் - auspicious
'செங்கயல் இரட்டை திருவார் சுடர் கணாடி பொங்குகொடி வார்முரசம் தோட்டிபுணர் கும்பம் மங்கலங்கள் எட்டுமிவை மணியிற் புனைந்தேத்தி' (சீவக.2487: 1-3)

(ஆ) மண்டிலம் Maṇṭilam
(2) தெளிவு
'கையகத்த் எடுத்துக் காண்போர் முகத்தை மையறு மண்டிலம் போலக் காட்ட' (மணி.25: 136-137)

**கணிகை** Kaṇikai **(danseuse / courtesan)**
(1) பொய்ம்மை - false
'ஆயத்து ஒருத்தி, அவளை, அவர் காமம் மாயப் பொய் கூட்டி மயக்கும் விலைக் கணிகை'
(பரி.20: 48-49)

**கணிகைச் சிறுவன்** Kaṇikaic ciṟuvaṉ **(son of danseuse / courtesan)**
(1) சிறப்பின்மை - insignificant
'சீர்சால் கணிகைச் சிறுவன்போல் சிறப்பின்று அம்ம இது என்றான்'
(சீவக.718: 4)

**கணிச்சி** Kaṇicci **(Kuntāli)**
(1) கூர்மை - sharp
'சீறு அரு முன்பினோன் கணிச்சிபோல் கோடு சீஇ, ஏறு தொழூஉப் புகுந்தனர்'
(கலி.101: 8-9)
(2) அழிவு/இறப்பு - destruction/ death
'மடங்கலும், கணிச்சியும், காலனும், கூற்றும், தொடர்ந்து செல் அமையத்துத் துவன்று உயிர் உணீஇய' (கலி.105: 20-21)
(3) காமம் - lust
'காமக் கணிச்சியால் கையறவு வட்டித்து' (பரி.10: 33)
(4) வலிமை - strength
'பரல் மண் சுவல முரண் நிலம் உடைத்த வல் வாய்க் கணிச்சி'
(அகம்.21: 21-22)

**கணிச்சி** (மழுப்படை) Kaṇicci **(Maḻuppaṭai) (axe)**
(1) அழிவு - destruction
'நீயே, மருந்து இல் கணிச்சி வருந்த வட்டித்து' (புறம்.42: 22)
(2) கூர்மை - sharp
'கணிச்சிக் கூர்ம்படைக் கடுந் திறல் ஒருவன்' (புறம்.195: 4)

(ஆ) மழு Maḻu
அழிவு - destruction
'மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்' (அகம்.220: 5)
(3) பயன்பாடு - use
'மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர் மழுவுடைக் காட்டகத்து அற்றே - எத்திசைச் செலினும், அத்திசைச் சோறே'
(புறம்.206: 11-13)
(4) ஆற்றல்
'படைநவில் வெண்மழுவான் பலபூதப் படையுடையான்'
(திருஞான.தேவா.2559: 1)

(இ) குடாரி Kuṭāri
அழிவு - destruction
'எரி கனன்று ஆனாக் குடாரி கொண்டு அவன் உருவு திரித்திட்டோன்' (பரி.5: 34-35)

(ஒப்பு) Axe, Tomahawk ஆன்மீக ஊடுருவல், ஒளியின் ஆற்றல், செயல் முறை, தண்டித்துத் திருந்தக் கூடிய தன்மை, வளமை; அழிவு, இறப்பு, சீற்றம், துன்புறுத்தல், போர், போர்க்கடவுளர்.

**கணை (arrow)** பார். 'தொடை'

<u>கணை ஐந்துடைத் திருமகன்</u> Kaṇai aintuṭait tirumakaṉ

(1) அழகு – beauty, lovely, charming
'அருமையால் அழகிற் கணை ஐந்துடைத் திருமகன் திருமாநில மன்னனே' (சீவக.160: 3-4)

(ஆ) காமன் Kāmaṉ
அழகு
'மைந்தருள் காமன் அன்னான் மகளிருள் திரு அனாளை' (சீவக.840: 3)

<u>கத்தி</u> Katti **(knife)**

(1) கூர்மை - sharp
'ஆங்கு அயிற் கத்தியால் அரிந்தன்புடன்' (பெரிய.4047: 3)

<u>கதலியின் கனியினைக் கழியச் சேரும் ஊசி</u> Kataliyiṉ kaṉiyiṉaik kaḻiyac cērum ūci

(1) எளிமை - easy
'கார் உண் வார் சுவைக் கதலியின் கனியினைக் கழியச் சேரும் ஊசியின் சென்றது நின்றது எனச் செப்ப' (கம்ப.கிட்.292: 1-2)

<u>கதவம்</u> Katavam **(door)**

(1) காவல் - security
'கடவுள் அஞ்சி வானத்து இழைத்த தூங்கு எயிற் கதவம் காவல் கொண்ட' (பதி.31: 18-19)

(2) திண்மை - strong
'எழுதியன்ன திண் நிலைக் கதவம்' (அகம்.311: 3)

(3) பாதுகாப்பு - safety
'முனைத் தெவ்வர் முரண் அவியப் பொரக் குறுகிய நுதி மருப்பின் நின் இனக் களிறு செலக் கண்டவர் மதிற் கதவம் எழுச் செல்லவும்' (புறம்.98: 1-4)

(ஆ) <u>கதவு</u> Katavu

(4) திண்மை - firm
'எழுவிட்டு அமைத்த திண்நிலைக் கதவின்' (புறம்.341: 4)

(5) அடைப்பு / தடை - obstruction
'செற்றை வாயில், செறி கழிக் கதவின்' (பெரும்.149)

(6) நிறை - chastity, merit, virtue
'காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும் நாணுத் தாழ் வீழ்த்த கதவு' (குறள்.1251)

**கதிரவன் (sun)** பார். 'சுடர்'

<u>கந்துள்</u> (கரிக்கட்டி) Kantuḷ **(charcoal)**

(1) கருமை - black
'செஞ்சுடர் இலங்கும் செந்தீக் கருஞ்சுடர்க் கந்துள் சிந்தி' (சூளா.164: 3)

<u>கம்புள்</u> Kampuḷ **(a bird)**

(1) தலைவன் - hero
'பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும் கழனி ஊர' (ஐங்.60: 1-2)

(ஆ) <u>கம்புள் பேடை</u> Kampuḷ pēṭai

(2) தலைவி - heroine
'வெண் நுதற் கம்புள் அரிக்குரற் பேடை, தண் நறும் பழனத்துக் கிளையோடு ஆலும்' (ஐங்.85: 1-2)

<u>கமலை</u> **(a lady)**

(1) கற்பு - chastity
'கம்பம் இலாதாள் கமலைக்கு விமலை என்பாள்' (சீவக.1975: 3)

<u>கமுகு</u> **(areca tree)**

(1) கடைநிலை நட்பு, தாழ்வு - low, low friend
'கடையாயார் நட்பில் கமுகுஅனையர்' (நாலடி.216:1)

(2) உயர்ச்சி - lofty

'பாளையுடைக் கமுகு ஓங்கிப் பன்மாட நெருங்கியெங்கும்' (திருநா.தேவா.376: 1-2)

(ஆ) <u>கமுகு நடுதல்</u> Kamuku naṭutal

(3) **மங்கலம்**
'காய்க்குலை கமுகும் வாழையும் வஞ்சியும் பூக்கொடி வல்லியும் கரும்பு நடுமின்' (மணி.1: 46-47)

## <u>கயம்</u> Kayam (pond)

(1) **தண்மை** - cool
'சிறு கண்யானைப் பெருங் கை ஈர் இனம் குளவித் தண் கயம் குழையத் தீண்டி' (நற்.232: 1-2)

(2) **அழகு** - beautiful
'பிணி விடு முருக்கு இதழ் அணி கயத்து உதிர்ந்து உக' (கலி.33: 4)

(3) **காமம்** - passion
'காமரு காமம் என்னும் கருங்கயம் படிந்து சென்று' (சூளா.1705: 5-6)

(ஆ) <u>கயன்</u> Kayan

(4) **வளமை / செழிப்பு** - prosperity
'நீர்த் தெவ்வும் நிரைத் தொழுவர் பாடு சிலம்பு இசை, ஏற்றத் தோடு வழங்கும் அகல் ஆம்பியின் கயன் அகைய வயல் நிறைக்கும்' (மது.89-92)

(இ) <u>குளம்</u> Kuḷam

(5) **மாட்சி** - dignity / honour
'கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன் படை மாண் பெருங் குள மடைநீர் விட்டென' (நற்.340: 2-3)

(6) **வளமை** - prosperity
'குளம் தொட்டு வளம் பெருக்கி' (பட்.284)

(7) **உடம்பு**
'தூய்மை யில்குளந் தூம்பு விட்டாம் பொருள் உணர்த்தி' (சீவக.2760: 3)

(ஈ) <u>பொய்கை</u> Poykai

(7) **தண்மை** - cool
'அம் தண் பொய்கை எந்தை எம் ஊர்' (குறு.354: 4)

(9) **இனிமை** - sweet
'தீம் பெரும் பொய்கை யாமை இளம் பார்ப்பு' (ஐங்.44: 1)

(10) **வளமை** - prosperity
'வண் துறை நயவரும் வளமலர்ப் பொய்கை' (ஐங்.88: 1)

(உ) <u>வாவி மூழ்கல்</u> Vāvi mūḻkal

(12) **மூப்பு நீங்கல் / இளமை பெறல்**
'வாவியின் மூழ்கி ஏறும் கணவரும் மனைவியாரும் மேவிய மூப்பு நீங்கி விருப்புறும் இளமை பெற்று' (பெரிய.2.39)

(ஒப்பு) <u>Pond, Pool</u> **அறிவு நுட்பம், பிரதிபலிப்பு, வானியல் அறிவு; கட்டழிவு.**

## <u>கயல்</u> Kayal (a fish)

(1) **கருமை** - black
'கயல சேல கருங்கண்ணியர் நாள்தொறும்' (திருஞான.தேவா.1442: 1)

## <u>கயிலை</u> Kayilai (a mountain)

(1) **சிறப்பு / பெருமை, புண்ணியம்** – great, favourable, blessed
'தன்னை ஆர்க்கும் அறிவு அறியான் என்றும் மன்னி வாழ் கயிலைத் திருமாமலை .. .. .. புண்ணியம் திரண்டுள்ளது போல்வது' (பெரிய.11: 3-4)

(2) **வெண்மை, ஒளி, மகிமை** – white, bright, glory
'சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையில்' (பெரிய.18: 3)

(ஆ) <u>வரை</u> Varai

(3) **பழமை** - ancient
'தொல்லை மால்வரை பயந்த தூயாள்தன் திருப்பாகன்' (பெரிய.345: 1-2)

## <u>கயிறு</u> Kayiṟu (rope)

(1) **பிணைப்பு** - bond

'பெருங் கயிறு நாலும் இரும் பனம் பிணையல்' (நற்.90: 6)

(2) **அடக்குதல்** - control
'வல்லோன் அடங்கு கயிறு அமைப்ப' (அகம்.224: 2)

(3) **காப்பு** - safety
'பெருங் கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப' (பெரும்.63)

(4) **கட்டு** - tie
'விசி 'வீங்கு இன் இயம் கடுப்பக் கயிறு பிணித்து' (பெரும்.56)

(5) **நேர்நிலை / நுட்பம்** - straight, minute
'நூல் அறி புலவர் நுண்ணிதின் கயிறு இட்டு, தேஎம் கொண்டு, தெய்வம் நோக்கி, பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து' (நெடு.76-78)

(6) **பிணிப்பு** - bind
'பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு' (குறள்.482)

(7) **உணர்வு** - emotion
'உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால் முறுக வாங்கிக் கடைய முன்நிற்குமே' (திருநா.தேவா.30: 3-4)

(8) **சொல் (வாக்கு)** – word / speech
'வாள் தடங்கண்ணி நல்லாள் வாக்கெனும் தூக்கயிற்றால் பூட்டுபு கொள்ளப்பட்டான்' (நீலகேசி.265: 3-4)

(ஆ) <u>தாம்பு</u> Tāmpu

(9) **பிணித்தல்** - bind
'தீம்பால் கறந்த கலம்மாற்றி, கன்று எல்லாம் தாம்பின் பிணித்து' (கலி.111: 1-2)

(இ) <u>ஞாண்</u> Ñāṇ

(10) **நுட்பம்** - fineness
'நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த பன்மீன் உணங்கல் கவரும் துறைவனை' (ஐந்.எழு.64: 1-2)

(ஒப்பு) <u>Rope</u> **இணைப்பு, ஏறுதல், கட்டுதல், கழிவிரக்கம்; தடை, நம்பிக்கை இழப்பு.**

**கரடி (bear) பார். 'எண்கு'**

**<u>கரந்தை</u> Karantai (a flower)**

(1) **வீரம்** - bold
'தறுக ணாளர் நல்இசை நிறுமார், .. .. .. .. செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி வரிவண்டு ஆர்ப்பச் சூட்டி' (அகம்.269: 5-12)

(2) **நிரை கொள்ளல்** – a war, confiscating cattle
'முருந்தேர் இளநகை காணாய் நின்னையர் கரந்தை அலறக் கவர்ந்த இனநிரைகள்' (சிலப்.12: 16)

(3) **நறுமணம்** - fragrance
'நளிரும் மலர்க் கொன்றையும் நாறு கரந்தை' (திருஞான.தேவா.1687: 1)

**கரி (charcoal) பார். 'இருந்தை', 'கந்துள்'**

**கருடன் (eagle) பார். 'பருந்து'**

**<u>கருப்பூரம்</u>** Karuppūram

(1) **நறுமணம்** - fragrance
'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ' (நாலா.567: 1)

(ஆ) <u>பளிதம்</u> Paḷitam
**நறுமணம்** - fragrance
'பளித நாறு மேனியன்' (சூளா.1371: 4)

**<u>கரும்பு</u> Karumpu (sugarcane)**

(1) **இனிமை** - sweet
'தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்' (குறு.85: 4)

(2) **வளமை** - prosperity
'பூத்த கரும்பின் காய்த்த நெல்லின் கழனி ஊரன் மார்பு' (ஐங்.4: 4-5)

(3) **பயன்** - use
'ஆலைக்கு அலமரும், தீம் கழைக் கரும்பே' (மலை.119)

(4) **கீழ்மை** - mean, low
'சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல் கொல்லப் பயன்படும் கீழ்' (குறள்.1078)

(5) **சான்றோர்** - the great / learned / of noble birth
'கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே ஆகும் வடுப்பட வைதிறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார் கூறார்தம் வாயில் சிதைந்து' (நாலடி.156)

**(ஆ) குருத்துக் கரும்பிலிருந்து தின்னல்** Kuruttuk karumpiliruntu tin̲n̲al

(6) **மேலோர் தொடர்பு** – noble relation
'கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும் குருத்திற் கரும்பு தின்றற்றே' (நாலடி.211)

**(இ) அடிக்கரும்பிலிருந்து தின்னல்** Aṭikkarumpiliruntu tin̲n̲al

(7) **கீழோர் தொடர்பு** – mean contact
'.. .. .. .. குருத்திற்கு எதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ என்றும் மதுரமிலாளர் தொடர்பு' (நாலடி.211)

**(ஈ) கரும்பின் சாறு** Karumpin̲ cāṟu (sugarcane juice)

(8) **பயன்** - use
'.. .. .. .. கரும்பூர்ந்த சாறுபோல் பின் உதவி மற்றதன் கோதுபோல் போகும் உடம்பு' (நாலடி.34)

**(உ) ஆலைமென் கரும்பு** Alaimen̲ karumpu (crushed sugarcane)

(9) **துன்பம்** - distress
'ஏனும் இவ் வன்மையை என் என்று உன்னுதும் ஆலைமென் கரும்பு அனான் ஒருவற்கு' (கம்ப.பால.951: 1-2)

**(ஊ) கரும்பு நடுதல்** Karumpu naṭutal

(10) **மங்கலம்**
'காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும் பூக்கொடி வல்லியும் கரும்பு நடுமின்' (மணி.1: 46-47)

**கரும்பிருக்க இரும்பு கடித்தல்**
Karumpirukka irumpu kaṭittal **(bite iron discarding sugarcane)**

(1) **அறிவின்மை** - foolishness
'அறுத்தானை ஆரூரில் அம்மானை ஆலாலம் உண்டு கண்டம் கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்தவாறே' (திருநா.தேவா.1227: 5-8)

**கருமை (black)** பார். **'கறுப்பு'**

**கருவிளை** Karuviḷai **(a flower)**

(1) **அழகு, கருமை** - beautiful, black
'மணி கண்டன்ன மா நிறக் கருவிளை ஒண் பூந் தோன்றியொடு தண் புதல் அணிய' (நற்.221: 1-2)

(2) **ஒளி, அழகு**
'பைம்பொழில் வாழ் குயில்காள் மயில்காள் ஒண் கருவிளைகாள்' (நாலா.590: 1-2)

**கல்** Kal **(stone)**

(1) **மறை வலிமை** – concealed strength
'களிறு கவுள் அடுத்த எறிகல் போல ஒளித்த துப்பினை ஆதலின்' (புறம்.30: 9-10)

(2) **நிலைத் தன்மை** - stability
'கல் குயின்றன்ன என் நல்கூர் வளிமறை' (புறம்.196: 12)

(3) **கடுமை** - harsh
'பகல் நிலை தளர்க்கும் கவணுமிழ் கடுங்கல் .. .. .. .. உயிர் செகு மரபின் கூற்றத்து அன்ன வரும்விசை தவிராது' (மலை.206, 209-210)

(4) **தடை, தடுப்பு** - obstacle
'வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதொருவன் வாழ்நாள் வழியடைக்கும் கல்' (குறள்.38)

(5) **மிகு வலிமை / கடினத் தன்மை** – strength / hard
'மிக்குடையார் ஆகி மிகமதிக்கப் பட்டாரை ஒற்கப் படமுயறும்

என்றல் இழுக்காகும் நற்கு எளிது ஆகி விடினும் நளிர்வரைமேல் கற்கிள்ளிக் கையுய்ந்தார் இல்' (பழமொழி.48)

(6) **உறுதி** - strong
'மறுமனத்தன் அல்லாத மாநலத்த வேந்தன் உறுமனத்த னாகி ஒழுகின் - செறுமனத்தார் பாயிரம் கூறிப் படைதொக்கால் என்செய்ப ஆயிரம் காக்கைக்கோர் கல்' (பழமொழி.249)

(7) **வன்மை** – hard hearted
'.. .. .. கல்லன்னர் வல்லென்ற நெஞ்சத் தவர். (நான். 34:3-4)

(8) **இழிவு** - lowly
'புறவினில் புரளும் கல்லும் புண்ணியன் ஆக என்றான்' (நீலகேசி.444: 4)

(9) **கெட்டித்தன்மை, உறுதி, வலிமை** – hardness, firm, strong
'பேயல்லவோ ஒருவேளை வரம் தந்து பேசிடும் கல்லாயல்லவோ நின் மனம் கெட்டியானதும் அற்புதம் தான்' (தனிப்.575: 1-2)

(ஆ) <u>கல்லெறிதல்</u> Kallerital

(10) **எதிர்ப்பு** - oppose
'சொல்லெதிர்ந்து தம்மை வழிபட்டு ஒழுகலராய்க் கல்லெறிந்தாற் போலக் கலாந்தலைக் கொள்வாரை இல்லிருந்தாற்ற முனிவித்தல் உள்ளிருந்து அச்சாணி தாங்கழிக்கு மாறு' (பழமொழி.112)

(இ) <u>கல் கிள்ளுதல்</u> Kal kiḷḷutal (nip the stone)

(11) **பேதைமை** - ignorance
'தங்கண் மரபில்லார் பின்சென்று தாம்அவரை எங்கண் வணக்குதும் என்பவர் - பின்கேண்மை நற்றளிர்ப் புன்னை மலரும் கடற்சேர்ப்ப! கல்கிள்ளிக் கை இழந்தற்று' (நாலடி.336)

(ஈ) <u>உலம்</u> **(திரண்ட கல்)** Ulam

(12) **திண்மை** – hard / firm
'உலம்கெழு வயிரத் திண்தோள் ஒளிமுடி அரசன் செம்மல்' (சூளா.322: 2)

(ஒப்பு) <u>Stone</u> **அடிப்படை, அண்டம், அமைதி, இலிங்க உரு, எதிர்கொள்ளல், ஒளி, கடினத்தன்மை, சாட்சி, சுதந்திரம், சூரியன், நினைவு, நெருப்பு, புதிர்நிலை வாழ்க்கை, புற ஆன்மா, பூமி, வலிமை; கடுவெறுப்பு, தடை**

**மே.காண். 'நடுகல்'**

## <u>கல்</u> (நடுகல்) Kal (naṭukal) (hero stone)

(1) **கடவுட்டன்மை** - divine
'தொழாதனை கழிதல் ஓம்புமதி வழாது வண்டு மேம்படூஉம், இவ் வறநிலை ஆறே - பல் ஆத்திருள் நிரை பெயர்தரப் பெயர்தந்து, கல்லா இளையர் நீங்க நீங்கான், வில் உமிழ் கடுங் கணை மூழ்க, கொல் புனல் சிறையின் விலங்கியோன் கல்லே' (புறம்.263: 2-8)

(2) **வீரம்** - brave
'ஒன்னாத் தெவ்வர் முன்நின்று விலங்கி, ஒளிறுஎந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்ததென, கல்லே பரவின் அல்லது நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே' (புறம்.335: 9-12)

(3) **வெற்றி** - success
'நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட கல்லா எழினி பல்எறிந்து அழுத்திய வன்கண் கதவின் வெண்மணி வாயில் மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை' (அகம்.211: 12-15)

## <u>கல்</u> (சாணைக்கல்) Kal (cāṇaikkal) (whetstone)

(1) **வலிமை** - strength
'சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய கற்போல் நாவினே னாகி மற்று அது' (அகம்.356: 9-10)

## <u>கல்லவடம்</u> (ஒரு வகைப் பறை) Kallavaṭam (a drum)

(1) **வெற்றி, களிப்பு**
'கொல்லை விடைமுன் பூதம் குனித்தாடும் கல்ல வடத்தை

உகப்பார் காழியார்'
(திருஞான.தேவா.40: 1-2)

**கலப்பை (plough)** பார். **'ஏர்'**

**<u>கலம்</u>** Kalam

(1) **சான்றாண்மை** – nobleness
'.. .. .. .. .. கலநலத்தைத் தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை தீயினும் சேரக் கெடும்' (நாலடி.179: 2-4)

**<u>கலவர் இன்னியம்</u>** Kalavar inniyam

(1) **நெய்தல்**
'கலவர் இன்னியமும் கடல் அச்சிறார்' (சூளா.16: 1)

**<u>கலாவம்</u>** Kalāvam **(feather)**

(1) **அழகு** - beautiful
'அணி கிளர் கலாவம் ஐது விரித்து இயலும் மணி புரை எருத்தின் மஞ்ஞை போல' (நற்.264: 3-4)

(ஆ) **<u>கலவம்</u>** kalavam
**அழகு** - beautiful
'குடுமி நெற்றி நெடுமாத் தோகை காமர் கலவம் பரப்பி'
(அகம்.194: 11-12)

(இ) **<u>பீலி</u>** pīli (plume)

(2) **மென்மை** - soft
'புரி மென் பீலிப் போழ் புனை அடையல்' (பரி.21:7)

(3) **பெருமை / மாண்பு** – pride / dignity
'.. .. .. .. .. ஆடு இயல் மட மயில் ஒழித்த பீலி வார்ந்து, தம் சிலை மாண் வல் வில் சுற்றி'
(அகம்.69: 13-15)

(4) **மேன்மை / உயர்வு** - superiority / high, lofty
'நடுகல் பீலி சூட்டி' (அகம்.35: 8)

(5) **பொலிவு** - freshness, radiance
'தொடை அமை பீலிப் பொலிந்த கடிகை' (அகம்.119: 12)
**அழகு** – beautiful
'காமர் பீலி, ஆய் மயில் தோகை'
(அகம்.358: 2)

(6) **வெற்றி / பெருமை** – success / pride
'இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டி, கண் திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து, கடியுடை வியல் நகரவ்வே' (புறம்.95: 1-3)

(7) **வீரம்** - brave
'பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்' (புறம்.274: 2)

(8) **இலேசான தன்மை** – weightless, light
'பீலி பெய் சாகாடும் அச்சு இறும் அப் பண்டம் சால மிகுத்துப் பெயின்' (குறள்.475)

(ஈ) **<u>சாந்தாற்றி</u>** **(பீலிக்குஞ்சம்)**
Cāntāṟṟi

(9) **குளிர்ச்சி**
'குளிர்கொள் சாந்தாற்றி பொன்னாலவட்டம் .. .. ..'
(சீவக.1673: 3)

(உ) **<u>மயில் பீலி</u>** Mayil pīli

(10) **அமணர்**
'ஆலும் மயிலின் பீலி அமணர்'
(திருஞான.தேவா.21: 1)

**மே.காண். 'தோகை'**

**(ஒப்பு)** <u>Feather</u> **ஆன்மா, இலேசான தன்மை, உண்மை, உயரம், உயர்ந்த நிலை, ஒப்பனை, ஒளிக்கதிர், காற்று, காலியான நிலை, நிறைவு, நீதி, பகட்டு, படைப்புக் கடவுளர், பெருமை, மறுபிறப்பு, வலிமை, விரைவு; தூய்மைப்படுத்துதல்; இறப்பு.**

**<u>கலிமா</u>** Kalimā **(horse)**

(1) **விரைவு, உதவி, மனம்** – speed, help, mind
'உள்ளம் போல உற்றுழி உதவும் புள் இயல் கலிமா உடைமை யான' (தொல்.1140: 3-4)
**விரைவு** - speed

'புள்ளு நிமிர்ந்தன்ன பொலம் படைக் கலி மா' (நற்.78: 9)

(ஆ) <u>கலிமா இயக்கமின்றிக் கிடத்தல்</u> Kalimā iyakkamiṉrik kiṭattal

(2) **தீமை, இறப்பு** – evil, death
'கால் இயற் கலி மாக் கதி இல வைகவும்' (புறம்.229: 21)

(இ) <u>புரவி</u> Puravi

(3) **செயல் திறம், மாட்சி** - capacity / honour
'ஆதி போகிய அசைவு இல் நோன் தாள் மன்னர் மதிக்கும் மாண் வினைப் புரவி' (நற்.81: 2-3)

(4) **விரைவு, நெடும் பயணம்** – speed, long journey
'கடும் பரி நெடுந்தேர்க் கால் வல் புரவி' (ஐங்.422: 1)

(5) **வெற்றி** - success, victory
'வயம்படு பரிப் புரவி மார்க்கம் வருவார்' (பரி.9: 51)

(6) **வெற்றி, புகழ்** – success, fame
'விறற் புகழ் மாண்ட புரவி எல்லாம்' (புறம்.63: 3)

(7) **வளமை** - prosperity
'வண் பரிப் புரவிப் பண்பு பாராட்டி' (புறம்.301: 13)

(8) **வேகம் / ஆற்றல்** – speed, power
'வெவ் விசைப் புரவி வீசு வளி ஆக' (புறம்.369: 7)

(ஈ) <u>கடுமா</u> Kaṭumā
**விரைவு** - speed
'கடு மாப் பூண்ட நெடுந் தேர்' (நற்.91: 11)

(உ) <u>இவுளி</u> Ivuḷi
**விரைவு / வேகம்** - speed
'கால் கிளர்ந்தன்ன கடுஞ் செலல் இவுளி' (பதி.தி.2: 4)

(ஊ) <u>குதிரை</u> Kutirai

(9) **பரத்தை** - prostitute
'ஏந்தி எதிர் இதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்! குதிரை வழங்கி வருவல் அறிந்தேன், குதிரை தான்' (கலி. 96: 5-7)



**விரைவு / வேகம்** - speed
'விடு விசைக் குதிரை விலங்கு பரி முடுக' (அகம்.14: 18)

(எ) <u>பரிமா</u> Parimā
**விரைவு** - quickness
'யானை யுடையார் கதனுவப்பர் மன்னர் கடும்பரிமாக் காதலித் தூர்வர் (நான். 56:1-2)

(ஏ) <u>மா</u> Mā
**விரைவு**
'கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம் பாய்மா உடையான் உடைகிற்குந் - தோமில் தவக்குட்டந் தன்னுடையான் நீந்தும் - அவைக்குட்டம் கற்றான் கடந்து விடும்' (நான்.18)

(ஐ) <u>கடுமான்</u> Kaṭumāṉ
**விரைவு** - speed
'கான்யாற்று ஒலியில் கடுமாந்தேர் எந்தோழி மேனி தளிர்ப்ப வரும்' (கார்.10: 3-4)

(ஒ) <u>மான்</u> Māṉ
**விரைவு**
'இடுமணல் எக்கர் அகன்கானற் சேர்ப்பன் கடுமான் மணி அரவமென்று' (ஐந்.எழு.57: 1-2)

(ஓ) <u>குதிரை மனையில் புகுதல்</u> Kutirai maṉaiyil pukutal

(10) **தீமை, அழிவு, இறப்பு** – (bad omen), death
'சொலத் தகாத் துன் நிமித்தங்கள் எங்கணும் வரத் தொடர்வ ஒன்னார் வெலத் தகா அமரரும் அவுணரும் செருவில் விட்டன விடாத குலத்த கால் வயநெடுங் குதிரையும் அதிர் குரல் குன்றும் இன்று வலத்த கால் முந்துறத் தந்து நம் மனையிடைப் புகுவ மன்னோ' (கம்ப.யுத்.106)

(ஔ) <u>வலிமையுடைய குதிரை தூங்கி வீழ்தல்</u> Valimaiyuṭaiya kutirai tūṅku vīḻtal
**தீமை,அழிவு, இறப்பு**

'.. .. .. தூங்கி மீளி மொய்ம்புடை இவுளி வீழ்கின்றன' (கம்ப.ஆரண்.430: 2-3)

(க) குதிரை முதலில் வலக்காலை தூக்கி வைத்தல் Kutirai mutalil valakkālai tūkki vaittal

(11) மங்கலம்
'மட்டவிழ் அலங்கல் வீரர் சேர்தலும் வலத்து முன்னால் கொட்டிய குரத்த வாலித்து எழுந்தன கூந்தல் வெம்மா' (சூளா.840: 3-4)

(ங) ஓடும் இயல்புடைய குதிரைகளின் கண்களில் கண்ணீர் ஒழுகுதல் Otum iyalputaiya kutiraikaḻin kaṇkaḻil kaṇṇīr oḻukutal (tears in horse's eyes)

(12) தீமை, இறப்பு, அழிவு - evil omen
'... ... ... ... கண்கள் நீர் ஒழுகுகின்றன ஓடு இயல் ஆடல் மா' (கம்ப.யுத்த.3614: 2-3)

**கவண்** Kavaṇ **(sling)**

(1) விரைவு / வேகம் - speed
'கடு விசைக் கவணின் எறிந்த சிறு கல்' (அகம்.292: 11)

(ஆ) கவணை Kavaṇai
விரைவு / வேகம் - speed
'கடுவிசைக் கவணையில் கல் கை விடுதலின்' (கலி. 41: 10)

(இ) கவண் எறிகல் Kavaṇ eṟikal
விரைவு
'தவமுயல்வோர் மலர் பறிப்பத் தாழவிடு கொம்புதைப்பக் கொக்கின் காய்கள் கவண் எறிகல் போல் சுனையிற் கரைசேரப் புள்ளிரியும் கழுமலமே' (திருஞான.தேவா.3847: 5-8)

**கவந்தங்கள் ஆடுதல்** Kavantaṅkaḷ āṭutal **(headless bodie's dance)**

(1) தீமை, தோல்வி - evil, failure
'.. .. .. உச்சியின் அதிர்தரு கவந்தங்கள் ஆடி இட்டவே' (சூளா.1220: 3-4)

**கவரிமான் (a deer)** பார். **'மான்'**

**கவறு** Kavaṟu **(dice)**

(1) நிலையாமை - unstability
'கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு அகறல் ஓம்புமின், அறிவுடையீர்! என' (நற்.243: 5-6)

(2) அக வாழ்வு - personal life
'கவறு உற்ற வடு ஏய்க்கும், காமரு பூங் கடற் சேர்ப்ப' (கலி. 136: 4)

(ஒப்பு) Dice எண் குறியீட்டியல், சமம், புனிதம், மும்மை; நற்பேற்றின் நிலையாமை, பொய்ம்மை, வரம்பு மீறிய ஒழுக்கக்கேடு.

**கவிர்** Kavir

(1) சிவப்பு நிறம் - red
'கார் அணி கூந்தல், கயற் கண், கவிர் இதழ்' (பரி.22: 29)

**கவை முள்** Kavai muḷ

(1) பாதுகாப்பு - safety
'இன நல் மாச் செலக் கண்டவர் கவை முள்ளின் புழை அடைப்பவும்' (புறம்.98: 7-8)

**கழங்கு** Kaḻaṅku

(1) குறிப்பு – note, mark
'கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்' (தொல்.1061)

(2) முன்னுணர்தல் – foretell, predict
'அணங்கறி கழங்கில் கோட்டம் காட்டி' (நற்.47: 8)

(3) மீயாற்றல் – supernatural power
'வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்' (நற்.282: 5)

(4) அறிதல், வெளிப்படுத்துதல் – know, reveal

'பொய்யா மரபின் ஊர்முது வேலன் கழங்கு மெய்ப்படுத்துக் கன்னம் தூக்கி' (ஐங்.245: 1-2)

**கழல்** Kalal **(anklet)**

(1) **ஆண்மை** - manliness
'ஆய் கழல் சேயிலை வெள் வேல் விடலை' (குறு.15: 4-5)

(2) **வீரம்** - brave
'செவ் உளைக் கலிமா, ஈகை வான் கழல்' (பதி.38: 7)

(3) **ஆடவர்** - men
'தோற்றாரே வெல்வர் துணைமிசைவார் கோட்டியானை யேற்றுக்கழ றொடியார் மிக்காரை யார்வரைவர் போற்றிளி கூடல் கரி' (இன்னிலை.29)

(ஆ) **கழல் துடித்தல்** (ஆண்)
Kalal tutittal

(4) **தீமை, இறப்பு, அழிவு** - bad omen
'துடித்தன கழல்துணை துடித்தன இடத்தோள்' (கம்ப.ஆரண்.524: 4)

**கழறிற்றறிவார்** Kalarirrarivār **(a saint)**

(1) **வள்ளன்மை** – benevolent / generous / munificent
'பருவ மழைபொழியும் காரால் நிகர்க்க அரிய கொடைக் கையார் கழறிற்றறிவார் தாம்' (பெரிய.3808: 6-8)

**கழிகல மகளிர்** Kalikala makalir **(widow)**

(1) **இளிவு / இழப்பு / நிலை தாழ்தல்** - / lose / degrade
'இவண் உறை வாழ்க்கையோ, அரிதே! யானும் மண்ணுறு மழித் தலைத் தெண் நீர் வார, தொன்று தாம் உடுத்த அம் பகைத் தெரியற் சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும் கழி கல மகளிர் போல, வழி நினைந்திருத்தல், அதனினும் அரிதே' (புறம்.280: 10-15)

(ஆ) **கழிகலமகடூஉ**
Kalikalamakatūu

(2) **துன்பம், கலக்கம், பொலிவின்மை** – suffer, anxiety, dull
'வென் வேல் விடலை இன்மையின் புலம்பி, கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய கழி கல மகடூஉப் போலப் புல்லென்றனையால், பல் அணி இழந்தே' (புறம்.261: 16-19)

**கழு** Kalu **(stake)**

(1) **உயர்ச்சி** - high
'கழுநிவந் தன்ன கொழுமுகை இடைஇடை' (அகம்.176: 5)

(2) **வலிமை** - strength
'கொடுநுகம் தழீஇய புதவின், செந்நிலை நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயில்' (பெரும்.127-128)

**கழுகு (eagle)** பார். **'பருந்து'**

**கழுது** Kalutu

**கழுது, தம் கிளையோடு கதறல், ஊனைப் பற்றி இழுத்தல்** Kalutu, tam kiḷaiyōtu kataral, ūnaip parrI iluttal

**அச்சம்** – fear
'காக்கை யார்ப்பன கழுதுதங் கிளையோடு கதறி தோக்க நீர்ப்பன... ... ... யாக்கை கொண்டவர்க்கு அணைதலுக்கு அரிதது பெரிதும் (நீலகேசி.31: 1-2,4)

**கழுதை** Kalutai **(ass, donkey)**

(1) **சுமை சுமத்தல் / சுமை தாங்கி** - bear load / burden
'பொறை மலி கழுதை நெடு நிரை தழீஇய' (அகம்.89: 12)

(ஆ) **கழுதை மேல் செல்லும் சமண முனிவர்களின் பின்னால், இயக்கியர் ஊளையிட்டுப் புலம்பி ஓடுதல்** Kalutai mēl cellum camaṇa munivarkaḷin pinnāl, iyakkiyar ūḷaiyiṭṭup pulampi ōṭutal (Jain asceties on asses)

(2) **தீமை, துன்பம்** – evil omen
'பண்டிதர் பாழி நின்றும் கழுதை மேற் படர்வார் தம்பின்

ஒண்டொடி இயக்கி யாரும் ஊளையிட்டுப் புலம்பி ஓடக் கண்டனம் என்று சொன்னார் கையறு கவலை யுற்றார்' (பெரிய.28: 638)

(ஒப்பு) Ass, Donkey **அடக்கம், அமைதி, அறிவாற்றல், கடும் உழைப்பு, சிறந்த தன்மை, சுமை தாங்குதல், நடுநிலைமை, நேர்மை, முன்னறிதிறம், மீட்பு, விழிப்பான தன்மை, வீடுபேறு; அறியாமை, இறப்பு, கணவனை ஏய்த்தொழுகல், கழிகாமம், காட்டியல்பு, கேலிக்குரிய நிலை, செருக்கு, சோம்பல், தகுதியற்ற நிலை, நிலையாமை, பிடிவாத நிலை, பொறாமை, மன உறுதியின்மை, முட்டாள்தனம், மென்னய உணர்ச்சி ஈடுபாடு, வறுமை, வீணாகக் கீழ்ப்படிதல், வீணான பேச்சாளர்.**

## கழுநீர் Kaḻunīr (a flower)

(1) **பரத்தை** - prostitute
'கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை' (நற்.260: 1)

(2) **தாழ்வு** - low
'கழுநீருள் காரடகேனும் ஒருவன் விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்' (நாலடி.217: 1-2)

(3) **அன்பு** - love
'கைவயிற் கொண்ட கழுநீர் நறும்போது கொய்மலர்க் கண்ணி கொடுப்போள் போலக் கனவில் தோன்ற கண்படை இன்றி நனவில் தோன்றிய நறுநுதல் சீறடி மைவளர் கண்ணியை எய்தும் வாயில் யாதுகொல் என்றுதன் அகத்தே நினைஇ' (பெருங்.மகத.7: 63-68)

(ஆ) **நீலம்** Nīlam

(4) **தண்மை, நறுமணம்** – cool, fragrant
'கண் போல் நீலம் தண் கமழ் சிறக்கும்' (நற்.273: 8)

(5) **மாலைக்காலம் / அஸ்தமனம்** – evening, sunset
'நீல இருங் கழி நீலம் கூம்பும் மாலை வந்தன்று' (ஐங்.116: 2-3)

(6) **கார்காலம், அழுகை** – rainy season, crying
'சுனை மாண் நீலம் கார் எதிர்பவை போல், இனை நோக்கு உண்கண் நீர் நில்லாவே' (கலி. 7: 11-12)

(7) **அழகு** - beautiful
'நீடு இதழ் தலைஇய கவின் பெறு நீலம்' (அகம்.38: 10)

(இ) **குவளை** kuvaḷai

(8) **தலைவி** - heroine
'.. .. .. .. குவளை வண்டுபடு மலரின் சாஅய்த் தமியென்; மன்ற அளியேன் யானே' (குறு.30: 4-6)

(9) **குளிர்ச்சி** - cool
'.. .. .. .. பைஞ் சுனைப் பாசடை நிவந்த பனி மலர்க் குவளை' (ஐங்.225: 1-2)

(10) **அழகு** - beautiful
'கொன்றைப் பூவின் பசந்த உண்கண், குன்றக நெடுஞ் சுனைக் குவளை போல, தொல் கவின் பெற்றன இவட்கே' (ஐங்.500: 1-3)

(11) **வளம்** - prosperous
'பன்னாள் தொழில்செய் துடைய கவர்ந்துண்டார் இன்னாமை செய்யாமை வேண்டி இறைவற்குப் பொன் யாத்துக் கொண்டு புகுதல் குவளையைத் தன்னாரால் யாத்து விடல்' (பழமொழி.279)

(12) **மேன்மக்கள்** - noble
'ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும் விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா பெருநீரார் கேண்மை கொளினு நீரல்லார் கருமங்கள் வேறு படும்' (நாலடி.236)

(13) **பரத்தை** - prostitute
'செங்கண் கருங்கோட்டு எருமை சிறுகனையால் அங்கட் கழனிப் பழனம்பாய்ந் தங்கட் குவளையம் பூவொடு செங்கயன்மீன் சூடித் தவளையும் மேற்கொண்டு வரும்' (திணைமாலை.147)

(13) **நெய்தல் திணை**
'மோடு உடைந்தன மூரிக் குவளையும்' (சூளா.20: 2)

(14) **கருமை**
'கார் இருள் குவளைக் கண்ணிக் கதிர்நகை கனபொன் தோட்டு' (சூளா.759: 1)

(ஈ) <u>**நீருள் குவளை வேதல்**</u> nīruḷ kuvaḷai vētal

(14) **கொடுமை, தீமை, துன்பம்** – cruel, evil, suffer
'.. .. .. .. மலைநாடன் ஈரத்துள் இன்னவை தோன்றின், நிழற் கயத்து நீருள் குவளை வெந்தற்று' (கலி. 41: 29-31)

(உ) <u>**காவி**</u> kāvi

(15) **இனிமை / இன்பம்** – pleasure / happyness
'.. .. .. .. காலைக் கள்நாறு காவியொடு தண்ணென மலரும்' (அகம்.150: 10-11)

(19) **கருமை**
'காவி ஆகின்ற கருமா மழைக்கண்ணி' (சூளா.1118: 1)

(ஊ) <u>**கழுநீர் பிடித்திருத்தல்**</u> Kaḻunīr piṭittiruttal

(20) **அரசத் தன்மை**
'காசின் மாமணிச் சாமரை கன்னியர் வீச மாமகரக் குழை வில்லிட வாச வான் கழுநீர் பிடித்தாங்கரி ஆசனத்திருந்தான் அடன் மொய்ம்பினான்' (சீவக.429)

(எ) <u>**கழுநீர் மாலை**</u> Kaḻunīr mālai

(21) **புனிதம், இறையமைதி** - holy, divine
'கழுநீர் மாலைக் கடவுள் போற்றி' (திருவா.4: 217)

**கழை (bamboo) பார். 'வேய்'**

## <u>கள்</u> Kaḷ (toddy)

(1) **களிப்பு, மயக்கம், காமம்** – happyness, intoxication, lust
'இரு மடைக் கள்ளின் இன் களி செருக்கும்' (நற்.59: 5)

(2) **இனிமை** – sweet
'ஓங்கித் தோன்றும், தீம் கள், பெண்ணை' (நற்.323: 1)

(3) **வளமை** - prosperous
'மாரிஅம் கள்ளின், போர் வல் யானை' (பதி.21: 17)

(4) **காமம்** - lust
'ஆறு அல்ல மொழி தோற்றி, அறவினை கலக்கிய, தேறுகள் நறவு உண்டார் மயக்கம்போல், காமம் வேறு ஒரு பாற்று ஆனது கொல்லோ?' (கலி. 147: 1-3)

(5) **மகிழ்ச்சி**
'உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கில் காமத்திற்குண்டு' (குறள்.1281)

(6) **உவகை** - happyness
'மாணாப் பகைவரை மாறெருக் கல்லாதார் பேணா துரைக்கும் உரைகேட் டுவந்ததுபோல் ஊணார்ந் துதவுவது ஒன்றில் லெனினும் கள்ளினைக் காணாக் களிக்கும் களி' (பழமொழி.99)

(7) **செவ்வியின்மை** -
'கொடித்திண்டேர் மன்னரால் கூட்டுண்டு வாழ்வார் எடுத்துமேற் கொண்டவர் ஏய வினையை மடித்தொழிதல் என்னுண்டாம் மாணிழாய்! கள்ளைக் குடித்துக் குழைவாரோ இல்' (பழமொழி.266)

(8) **பகைமை** - enmity
'தெள்ளி யுணரும் திறனுடையார் தம்பகைக்கு உள்வாழ் பகையைப் பெறுதல் - உறுதியே கள்ளினால் கள்ளறுத்தல் காண்டும் அதுவன்றோ முள்ளினால் முட்களையு மாறு' (பழமொழி.308)

(ஆ) <u>**மது**</u> matu

**களிப்பு / மகிழ்ச்சி** - happyness
'பாகர் இறை வழை மது நுகர்பு, களி பரந்து' (பரி. 11: 66)

(இ) <u>**தேறல்**</u> tēral

**களிப்பு / மகிழ்ச்சி** - happyness
'மகிழ, களிப் பட்ட தேன் தேறல் மாற்றி' (பரி. 16: 28)

(9) **தண்மை, நறுமணம்** – cool, fragrant

'தண் கமழ் நறுந்தேறல் உண்பவள் முகம் போல' (கலி.73: 4)

**இனிமை** - sweet
'நனைக்கள்ளின் மனைக்கோசர் தீம்தேறல் நறவுமகிழ்ந்து' (புறம்.396: 7-8)

(10) **வன்மை / கடுமை** – hard, fierce
'பாம்பு வெகுண்டன்ன தேறல் நல்கி' (சிறு.237)

**காமம்**
'வேட்கைமை என்னும் நாவில் காம வெந்தேறல் மாந்தி' (சீவக.2729: 1)

(ஈ) <u>தோப்பி</u> tōppi

**இனிமை** - sweet
'இல்அடு கள்இன் தோப்பி பருகி' (பெரும்.142)

(உ) <u>அரியல்</u> ariyal

**மகிழ்ச்சி** - happy
'அரியல் ஆர்கையர், விளைமகிழ் தூங்க' (அகம்.184: 14)

(ஊ) <u>நறவு</u> Naṟavu

**மகிழ்ச்சி** - happy
'நறவு மகிழ் இருக்கை நல் தேர்ப் பெரியன்' (நற்.131: 7)

**வளமை** - prosperous
'முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற' (குறு.394: 1-2)

(11) **பயன்** - use
'நல் அமிழ்து ஆக, நீ நயந்து உண்ணும் நறவே' (புறம்.125: 8)

(ஒப்பு) <u>Alcohol, Brandy, Cocktail, Gin, Whisky, Wine</u> **அறிவாற்றல், இணக்கம், இளமை, உண்மை, ஏசுவின் குருதி, நிலைபேறான வாழ்வு, மகிழ்ச்சி, மீட்பு, வியப்பு; கழிகாமம், வன்முறை, வெறி.**

## <u>கள்வர்</u> Kaḷvar (thief)

(1) **தலைவன், கொடுமை** – hero, cruel
'கள்வர் போலக் கொடியன்மாதோ' (நற்.28: 4)

(2) **மறைப்பு** – hide
'நள்ளென் கங்குல், கள்வன் போல, அகன் துறை ஊரனும் வந்தனன்' (நற்.40)

(3) **பொய்ம்மை** – false / not trust worthy
'ஒருநின் பாணன் பொய்யனாக உள்ள பாணர் எல்லாம் கள்வர் போல்வர்நீ அகன்றிசி னோர்க்கே' (குறு.127: 4-6)

(ஆ) <u>கட்குத்திக் கள்வன்</u> kaṭkuttik kaḷvan

(4) **தலைவன், ஏமாற்றுதல்** – hero, cheating
'ஆ முனியா ஏறு போல், வைகல் பதின்மரைக் காமுற்றுச் செல்வாய்; ஓர் கட்குத்திக் கள்வனை; நீ எவன் செய்தி, பிறர்க்கு' (கலி.108: 49-51)

(இ) <u>ஆறலை கள்வர்</u> āṟalai kaḷvar (highway robber)

(5) **அருளின்மை** - unmerciful
'ஆறுஅலை கள்வர் படைவிட அருளின் மாறுதலை பெயர்க்கும் மருவுஇன் பாலை' (பொரு.21-22)

(ஈ) <u>கள்வி</u> kaḷvi

(6) **தலைவி** - heroine
'இரண்டுஅறி கள்வி நம் காதலோளே' (குறு.312: 1)

(ஒப்பு) <u>Thief</u> **காலம்; இறப்பு.**

## <u>கள்ளி</u> Kaḷḷi (cactus)

(1) **வறட்சி** - drought
'பெயல் மழை துரந்த புலம்பூறு கடத்துக் கவைமுடக் கள்ளிக்காய்விடு கடுநொடி' (குறு.174: 1-2)

(2) **தீமை** - evil
'தீ து உறு கள்ளிஅம் காடு இறந்தோரே' (ஐங்.தி.1: 4)

(3) **இழிவு** - mean
'கள்ளி யகிலும் கருங்காக்கைச் சொல்லும்போல் எள்ளற்க யார்வாயின் நல்லுரையைத் - தெள்ளிதின் ஆர்க்கும் அருவி மலைநாட! நாய்கொண்டால்

பார்ப்பாரும் தின்பர் உடும்பு'
(பழமொழி.35)

(4) **பயனின்மை, கீழ்மக்கள்** – useless, ignoble
'அள்ளிக்கொள் அன்ன குறுமுகிழ ஆயினும் கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ அன்மையால் செல்வம் பெரிதுடையர் ஆயினும் கீழ்களை நள்ளார் அறிவுடையார்'
(நாலடி.262)

(5) **கடுமை** - fierce
'கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே' (நீலகேசி.30: 4)

## களங்கனி Kaḷaṅkaṉi (a black fruit)

(1) **கருமை** - black
'இளம் பிறை அன்ன கோட்ட கேழல் களங் கனி அன்ன பெண்பால் புணரும்' (ஐங்.264: 1-2)

(2) **புளிச்சுவை** – sour taste
'களவுப் புளி அன்ன விளை.. ..'
(புறம்.328: 8)

(3) **இனிமை**
**'வம்பக் களங்கனிகாள் .. .. ..'**
(நாலா.590: 3)

## களர் Kaḷar (saline soil)

(1) **வறட்சி** - drought
'.. .. .. .. கனைகதிர் ஆவி அவ்வரி நீர்என நசைஇ, மாதவப் பரிக்கும் மரல்திரங்கு நனந்தலை களர்கால் யாத்த கண்அகன் பரப்பின்'
(அகம்.327: 8-11)

(2) **பயனற்ற நிலை** - uselessness
'சிறுவெள் என்பின் நெடுவெண் களரின், வாய்வன் காக்கை கூகையொடு கூடிப் பகலும் கூவும் அகலுள் ஆங்கண்'
(புறம்.362: 16-18)

(3) **வாழ்க்கை** - life
'அதள் எறிந்தன்ன நெடுவெண் களரின் ஒருவன் ஆட்டும் புல்வாய் போல ஓடி உய்தலும் கூடுமன் ஒக்கல் வாழ்க்கை தட்கும்மா காலே'
(புறம்.193)

(ஆ) **களரி** kaḷari

(4) **வெம்மை** - heat
'வெயில்அவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரி' (அகம்.293: 5)

(இ) **உவர்நிலம்** uvarnilam

(5) **பயனின்மை** - useless
'தமரல் லவரைத் தலையளித்தக் கண்ணும் அமராக் குறிப்பவர்க் காகாதே தோன்றும் சுவர்நிலம் செய்தமையக் கூட்டியக் கண்ணும் உவர்நிலம் உட்கொதிக்கு மாறு'
(பழ.289)

## களவன் Kaḷavan (crab)

(1) **அழிவு, இறப்பு** – death, destruction
'தாய் சாப் பிறக்கும் புள்ளிக் களவனொடு' (ஐங்.24: 1)

(2) **தலைவன்** - hero
'புயல் புறம் தந்த புனிற்று வளர் பைங் காய் வயலைச் செங் கொடி களவன் அறுக்கும்' (ஐங்.25: 1-2)

(ஆ) **அலவன்** alavan

(3) **தலைவன்** - hero
'செக்கர் அம் புள்ளித் திகிரி அலவனொடு, யான் நக்கது, பல் மாண் நினைந்து' (கலி.146: 23-24)

(இ) **ஞெண்டு** ñeṇṭu

(4) **தலைவன்** - hero
'வேப்புநனை அன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு இரைதேர் வெண்குருகு அஞ்சி, அயலது ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல், திதலையின் வரிப்பஒடி, விரைந்து தன் நீர்மலி மண்அளைச் செறியும் ஊர'
(அகம்.176: 8-12)

(ஒப்பு) Crab **எச்சரிக்கை, கடக ராசி, செழிப்பான தன்மை, பின்னடைவியக்கம், மறுபிறப்பு, முன்னறிதிறம், வலியத்தாக்கும் தன்மை; இறப்பு.**

## களிற்றை அரவு விழுங்குதல் Kaḷiṟṟai aravu viḻuṅkutal

(1) **இருள், கருமை** – darkness, blackness
*'பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்க இருள்கூர்ந்த கரிய மிடற்றர் செய்ய மேனிக் கயிலை மலையாரே'*
(திருஞான.தேவா.3459: 5-8)

**களிறு (elephant) பார். 'யானை'**

**களிறு கவுளடுத்த எறிகல்** Kaḷiṟu kavuḷaṭutta eṟikal

(1) **மறைவான ஆற்றல்** – concealed strength
*'களிறு கவுளடுத்த எறிகல் போல, ஒளித்த துப்பினை ஆதலின்'*
(புறம்.30: 8-9)

**(ஆ) கல் கவுள் கொண்ட களிறு**
Kal kavuḷ koṇṭa kaḷiṟu
**மறைவு** - hidden
*'காய்ந்தெறி கடுங்கல் தன்னைக் கவுள்கொண்ட களிறுபோல, ஆய்ந்தறி உடையராகி அருளொடு வெகுளி மாற்றி, வேந்தர்தாம் விழைய எல்லாம் வெளிப்படார் மறைத்தல் கண்டாய்'* (சீவக.2910)

**களிறுண் விளங்கனி** Kaḷiṟuṇ viḷaṅkaṉi

(1) **அழிவு** - ruin
*'மேவு செல்வம் களிறுண் விளங்கனி ஆவதாக அழியவும் அன்பினால்'* (பெரிய.915: 1-2)

**(ஆ) உலங்கு உண்ட விளங்கனி**
Ulaṅku uṇṭa viḷaṅkaṉi

(2) **உள்ளீடின்மை**
*'உலங்கு உண்ட விளங்கனிபோல் உள் மெலியப் புகுந்து என்னை'*
(நாலா.582: 5-6)

**களை** Kaḷai

(1) **பொய்ம்மை**
*'பொய்ம்மையாம் களையை வாங்கி'*
(திருநா.தேவா.2921: 3)

**கற்சிறை** Kaṟciṟai **(dam)**

(1) **தடை, தடுப்பு** – obstacle
*'வரு புனல் கற்சிறை கடுப்ப, இடை அறுத்து, ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர்'* (மது.725-726)

**கற்சுனை** Kaṟcuṉai **(rock fountain)**

(1) **கடவுட்டன்மை** - divine
*'கடவுள் கற்சுனை அடை இறந்து அவிழ்ந்த'* (நற்.34: 1)

**கற்பகம்** Kaṟpakam **(a divine tree)**

(1) **வள்ளன்மை** - benevolence
*'கற்பகம் அனைய வள்ளல் கருங் கழல் கமலக் கால்மேல்'*
(கம்ப.யுத்.2837: 3)

(2) **ஈகை** - giving
*'கணிதம் இல்லாக் கற்பகம் கந்துக்கடன் ஒத்தான்'* (சீவக.365: 3)

(3) **நல்வினை** – good deeds
*'நல்வினை என்னும் நன்பொற் கற்பக மகளிரென்னும்'*
(சீவக.2728: 1)

**(ஆ) காய்தழல் கவரப்பட்ட கற்பக மரம்** Kāytaḻal kavarappaṭṭa kaṟpaka maram

(4) **பிரிவுத்துன்பம்**
*'காய்தழல் கவரப்பட்ட கற்பக மரத்தின் கன்றி சூழ்கழல் குருசில் வாடி அற்புத்தீ அழலுள் நிற்ப'*
(சீவக.1707: 1-2)

**(இ) தேவேந்திர தாரு** Tēvēntira tāru

(5) **கொடை**
*'பாவேந்தர் காற்றில் இலவம் பஞ்சாகப் பறக்கையிலே தேவேந்திர தாரு ஒத்தாய் ரகுநாத சயதுங்கனே'* (தனிப்.505: 3-4)

**கற்பகப் பூங்கா** Kaṟpakap pūṅkā **(garden of divine tree)**

(1) **கொடை**
*'இடுவோர் சிறிதிங்கு இரப்போர் பெரிது கெடுவாய் நமனே கெடுவாய் - படுபாவி கூவத்து நாரணனைக் கொன்றாயே*

கற்பகப்பூங்கா வெட்டலாமோ கறிக்கு' (தனிப்.420)

(ஆ) **நகரில் உள்ள கற்பகச் சோலைகள் அழிந்து காணப்படுதல்**
Nakaril ulla karpakac cōlaical alintu kāṇappaṭutal (burning groves)

(2) **தீமை, அழிவு, இறப்பு** – evil omen
'எரியுமால் கந்தர்ப்ப நகரம் எங்கணும்' (கம்ப.சுந்.373: 2)

**கற்றாவின் மனம்** Karrāviṉ maṉam **(milch cow's heart)**

(1) **உருக்கம்** - melting
'கற்றாவின் மனம் போலக் கசிந்து உருக வேண்டுவனே' (திருவா.39: 3.4)

**கறங்கு** Karaṅku **(wind-mill, fan, pinwheel, kite)**

(1) **சுழற்சி, மாற்றம்** – rotate, change
'கண்ணொடு மனம் சுழல் கறங்கு போல ஆய் மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான்' (கம்ப.அயோ.1114: 3-4)

(2) **திரிவு / திரிதல்** – go round
'கறங்கு ஆகும் எனத் திரிய நீயோதான் கடவாயே' (கம்ப.ஆரண்.49: 4)

(3) **வேகம் / விரைவு** - fast, quick
'அறம் கொளாதவர் ஆக்கைகள் அடுக்கிய அடுக்கல் பிறங்கி நீண்டன கணிப்பு இல பெருங் கடு விசையால் கறங்கு போன்றுளது ஆயினும்' (கம்ப.ஆரண்.515: 1-3)

**கறவை (காமதேனு)** Karavai **(divine cow)**

(1) **ஈகை** - giving
'ஓவலில் கறவை ஒத்தான் உலோகமா பாலற் கன்றே' (சீவக.2572: 4)

**கறி** Kari **(pepper)**

(1) **வளமை, செல்வம்** – prosperous, wealth
'யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்' (அகம்.149: 9-10)

(ஆ) **மிளகு உளு** miḷaku uḷu

(2) **தீமை, அழிவு** - evil, destruction
'அல்லவையுள் தோன்றி அலஅலைத்து வாழ்பவர் நல்லவையுள் புக்கிருந்து, நாவடங்கக் - கல்வி அளவிறந்து மிக்கார் அறிவு எள்ளிக் கூறல் மிளகு உளு உண்பான் புகல்' (பழமொழி.23)

**கறுப்பு** Karuppu **(black)**

(1) **வெகுளி / சினம்** - anger
'கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள' (தொல்.855)

(2) **பகை** - enmity
'அரும்பொருள் வேட்டம் எண்ணி, கறுத்தோர் சின்புன் கிளவி....' (அகம்.389: 13-14)

(3) **வஞ்சகம்** – deceit, cunning
'மைபொதி விளக்கே என்ன மனத்தினுட் கறுப்பு வைத்து' (பெரிய.473: 5-6)

(ஆ) **கருமை** karumai

(4) **வலிமை** - strength
'தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்' (அகம்.79: 1)

(5) **தீமை** - evil
'கருந் தொழிலராய கடையாயார்' (பழமொழி.97: 1)

(6) **பாவம், தீமை** - sin, evil
'கற்றவைம் பதங்க ணீராக் கருவினை கழுவப் பட்டு' (சீவக.951: 1)

(7) **அறியாமை** - ignorance
'ஈயு மன்னென் றேற்ற கருமையால் எனும் சிந்தையிலவாய்' (நீலகேசி.42: 4)

(இ) **கார்** kār

(8) **இருள்** – dark

*'செவ்வி கொள்வரகின் செஞ்சுவர் கலித்த கவ்வை நாற்றின் கார்இருள் ஓர் இலை'*
(*குறு*.282: 1-2)

**(ஒப்பு)** Black **அறிவாற்றல், இரசியம், இரவு, உறக்கம், கருப்பை, காதல், சனிக்கோள், தவறுக்காக வருந்துதல், நிலைத்த தன்மை, பெண்மை, மயக்க நிலை, மறைவு, வடதிசை, வளமை, வைரம்; அச்சம், அதிர்ஷ்டமின்மை, அழிவு, அறியாமை, இரவு, இருள், இறப்பு, இன்மை, எதிர்மறை, ஒன்றுமில்லாத நிலை, கீழுலகம், தண்டனை, தவறு, தீமை, தீய ஆவி, துயரம், பாவம், மூட நம்பிக்கை.**

**கறைவிடைப் பாலின் நெய்** Kar̲aviṭaip pālin̲ ney
(1) **மறைவு / புலப்பாடின்மை** – unexposed, hidden, concealed
*'கறைவிடைப் பாலின் நெய்யர் கரும்பினிற் கட்டியாளர்'*
(*திருநா.தேவா*.1579: 2)

**கன்று** Kan̲r̲u **(calf)**
(1) **இரத்தல்** - beg
*'இரவலர் கன்றாக ஈவார் ஆவாக விரகிற சுரப்பதாம் வண்மை'*
(*நாலடி*.279: 1-2)

**(ஆ) கறவை காண் கன்று** Kar̲avai kāṇ kan̲r̲u (milch cow and calf)
(2) **விருப்பம்** – desire, love
*'கறவைகாண் கன்றின் வெஃகிக் கண்டடி பணிந்து காமர்'*
(*சீவக*.1125: 1)

**கன்றை நினைந்து எழு தாய்** Kan̲r̲ai nin̲aintu eḻu tāy
(1) **அன்பு** – love, liking
*'கன்றை நினைந்து எழு தாய் என வந்த கணக்குஅது ஆகாதே'*
(*திருவா*.49: 2.5-6)

**கன்னல்** Kan̲n̲al **(water clock)**
(1) **காலம்** - time
*'குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது'* (*அகம்*.43: 6)

**கன்னன்** Kan̲n̲an̲ **(a liberal person / Karna)**
(1) **கொடைத்தன்மை** - liberality
*'கன்னன் வெங்கடேசுரெட்ட காண்டிபன்மேல் மாமோக'*
(*தனிப்*.781: 1)

**கன்னி** Kan̲n̲i **(virgin / young woman / cape comarin)**
(1) **களவு** - conjugal love
*'மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோல் அது ஓச்சிக் கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி'*
(*சிலப்*.7.3)
(2) **அழகு** - beautiful
*'கட்டுடைக் காவலில் காமர் கன்னியே'* (*சீவக*.98: 4)

**கனகக்குன்று** Kan̲akakkun̲r̲u **(golden mountain)**
(1) **செம்மை நிறம், அழகு** – red colour, beautiful
*'செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி'* (*திருநா.தேவா*.1199: 7)

**கனல் (fire) பார். 'தீ'**

**கனல் இரும்பு உண்ட நீர்** Kan̲al irumpu uṇṭa nīr **(water absorbed by hot iron)**
(1) **வெளிப்படாமை, மறைப்பு** – unrevealed, concealed
*'கனல் இரும்புண்ட நீரின் விடாது மனவயின் அடக்கி மறைந்தனன் ஒழுகி'* (*பெருங்.மகத*.25: 71-73)

**கனவு** Kan̲avu **(dream)**
(1) **மிகு உணர்வு / வேட்கை** - extra sensitiveness / desire
*'காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்'* (*தொல்*.1061)

(2) **மயக்கம்** – confusion / bewilderment
'கண்துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்' (தொல்.1216)

(3) **பொய்ம்மை** – false / untrue
'கண்ணினும் கனவினும் காட்டி' (நற்.173: 5)

(4) **ஏமாற்றம்** – cheat, disappoint, beguile
'இன் துயில் எடுப்புதி கனவே எள்ளார் அம்ம துணைப்பிரிந் தோரே' (குறு.147: 4-5)

(5) **விருப்ப நிறைவேற்றம்** – wish fulfilment
'கனவில் தொட்டது கைபிழை யாகாது நனவிற் சேஎப்பநின் நளிபுனல் வையை'
(பரி. 8: 103-104)

(6) **பயனின்மை** - useless
'நனவினான் வேறாகும் வேளா முயக்கம் கனவினான் எய்திய செல்வத்து அனையதே'
(கலி. 68: 21-24)

(7) **அழகு** - beautiful
'கனவு எனப்பட்டது ஓர் காரிகை நீர்த்தே' (கலி. 92: 2)

(8) **நிலையின்மை** - unstability
'கனவின் நிலையின்றால், காமம்' (கலி.145: 3)

(9) **பொய்யானது, இல்லாதது** – untrue, non existant
'வறுங்கை காட்டிய வாய் அல் கனவின்' (அகம்.39: 23)

(10) **உண்மைத் தோற்றம்** – truthful appearance
'நனவின் வாயே போல துஞ்சுநர்க் கனவுஆண்டு மருட்டலும் உண்டே' (அகம்.158: 10-11)

(11) **இன்பம்** - pleasure
'கனவினான் உண்டாகும் காமம் நனவினான் நல்காரை நாடித் தரற்கு' (குறள்.1214)

(12) **முன்னறிவிப்பு** - foretell
'கல்லாதான் கண்ட கழிநுட்பம் கற்றார்முன் சொல்லுங்கால் சோர்வு படுதலால் - நல்லாய் வினாமுந் துறாத உரையில்லை இல்லை கனாமுந் துறாத வினை' (பழமொழி.12)

**(ஆ) <u>கனா</u>** kaṉā

**பொய்ம்மை** - false
'வாய்த் தகைப் பொய்க் கனா மருட்ட' (குறு.30: 3)

(13) **விருப்பம்** - desire
'ஓர்த்தது இசைக்கும் பறை போல், நின் நெஞ்சத்து வேட்டதே கண்டாய் கனா' (கலி.92: 21-22)

(14) **அச்சம்** – fear, dread
'பஞ்சி அடிப் பவளத்துவர் வாயவள் துஞ்சும் இடைக்கனா மூன்று அவை தோன்றலின் அஞ்சி நடுங்கினள் ஆயிழை ஆயிடை' (சீவக.219: 1-2)

(15) **தீமை, அழிவு** - evil omen, destruction
'போக மகளிர் வலக் கண்கள் துடித்த பொல்லாக் கனாக்கண்டார் ஆக மன்னற்கு ஒளிமழுங்கிற்று' (சீவக.2173: 1-3)

**(இ) <u>வாவல் கனவு</u>** vāval kaṉavu

(16) **அரிய விருப்பம்** – rare desire
'உள் ஊர் மாஅத்த முள் எயிற்று வாவல் ஓங்கல்அம் சினைத் தூங்கு துயில் பொழுதின், வெல் போர்ச் சோழர் அழிசிஅம் பெருங் காட்டு நெல்லி அம் புளிச் சுவைக் கனவியாஅங்கு' (நற்.87: 1-4)

**(ஈ) <u>வண்டு கனவு</u>** vaṇṭu kaṉavu

(17) **வளமை** - prosperous
'கூம்புமுகை அவிழ்த்த குறுஞ்சிறைப் பறவை வேங்கை விரிஇணர் ஊதி, காந்தள் தேனுடைக் குவிகுலைத் துஞ்சி, யானை இருங்கவுட் கடாஅம் கனவும்' (அகம்.132: 10-14)

**(உ) <u>கடற்காக்கை கனவு</u>**
kaṭaṟkākkai kaṉavu

(18) **உவப்பு** - happy
'கடற்சிறு காக்கை காமர் பெடையொடு கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின் வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து' (அகம்.170: 10-12)

**(ஊ) <u>கவரி கனவு</u>** kavari kaṉavu

(19) **வேட்கை** - desire

'கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி பரந்திலங்கு அருவியொடு நரந்தம் கனவும்' (பதி.11: 21-22)

(எ) <u>துஞ்சுமன் கண்ட கனா</u>

Tuñcuman kaṇṭa kanā

(20) **பயனின்மை** - futile

'வாளைமீன் உள்ளல் தலைப்படலும் ஆளல்லான் செல்வக் குடியுள் பிறத்தலும் - பல்லவையுள் அஞ்சுவான் கற்ற அருநூலும் இம்மூன்றும் துஞ்சுமன் கண்ட கனா' (திரி.7)

(ஏ) <u>எல்லிருள் கனவு</u> Elliruḷ kanavu

(21) **நன்மை, எதிர்பார்ப்பு** – good omen, hope

'எல்லிருள் கனவில் கண்டேன் கண்ணிடன் ஆடும் இன்னே' (சீவக.1909: 1)

(ஐ) <u>கனவில் கண்ட பொருளை நனவில் பெறுதல்</u> Kanavil kaṇṭa poruḷai nanavil perutal

(22) **உவகை, மகிழ்ச்சி** - gladness, joy

'கனவில் கண்ட கண்ணார் விழுப்பொருள் நனவில் பெற்ற நல்குரவன் போல் உவந்த மனத்தின் விரைந்தெழுந்து யூகியும்' (பெருங்.உஞ்.43: 104-106)

(ஒ) <u>ஊமனார் கண்ட கனவு</u>

Umanār kaṇṭa kanavu

(23) **வீண்** - futile

'ஊமனார் கண்ட கனவிலும் பழுது ஆய் ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்' (நாலா.950: 3-4)

(ஓ) <u>யானை கனவில் தோன்றுதல்</u>

Yānai kanavil tōnrutal

(24) **ஆற்றல், வெற்றி**

'எழீஇயவண் இயக்கப் பொழிமத யானை வேண்டிய செய்தலின் ஈண்டிய மாதவன் பள்ளிக்கு உய்ப்ப நள்ளிருள் கூறும் பாகர் ஏறினும் தோற்கயிறிடினும் நீமுன் உண்ணினு நீங்குவல் யானென ஆகு பொருள் கேட்டு அறிவுற்று எழுந்து' (பெருங்.இலா.11: 116-121)

(ஔ) <u>வைகறை யாமத்துக் கனவு</u>

Vaikarai yāmattuk kanavu

(25)

'மேலையம் பாற்கடல் வெள்ளேறு கிடந்த வாலிதழ் நறுமலர் வைகறை யாமத்துக் கனவின் மற்றவன் கையிற் கொடுத்து வினையின் எதிர்பொருள் விளங்கக் காட்டென' (பெருங்.நர.3: 194-197)

(ஒப்பு) <u>Dream</u> **அனுபவம், உண்மை, சேய்மை உணர்வு, வாழ்க்கை; பொய்ம்மை.**

**கனி (fruit) பார். 'பழம்'**

## <u>காக்கை</u> Kākkai (crow)

(1) **தலைவன்** - hero

'அகல் அங்காடி அசை நிழல் குவித்த பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்' (நற்.258: 7-9)

(2) **சுற்றம் தழுவல்** – cherishing kinded

'கொடுங் கண் காக்கைக் கூர் வாய்ப் பேடை நடுங்கு சிறைப் பிள்ளைத் தழீஇ, கிளை பயிர்ந்து, கருங் கண் கருனைச் செந்நெல் வெண் சோறு சூருடைப் பலியொடு கவரிய, குறுங் கால் கூழுடை நல் மனைக் குழுவின இருக்கும்' (நற்.367: 1-5)

(3) **இறப்பு** - death

'கருங்கட் காக்கையொடு கழுகு விசும்பு அகவ, சிறு கண் யானை ஆள் வீழ்த்துத் திரிதரும்' (ஐங்.324: 2-3)

(4) **கீழ்மை / ஏமாற்றம்** – low / cheat, deceive

'ஊக்கி உழந்தொருவர் ஈட்டிய ஒண்பொருளை நோக்குமின் என்றிகழ்ந்து நொவ்வியார் கைவிடுதல் போக்கில்நீர் தூஉம் பொருகழித் தண்சேர்ப்ப காக்கையைக் காப்பிட்ட சோறு' (பழமொழி.208)

(5) **பகை** - enmity

'மறுமனத்தன் அல்லாத மாநலத்த வேந்தன் உறுமனத்த னாகி ஒழுகின் - செறுமனத்தார் பாயிரம் கூறிப் படைதொக்கால் என்செய்ப ஆயிரம் காக்கைக் கோர் கல்' (பழமொழி.249)

(6) **தீமை** .– vile
'தெரிகணை எஃகம் திறந்தவாய் எல்லாம் குருதி படிந்து உண்ட காகம்' (களவழி.5: 1-2)

(7) **கறுப்பு நிறம்**
'மிக்க வெம்புகை விழுங்கலின் வெள்ளியங்கிரியும் ஒக்க வெற்பனோடு அன்னமும் காக்கையின் உருவ' (கம்ப.சுந்.1214: 1-2)

**(ஆ) <u>காக்கை கரைதல்</u>** kākkai karaital (sound of crow)

(8) **விருந்தினர் வரவு, முன்னறிதிறம்** – expecting guests, prophers, good omen
'விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே' (குறு.210: 6)
**சுற்றம் தழுவல்** – cherishing kinded
**குறள்.527**

**(இ) <u>சிறுவெண் காக்கை</u>** ciṟuveṇ kākkai

**தலைவன்** - hero
'பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை கருங்கோட்டுப் புன்னைத் தங்கும் துறைவற்கு' (ஐங்.161: 1-2)

**(ஈ) <u>உலக்கை மேல் காக்கை</u>** ulakkai mēl kākkai

(9) **அறிவிலார், நிலையின்மை, பயனின்மை** – ignorant, unstability, useless
'நிலத்தின் மிகையாம் பெருஞ்செல்வம் வேண்டி நலத்தகு வேந்தருள் நல்லாரைச் சார்ந்து நிலத்து நிலைகொள்ளாக் காலரே காணின் உலக்கைமேல் காக்கையென் பார்' (பழமொழி.157)

**(உ) <u>காகத்திரு கண்ணில் மணி ஒன்றாய் கலந்திருத்தல்</u>** Kākattiru kaṇṇil maṇi oṉṟāy kalantiruttal

(10) **ஒருமை** - oneness
'காகத்து இருகண்ணில் ஒன்றே மணிகலந்து ஆங்கிருவர் ஆகத்துள் ஓருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்' (திருக்கோ.8: 71. 1-2)

**(ஊ) <u>காகம் இடப்பக்கம் செல்லுதல்</u>** Kākam iṭappakkam cellutal

(11) **தீமை, போர்** - evil, war
'ஏகும் அளவையின் வந்தன வலமும் மயில் இடமும் காகம் முதலிய முந்திய தடை செய்வன கண்டான்' (கம்ப.பால.1213: 1-2)

**(எ) <u>காக்கை ஆர்த்தல்</u>** Kākkai ārttal

(12) **அச்சம்** - fear
'காக்கை ஆர்ப்பன கழுதுதம் கிளையொடு கதறி .. .. .. யாக்கை கொண்டவர்க்கு அணைதலுக்கு அரிதது பெரிதும்' (நீலகேசி.31: 1,4)

**(ஏ) <u>காகதந்தம்</u> (காகத்தின் பல்)** Kākattiṉ pal

(13) பாழ் - futile
'கந்தம் ஆவன காகதந்தம் எனப் பந்தம் இன்மையின் பாழ் செய்திட்டேன்' (நீலகேசி.551: 1-2)

**(ஐ) <u>காக்கைப் பல்</u>** Kākkaip pal

(14) **இல்பொருள்** – non existant
'இல்லதற்கே இல்லை கேடு என்னை காக்கையின் பல்லதற்கு ஓதார் பருமையும் நுண்மையும்' (நீலகேசி.633: 1-2)

**(ஒ) <u>முகரி</u>** Mukari

(15) **வஞ்சனை**
'முள்வாய தொழிற் பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாண் முழுதுமிவ் வுலகை யோடி' (திருநா.தேவா.3050: 1-2)

(ஒப்பு) Crow, Raven இறைநிலை, வலிமை, கடவுள் நம்பிக்கை, தூதுவர், நீண்ட நாள் வாழ்வு, படைப்பு, மாற்றம், முன்னறிதிறம், வளமை, விடியல்; அழிவு, இருள், இறப்பு, கழிபேரின்பம், செருக்கு, தந்திரம், தீமை, பழிவாங்கும் எண்ணம், வன்பறிக்கொள்ளை, ஏமாற்றுதல்.

**காஞ்சி** Kañci **(a tree)**

(1) **பெருந்திணை** - love excess
*'காஞ்சி தானே பெருந்திணைப் புறனே'* (தொல்.1023)

(2) **நிலையாமை** - unstability
*'பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே'* (தொல்.1024)

(3) **செழிப்பு** - fertile
*'நீர்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப் பூக் கதூஉம் இன வாளை'* (புறம்.18: 7-8)

(4) **அழகு / இன்பம்** – beautiful / pleasure
*'பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை தேம் கொள் மருதின் பூஞ்சினை முனையின் காமரு காஞ்சித் துஞ்சும்'* (புறம்.351: 9-11)

(5) **தீ நட்பு**
*'கடையாயார் நட்பேபோல் காஞ்சி நல்லூர! உடைய இளநலம் உண்டாய் கடையக் கதிர்முலை ஆகத்துக் கண்ணன்னார் சேரி எதிர்நலம் ஏற்று நின்றாய்'* (திணை.ஐம்.33)

**காஞ்சி (பண்)** Kañci **(a melody)**

(1) பாதுகாப்பு - safety
*'இசை மணி எறிந்து, காஞ்சி பாடி, நெடு நகர் வரைப்பில் கடி நறை புகைஇ, காக்கம் வம்மோ - காதல் அம் தோழி'* (புறம்.281: 5-7)

**காஞ்சிரங்காய்** Kāñciraṅkāy **(a bitter poisonous fruit)**

(1) **வெறுப்பு, கசப்பு, தீமை** – hatred, bitter, evil
*'கழுநீருள் காரடகேனும் ஒருவன் விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம் விழுமிய குய்த்துவையார் வெண்சோறே ஆயினும் மேவாதார் கைத்துண்டல் காஞ்சிரங் காய்'* (நாலடி.217)

(ஆ) **காஞ்சிரம்** Kañciram

(2) **இழிவு, துன்பம்** – low, suffering
*'உயர்வரைத் தேனை உண்பார் வருத்தும் காஞ்சிரமும் வேம்பும் வாய்க்கொள்வார் யாவர் சொல்லாய்'* (சீவக.2722: 6-8)

**காஞ்சிரை** Kañcirai **(a tree)**

(1) **பயனின்மை / கீழ்மை** – useless / low
*'ஊழாயினாரைக் களைந்திட் டுதவாத கீழாயி னாரைப் பெருக்குதல் - யாழ்போலும் தீஞ்சொல் மழலையாய்! தேனார் பலாக்குறைத்துக் காஞ்சிரை நட்டு விடல்'* (பழ.104)

**காடு** Kāṭu **(forest)**

(1) **மறைவு** - hide
*'புறவு அணி கொண்ட பூ நாறு கடத்திடை, கிடின்என இடிக்கும் கோல் தொடி மறவர் வடி நவில் அம்பின் வினையர் அஞ்சாது அமரிடை உறுதர, நீக்கி, நீர் எமரிடை உறுதர ஒளித்த காடே'* (நற்.48: 5-9)

(2) **கடுமை** - hard
*'நெய்த்தோர் அன்ன செவிய எருவை கற்புடை மருங்கில் கடுமுடை பார்க்கும் காடு நனி கடிய என்ப'* (ஐங்.335: 2-4)

(3) **துன்பம்** - suffer
*'துன்புறூஉம் தகையவே காடு'* (கலி. 11: 11)

(4) **கொடுமை** - cruel
*'கடுங் குரை அருமைய காடு'* (கலி. 13: 25)

(5) **வெம்மை** - heat
*'அணை அரும் வெம்மைய காடு'* (கலி. 20: 20)

(6) **அச்சம்** – fearful
*'எதிர்த்த பகையை இளைதாய போழ்தே கதித்துக் களையின்*

காடு

'முதிராதே தீர்த்து நனிநயப்பச் செய்தவர் நண்பெல்லாந் தீரத் தனிமரம் காடாத வில்' (பழ.286)

(ஆ) <u>கான்</u> kān

(7) வளமை - prosperous
'படு மழை பொழிந்த பாறை மருங்கில் சிரல் வாய் உற்ற தளவின், பரல் அவல், கான் கெழு நாடற் படர்ந்தோர்க்கு' (நற்.61: 7-9)

(8) கடுமை, துன்பம் – hard, suffering
'ஆண்டலை வழங்கும் கான் உணங்கு கடுநெறி' (பதி.25: 8)

(இ) <u>கானம்</u> kānam

(9) அழகு - beautiful
'தலை நாட்கு எதிரிய தண் பத எழிலி அணி மிகு கானத்து அகன் புறம் பரந்த' (நற்.362: 3-4)

(10) விரிவு - broad
'மரந்தலை மணந்த நனந் தலைக் கானத்து' (நற்.394: 1)

(11) இன்னாமை / துன்பம் - suffering
'நீர்நசை வேட்கையின் நார்மென்று தணியும், இன்னாக் கானமும், இனிய' (குறு.274: 5-6)
கொடுமை - cruel
'புல் அரை ஓமை நீடிய புலி வழங்கு அதர கானத்தானே' (ஐங்.316: 4-5)

(12) இறப்பு - death
'புண் உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர் கண் உமிழ் கழுகின் கானம் நீந்தி' (அகம்.31: 10-11)

(13) இருள் - dark
'கொய் அகை முல்லை காலொடு மயங்கி, மை இருங் கானம் நாறும் நறு நுதல்' (அகம்.43: 9-10)
அச்சம் - fear
'அஞ்சுவரத் தகுந கானம் நீந்தி' (அகம்.63: 9)

(14) நிலைபேறு - stability
'மலையும், சோலையும், மாபுகல் கானமும், தொலையா நல்இசை உலகமொடு நிற்ப' (மலை.69-70)

(ஈ) <u>அத்தம்</u> attam

(15) வறட்சி - dry, drought
'நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை, இயம் புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்' (ஐங்.377: 1-2)
துன்பம் - suffering
'.. .. .. .. அன்போடு அருள் புறம் மாறிய ஆர் இடை அத்தம்' (கலி. 15: 8-9)
அச்சம் - fear
'அருஞ் சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென, குன்று சேர் கவலை, இசைக்கும் அத்தம்' (அகம்.87: 9-10)

(16) இறப்பு / ஆபத்து – death / danger
'சுரம் கெழு கவலை கோட்பால் பட்டென, வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்' (அகம்.109: 9-10)

(உ) <u>கடறு</u> kaṭaṟu

(17) பயன் - use
'பல் பயன் நிலைஇய கடறுடை வைப்பின்' (பதி. 78: 7)
வளமை - prosperous
'மலைபயந்த மணியும், கடறுபயந்த பொன்னும்' (புறம்.377: 16)

(ஊ) <u>கடம்</u> kaṭam

அச்சம் - fear
'உதிர்த்த கோடை, உட்குவரு கடத்திடை' (அகம்.267: 5)

(எ) <u>காட்டகம்</u> kāṭṭakam

பயன் - use
'மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர் மழுவுடைக் காட்டகத்து அற்றே' (புறம்.206: 11-12)

(ஏ) <u>சுரம்</u> Curam

துன்பம் - affliction
'தலைதண்டம் ஆக சுரம்போதல் இன்னா' (இன்னா.12: 1)

(ஒப்பு) <u>Forest</u> அழகு, பூமி, பெண்மைக் கொள்கை, மயக்க நிலை, மறைவு; அசுர சக்திகள், ஆபத்து; வேட்டையாடுதல்.

<u>காதின் தோடு கழலுதல்</u> Kātiṉ tōṭu kaḻalutal

(1) **துன்பம்** - affliction
'காதின கனகப் பைந்தோடும் கைவெள் வளைகளும் கழல .. .. .. வேதனை பெரிதுடைத்து அடிகள் விளிகவிப் பிறப்பென உரைத்தார்' (நீலகேசி.73: 1,4)

<u>காந்தம்</u> Kāntam **(magnet)**

(1) **ஈர்ப்பு** - attract
'செல்லு நான்மறையோன் தன்பின் திரிமுகக் காந்தஞ் சேர்ந்த வல்லிரும் பணையு மாபோல் வள்ளலும் கடிது சென்றான்' (பெரிய.1: 5.50)

<u>காந்தள்</u> Kāntal **(a flower)**

(1) **வெறியாட்டு** – spritted dance
'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தளும்' (தொல்.1006: 1-2)

(2) **நறுமணம்** - fragrance
'வேங்கையும் காந்தளும் நாறி' (குறு.84: 4)

(3) **மென்மை** - soft
'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்' (குறு.167: 1)

(4) **தண்மை, மாரிக்காலம்** – cool, rainy season
'மழைசேர்ந்து எழுதரு மாரிக் குன்றத்து அருவி ஆர்ந்த தண்நறுங் காந்தள் முகை அவிழ்ந்து' (குறு.259: 1-3)

(5) **தலைவி** - heroine
'நறுந்தண் சிலம்பின் நாறு குலைக் காந்தள் கொங்கு உண் வண்டின் பெயர்ந்து புறமாறி, நின் வன்புடை விறற் கவின் கொண்ட அன்பிலாளன் வந்தனன், இனியே' (ஐங்.226: 2-5)

(6) **கடவுட்டன்மை** – holy, divine
'மலர்ந்த காந்தள் மாறாது ஊதிய கடும் பறைத் தும்பி சூர் நசைத்தா அய்' (பதி.67: 19-20)

(7) **உயர்ச்சி** - high
'காந்தள் கடி கமழும், கண் வாங்கு இருஞ் சிலம்பின்' (கலி. 39: 15)

(8) **வழிபாடு** - worship
'கொடிச்சியர் கூப்பி வரை தொழு கை போல் எடுத்த நறவின் குலை அலங்காந்தள்' (கலி.40: 11-12)

(9) **அரிய தன்மை** - rare
'திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட் கொழுமடற் புதுப்பூ ஊதும் தும்பி' (அகம்.138: 17-18)

(10) **சிவப்பு நிறம்**
'காந்தளம் செங்கை யேந்திள வனமுலை' (மணி.3: 120)

(11) **குறிஞ்சித்திணை** - mountain tract
'கை விரிந்தன காந்தளும் பூஞ்சுனை' (சூளா.17: 1)

(ஆ) <u>கோடல்</u>

**கார்காலம்**
'மறந்து கடல் முகந்த கமஞ்சூல் மா மழை பொறுத்தல் செல்லாது இறுத்த வண் பெயல் கார் என்று அயர்ந்த உள்ளமொடு, தேர்வு இல - பிடவமும், கொன்றையும், கோடலும் - மடவ ஆகலின், மலர்ந்தன பலவே' (நற்.99: 6-10)

**தண்மை**
'வெஞ்சின அரவின் பைஅணந் தன்ன தண்கமழ் கோடல் தாதுபிணி அவிழ' (அகம்.154: 6-7)

**நறுமணம்**
'தண்கமழ் கோடல் துடுப்பீனக் காதலர் வந்தார் திகழ்கநின் தோள்' (திணை.ஐம்.21: 3-4)

(12) **முல்லைத்திணை**
'கொன்றையும் குருந்தும் குலைக் கோடலும்' (சூளா.18: 1)

<u>காந்தாரம்</u> **(பண்)** Kantāram **(a melody)**

(1) **இனிமை, களிப்பு** – sweetness, joy
'என்னரே யேற்ற துணைப்பிரிந்தார் ஆற்றென்பார் அன்னரே யாவரவர்க்கு முன்னரே வந்தாராம் தேங்கா வருமுல்லை சேர்தீந்தேன் காந்தாரம் பாடும் களித்து' (திணைமாலை.106)

<u>காமக்கோட்டம்</u> Kāmakkōṭṭam **(Kaman temple)**

(1) **புண்ணியம், அழகு** – blessed, beauty

'புண்ணியத் திருக் காமக் கோட்டத்துப் பொலிய' (பெரிய.19.71)

**காமர் பூம்பொய்கை வற்றல்** Kāmar pūmpoykai varral

(1) **கன்னித்தன்மை நீங்குதல்** – virginity leaves
'கனை இருள் கனவில் கண்டேன் காமர்பூம் பொய்கை வற்ற அனையதாம் கன்னி நீரின் தந்த தாம் நங்கைக்கு என்றாள்' (சீவக.2075: 3-4)

**காய்** Kāy **(vegetable, unripe fruit)**

(1) **இன்னாச் சொல்** – bitter words
'இனிய உளவாக இன்னாத கூறல் கனி இருப்ப காய் கவர்ந்தற்று' (குறள்.100)

(2) **இளையோர்** - youth
'மற்றறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம்செய்ம்மின் முற்றியிருந்த கனியொழியத் தீவளியால் நற்காய் உதிர்தலும் உண்டு' (நாலடி.19)

(3) **வலிமை, பாரம்** – strong, load / burden
'வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே தன்காய் பொறுக்கலாக் கொம்பு' (நாலடி.203: 3-4)

(4) **இன்பம்**
பெருமரம் புணர்ச்சிப் பல்பூ இணர்த்தொன'மாட்சி நீரின் மாண்சினை பல்கிய வேட்கை என்னும் விழுத்தகு க ஈன்று நோயி லின்பக் காய் பல தூங்கியாழ வற்புக்கனி யூழறிந் தேந்த' (பெருங்.வத்.9: 73-77)

(ஆ) **கருக்காய்** karukkāy

(5) **இனிமையின்மை** - bitter
'துனியும் புலவியும் இல்லாயின் காம கனியும் கருக்காயும் அற்று' (குறள்.1306)

(இ) **சிதட்டுக்காய்** citattukkāy

(6) **பயனின்மை** – useless
'பழமழை பொழிந்தெனப் பதன் அழிந்து உருகிய சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்' (குறு.261: 1-2)

**காயசண்டிகை** Kāyacaṇṭikai **(a lady)**

(1) **பசிப்பிணி**
'மாதவன் தன்னால் வல்வினை உருப்பச் சாவம் பட்டுத் தனித்துயர் உறூஉம் வீவில் வெம்பசி வேட்கையொடு திரிதரும் காயசண்டிகையெனும் காரிகை தானென்' (மணி.15: 83-86)

**காயா** Kāyā **(a flower)**

(1) **கார்காலம்** – rainy season
'பல் மலர் காயாங் குறுஞ் சினை கஞல, கார் தொடங்கின்றே காலை' (நற்.242: 4-5)

(2) **கருமை நிறம்** – black / blue colour
'சிறியிலைக் காயா அஞ்சனம் மலர' (முல்.93)

(ஆ) **காசை** Kācai
**கருமை** – black / blue colour
காசைசேர் குழலாள் கயல் ஏர் தடங்கண்ணி காம்பன தோள் கதிர் மென்முலை'
(திருஞான.தேவா.3678: 1-2)

**கார்த்திகை நாள்** Kārttikai nāḷ **(a star)**

(1) **தொன்மை, நிலைபேறு** – ancient, stable
'வளக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில் துளக்கில் கபாலீச்சரத்தான் தொல் கார்த்திகை நாள்' (திருஞான.தேவா.3578: 1-2)

**காரடகு** Kāraṭaku **(leaf)**

(1) **தாழ்வு** - low
'கழுநீருள் காரட கேனும் ஒருவன் விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்' (நாலடி.217: 1-2)

**காரம் (புண்ணிற்கிடும் காரம்)** Kāram **(medicine)**

(1) **வெம்மை** – hot

'மென்கட் கலிவயலூரன் தன் மெய்ம்மையை எங்கட் குரையா எழுந்துபோ இங்கட் குலங்காரமென்று அணுகான் கூடும் கூர்த்தென்றே அலங்கார நல்லார்க் கறை' (திணைமாலை.127)

**காரான்** Kāraṉ **(buffalo)**

(1) **வளமை, பயன்** – prosperous, useful
'மன்ற எருமை மலர் தலைக் காரான் இன் தீம் பாற்பயம் கொண்மார்' (நற்.80: 1-2)

(2) **தலைவன்** - hero
'இருமருப்பு எருமை ஈன்றணிக் காரான் உழவன் யாத்த குழவியின் அகலாது பாஅல் பைம்பயிர் ஆரும் ஊரன்' (ஐங்.181: 3-5)

(ஆ) **எருமை** erumai
**தலைவன்** - hero
'கழுநீர் மேய்ந்த கருந் தாள் எருமை பழனத் தாமரைப் பனிமலர் முனைஇ' (நற்.260: 1-2)

(3) **கூற்று / இறப்பு** – death god / death
'எருமை இருந் தோட்டி எள்ளீயும் காளை' (பரி.8: 86)
**செல்வம், வளமை** – prosperous, wealth
'குறுநெறிக் கொண்ட கூந்தல், ஆய்மகள் அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி, நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள், எருமை, நல் ஆன், கருநாகு பெறூஉம்' (பெரும்.162-165)

(ஒப்பு) Buffalo **அமைதியான வலிமை, அன்புடைமை, இயல்பு நிலை கடந்த சக்தி, உயர் குணமுடைமை, சாந்தி; அசுரர், இறப்பு, உயிர்ப்பலி, எமன், மகிடாசுரன்.**

**காரி குரலிசைத்தல்** Kāri kuralicaittal

(1) **முன்னறிவித்தல்** – prophess, foretell, omen
'வெட்சி மலர்புனைய வெள்வாள் உழத்தியும் வேண்டின் வேற்றூர்க் கட்சியுள் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்' (சிலப்.12: 13. 3-4)

**காரியுண்டிக் கடவுள்** Kāriyuṇṭik kaṭavuḷ

(1) **சினம்** - anger
'வெம்பினான் காரியுண்டிக் கடவுளில் கனன்று வேந்தன்' (சீவக.670: 3)

**கால்** Kāl **(air / wind)**

(1) **இயக்கம்** - active
'கழுது கால் கிளர ஊர் மடிந்தன்றே' (நற்.255: 1)

(2) **விரைவு** - speed
'இளம்பிறை அன்ன விளங்கு சுடர்நேமி .. .. .. .. கால் இயல் செலவின் மாலை எய்தி' (குறு.189: 3,5)

(3) **வலிமை** - strength
'கன்றிய வெகுளி வேந்தன் கால்வலி இளையர் காய்ந்து' (சீவக.1080: 1)

(ஆ) **காற்று** kāṟṟu
**விரைவு** - speed
'.. .. .. .. காற்றுப் போல் வந்த கதழ்விடைக் காரியை' (கலி.103: 40)

(4) **கடுமை** - harsh
'கடுங்காற்று எடுக்கும் நெடும்பெருங் குன்றத்து' (அகம்.258: 6)

(5) **பெயர்வு, விரைவு** - moving, speed
'கடுகிய விசையொடு காற்றென உராஅய்' (பெருங்.உஞ்.48: 119)

(6) **பாவம், தீவினை** – sin, bad deeds
'ஒல்கிப்போம் பாவக் காற்றின் ஒழிக இப்புணர்ச்சி என்றான்' (சீவக.2728: 4)

(7) **அழிவின்மை**
'நிலனும் நீரும் மாய் நெருப்பும் காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்' (கம்ப.கிட்.116: 1-2)

(இ) **வளி** vaḷi

(8) **இன்பம்** – pleasure

'தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு, நோயும் இன்பமும் ஆகின்றுமாதோ' (நற்.294: 1-2)

(9) **வலிமை** - strength
'வெந் திறல் கடு வளி பொங்கர்ப் போந்தென' (குறு.39: 1)

(10) **அளவின்மை** - limitless
'நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கின் அளப்பு அரியையே' (பதி.14: 1-2)
**விரைவு / வேகம்** - speed
'மணம் மிக நாறு உருவின விரை வளி மிகு கடு விசை' (பரி.1: 24)

(11) **ஆற்றல்** - power
'உந்து வளி கிளர்ந்த ஊழ் ஊழ் ஊழியும்' (பரி.2: 7)

(12) **உயிர்ப்பு** - breath
'இரண்டின் உணரும் வளியும் நீயே' (பரி.13: 19)

(13) **சினம்** - angry
'காய் சினக் கடு வளி எடுத்தலின்' (அகம்.223: 6)

(14) **உயர்ச்சி** - high
'வான் வழங்கு இயற்கை வளி பூட்டினையோ?' (அகம்.384: 9)
**இயக்கம்** - active
'வளி கிளர்ந்தன்ன செலவினர்' (திருமுரு.170)

(15) **திறன்** - ability
'தீயன வல்ல செயினும் திறல்வேந்தன் காய்வன சிந்தியார் கற்றறிந்தார் - பாயும் புலிமுன்னம் புல்வாய்க்குப் போக்கில் அதுவே வளிமுன்னர் வைப்பாரம் இல்' (பழமொழி.265)

(ஈ) __புயல்__ puyal (cyclone)

(16) **சினம், ஆண்மை** - angry, manly
'பெருஞ் சினப் புயல் ஏறு அனையை' (பதி.51: 28)

(17) **அச்சம்** - fear
'அஞ்சுவரு மரபின் வெஞ் சினப் புயலேறு' (புறம்.211: 1)
**விரைவு / வேகம்**
'திரிந்த வேகத்த பாகர்கள் தீர்ந்தன செருவில் புரிந்த வானரத் தானையில் புக்கன புயலின்' (கம்ப.யுத்.1432: 3-4)

(உ) __காற்றின் திசையை மாற்றுதல்__
kāṟṟin ticaiyai māṟṟutal

(18) **ஆற்றல்** - power
'.. .. .. .. வளி மாற்றுவன் என தான் முன்னிய துறை போகலின்' (பட்.272-273)

(ஊ) __பெருவளி__ Peruvaḷi (tempest)

(19) **அழிவு** - destruction
'திண்தோள் மறவர் எறியத் திசைதோறும் பைந்தலை பாரில் புரள்பவை நன்கு எனைத்தும் பெண்ணைஅம் தோட்டம் பெருவளி புக்கு அற்றே' (களவழி.24: 1-4)

(எ) __ஊழிக்கால்__ Ulikkāl (aconian tempest)
**வேகம்** - velocity
'ஒள்ளிய பனைமீன் துஞ்சும் திவலைய ஊழிக் காலின் வள் உகிர் வீரன் செல்லும் விசை பொர மறுகி வாரி' (கம்ப.சுந்.22: 2-3)

(ஏ) __காரொடு வந்த கடுவளி__
Kārōṭu vanta kaṭuvaḷi (rain with strong wind)

(20) **இன்னாமையுடைய இன்பம்** painful pleasure
'ஈரிதழ்த் தாரோ இற்றை நாளால் காரொடு உறந்தவிக் கடுவளி நிமித்தம் ஊரொடு உறந்த உறுகண் காட்டி இன்னா இன்ப நின்வயிற் றருமெனத் தொன்னூலாளன் தோன்றாக் கூற' (பெருங்.உஞ்.47: 11-15)

(ஐ) __சண்டக்கால்__ (புயற்காற்று)
Caṇṭakkāl
**விரைவு**
'மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்கால் கொண்டு போவார் போலக் கடிது கொண்டகலப் போக' (பெரிய.8. 14)

(ஒ) __வெங்கால்__ Veṅkāl
**விரைவு**

'அங்கையின் மழுவும் தாமும் அனலும் வெங்காலும் என்னப் பொங்கிய விசையில் சென்று' (பெரிய.8. 22)

(ஓ) பவணம் Pavaṇam

(21) விரைவு / வேகம், கொடுமை
'பவணத்து அன்ன வெஞ்சிறை வேகத் தொழில் பம்ப' (கம்ப.யுத்.3783: 2)

(ஒப்பு) Wind, Storm ஆன்மா, இலேசான தன்மை, உணர்வுகள், உந்துதலுக்கான ஊடுபொருள், உயிரின் உள்ளியல்பு, எண்ணங்கள், சுதந்திரம், செயல்படுத்துகிற திறன், சொல்லாற்றல், நிலைபேறு, நினைவுகள், புலப்படாத்தன்மை, பொருள் தன்மையற்ற நிலை, முடிவுற்ற நிலை, வாசனைப்பொருள், வாழ்வு, விமானம்.

## கால் கழி கட்டில் Kāl kaḻi kaṭṭil (bier)

(1) இறப்பு - death
'பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக் கால் கழி கட்டிலில் கிடப்பி, தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே!' (புறம்.286: 3-5)

## கால்கள் தடுமாறல் Kālkaḷ taṭumāṟal (legs tripping)

(1) தீமை, அழிவு - evil, destruction
'கால்களும் தடுமாறாடிக் கண்களும் இடமே ஆடி மேல்வரும் அழிவுக்காக வேறுகாரணமும் காணார்' (பெரிய.28.633)

## காலக்கோள் Kālakkōḷ

(1) அழிவு, தீமை, கேடு – harm, damage
'கைகளின் தீண்டினள் காலக்கோள் அனாள்' (கம்ப.அயோ.136: 4)

## காலை Kālai (morning)

(1) அழகு – beautiful
'கண் களி பெறூஉம் கவின் பெறு காலை' (நற்.56: 3)

(2) தண்மை - cool
'குருந்தோ டலம்வரும் பெருந்தண் காலையும்' (குறு.148: 4)

(ஆ) வைகறை vaikaṟai

(3) துன்பம் / பிரிவு - suffering / seperation
'தோள் தோய் காதலர்ப் பிரிக்கும் வாள் போல் வைகறை வந்தன்றால்' (குறு.157: 2-4)

(4) நன்மை - good
'நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை, கார் பெற்ற புலமே போல், கவின் பெறும்' (கலி. 38: 11-12)

(5) நன்னம்பிக்கை - good faith, optimism
'.. .. .. .. பொதி அவிழ் வைகறை வந்து, நீ குறை கூறி, வதுவை அயர்தல் வேண்டுவல்' (கலி. 52: 22-23)

(6) தொடக்கம் – start, beginning
'விடியல் வைகறை இடூஉம் ஊர' (அகம்.196: 7)

(7) ஒளி - light
'.. .. .. .. இருள் நிலாக் கழிந்த பகல் செய் வைகறை' (புறம்.394: 6)

(ஒப்பு) Morning ஆரோக்கியம், இளமை, உண்மை, ஒளி, கடவுளின் ஆசி, காதல், குழந்தைப்பருவம், தூய்மை, தொடக்கம், நம்பிக்கை, நன்மை, புத்துணர்ச்சி, மனித நீதி.

## காவிரி Kāviri (a river)

(1) விரிவு - broad
'காவிரி மலிர் நிறை அன்ன நின் மார்பு நனி விலக்கல் தொடங்கியோளே' (ஐங்.42: 3-4)

(2) வளமை - prosperous
'வளம் கெழு சிறப்பின் உலகம் புரைஇ, செங்குணக்கு ஒழுகும் கலுழி மலிர் நிறைக் காவிரி யன்றியும்' (பதி.50: 4-6)

(3) தாய்மை, பாதுகாத்தல் – motherly, safely

'சையமால் வரைபயில் தலைமை சான்றது செய்யபூ மகட்குநல் செவிலி போன்றது வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும் உய்யவே சுரந்தளித்து ஊட்டும் நீரது' (பெரிய.1: 2.3)

(4) **அறம், அருள்** – virtue, grace
'வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால் எண்ணில்பேர் அறங்களும் வளர்க்கும் ஈகையால் அண்ணல் பாகத்தை ஆளுடைய நாயகி உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது' (பெரிய.1: 2.6)

(5) **தூய்மை** – pure, holy
'தொண்டனேன் பட்டதென்னே தூய காவிரியின் நன்னீர்' (திருநா.தேவா.2910: 1-2)

(ஆ) <u>**காவேரி**</u> Kāveri

**தாய்மை** - motherhood
'வாழி அவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி ஊழி உய்க்கும் பேருதவி ஒழிவாய் வாழி காவேரி' (சிலப்.7. 27)

(6) **கற்பு** - chastity
'திங்கண்மாலை வெண்குடையான் சென்னி செங்கோல் அது ஓச்சிக் கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி' (சிலப்.7. 2)

**வளமை** - fertile
'விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த எல்லாம் வாய்காவா மழவரோதை வளவன் தன் வளனே வாழி காவேரி' (சிலப்.7: 2.3)

**அருள்** - grace
'ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாதொழுகல் உயிரோம்பும் ஆழி ஆள்வான் பகல்வெய்யோன் அருளே வாழி காவேரி' (சிலப்.7. 27)

(இ) <u>**பொன்னி மாநதி**</u> Ponni mānati

(7) **படைப்பு** - creativity
'மாலின் உந்திச்சுழி மலர்தன் மேல் வரும் சால்பினால் பல்லுயிர் தருதன் மாண்பினால் கோலநல் குண்டிகை தாங்கும் கொள்கையால் போலும் நான்முகனையும் பொன்னி மாநதி' (பெரிய.1: 2.4)

(ஈ) <u>**காவிரி நீராடல்**</u> Kāviri nīrāṭal

(8) **துயர் தீர்த்தல்** – remove suffering
'உக்கவர் சுடுநீறணிந்து ஒளிமல்கு புனல் காவிரிப் புக்கவர் துயர் கெடுகெனப் பூசு வெண்பொடி மேவிய' (திருஞான.தேவா.1804: 2-3)

## <u>காழ்</u> Kāḻ (seed)

(1) **ஆற்றல் / உறுதி** - power / strong
'மறந்தனம் துறந்த காழ் முளை அகைய' (நற்.172: 2)

(ஆ) <u>**வித்து**</u> vittu

(2) **விளைவளம்** - fertility
'சில வித்து அகல இட்டென, பல விளைந்து' (நற்.209: 3)

**வளமை** - prosperous
'வித்தொடு சென்ற வட்டி பற்பல மீனொடு பெயரும் யாணர் ஊர' (நற்.210: 3-4)

(3) **பயன்** - use
'இசை நுவல் வித்தின் நசை ஏர் உழவர்க்கு' (மலை.60)

(4) **அறிவு** - knowledge
'உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து' (குறள்.24)

(5) **அடிப்படை** - basic
'நாணின்றி ஆகாது பெண்மை நயமிகு ஊணின்றி ஆகா துயிர் வாழ்க்கை - பேணுங்கால் கைத்தின்றி ஆகா கருமங்கள் காரிகையாய் வித்தின்றிச் சம்பிரதம் இல்' (பழமொழி.327)

(6) **மறுமை, மறுபிறப்பு**
'மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து சிறுமைப் படாதேநீர் வாழ்மின்' (நாலடி. 183:1-2)

(7) **விருப்பு**
'மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்தி' (திருநா.தேவா.2921: 1-2)

(9) **வினை**

'வெவ்வினை செய்யு மாந்தர் உயிரெனும் நிலத்து வித்தி' (சீவக.2762: 1)

(10) **அன்பு**
'அருச்சனை வயலுள் அன்பு வித்து இட்டு' (திருவா.3: 93)

(11) **தோற்றம், பிறப்பு**
'வித்தின் வழி வழித் தோன்றும் முளைகிளை சத்தியின் ஆய சந்தானத்தை மாற்று என்பன்' (நீலகேசி.573: 1-2)

(12) **பிறப்பு**
'மெய்யறிவிலாமை என்னும் வித்தினுள் பிறந்து' (சூளா.198: 1)

**(இ) <u>விதை</u>** vitai

(9) **வளம்** - prosperous
'பல் விதை உழவன் சில் ஏராளர்' (பதி.76: 11)

**(ஈ) <u>முளையாத வித்து</u>** muḷaiyāta vittu

(10) **பயனின்மை** - useless
'பூத்தாலும் காயா மரமுள மூத்தாலும் நன்கறியார் தாமும் நனியுளர் - பாத்தி விதைத்தாலும் நாறாத வித்துள பேதைக்கு உரைத்தாலும் தோன்றா துணர்வு' (பழ.93)

**(உ) <u>நன்னிலத்திட்ட வித்து</u>**
Nannilattiṭṭa vittu
**பயன்**
'நன்னிலத்திட்ட வித்தின் நயம்வர விளைந்து செல்வம்' (சீவக.2823: 1)

**(ஊ) <u>புன்னிலத்திட்ட வித்து</u>**
Punnilattiṭṭa vittu
**பயனின்மை**
'புன்னிலத்திட்ட வித்திற் புற்கென விளைந்து போகம்' (சீவக.2823: 3)

**(எ) <u>வெந்த வித்து</u>** Venta vittu
**பயனின்மை**
'வித்தென்றும் வெந்தால் முளையலதாய் எண்மை' (நீலகேசி.458: 1)

**(ஒப்பு)** <u>Seed</u> **அறிவாற்றல், உள்ளடங்கிய ஆற்றல், குழந்தைகள், வளமை, வளர்ச்சி, விந்து.**

**<u>காளை</u>** Kāḷai **(ox, bull)**

(1) **ஆண், தலைவன், இளைஞன்** – man, hero, youth
'மை அணற் காளை பொய் புகலாக' (நற்.179: 8)

(2) **வலிமை** - strength
'செரு மிகு மொய்ம்பின் கூர்வேற் காளையொடு' (நற்.184: 2)

(3) **சினம், வெற்றி** - angry, victory
'வெஞ்சின விறல் வேற் காளையொடு' (ஐங்.391: 5)

(4) **அச்சமின்மை, வீரம்** – fearless, brave
'கணையோர் அஞ்சாக் கடுங்கண் காளையொடு' (அகம்.321: 12)

(5) **விரைவு** - speed
'துணிந்தோன் மன்ற - துனைவெங் காளை' (அகம்.397: 9)

(6) **ஆற்றல்** - power
'நோக்கினர் செகுக்கும் காளை ஊக்கி' (புறம்.302: 8)

(7) **உழவு** - ploughing
'உழுதுஊர் காளை ஊழ் கோடு அன்ன' (புறம்.322: 1)

**(ஆ) <u>ஏறு</u>** ēṟu
**ஆண், தலைவன்** – man, hero
'வேனில் ஆனேறு போலச் சாயினன் என்ப' (குறு.74: 4-5)

(8) **தலைமை** - chief
'புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு' (குறு.344: 3)

(9) **உழவு, விளைவளம்** - , fertility
'ஏறுபொருத செறு உழாது வித்துநவும்' (பதி.13: 2)
**அஞ்சாமை, வீரம்** – fearless, brave
'கடாஅக் களிற்றினும் கண்ணஞ்சா ஏற்றை' (கலி.101: 36)

(10) **எழுச்சி, அழகு** - , beautiful
'இன்சிலை எழில் ஏறு கெண்டி' (அகம்.265: 12)
**வெற்றி** - victory
'ஏற்று வலன் உயரிய எரி மருள் அவிர் சடை' (புறம்.56: 1)

(11) பீடு - proud
'வாணுதல் கணவ! மள்ளர் ஏறே' (பதி. 38: 10)

(12) **கொலை** - killing
'கொல்ஏறு சாட இருந்தார்க்கு' (கலி.101: 41)
**வலிமை** - strength
'வெறுத்த வய வெள் ஏற்று அம்புடைத்திங்கள்' (கலி. 103: 48)
**சினம்** - angry
'கோடு அழியக் கொண்டானை ஆட்டித் திரிபு உழக்கும் வாடா வெகுளி எழில்ஏறு' (கலி, 104: 41-42)

(13) **சிறப்பு** – special, great
'மலர்ந்த சிந்தையர் ஆகிய வணிகர் ஏறனையார்' (பெரிய.7.30)

(இ) <u>ஏறு தழுவுதல்</u> ēru taluvutal

(14) **வீரம், அஞ்சாமை, புகழ்** – brave, fearless, fame
'கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவாஅனை மறுமையும் புல்லாளே, ஆய மகள் அஞ்சார் கொலை ஏறு கொள்பவர் அல்லதை' (கலி.103: 63-65)

(ஈ) <u>விடை</u> viṭai
**விரைவு** - speed
'காற்றுப் போல் வந்த கதழ்விடைக் காரியை' (கலி.103: 40)
**வெற்றி, பீடு, பெருமிதம்** – victory, pride
'வென்றி அடல்விடை போல்நடந்து வீதி விடங்கப் பெருமான் முன்பு' (பெரிய.1: 5.129)
**வலிமை** - strength
'அடல் விடையேறென்ன அடர்த்தவனைக் கொல்லும்' (பெரிய.9.37)
**சினம்**
'சின விடைப் பாகர் மேவும் திருப்புலீச்சுரத்து முன்னர்' (பெரிய.2.37)

(15) **வேதம், வெற்றி**
'தோடு உடைய செவியன் விடை ஏறி ஓர் தூ வெண் மதி சூடி' (திருஞன.தேவா.1: 1)

(உ) <u>பகடு</u> pakaṭu

(16) **வளமை** - prosperous
'பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!' (ஐங்.3: 2)
**வலிமை** - strength
'ஒரு தனித்து ஒழிந்த உரனுடை நோன் பகடு' (அகம்.107: 15)
**உழவு** - ploughing
'பகடு பல பூண்ட உழவுறு செஞ் செய்' (அகம்.262: 2)

(17) **முயற்சி / ஊக்கம்** – effort /
'மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து' (குறள்.63: 4)

(ஊ) <u>எருது</u> erutu
**முயற்சி** - effort
'வல் வாய் உருளி கதுமென மண்ட, அள்ளல் பட்டு, துள்ளுபு துரப்ப, நல் எருது முயலும் அளறு போகு விழுமத்து' (பதி.27: 11-13)
**உழவு** - ploughing, agriculture
'.. .. .. .. எருது தொழில் செய்யாது ஓட விடும் கடன் வேளாளர்க்கு இன்று' (பரி. 20: 62-63)
**வலிமை** - strength
'செருக்கெழு மன்னர் திறலுடையார் சேர்ந்தார் ஒருத்தரை அஞ்சி உலைதலும் உண்டோ? உருத்த சுணங்கின் ஒளியிழாய்! கூரிது எருத்து வலியநன் கொம்பு' (பழமொழி. 271)

(18) **வீரர்** - soldier
'உற்றா விறைவற் குடம்பு கொடுக்கிற்பான் மற்றவற் கொன்னாரோ டொன்றுமோ? - தெற்ற முரண்கொண்டு மாறாய உண்ணுமோ? உண்ணா இரண்டே றொருதுறையுள் நீர்' (பழமொழி. 312)

(எ) <u>கயிறரி எருத்து</u> kayirarI eruttu
**விரைவு** - speed
'கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்' (குறு.117: 4)

(ஏ) <u>காரி</u> kāri
**விரைவு** - speed
'.. .. .. .. காற்றுப் போல் வந்த கதவிடைக் காரியை'
(கலி. 103: 40)
**சினம்** - angry
'.. .. .. .. வை மருப்பின் காரி கதன் அஞ்சான் கொள்பவன்'
(கலி. 104: 20-21)

(ஐ) <u>சே</u> cē
**சினம்** - angry
'ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற சேஎச் செவிமுதற் கொண்டு'
(கலி. 103: 50-51)
**வலிமை** - strength
'.. .. .. .. வெந் துப்பின் சேஎய் சினன் அஞ்சான் சார்பவன்'
(கலி. 104: 24-25)

(ஒ) <u>மூரி</u> mūri
(19) **சோம்பல்** - lazyness
'மடியை வியங்கொள்ளின் மற்றைக் கருமம் முடியாத வாறே முயலும் - கொடியன்னாய்! பாரித் தவனை நலிந்து தொழில்கோடல் மூரி உழுது விடல்' (பழமொழி. 167)
(20) **பயனின்மை, தாழ்வு** - useless, low
'தொடி முன்கை நல்லாய்! அத் தொக்க பொருளைக் குடிமகன் அல்லான்கை வத்தல் - கடிநெய்தல் வேரி கமழும் விரிதிரைத் தண்சேர்ப்ப மூரியைத் தீற்றிய புல்' (பழமொழி. 209)

(ஓ) <u>புல்லம்</u> pullam
(21) **அரசன்** - king
'நல்லவும் தீயவும் நாடிப் பிறருரைக்கும் நல்ல பிறவும் உணர்வாரைக் கட்டுரையின் வல்லிதின் நாடி வலிப்பதே புல்லத்தைப் புல்லம் புறம்புல்லு மாறு' (பழமொழி. 261)

(ஔ) <u>இமிலேற்றின் கண்களில் நீர்சொரிதல்</u> Imilērrin kaṇkaḷil nīrcorital
(22) **தீமை**
'குடப்பால் உறையா குவி இமிலேற்றின் மடக்கணீர் சோரும் வருவதொன்று உண்டு' (சிலப்.17: 2.1-2)

(க) <u>இமிலேறு எதிர்தல்</u> Imilēru etirtal
(23) **இழுக்கு, தீமை** – blemish, flaw, bad omen
'இமிலேறு எதிர்ந்தது இழுக்கென அறியான்' (சிலப்.16: 100)

(ங) <u>பகட்டிணை</u> Pakaṭṭiṇai
(24) **முயற்சி**
'கவ்ற்சியில் கையற நீக்கி முயற்சியில் குண்டுதுறை இடுமணல் கோடுற அழுந்திய பண்டிதுறை ஏற்றும் பகட்டிணை போல' (பெருங்.உஞ்.53: 52-54)

(ச) <u>விடை அடர்த்தல்</u> Viṭai aṭarttal (suppress bull)
(25) **வெல்** - win
'வார் ஆரும் முலை மடவாள் பின்னைக்கு ஆகி வளை மருப்பின் கடுஞ்சினத்து வந்தாள் ஆர்ந்த கார் ஆர் திண் விடை அடர்த்து வதுவை ஆண்ட கரு முகில் போல் திரு நிறத்து என் கண்னர் கண்டீர்' (நாலா.1281: 1-6)

(ஒப்பு) <u>Ox, Bull</u> **அமைதி, அன்பு, இரவு, இனிய பண்பு, உழவுத்தொழில், உழைப்பு, கடமை, சூரியன், தர்மம், தியாகம், நிலவு, நீதி, புனிதம், வலிமை, வளமை, வேளாண்மை; இருள்; துன்பப்படுதல்.**

## <u>காற்பொடி</u> Kārpoṭi **(foot's dust)**

(1) **இழிவு** - mean
'கலிகொள் காடுதன் காற்பொடியாகவும் கருதா' (நீலகேசி.45: 3)

(ஆ) <u>செருப்பு அடியின் பொடி</u> Ceruppu aṭiyin poṭi

(2) **தாழ்மை, இழிவு**
'உருப்பொடியா மன்மதனை ஒத்துளரே ஆயினும் உன் செருப்பு அடியின் பொடி ஒவ்வா மானிடரைச் சீறுதியோ' (கம்ப.ஆரண்.321: 1-2)

**கான்யாறு** Kāṉyāṟu **(stream)**

(1) **விரைவு** - speed
'கல் அலைத்து இழிதரும் கடு வரற் கான் யாற்று' (நற்.7: 3)

**கானல்** Kāṉal **(grove)**

(1) **தண்மை** - cool
'சிறுகுடிப் பரதவர் மகிழ்ச்சியும், பெருந் தண் கானலும், நினைந்த அப் பகலே' (நற்.87: 8-9)

(2) **இனிமை** - pleasant
'மணம் கமழ் நறு வீ வரிக்கும் துறைவன் தன்னொடு புணர்த்த இன் அமர் கானல்' (நற்.267: 5-6)

(3) **வளமை** - fertile
'.. .. .. .. மலி புனற் பல் பூங் கானல் முள் இலைத் தாழை' (நற்.335: 3-4)

(4) **விரிவு**
'நிலவு மணல் வியன் கானல்' (புறம்.17: 11)

(ஆ) **சோலை** cōlai

(5) **தண்மை, நறுமணம்** – cool, fragrant
'நறுந் தண் சோலை நாடு கெழு நெடுந்தகை' (ஐங்.395: 5-6)

(6) **வளமை** - fertile
'கறங்கு இசை அருவி வீழும், பிறங்கு இருஞ் சோலை' (ஐங்.395: 5-6)

(இ) **கா** kā

(7) **தண்மை** - cool
'வெயில் ஒளி அறியாத விரிமலர்த் தண் காவில்' (கலி. 30: 7)

(8) **வளமை**
'தோகைக் காவின் துளுநாட்டு அன்ன' (அகம்.15: 5)

(ஈ) **தண்டலை** taṇṭalai

(9) **தண்மை** – cool
'தாழ் தாழைத் தண் தண்டலை' (பொரு. 181)

**கிடங்கு** Kiṭṅku

(1) **ஆழம்** - depth
'கடிமிளை, குண்டு கிடங்கின்' (பதி. 20: 17)

(2) **தண்மை** - cool
'அந்தணர் அருகா, அருங்கடி வியல்நகர் அம்தண் கிடங்கின், அவன்ஆமூர் எய்தின்' (சிறு.187-188)

(ஆ) **அகழி** Akaḻi (moat)

**ஆழம்** - depth
'நீர்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப் பூக் கதூஉம் இன வாளை, நுண் ஆரல், பரு வரால், குரூஉக் கெடிற்ற, குண்டு அகழி' (புறம்.18: 7-10)

(இ) **அகழ்** Akaḻ

**ஆழம்** - depth
'.. .. .. .. .. ஐது தோன்று கமழ்புகை வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்கும் குறும்பு அடு குண்டுஅகழ் நீள்மதில் ஊரே' (புறம்.379: 16-18)

**கிண்கிணி** Kiṅkiṇi **(tinkling anklet)**

(1) **மகிழ்ச்சி** - gladness
'நகுகம் வாராய் - பாண! - பகுவாய் அரி பெய் கிண்கிணி ஆர்ப்ப' (நற்.250: 1-2)

(2) **பொலிவு** - bright
'செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த தவளை வாய பொலம்செய் கிண்கிணி' (குறு.148: 1-2)

(3) **ஒலி** - tinkle
'கிளர் ஒலி கிண்கிணி எடுப்ப' (பெரிய.28.50)

**கிம்புரி நாவளைக் கொள்தல்** Kimpuri nāvaḷaik koḷtal

(1) **தீமை, தோல்வி** - harm, failure

'தூவொளி மணிமுடி முகத்த கிம்புரி நாவளைக் கொண்டன' (சூளா.1222: 1-2)

**கிழக்குத் திசையிலிருந்து பறவை ஒலித்தல்** Kilakkut ticailiruntu paravai olittal

(1) **தீமை, இறப்பு**
'கதிரகத்து இருந்த முதிர்குரல் பறவை போமின் வல்லே போதிர் ஆயினும் உயிர்த்தவல் உரைக்கும் என்பதை உணர்ந்து முந்து புள் உரைத்த முதுமகன் கூற' (பெருங்.உஞ்.56: 231-234)

**கிழங்கு** Kilaṅku

(1) **வளமை**
'கிழங்கு கீழ் வீழ்ந்து, தேன் மேல் தூங்கி, சிற்சில வித்திப் பற்பல விளைந்து, தினை கிளி கடியும் பெருங் கல் நாடன்' (நற்.328: 1-3)

**கிள்ளை** Kiḷḷai **(parrot)**

(1) **சிறப்பு**
'அறம் புரி செங் கோல் மன்னனின் தாம் நனி சிறந்தன போலும், கிள்ளை' (ஐங்.290: 1-2)

(ஆ) **கிளி** Kiḷi

(2) **இனிமை**
'.. .. .. .. .. கிளி எனச் சிறிய மிழற்றும் செவ்வாய்' (அகம்.126: 17-18)

(3) **மென்மை**
'கிளி மழலை மென் சாயலோர்' (பட்.150)

(4) **பேசும் ஆற்றல்** - prattle
'பூவையும் கிளியும் மிழற்றப் புகுந்து' (சீவக.873: 3)

(இ) **பைங்கிளி** Paiṅkiḷi

(5) **நேயம்** - affection
'வீணை வித்தகற் காணிய விண்படர்ந்து ஆணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே' (சீவக.1002: 3-4)

(ஒப்பு) Parrot அழகு, எளிதில் பயிற்றுவிக்கத்தக்க தன்மை, பயனில் பேச்சு, முன்னறிதிறம், வளமை.

**கின்னரம்** Kinnaram **(a legendary bird)**

(1) **இனிமை** – sweet
'.. .. .. .. .. இன்சீர்க் கின்னரம் முரலும் அணங்குடைச் சாரல்' (பெரும்.494)

**குங்குமம்** Kuṅkumam **(saffron)**

(1) **மங்கலம்** – auspicious
'செங் குங்குமச் செழுஞ் சேறு, பங்கம் செய் அகில் பல பளிதம்' (பரி.10: 81-82)

(2) **சிவப்பு நிறம்**
'நிறங்கிளரும் குங்குமத்தின் மேனி அவன்நிறமே என்கின்றாளால்' (திருநா.தேவா.305: 3-4)

(3) **இன்பம்** - pleasure
'குரும்பை மென்முலையின் மேல் குலாய குங்குமம் விருந்து செய்திட வெறி மேனி சேந்ததே' (சீவக.97: 3-4)

**குங்குலியம்** Kuṅkuliyam **(an incense)**

(1) **நறுமணம், இறப்பு** – fragrance, demise
'காலனார் உயிர் செற்றார்க்குக் கமழ்ந்த குங்குலியத் தூபம்' (பெரிய.841: 5-6)

**குச்சு** Kuccu **(நெய்வோர்க்குரிய கருவி)**

(1) **நெருக்கம்** – thick, crowd
'கோணமும் மறுகும் எல்லாஅம் குச்சென நிரைத்தம் மாந்தர்' (சீவக.615: 3)

**குசும்பை** Kucumpai **(a flower)**

(1) **நறுமணம்**
'குசும்பையின் நறுமலர்ச் சுண்ணக் குப்பையின் விசும்பையும் கடந்தது விரிந்த தூளியே' (கம்ப.யுத்.1756: 3-4)

<u>குடங்கருள் பாம்போடு உடனுறைதல்</u>

Kutaṅkaruḷ pāmpōṭu uṭaṉuṟaital

(1) **பொருத்தமின்மை, ஆபத்து**
*'உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று'* (குறள்.890)

<u>குடம்பை</u> Kuṭampai **(nest)**

(1) **உடல் / தலைவி** - flesh / heroine
*'அலங்கல் அம் சினைக் குடம்பை புல்லெனப் புலம் பெயர் மருங்கில் புள் எழுந்தாங்கு, மெய் இவண் ஒழியப் போகி, அவர் செய்வினை மருங்கில் செலீஇயர், என் உயிரே!'* (அகம்.113: 24-27)

(2) **உடல் / நிலையாமை** – body / transient
*'குடம்பை தனித்தொழிய .. .. ..'* (குறள்.338)

<u>குடுவை</u> Kuṭuvai **(cup)**

(1) **சிறுமை** - smallness
*'மடுவொத்து அங்கு அதின் வங்கமும் அன்றாய் குடுவைத் தன்மையது ஆயது குன்றம்'* (கம்ப.யுத்.230: 3-4)

<u>குடை</u> Kuṭai **(umbrella, parasol)**

(1) **பாதுகாப்பு** - protection
*'நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்'* (தொல்.1037)

(2) **அருள்** - grace
*'அருள் குடையாக'* (பரி.3: 74)

(3) **அறம்** - virtue
*'அறன் நிழல் எனக் கொண்டாய் ஆய்குடை; அக்குடைப் புற நிழற்கீழ்ப் பட்டாளோ'* (கலி.99: 8-9)

(4) **அரசு** - reign
*'ஒன்பது குடையும் நன்பகல் ஒழித்த பீடுஇல் மன்னர் போல'* (அகம்.125: 20-21)

(5) **புகழ்** - fame
*'வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை'* (அகம்.135: 11)

(ஆ) <u>**கவிகை**</u> Kavikai
**பாதுகாப்பு / ஆதரவு** - support
*'செவி கைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ்த் தங்கும் உலகு'* (குறள்.389)

(இ) <u>**குடையோடு கோல் வீழ்தல்**</u>
Kuṭaiyōṭu kōl vīḻtal

(6) **அரசன் அழிவு, தீமை** – fall of king, bad omen
*'குடையொடு கோல்வீழ நின்று நடுங்கும் கடைமணியின் குரல் காண்பென் காணெல்லா'* (சிலப்.20: 1-3)

(உ) <u>**முக்குடையோடு தேவர் எழுந்து கைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு போக, அதனை ஊர் மக்கள் ஓடிச் சென்று காணுதல்**</u> Mukkuṭaiyōṭu tēvar eluntu kaikaḷait thoṅkaviṭṭuk koṇṭu pōka, ataṉai ūr makkaḷ ōṭic ceṉṟu kāṇutal (triple parasol and hanging hands…)

(7) **தீமை, துன்பம்** – evil omen
*'ஏர்கொள்முக் குடையுந் தாமும் எழுந்துகை நாற்றிப்போக ஊருளோர் ஓடிக் காணக் கண்டனம் என்றுரைப்பார்'* (பெரிய.28.637)

(ஒப்பு) <u>Umbrella, Parasol</u> **அரசு, ஆற்றல், கடவுட்டன்மை, செல்வம், பாதுகாப்பு.**

<u>குடை</u> Kuṭai **(உண்கலம்)** **(cup / bowl)**

(1) **வீண் / பயனின்மை** - waste
*'தோள்நலம் உண்டு துறக்கப் பட்டோர் வேள்நீர் உண்ட குடையோர் அன்னர்'* (கலி.23.8-9)

<u>**குடைகளின் உள்ளே தேனீக்கள் கூடுகட்டி தேன் துளிகளை விட்டு விட்டுப் பெய்தல்**</u>

Kuṭaikaḷiṉ uḷḷē tēṉIkkal kūṭukaṭṭi tēṉ tuḷikaḷai viṭṭu viṭṭup peytaḷ

(1) **தீமை, தோல்வி**

'நிரைசுடர் நெடுங்குடை அகடு நெய்கனி பிரசங்கள் புரைபுரை விலங்கப் பெய்தவே' (சூளா.1219: 3-4)

**குண்டிகை** Kuṇṭikai **(கமண்டலம்)**
கமண்டலத்தை உடைத்துப் பாயையும் கிழித்து ஒரு பெண் குரு ஓடுதல் Kamaṇṭalattai uṭaittup pāyaiyum kiḻittu oru peṇkuru ōṭutal
**தீமை, துன்பம்** – evil omen
'குண்டிகை தகர்த்துப் பாயும் பீறியோர் குரத்தி ஓட' (பெரிய. 28: 638)

**குணமாலை** Kuṇamālai
(1) **கற்பு** - chastity
'வசையற நிறைந்த கற்பின் மாலையு மாமி தானும்' (சீவக.1132: 1)

**குப்பைக் கோழித் தனிப்போர்** Kuppaik kōḻit taṉippōr
(1) **துன்பம்**
'குப்பைக் கோழித் தனிப்போர் போல, களைவோர் இலை - யான் உற்ற நோயே' (குறு.305: 6-7)

**குமரியாடல்** Kumariyāṭal **(bath in capecomorin)**
(1) **மூப்பு ஒழிதல்** – curb ageing
'சிந்தை நலிகின்ற திருநீர்க் குமரியாட அந்தி அதன் ஆய பயன் என்னை மொழிக என்றாள் முந்தி நலிகின்ற முது மூப்பொழியும் என்றான்' (சீவக.2020: 2-4)

**குயில்** Kuyil **(cucoo)**
(1) **தலைவி, பெண்**
'சோலை மென் குயில் அனாள் சுற்றி வீக்கிய' (கம்ப.பால.951: 3)
(2) **கருமை**
'கண்ணுற என் கடல் வண்ணனைக் கூவு கருங்குயிலே' (நாலா.555: 3-4)

**குயிலோசை** Kuyilōcai **(cooing)**
(1) **மகிழ்ச்சி**
'மாநனை கொழுதி, மகிழ்குயில் ஆலும்' (நற்.9: 10)
(2) **வேனிற்காலம்** - spring
'யாற்று அறல் நுணங்கிய நாட் பத வேனில், இணர் துடை மாஅத்த புணர் குயில் விளித்தொறும்' (நற்.157: 4-5)
(3) **தனிமை / துன்பம்** – lonely / distress
'அரும்பு அவிழ் பூஞ் சினைதோறும் இருங்குயில் ஆனாது அகவும் பொழுதினான்' (கலி.92: 63-64)
(4) **நடுநிலை** – just, impartiality, neutrality
'மா நனை கொழுதிய மணி நிற இருங் குயில் படு நா விளி யானடுநின்று, அல்கலும் உரைப்ப போல, ஊழ் கொள்பு கூவ' (அகம்.25: 6-8)

**குரங்கு** Kuraṅku **(monkey / ape)**
(1) **கீழ்மை** - low
'நிரந்து வழிவந்த நீசருள் எல்லாம் பரந்தொருவர் நாடுங்கால் பண்புடையார் தோன்றார் மரம்பயில் சோலை மலைநாட! என்றும் குரங்கினுள் நன்முகத்த இல்' (பழமொழி.103: 4)
(2) **அற்பர்** - mean
'உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை அடக்கமில் உள்ளத்த நாகி - நடக்கையின் ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல், குரங்கின்கைக் கொள்ளி கொடுத்து விடல்' (பழமொழி.255)
(3) **அழகின்மை** - ugly
'கோலமில் குரங்கு ஆட்டிக் கொல்வார்களை' (நீலகேசி.222: 2)

(ஆ) **கடுவன்** Kaṭuvaṉ
(4) **தலைவன்**
'.. .. .. .. .. .. கடுவன், முறி ஆர் பெருங் கிளை அறிதல் அஞ்சி, கறி வளர் அடுக்கத்து, களவினில் புணர்ந்த செம் முக மந்தி செய்குறி' (நற்.151: 5-8)
(5) **தலைமை** – headship, leader

'குரங்கின் தலைவன் குரு மயிர்க் கடுவன்' (ஐங்.275: 1)

(இ) <u>கலை</u> Kalai

**தலைவன்**

'கரு விரல் மந்திச் செம்முகப் பெருங் கிளை பெரு வரை அடுக்கத்து அருவி ஆடி, ஓங்கு கழை ஊசல் தூங்கி, வேங்கை வெற்பு அணி நறு வீ கற்சுனை உறைப்ப, கலையொடு திளைக்கும் வரையக நாடன்' (நற்.334: 1-5)

(ஈ) <u>மந்தி</u> Manti

(6) **தலைவி**

'.. .. .. .. கடுவன், முறி ஆர் பெருங் கிளை அறிதல் அஞ்சி, கறி வளர் அடுக்கத்து, களவினில் புணர்ந்த செம் முக மந்தி செய்குறி' (நற்.151: 5-6)

(7) **மக்கள்** - children

'மகாஅர் அன்ன மந்தி' (சிறுபா.56)

(8) **திரிதல், அலைதல்**

'மந்திபோல் திரிந்து ஆரியத்தொடு' (திருஞான.தேவா.2786: 5)

(உ) <u>கைப்பழம் இழந்த மந்தி</u> Kaippalam ilanta manti

(9) **அரசை இழந்த கட்டியங்காரன்**

'கைப்பழம் இழந்த மந்தி கட்டியங்காரன் ஒத்தது இப்பழம் துரந்து கொண்ட சிலதனும் என்னை ஒத்தான்' (சீவக.2726: 1-2)

(ஒப்பு) <u>Monkey, Ape</u> **உருவ வழிபாடு, உறுதியின்மை, கழிகாமம், தன்னம்பிக்கை வாய்ந்த மனப்போக்கு, நிலையற்ற மனநிலை, நிலையாமை, பழமை, மாறும் இயல்பு, விரைவியக்கம்; குறுகிய மனப்பான்மை, கெடு நோக்கம், தற்பெருமை, பாசாங்கு, பேராசை, போலிப்புகழ்ச்சி, மிகச்சிறிய திருட்டு; ஆடுதல்.**

## <u>குரவு</u> Kuravu

(1) **பின்பனிக்காலம்**

'பின்பனி அமையம் வரும் என, முன்பனிக் கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே' (நற்.224: 2-3)

(ஆ) <u>குரவம்</u> Kuravam

(2) **நறுமணம்**

'குரவம் நாறும் குழலுமை கூறராய்' (திருநா.தேவா.632: 3)

## <u>குரீஇ</u> Kurii

(1) **தலைவன் / அன்பு**

'உள் இறைக் குரீஇக் கார் அணற் சேவல்' (நற்.181: 1)

(2) **அறிவு**

'முதுக் குறைக் குரீஇ முயன்று செய் குடம்பை' (நற்.366: 9)

(ஆ) <u>குருவி ஒப்புதல்</u> Kuruviopputal

(3) **தீமை கடிதல்**

'உளைக் குரல் சிறு தினை கவர்தலின், கிளை அமல் பெரு வரை அடுக்கத்துக் குரீஇ ஓப்பி' (அகம்.388: 4-5)

(ஒப்பு) <u>Sparrow</u> **அன்பு, இழிநிலை, இனப்பெருக்க வளம், கழிகாமம், கிறித்து, தனிமை, துணிவு, பணிவு, போர்த்தினவு, விழிப்பு நிலை; இழிநிலை, சிற்றின்ப சார்பு, தாழ்நிலை, தீமை, வாயலப்பல்; தூய்மைப்படுத்துதல்.**

## <u>குருக்கத்தி</u> Kurukkatti (a creeper flower)

(1) **தூய்மை**

'துய்த் தலை இதழ பைங் குருக்கத்தியொடு பித்திகை விரவு மலர் கொள்ளீரோ? என வண்டு சூழ் வட்டியள் திரிதரும்' (நற்.97: 6-8)

(ஆ) <u>குருகு தளிர்த்தல்</u> Kuruku taḷirttal

(2) **கார்காலம்**

'மையால் தளிர்க்கும் மலர்க்கண்கள் மாலிருள் நெய்யால் தளிர்க்கும் நிமிர்சுடர் - பெய்யல் முழங்கத்

தளிர்க்கும் குருகிலை நட்டார் வழங்கத் தளிர்க்குமாம் மேல்' (நான்.38)

<u>குருகு</u> Kuruku

(1) **தலைவன்**
'இறவு அருந்தி எழுந்த கருங் கால் வெண் குருகு .. .. .. .. கருங் கோட்டுப் புன்னை இறைகொண்டனவே' (நற்.67: 3-5)

(2) **தனிமை** - lonely
'தன் துணைப் பிரிந்து அயாஅம் தனிக் குருகு உசாவுமே' (கலி.121: 16)

(3) **ஆராய்தல், அறிவு, கல்வி** - knowledge, wisdom, learning
'கல்வி கரையில கற்பவர் நாள்சில மெல்ல நினைக்கின் பிணிபல தெள்ளிதின் ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப் பாலுண் குருகின் தெரிந்து' (நாலடி.135)

(4) **மக்கள்**
'கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி ஈர்வாளை நீலத்துப் புக்கொளிக்கும் ஊரற்கு' (ஐந்.ஐம்.24: 1-2)

(5) **மௌனம்** - silent
'அடையல் குருகே அடையலெங் கானல் உடைதிரைநீர்ச் சேர்ப்பற்கு உறுநோய் உரையாய் அடையல் குருகே அடையலெங் கானல்' (சிலப்.7. 46)

(ஆ) <u>குருகு உயரப்பறத்தல்</u>
Kuruku uyarap parattal

(6) **நன்மை** – good omen
'குருகும் இருவிசும்பு இவரும்' (குறு.260: 1)

(இ) <u>கொக்கு</u> Kokku
**தலைவன்**
'கொழுஞ் சுளைப் பலவின் பயம் கெழு கவாஅன், செழுங் கோள் வாங்கிய மாச் சினைக் கொக்கினம் மீன் குடை நாற்றம் தாங்கல் செல்லாது, துய்த்தலை மந்தி தும்மும் நாட!' (நற்.326: 1-4)

(7) **கூரிய பார்வை**
'பார்வல் கொக்கின் பரிவேட்பு அஞ்சா' (பதி.21: 27)

(8) **திறன், அமைதி** - capable, patience
'கொக்கொக்க கூம்பும் பருவத்து .. .. ..' (குறள்.490)

(9) **கொள்கைப் பிடிப்பு, உறுதி, பொறுமை** – strong principle, patience
'என்ன ஆயினும் மன்னது விழையாது ஒடுங்கி இருந்தே உன்னியது முடிக்கும் கொடுங்கால் கொக்கின் கோளினமாகி' (பெருங்.மகத.17: 60-62)

(ஈ) <u>நாரை</u> Nārai
**தலைவன்**
'இரை தேர் நாரை எய்தி விடுக்கும்' (நற்.35: 6)

(ஒப்பு) <u>Stork, Crane</u> **அமைதி, இருப்பிட மாற்றம், இளவேனில், உதவும் பண்பு, உயரம், ஊக்கம் தளராத ஆன்மா, எல்லையற்ற கூர்மதியுடைய தன்மை, கடமை உணர்ச்சி, கடவுட்பற்று, கீழ்ப்படிதல், குடும்ப இணைவு, சமய இயல்புகள், தன்விழிப்பு நிலை, துடியார்வமிக்க நிலை, துறவு, தூய்மை, நன்மை, நிலைபேறு, நீண்டநாள் வாழ்வு, நீதி, பயணி, பற்றுறுதி, மகிழ்ச்சி, மறுபிறப்பு, மனநிலை, வளமை, விடியல்; அடிமைப்பண்பு, கழிகாமம், கூடா ஒழுக்கம், பகட்டாரவாரம்.**

<u>குருதி</u> Kuruti **(blood)**

(1) **சிவப்பு நிறம்**
'குருதி ஒண் பூ உரு கெழக் கட்டி' (நற்.34: 2-3)

(2) **உயிர், வாழ்வு** - life, living
'விடர் முகைச் செறிந்த வெஞ் சின இரும் புலி புகர் முக வேழம் புலம்பத் தாக்கி, குருதி பருகிய கொழுங் கவுட் கய வாய்' (நற்.158: 5-7)

(3) **பலி** - sacrifice
'உருவச் செந் தினை குருதியொடு தூஉய்' (பதி.19: 6)

(4) **போர்** - war

'அமர்க்கண் அமைந்த அவிர் நிணப் பரப்பின் குழூஉச் சிறை எருவை குருதி ஆர' (பதி.67: 8-9)

(5) **அச்சம்** - fear
'வெருவரு குருதியொடு மயங்கி, உருவு கரந்து' (புறம்.271: 5)

(6) **இறப்பு** - death
'சேறுபடு குருதிச் செம்மல் உக்குஒஓ! மாறு செறு நெடு வேல் மார்பு உளம் போக நிணம் பொதி கழலொடு நிலம் சேர்ந்தனனே' (புறம்.285: 10-12)

(7) **வீரம், வலிமை, வெற்றி** - valour, victory
'அடல்வலி எயினர் நினடி தொடு கடனிது மிடறுகு குருதிகொள் விறறரு விலையே' (சிலப்.12: 18)

(ஆ) <u>உதிரம்</u> Utiram

(7) **தியாகம்** - sacrifice
'வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட தறியாண் மற்றன்னோ; அணங்கு அணங்கிற்றென்று மறியீர்த்து உதிரந்தூய் வேலற்றரீ இ வெறியோடு அலம்வரும் யாய்' (ஐந்.ஐம்.20)

(இ) <u>உதிர மாரி பெய்தல்</u> Utira māri peytal

(8) **தீமை, அழிவு, இறப்பு** – evil, destruction, death
'அதிர மா நிலத்து அடி பதைத்து அரற்றிய அரக்கி கதிர் கொள் கால வேல் கரன்முதல் நிருதர் வெங்கதப்போர் எதிர் இலாதவர் இறுதியின் நிமித்தம் ஆய் எழுந்து ஆண்டு உதிர மாரி பெய் கார் நிற மேகம் ஒத்து உயர்ந்தாள்' (கம்ப.ஆரண்.313)

(9) **தீமை, தோல்வி** - evil, failure
'உதிரநீர்ப் புதுமழை சொரிந்தது' (சூளா.1220: 3)

(ஒப்பு) <u>Blood</u> **அரசுரிமை, ஆன்மா, இணை உடன்படிக்கை, இதயம், குடும்ப உறவுகள், சூரியன், தடை விலக்கு, தியாகம், நீர், பிறப்பு, வளமை, வாழ்வு; இறப்பு, தண்டனைக்குள்ளாகத் தக்க நிலை, பில்லி சூனியம், போர், வெறி உணர்ச்சி.**

## <u>குருந்தம்</u> Kuruntam (a fragrant plant)

(1) **தண்மை, நறுமணம்**
'கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த் தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்' (திரி.1: 1-2)

(ஆ) <u>குருந்து</u> Kuruntu

(2) **முல்லைத்திணை**
'கொன்றையும் குருந்தும் குலைக் கோடலும்' (சூளா.18: 1)

## <u>குருமணி</u> Kurumaṇi (மாணிக்கம்)

(1) **ஒளி**
'குருமணிகள் வெயில் எறிக்கும் குற்றாலம் சென்றடைந்தார்' (பெரிய.3858: 7-8)

## <u>குலிகம்</u> Kulikam (சாதிலிங்கம்)

(1) **சிவப்பு நிறம்**
'ஏரிருங் குலிகப் புனல்பரந்திழிதரும் காரிருங் குன்றில் கவின்பெறத் தோன்ற' (பெருங்.உஞ்.44: 83-84)

(2) **வனப்பு, அழகு**
'மணியரும்பு மலர் அங்கை குலிகம் ஆர் வனப்பினவே' (சீவக.170: 4)

## <u>குழல்</u> Kuḻal (flute)

(1) **இனிமை**
'பல் ஆ தந்த கல்லாக் கோவலர் கொன்றைஅம் தீம் குழல் மன்று தோறு இயம்ப' (நற்.364: 9-10)

(2) **நன்மை**
'அணி மாலைக் கேவற் தரூஉமார், ஆயர் மணி மாலை ஊதுங் குழல்' (கலி.101: 34-35)

(3) **துன்பம்**
'பனி இருள் சூழ்தர - பைதல் அம் சிறு குழல்' (கலி.129: 16)

(ஆ) <u>ஆம்பலங் குழல்</u> Ampalaṅ kuḻal

(4) **அழுகை, துன்பம்**

'ஆம்பல்அம் குழலின் ஏங்கி, கலங்கு அஞர் உறுவோள் புலம்பு கொள் நோக்கே!' (நற்.113: 11-12)

(5) இன்பம்
'ஆம்பலந் தீங்குழல்' (சிலப்.17)

(இ) <u>கொன்றையம் குழல்</u>
Konraiyam kulal

(6) இன்பம்
'கொன்றையம் தீங்குழல்' (சிலப்.17)

(ஒப்பு) <u>Flute, Pipe</u> அமைதி, அறுதல், ஆனந்த பரவசம், கவர்ச்சி, காற்று, தொடக்கம், மகிழ்ச்சி, மயக்கம், மருட்சி, மீட்பு, முன்னறிவிப்பு, வளமை; காமம் சார்ந்த கடுந்துயரம், நம்பிக்கையற்ற காதல்.

**<u>குழவி</u>** Kulavi **(child, babe)**

(1) அன்பு - love
'தாய் உடன்று அலைக்கும் காலையும், வாய்விட்டு, அன்னாய்! என்னும் குழவி போல, இன்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்' (குறு.397: 4-6)

(2) இளமை - young
'குழவி வேனில் விழவு எதிர் கொள்ளும்' (கலி.36: 9)

(3) அருள், அன்பு – mercy, love
'அருள் என்னும் அன்பு ஈன் குழவி பொருள்என்னும் செல்வச் செவிலியால் உண்டு' (குறள்.757)

(ஆ) <u>குழ</u> Kula

(4) அறியாமை – ignorance / innocence
'மண்டாத கூறி, மழ குழக்கு ஆகின்றே' (கலி.108: 21)

(இ) <u>தாயைப் பிரிந்த குழவி</u>
Tāyaip pirinta kulavi

(5) துன்பம் - sorrow
'பண்பு இல் காவலர் தாய் பிரித்து யாத்த நெஞ்சு அமர் குழவி போல' (அகம்.293: 11-12)

(ஈ) <u>தாயில் குழவி</u> Tāyil kulavi

(6) துயர் / துன்பம்
'தாயில் தூவாக் குழவித் துயர் கேட்டோர்' (மணி.13: 11)

(உ) <u>தாயிலாக் குழவி</u> Tāyilāk kulavi

(7) பெருந்துன்பம்
'தாயிலாக் குழவி போலச் சாதுயர் எய்துகின்றேன்' (சீவக.1581: 1)

(ஒப்பு) <u>Child</u> அறியாமை, இளவேனில், எதிர்காலம், எளிமை, தன் விருப்ப இயல்பு, தூய்மை, தொடக்கம், நற்பேறு, வளமை, விடியல்; பண்படாத நிலை, பிறரைச் சார்ந்திருத்தல்.

**<u>குளத்துக்கயம்</u>** Kulattukkayam **(a star)**

(1) தீமை
'.. .. .. .. கடைக் குளத்துக் கயம் காய, .. .. .. .. மேலோர் உலகம் எய்தினன்' (புறம்.229: 1-12)

**<u>குளமீன் புகைதல் Kulamīn pukaital</u>** **(smoky star)**

(1) தீமை – evil omen
'குளமீனொடுந் தாள் புகையினும்' (புறம்.395: 35)

**<u>குளவி</u>** (காட்டு மல்லிகை) Kulavi **(wild jasmine)**

(1) குளிர்ச்சி / தண்மை
'பெருந் தண் குளவி குழைத்த பா அடி' (நற்.51: 8)

(2) நறுமணம்
'பெருந் தண் கொல்லிச் சிறு பசுங் குளவிக் கடி பதம் கமழுங் கூந்தல்' (நற்.346: 9-10)

(3) இன்பம் / உவகை
'கல் இவர் இற்றி புல்லுவன ஏறிக் குளவி மேய்ந்த மந்தி துணையொடு வரை மிசை உகளும் நாட!' (ஐங்.279: 1-3)

(4) இனிமை / மகிழ்ச்சி
'கழுநீர் மேய்ந்த கடவாய் எருமை .. .. .. .. குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும் (சிறு.42,46)

**குறடு** Kuraṭu **(tongs)**

(1) **பொய்யான அன்பு** - feigned love
'முட்டிகை போல முனியாது வைகலும் கொட்டி உண்பாரும் குறடுபோல் கைவிடுவர்' (நாலடி.208: 1-2)

**குறள்** Kuraḷ **(smallness, dwarf)**

(1) **குறுமை / சிறுமை**
'ஆயது அங்கு ஓர் குறள் உரு ஆய் அடி' (கம்ப.சுந்.1189: 1)

(2) **ஏமாற்று** - deceive
**'பொல்லாக் குறள் உருவாய்'** (நாலா.611: 1)

**குறிஞ்சி** Kuriñci

(1) **மலையகம்** – mountainous tract
'சேயோன் மேய மைவரை உலகமும்' (தொல்.951)

(2) **கூதிர், யாமம்** – winter, mid night
'குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்' (தொல்.952)
**பனிஎதிர் பருவம்** – dew season
'பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப' (தொல்.953)

(3) **புணர்தல்** – love life
'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை தேருங்காலை திணைக்குரிப்பொருளே' (தொல்.960)

(4) **வெட்சிப்போர் / அச்சம்** – war, fear
'வெட்சிதானே குறிஞ்சியது புறனே உட்கு வரத்தோன்றும் ஈர்ஏழ் துறைத்தே' (தொல்.1002)

(5) **அன்பு** - love
'கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே' (குறு.3: 3-4)

(6) **சிறப்பு / அருமை** – especial, rare
'கருங் காற் குறிஞ்சி மதன்இல் வான் பூ' (நற்.268: 3)

(7) **வீரம்** - valour
'குறிஞ்சிக் குன்றவர் மறம் கெழு வள்ளி தமர்' (பரி.9: 67)

**குறிஞ்சி (பண்)** Kuriñci

(1) **இரவு / இன்பம்**
'கழுது கால் கிளர ஊர் மடிந்தன்றே உரு கெழு மரபின் குறிஞ்சி பாடி' (நற்.255: 1-2)

**குறும்பூழ்** Kurumpūḻ **(a bird)**

(1) **பரத்தை**
'குறும்பூழ்ப் போர் கண்டேம்; அனைத்தல்லது, யாதும் அறிந்ததோ இல்லை, நீ வேறு ஓர்ப்பது' (கலி.95: 6-7)

(2) **சிறுமை** – minimal, common
'யானை வேட்டுவன் யானையும் பெறுமே; குறும்பூழ் வேட்டுவன் வறுங் கையும் வருமே' (புறம்.214: 4-5)

(3) **தகுதியின்மை** - unworthy
'காடுறை வாழ்க்கைக் கருவிளை மாக்களை நாடுறைய நல்கினும் நன்கொழுகார் - நாடொறும் கையுள தாகி விடினும் குறும்பூழ்க்குச் செய்யுள தாகு மனம்' (பழமொழி.96)

**குன்றி** Kunri **(a bead)**

(1) **சிவப்பு நிறம்**
'குன்றி ஏய்க்கும் உடுக்கை' (குறு.கட.வா.3)

(2) **சிறிய அளவு / சிறுமை**
'உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும், தவிர்ந்து விடு பரிசில் கொள்ளலென்; உவந்து நீ இன்புற விடுதி ஆயின், சிறிது குன்றியும் கொள்வல், கூர் வேற் குமண!' (புறம்.159: 22-25)

(3) **வேடம்** - feign
'புறம் குன்றி கண்டனையரேனும், அகம் குன்றி மூக்கின் கரியார் உடைத்து' (குறள்.277)

**கூகை** Kūkai

(1) **அறிவின்மை** - foolish
'மாயத்தை அறிய மாட்டேன் மையல்கொள் மனத்தனாகிப் பேயொத்துக் கூகையானேன் பிஞ்ஞகா பிறப்பொன்று இல்லீ' (திருநா.தேவா.1512: 1-4)

(ஆ) <u>கூகைக் குலம் ஓடித்திரிதல்</u> Kūkaik kulam ōṭit tirital

(2) **அஞ்ஞானம் நீங்குதல்** – removing ignorance
*'மேகத்து இடிகுரல் வந்து எழ வெருவில் வரை இழியும் கூகைக்குலம் ஓடித்திரி சாரல் கொடுங்குன்றம்'*
(*திருஞான.தேவா.*2709: 1-2)

<u>**கூகை ஒலித்தல்**</u> Kūkai olittal

(1) **வருத்தம், துன்பம், அச்சம், தீமை** – bad omen
*'கடவுள் முது மரத்து, உடன் உறை பழகிய, தேயா வளை வாய், தெண் கண், கூர் உகிர், வாய்ப் பறை அசாஅம், வலி முந்து கூகை! .. .. .. .. அஞ்சு வரக் கடுங் குரல் பயிற்றாதீமே'* (*நற்.*83: 2-4, 10)

(2) **இறப்பு**
*'பாறுபடப் பறைந்த பல்மாறு மருங்கின் வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு, பிணம் தின் குறுநரி நிணம் திகழ் பல்ல'* (*புறம்.*359: 1-3)

(ஆ) <u>கூகை பகற்பொழுதில் குழறல்</u> Kūkai pakaṟpoḻutil kuḻaṟal

(3) **பாழ்நிலை**
*'உணவுஇல் வறுங்கூட்டு உள்ளகத்து இருந்து, வளைவாய்க் கூகை நன்பகல் குழறவும்; அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழிய பெரும்பாழ் செய்தும் அமையான்'* (*பட்.*267-270)

(4) **தீமை, அழிவு, இறப்பு**
*'அஞ்சத் தக்க குரலினால் கூகைக் கோயில் பகல் குழற'* (*சீவக.*2173: 4-5)

(இ) <u>குராலின் குரல்</u> Kurāliṉ kural

(5) **இறப்பு, தீமை, துன்பம்**
*'புலவூண் பொருந்திய குராலின் குரலும் .. .. .. இன்னா இசையொலி என்று நின்றறாது'* (*மணி.*6: 76,79)

(ஈ) <u>குரால் இசைத்தல்</u> Kurāl icaittal

(6) **அச்சம், துன்பம்**
*'பராரை வேம்பின் படுசினை இருந்த குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்'* (*நற்.*218: 7-8)

(உ) <u>குரால் ஒலித்தல்</u> Kurāl olittal

(7) **தீமை**
*'என்னை மார்பில் புண்ணும் வெய்ய; .. .. .. .. அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்'* (*புறம்.*280: 1-5)

(ஊ) <u>குடிஞை ஒலித்தல்</u> Kuṭiñai olittal

(8) **மகிழ்ச்சி**
*'மயில்கள் ஆலக் குடிஞை இரட்டும் துறுகல் அடுக்கத்ததுவே'* (*ஐங்.*291: 1-2)

(9) **இரவு**
*'ஆரிடை உழந்த மாதரை நோக்கிக் கொடுவரி மறுகும் குடிஞை கூப்பிடும் இடிதரும் உளியமும் இனையா தேகெனத் தொடிவளைச் செங்கை தோளிற் காட்டி'* (*சிலப்.*13: 30-33)

(எ) <u>ஆண்டலைக் குரல்</u> Aṇṭalaik kural

(10) **துன்பம், தீமை, இறப்பு**
*'ஊன்டலைத் தூற்றிய ஆண்டலைக் குரலும் .. .. .. .. இன்னா இசையொலி என்று நின்றறாது'* (*மணி.*6: 77,79)

(ஏ) <u>கூகை குழறல்</u> Kūkai kuḻaṟal
**அச்சம்**
*'குண்டு கண்ணின பேய்களும் கூகையும் குழறிக் கண்ட மாந்தர்தம் மனங்களைக் கலமலக் குறுக்கும்'* (*நீலகேசி.*28: 3-4)

**(ஒப்பு)** <u>Owl</u> **அறிவு, இரவு, எச்சரிக்கை நிலை, குளிர்காலம், முன்னறிவிப்பு, விழிப்பு நிலை; அறியாமை, இருள், இறப்பு, உயர் பண்பற்ற தன்மை, எண்ணக்குலைவு, கவலை, செயல் குலைவு, தனிமை, தீமை, துயரம், நம்பிக்கை இழப்பு, மன முறிவு.**

**கூடம்** **(சுத்தியல்)** Kūṭam **(hammer)**

(1) **ஆற்றல்** - strong
'இரும்புபயன் படுக்கும் கருங்கைக் கொல்லன் விசைத்து எறி கூடமொடு பொரூஉம் உலைக் கல் அன்ன, வல்லாளன்னே'
(புறம்.170: 15-17)

(2) **வலிமை** - strength
'கருங் கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த கூடத் திண் இசை வெரீஇ' (பெரும்.437-438)

**(ஒப்பு)** Hammer **ஆற்றல், உழைப்பு, கருமான், நிலைபேறு, படைப்பு, மீட்பு,வளமை, விதி, வலிமை, பொதுவுடைச் சின்னம்; அழிவு, பழிதீர்வு.**

**கூடல்** Kūṭal **(a city)**

(1) **சிறப்பு, உயர்வு, மேன்மை**
'பணிவு இல் உயர் சிறப்பின் பஞ்சவன் கூடல்' (பரி.தி.2: 46)

(2) **அழகு**
'உருகெழு கூடலவரோடு, வையை' (பரி.தி.2: 91)

(3) **தமிழ்**
'தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே' (புறம்.58: 13)

(4) **புகழ்**
'மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்' (மது.429)

**(ஆ)** **மதுரை**
புகழ் - fame
'தண் தமிழ் வேலித் தமிழ்நாட்டகம் எல்லாம் நின்று நிலைஇப் புகழ் பூத்தல் அல்லது, குன்றுதல் உண்டோ மதுரை' (பரி.தி.9: 1-3)

(5) **செல்வம்** - wealth
'கார்த்திகை காதில் கன மகர குண்டலம் போல், சீர்த்து விளங்கித் திருப்பூத்தல் அல்லது, கோத்தை உண்டாகுமோ மதுரை' (பரி.தி.11: 1-3)

(6) **வளமை** - prosperous
'வண்ணம் நீவிய வணங்கு இறைப் பணைத்தோள், ஒள் நுதல், விறலியர் பூவிலை பெறுக! என, மாட மதுரையும் தருகுவன்' (புறம்.32: 3-5)

(7) **தமிழ் / மகிழ்ச்சி / இன்பம்** – tamil / happiness / joy
'தமிழ் நிலை பெற்ற, தாங்கு அரு மரபின் மகிழ்நனை, மறுகின் மதுரையும் வறிதே' (சிறு.66-67)

**கூத்தன்** Kūttaṉ **(actor)**

(1) **உயிர்** - life / soul
'தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும் கூத்தன் புறப்பட்டக் கால்' (நாலடி.26)

**கூதளம்** Kūtaḷam **( a plant)**

(1) **கூதிர்காலம், நறுமணம்** – winter, fragrance
'கூதிர்க் கூதளத்து அலரி நாறும்' (நற்.244: 2)

(2) **குளிர்ச்சி** - cool
'வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்' (பட்.85)

**கூந்தல்** Kūntal **(tresses / hair)**

(1) **இன்பம்** - pleasure
'அரிசில் அம் தண் அறல் அன்ன, இவள் விரி ஒலி கூந்தல் விட்டு அமைகலனே' (நற்.141: 11-12)

(2) **புணர்வு**
'செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு இவளின் மேவினம் ஆகி, குவளைக் குறுந்தாள் நாள்மலர் நாறும் நறுமென் கூந்தல் மெல்அணையேமே' (குறு.270: 5-8)

(3) **வளமை**
'புதல் மிசை நறு மலர் கவின் பெறத் தொடரி, நின் நலம்மிகு கூந்தல் தகை கொளப் புனைய வாராது அமையலோ இலரே!' (ஐங்.463: 1-3)

(4) **அழகு**
'ஆய்நுதல், அணி கூந்தல், அம்பணைத் தடமென்தோள்' (கலி.40: 8)

(5) **அன்பு / இன்பம்**
'கோல் திரள் முன் கைக் குறுந் தொடி மகளிர் நாறு இருங் கூந்தல் கிழவரைப் படர்ந்தே' (புறம்.113: 8-9)

(ஆ) <u>கூந்தல் கழுவுதல்</u> Kūntal kaluvutal (hair wash)

(6) **தலைவன் வரவு** - arrival of hero
'ஏகுமின் என்ற இளையர் வல்லே இல் புக்கு அறியுநராக, மெல்லென மண்ணாக் கூந்தல் மாசு அறக் கழீஇ, சில் போது கொண்டு பல்குரல் அழுத்திஒய அந்நிலை புகுதலின், மெய் வருத்துறாஅ அவிழ் பூ முடியினள்' (நற்.42: 6-11)

(இ) <u>மண்ணாக் கூந்தல்</u> Mannāk kūntal (unwashed hair)

(7) **பிரிவு** - seperation
'ஏகுமின் என்ற இளையர் வல்லே இல் புக்கு அறியுநராக, மெல்லென மண்ணாக் கூந்தல் மாசு அறக் கழீஇ' (நற்.42: 6-8)

(ஈ) <u>கூந்தல் கொய்தல்</u> Kūntal koytal (cutting hair)

(8) **கைம்மை** - widowhood
'ஒள் நுதல் மகளிர் கைம்மை கூர, அவிர் அறல் கடுக்கும் அம் மென் குவை இருங் கூந்தல் கொய்தல் கண்டே' (புறம்.25: 12-14)

(உ) <u>விரிந்த கூந்தல்</u> Virinta kūntal (spread out hair)

(9) **தீமை** – evil, harmful
'தளரும் நெஞ்சம் தலைஇ மனையோள் உளரும் கூந்தல் நோக்கி களர கள்ளி நீழற் கடவுள் வாழ்த்தி பசி படு மருங்குலை கசிபு கைதொழாஅ காணலென் கொல் என வினவினை வரூஉம் பாண கேண்மதி யாணரது நிலையே' (புறம்.260: 3-8)

(ஊ) <u>அவிழ்குழல்</u> Avilkūntal (loose hair)

(10) **துன்பம்** - woe
'துறுமலர் அவிழ்குழலாய் துறந்தார்நாட்டு உளதாம்கொல் மறவையாய் என்னுயிர்மேல் வந்தஇம் மருள்மாலை (சிலப்.7: 42)

(எ) <u>கூந்தல் தீப்பிடித்தல்</u> Kūntal tīppitittal (hair catching fire)
**(இராவணன் மனைவி மண்டோதரியின் கூந்தல் தீப்பிடித்தல்)**

(11) **தீமை, அழிவு, இறப்பு** – evil omen
'மன்னவன் தேவி அம் மயன் மடந்தைதன் பின் அவிழ் ஓதியும் பிறங்கி வீழ்ந்தன துன் அருஞ் சுடர் சுடச் சுறுக் கொண்ட ஏறிற்றால் இன்னல் உண்டு எனும் இதற்கு ஏது என்பதே' (கம்ப.சுந்.377)

(ஏ) <u>கூந்தல் தீயில் வெந்திடுதல்</u> Kūntal tīyil ventitutal (hair burning)

(12) **தீமை, அழிவு** - bad omen, destruction
'கோயிலும் நகரமும் மட நலார் குழலும் நம் குஞ்சியோடும் தீயினும் வெந்திடுமலால் ஒரு நிமித்தம் பெறும் திறனும் உண்டோ' (கம்ப.யுத்.107: 5-8)

**(ஒப்பு)** <u>Hair</u> **அன்பு, ஆணின் வலிமை, இனவேறுபாடு, கடவுள் அருள், சமூக நிலை, வளமை, வெளிப்புற ஆன்மா.**
**கூந்தல் அகற்றுதல் - சிறைப்படுத்துதல், தண்டனை, துறவுநிலை.**
**தளர்வான கூந்தல் - கன்னிமை, துயரம், தூய்மை, பாவிகள்.**
**விரிகூந்தல் - கீழுலகக் கடவுள், சிக்கல், போர்.**
**நீண்ட கூந்தல் - கன்னிமை, தூய்மை, மணப்பெண்.**
**பொன்னிறக் கூந்தல் - சூரியக் கதிர்கள், தூய்மை, நிலைபேறு, நிறைவு, வளம், விவேகம், வெற்றி.**
**செந்நிறக் கூந்தல் - கீழுலகக் கடவுளர்.**

<u>**கூவல்**</u> Kūval **(well / spring / fountain)**

(1) **நிறைவு / பயன்** – fullness, use
'சுரன் முதல் வருந்திய வருத்தம் .. .. .. .. மலி சிறு கூவலின் தணியும்' (நற்.41: 3-4)

(2) ஈரம் / இரக்கம் – sympathy / pity
'அகல் இடம் குழித்த அகல் வாய்க் கூவல் ஆறு செல் வம்பலர் அசை விட ஊறும்' (அகம்.295: 11-12)

(ஆ) <u>கேணி</u> Kēṇi

(3) ஈகை / பயன் – benevolence / use
'வறன் பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன் வேட்டச் சீறூர் அகன் கண் கேணிப் பய நிரைக்கு எடுத்த மணி நீர்ப் பத்தர்' (நற்.92: 4-6)

(4) தண்மை - coolness
'தண் கேணித் தகை முற்றத்து' (பட்.51)

(5) அறிவு - knowledge / wisdom
'தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு' (குறள்.396)

(6) பயன், உதவி
'உறைப்பரும் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி இறைத்துணினும் ஊராற்றும் என்பர்' (நாலடி.184: 1-2)

(இ) <u>கிணறு</u> Kiṇaṟu

(6) ஆழம் - depth
'.. .. .. .. நெடுங் கிணற்று வல் ஊற்று உவரி தோண்டி' (பெரும்.97-98)
ஈகை - benevolence
'இரப்பவர்க் கீய குறைபடுமென் றெண்ணிக் கரப்பவர் கண்டறியர் கொல்லோ - பரப்பிற் றுறைத்தோணி நின்றுலாம் தூங்குநீர்ச் சேர்ப்ப இறைத்தோறும் ஊறுங் கிணறு' (பழமொழி.378)
பயன்
'மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும் வல்லூற்று உவரில் கிணற்றின்கண் சென்றுண்பர் செல்வம் பெரிதுஉடையர் ஆயினும் சேட்சென்றும் நல்குவார் கட்டே நசை' (நாலடி.263)

(ஈ) <u>ஊருணி</u> Uruṇi

(7) பயன் – utility
'ஊருணி நீர் நிறைந்தற்றே உலகு அவாம் பேர் அறிவாளன் திரு' (குறள்.215)

(ஒப்பு) <u>Well</u> ஆசி, ஆழ்ந்த அறிவு, ஆழம், ஆன்மா, இரசியம், உண்மை, கடவுள் இயல்பு, எல்லையற்ற கருணை, கருப்பை, சிந்தனை, நற்பேறு, நிறைவு, நீதி, நோக்கீடுபாடு, பிறப்பு, புனிதத்தன்மை, பொறுப்பு, மறுபிறப்பு, வளமை, வாழ்வின் மூலம்; இறப்பு, கீழுலகம், தேங்கிய நிலை; தூய்மைப் படுத்துதல்.

## <u>கூவிளம்</u> Kūviḷam (a flower)

(1) நறுமணம், தூய்மை, சிவன் – fragrance, pure, Siva
'வெறிவிரவு கூவிள நல் தொங்கலானை' (திருநா.தேவா.61: 1)

## <u>கூளி</u> Kūḷi (evil spirit)

(1) கடுமை - cruel
'கூறாமல் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி' (கலி.கட.வா.3)

(2) அச்சம் - fear
'பெருவிழாக் கழிந்த, பேஎம் முதிர் மன்றத்து, .. .. .. .. கணம் கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ' (பட்.255,259)

## <u>கூழ்மரம்</u> Kūḻmaram (pulp tree)

(1) அன்பு மிகுதி - boundless love
'எல்லையொன்று இன்றியே இன்னாசெய் தாரையும் ஒல்லை வெகுளார் உலகாள்தும் என்பவர் சொல்லின் வளாஅய்த்தம் தாள்நிழல் கொள்பவே கொல்லையுள் கூழ்மரமே போன்று' (பழமொழி.256)

## <u>கூற்றம்</u> Kūṟṟam (death god)

(1) மாறாமை - unchanging
'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல்.1025)

(2) **துன்பம், பிரிவு** - sorrow, seperation
'கூதிர் உருவின் கூற்றம் காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே?' (குறு.197: 4-5)

(3) **அறனின்மை** - unrighteous
'உறல்முறை மரபின் கூற்றத்து அறன்இல் கோல் நற்கு அறிந்திசினோரே' (குறு.267: 7-8)

(4) **கொலை** - killing
'கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்' (குறு.283: 5)

(5) **சீற்றம், சினம்** – angry, wrath
'மாற்று அருஞ் சீற்றத்து, மா இருங் கூற்றம்' (பதி.51: 35)

(6) **வலிமை** - powerful
'மன்பதை சவட்டும் கூற்ற முன்ப' (பதி.84: 7)

(7) **இறப்பு** - death
'ஒன்னார் உடங்கு உண்ணும் கூற்றம் உடலே' (பரி.2: 50)

(8) **நிலையாமை** - transitory
'நாற்றம்சால் நளிபொய்கை அடைமுதிர் முகையிற்குக் கூற்றம்போல் கறைபடூஉம் வாழ்நாளும் நிலையுமோ' (கலி.17: 11-12)

(9) **ஒப்பின்மை** - unmatched
'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும் நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய' (புறம்.19: 2-4)

(10) **இரக்கமின்மை** - uncompassionate
'நனி பேதையே, நயன் இல் கூற்றம்!' (புறம்.227: 1)

(11) **அழிவு** - destruction
'பேயும் அணங்கும் உருவு கொண்டு அய்கோல் கூற்றக் கொல்தேர், கழுதொடு கொட்ப' (மது.632-633)

(12) **இன்னாமை** - unpleasant
'கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல்' (குறள். 894)

(13) **நடுவுநிலைமை, அருளின்மை** – neutral, merciless
'என்னானும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால் பின்னாவ தென்று பிடித்திரா முன்னே கொடுத்தார் உயப்போவர் கோடில்தீக் கூற்றம் தொடுத்தாறு செல்லும் சுரம்' (நாலடி.5)

(14) **அச்சம்** - fear
'அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்' (நாலடி.172: 1)

(15) **கொடுமை, துன்பம்** – cruel, pain
'கொலைவேல் நெடுங்கண் கொடுங்கூற்றம் வாழ்வ தலைநீர்த் தண்கானல் அறியேன் அறிவேனேல் அடையேன் மன்னோ' (சிலப்.7.10)

(ஆ) <u>**கூற்று**</u> Kūṟṟu

**சினம்** - wrath
'கூற்று வெகுண்டு வரினும், மாற்றும் ஆற்றலையே' (பதி.14: 10)

**இறப்பு** - death
'உயிர் உண்ணும் கூற்றுப் போன்றன' (புறம்.4: 12)

**இன்னாமை, அறனின்மை** – harmful, unrighteous
'இன்னாது உற்ற அறன் இல் கூற்றே!' (புறம்.255: 4)

**கொலை** - killing
'குமரிப் படை தழீஇய கூற்று வினை ஆடவர்' (புறம்.294: 3)

**அருளின்மை, இரக்கமின்மை** – merciless, pitiless
'ஆள்பார்த்து உழலும் அருளில் கூற்றுண்மையால் தோட்கோப்புக் காலத்தால் கொண்டுய்ம்மின் பீட்பிதுக்கிப் பிள்ளையைத் தாய்அலறக் கோடலான் மற்றதன் கள்ளம் கடைபிடித்தல் நன்று' (நாலடி.20)

(இ) <u>**மீளி**</u> Mīḷi

**வலிமை** - strength
'மீளி முன்பின் காளி காப்ப' (ஐங்.374: 2)

(16) **ஆற்றல்** – powerful
'மீளிவேல் தானையர்' (கலி. 31: 24)

**சீற்றம்** - wrath
'மீளி மறவனும் போன்ம்' (கலி. 104: 50)

(ஈ) <u>**காலன்**</u> Kālaṉ

**சினம், வலிமை** – anger, strength

'காலன் அனைய கடுஞ்சினமுன்ப!' (பதி. 39: 8)
**இறப்பு** - death
'மடங்கலும், கணிச்சியும், காலனும், கூற்றும், தொடர்ந்து செல் அமையத்துத் துவன்று உயிர் உணீஇய' (கலி. 105: 20-21)
**துன்பம்** - woe
'காலன் போல் வந்த கலக்கத்தோடு என்தலை மாலையும் வந்தன்று, இனி' (கலி. 143: 40-41)
**இரக்கமின்மை** - pitiless
'காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப' (புறம்.240: 5)

(உ) <u>மடங்கல்</u> Maṭaṅkal
**வலிமை**
'ஒல்லா மயலொடு பாடு இமிழ்பு உழிதரும் மடங்கல் வண்ணம் கொண்ட கடுந் திறல்' (பதி.62: 7-8)
**சினம்**
'மடங்கல்போல் சினைஇ மாயஞ்செய் அவுணரை' (கலி.2: 3)
**இறப்பு**
'மடங்கலும், கணிச்சியும், காலனும், கூற்றும், தொடர்ந்து செல் அமையத்துத் துவன்று உயிர் உணீஇய' (கலி.105: 20-21)
**மாறாமை**
'மடங்கல் உண்மை மாயமோ அன்றே' (புறம்.363: 9)

(ஊ) <u>ஞமன்</u> Ñaman
**அழிவு** - destruction
'தீ செங் கனலியும், கூற்றமும், ஞமனும், மாசு இல் ஆயிரம் கதிர் ஞாயிறும், தொகூஉம் ஊழி ஆழிக்கண்' (பரி.3: 21-23)
(17) **நடுநிலைமை** - unbiased
'திருந்து கோல் ஞமன் தன் மெய்யின் பிரிவித்து' (பரி.5: 61)

(எ) <u>மறலி</u> Maṟali
**வலிமை**
'மறலி யன்ன களிற்றுமிசை யோனே' (புறம்.13: 4)
**இறப்பு**
'வழித்திரு மைந்தன் ஆவி கொளவரும் மறலி ஊர்திக் கழுத்தணி மணியின் ஆர்ப்போ' (பெரிய.1: 3.28)

(ஏ) <u>கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்</u> Kaṇiccik kūrmpaṭaik kaṭuntiṟal oruvaṉ
**இறப்பு**
'கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன் பிணிக்கும் காலை, இரங்குவிர் மாதோ' (புறம்.195: 4-5)

**<u>கூற்றுவன் பாசம்</u>** Kūṟṟuvaṉ pācam
(1) **துன்பம்**
'பெறலரு மென்மகள் பிரிந்தனள் அம்மெனக் கூறியகிளவி கூற்றுவன் இமிழ்த்த பாசம் போலப் பையுள் செய்ய' (பெருங்.உஞ்.47: 246-248)

**<u>கூனி</u>** Kūṉi **(a villainous character)**
(1) **தீமை, கொடுமை**
'இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல் துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்' (கம்ப.அயோ.132: 3-4)

**<u>கெண்டை.</u>** Keṇṭai **(a fish)**
(1) **பரத்தை** - prostitute
'அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்' (குறு.91: 1-2)
(2) **மகளிர்** - women
'குருகு கொளக் குளித்த கெண்டை அயலது உருகெழு தாமரை வால்முகை வெரூஉம்' (குறு.127: 1-2)
(3) **நீர்வளம்** – rich water resource
'கெண்டை பாய்தர அவிழ்ந்த வண்டு பிணி ஆம்பல் நாடு கிழவோனே' (ஐங்.40: 4-5)

(ஆ) <u>கயல்</u> Kayal
(4) **தலைவி**
'கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்' (ஐங்.9: 4)
**பரத்தை**

'கூரல் கொக்கின் குறும்பறைச் சேவல், வெள்ளி வெண்தோடு அன்ன, கயல்குறித்து' (அகம்.346: 3-4)

(5) **வளமை** - flourishing
'குறுங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி, நிலாமருள் குட்டம் நோக்கி, நெடிதுஇருந்து, புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்' (சிறு.179-181)

**கை** Kai

(1) **வன்மை** - strong
'வன் கை இடையன் எல்லிப் பரீஇ' (நற்.169: 7)

(2) **உதவி** - help, assist
'கண்ணுறு விழுமம் கை போல் உதவி' (நற்.216: 3)

(3) **ஈகை** - benevolence, giving
'ஓவாது ஈயும் மாரி வண்கை' (குறு.91: 5)

(4) **உழைப்பு** – hard work, effort
'புன் புலம் வித்தும் வன் கை வினைஞர்' (பதி.58: 15)

(5) **பயன்**
'பிடிக்ககணம் சிதறும் பெயல்மழைத் தடக்கை' (சிறு.124)

(6) **முயற்சி** - perseverance, persistance
'நன்கு திரண்டு பெரியவாம், ஆற்றவும் முன்கை நெடியார்க்குத் தோள்' (பழமொழி. 156)

(7) **நட்பு** - friendship
'இன்னா செயினும் விடுதற்கு அரியாரைத் துன்னாத் துறத்தல் தகுவதோ துன்னரும்சீர் விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ கண்குத்திற்று என்றுதம் கை' (நாலடி.226)

(ஆ) **தடக்கை** taṭakkai

(8) **புகழ்** - fame
'படியோர்த் தேய்த்த பல்புகழ் தடக்கை' (அகம்.22: 5)

(9) **வெற்றி** - victory
'ஓடுபுறம் கண்ட, தாள்தோய் தடக்கை' (அகம்.22: 5)

(10) **வலிமை** - strong
'எழுமரம் கடுக்கும் தாள் தோய் தடக் கை' (புறம்.90: 10)

(இ) **உடுக்கை இழந்தவன் கை** uṭukkai ilantavan kai

(11) **உதவி / நட்பு** – help, aid, friendship
'உடுக்கை இழந்தவன் கை போல, ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு' (குறள்.788)

(ஈ) **நீண்டகை** Nīṇṭakai

**ஈகை** - benevolence, giving
'தேயங் காவலனாய்த் திசை யாவினும் ஈய நீண்டகை யேந்த னகர்திசை' (நீலகேசி.23: 2-3)

(உ) **வளர்கை** Vaḷarkai

(12) **அருள்**
'சூலம் ஏந்தி வளர் கையினர்' (திருஞான.தேவா.2429: 1)

(ஊ) **வளையுடைக்கை** Vaḷaiyuṭaikkai

(13) **மென்மை, பெண்மை**
'வளையுடைக் கையிற் சூலம் ஏந்தி' (சிலப்.12: 1.60)

(எ) **தாள் தழுவு கையன்** Tāḷ taḻuvu kaiyaṉ

(14) **சிறப்பு**
'தாள் தழுவு கையன் தாமரைப்பூஞ் சேவடியன்' (திருநா.தேவா.1275: 1)

(ஒப்பு) Hand அரச உரிமை, அன்பு, ஆதாரம், உழைப்பு, தியாகம், நட்பு, பாதுகாப்பு, பாரடு, பிறப்பித்தல், மேன்மை, வணக்கம், வாழ்த்து, விருந்தோம்பும் பண்பு.

**கைம்மேல் கைவைத்துப் பொரிமுகந்து அட்டல்** Kaimēl kaivaittup porimukantu aṭṭal

(1) **திருமணம்**
'வரிசிலை வாள் முகத்து என்னைமார் தாம் வந்திட்டு, எரிமுகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி, அரிமுகன் அச்சுதன் கைம்மேல் என் கை

வைத்துப் பொரிமுகந்து அட்டக் கனாக் கண்டேன்' (நாலா.564)

**கொடி** Koṭi

(1) **சிறப்பு** - renown
'கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே' (தொல்.1034)

(2) **உயர்வு** - eminence
'ஏந்து கோட்டு யானை இசை வெங் கிள்ளி வம்பு அணி உயர் கொடி அம்பர் சூழ்ந்த' (நற்.141: 9-10)

(3) **வெற்றி** - victory
'.. .. .. .. .. செற்றார் வெல்கொடி அரணம் முருக்கிய' (ஐங்.429: 2-3)

(4) **அசைவு** - move, sway
'கடும் பரி நெடுந் தேர் மீமிசை நுடங்கு கொடி' (பதி.80: 14)

(5) **போர் அறிவிப்பு** – announcing war
'செருப் புகன்று எடுத்த சேண் உயர் நெடுங் கொடி' (திருமுரு. 67)

(6) **புகழ், வெற்றி** - fame, victory
'புலவுப் படக் கொன்று, மிடை தோல் ஓட்டி, புகழ் செய்து எடுத்த விறல் சால் நன் கொடி' (மதுரை.370-371)

(7) **போர்** - war
'போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்' (களவழி.17: 4)

(8) **வீரம்** - valour
'வேறு வேறு இயற்றி வீரக் கொடியையும் அறுத்து வீழ்த்தி' (கம்ப.யுத்.2060: 3)

(ஆ) **யானைக்கொடி** Yāṉaikkoṭi

(9) **வலிமை** - strength
'நின்னொன்று உயர்கொடி யானை' (பரி.4: 40)

(இ) **ஏற்றுக்கொடி** Eṟṟukkoṭi

(10) **சிவன்**
'ஊர்தி வால் வெள் ஏறே; சிறந்த சீர் கெழு கொடியும் அவ் ஏறு என்ப' (புறம்.கட.வா.3-4)

(ஈ) **கோழிக் கொடி** Kōḻik koṭi

(11) **வெற்றி**
'கோழி ஓங்கிய வென்று அடு விறற் கொடி வாழிய பெரிது' (திருமுரு.38-39)

(உ) **பதாகை அற்று வீழ்தல்** patākai aṟṟu vīḻtal (fall of banner)

(12) **தோல்வி** - failure, defeat
'பொடியுடைக் கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த தடியுடை எயிற்றுப் பேழ் வாய்த் தாடகை தலைகள் தோறும் முடியுடை அரக்கற்கு அந்நாள் முந்தி உற்பாதம் ஆக படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள்' (கம்ப.பால.1213)

(ஊ) **கொடியை அறுத்து வீழ்த்துதல்** Koṭiyai aṟuttu vīḻttutal (cutting a flag)

(13) **வெற்றி**
'வேறு வேறு இயற்றி வீரக் கொடியையும் அறுத்து வீழ்த்தி' (கம்ப.யுத்.2060: 3)

(எ) **கொடி அற்று நிலத்தில் வீழ்தல்** Koṭi aṟṟu nilattil vīḻtal (flag falling on ground)

(14) **தீமை, தடை, இறப்பு** - obstruction
'சக்கர நெடுங்கொடி அற்றனவாகி இருநில மருங்கில் சிதைவன வீழவும்' (பெருங்.மகத.27: 77-78)

(ஏ) **துகிலிகைக் கொடி** tukiliṭaik koṭi

(15) **அழகு**
'துகிலிகைக் கொடியனார் மின்னிற் தோன்றவும்' (சூளா.41: 3)

(ஐ) **பாம்புக்கொடி** Pāmpukkoṭi

(16) **துரியோதனன்**
'புள்ளிருக்கும் தார் மார்பன் பூம்புகார் வாழ் களியேம் சுள்ளிருக்கும் கள்ளை உண்டு சோர்விலேம் உள்ளபடி

'சொல்லவா வாலி துரோபதையை மூக்கரிந்தது அல்லவா மாபாரதம்' (தனிப்.120)

(ஓ) <u>மகரக்கொடி</u> Makarakkoṭi

(17) **வெற்றி, இன்பம்**
'மகர வெல்கொடி மைந்தன் திரிதர' (சிலப்.4: 83)

(18) **மன்மதன்**
'புன்னைப் பொதும்பர் மகரத்திண் கொடியோன் எய்த புதுப்புண்கள்' (சிலப்.7: 37)

(ஓ) <u>மீனேற்றுக் கொடி</u> Mīṉeṟṟukkoṭi

**காமன்**
'மீனேறுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொர்ப்பில்' (சீவக.பதி.6: 1)

(ஔ) <u>மீன் கொடி</u> Mīṉ koṭi

**மன்மதன்**
'மீன் வரு கொடியவன் விறல் அடும் மறவோன்' (கம்ப.ஆரண்.110: 3)

(க) <u>விடை சேர் கொடி</u> viṭai vēr koṭi

(19) **சிவபெருமான்**
'உண்ணற்கு அரிய நஞ்சை உண்டு ஒரு தோழம் தேவர் விண்ணில் பொலிய அமுதம் அளித்த விடைசேர் கொடி அண்ணல்' (திருஞான.தேவா.18: 1-4)

(ங) <u>ஏறுடை வெல்கொடி</u> Eṟuṭai velkoṭi

**சிவபெருமான்**
'ஏறுடை வெல்கொடி எந்தை மேய இராமேச்சுரம்' (திருஞான.தேவா.2974: 3)

(ச) <u>வீணைக்கொடி</u> Vīṇaikkoṭi

(20) **இராவணன்**
'கடிப்பக் கடிது உற்றவன் காண்தகும் நீண்ட வீணைக் கொடிப் பற்றி ஒடித்து உயர் வானவர் ஆசி கொண்டான்' (கம்ப.ஆரண்.907: 3-4)

(ஞ) <u>வெண்கொடி</u> Veṇkoṭi

(21) **அமைதி / சாந்தம், மகிழ்ச்சி**
'விண்ணியல் மாடம் விளங்கு ஒளிவீதி வெண்கொடி எங்கும் விரிந்து இலங்க' (திருஞான. தேவா.225: 1-2)

(22) **தூய்மை, தூய மனம்**
'சோதி வெண் கொடிகள் ஆடும் சுடர் நெடு மறுகிற் போகி' (பெரிய.5.8)

(ட) <u>இராவணனின் வீணைக் கொடி மேல் கழுகும் காகமும் மொய்த்தல்</u> Irāvaṇaṉiṉ vīṇaikkoṭi mēl kaḻukum kākamum moyttal (birds of prey on flags)

(23) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
'எழுது வீணை கொடு ஏந்து பதாகை மேல் கழுகும் காகமும் மொய்த்தன' (கம்ப.யுத்த.3664: 1-2)

(ண) <u>கரனின் கொடிமேல் காக்கைக் கூட்டங்கள், போரிட்டுக் கீழே விழுந்து புலம்பிக் கொண்டு புரளுதல்</u> Karaṉiṉ koṭimēl kākkaik kūṭṭaṅkaḷ, pōriṭṭuk kīḻē viḻuntu pulampik koṇṭu puraḷutal (crows crowding on flag)

(24) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
'கருதி வீர நின் கொடிமிசைக் காக்கையின் கணங்கள் பொருது வீழ்வன புலம்புவ நிலம் படப் புரள்வ' (கம்ப.ஆரண்.429: 3-4)

**(ஒப்பு)** <u>Flag</u> **அடையாளம், ஆற்றல், சுய துணிவுரை, நாட்டுப்பற்று, போரின் நிலை, வெற்றி.**
**கொடி மெதுவாக கீழிறக்கப் படுதலும், வேகமாக மேலேற்றப் படுதலும் - வணக்கம் செலுத்துதல்.**
**பாதியில் ஏற்றப்பட்ட கொடி - இழவு நிகழ்ச்சி.**
**தலைகீழாக ஏற்றப்பட்ட கொடி - பேரிழப்பு, அவல நிலை.**

கறுப்புக் கொடி - கடற்கொள்ளையர், குற்றவாளிகளின் செயல் முறை.
சிவப்புக் கொடி - அபாயம், அரசழிவு, அமைதிக்கேடு, ஏலம், குழப்பம், சமதர்மம், புரட்சி.
வெள்ளைக் கொடி - அமைதி, சரணடைவு, தற்காலப் போர்நிறுத்தம்.
மஞ்சள் கொடி - தொற்று நோய் அபாயம்.

<u>கொடி</u> Koṭi **(creeper)**

(1) **பெண்**
'கொடி ஒன்று நின்பணிக்கு எதிரே சென்று கும்பிட்டாள் உயிர் ஒன்றும் கொடு வந்தாளே' (தனிப்.95: 7-8)

(ஆ) <u>வல்லி</u> Valli

(2) **மென்மை**
'திருத்தம் பயிலும் சுனை குடைந்தாடிச் சிலம்பெதிர்கூய் வருத்தம் பயின்றுகொல்லோ வல்லி மெல்லியல் வாடியதே' (திருக்கோ.6: 62.3-4)

(3) **அழகு**
'காய்த்து நின்று கண்தெறூஉம் காமர் வல்லி மாதரார்' (சீவக.154: 2)

(4) **பெண்மை**
'கடிகமழ் பாரி சாதம் அதனொடொர் காம வல்லி' (சூளா.1563: 5-6)

(இ) <u>வல்லி நடுதல்</u> Valli naṭutal

(4) **மங்கலம்**
'காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும் பூக்கொடி வல்லியும் கரும்பு நடுமின்' (மணி.1: 46-47)

(ஈ) <u>கொம்பர் இல்லாக் கொடி</u> Kompar illāk koṭi (pole less creeper)

(25) **துன்பம், அலமருதல்** – woe, depression
'கொம்பர் இல்லாக் கொடி போல் அலமந்தனன்' (திருவா.6: 20. 1-2)

<u>கொடுங்குன்றின் நீள்குடுமி மேல் தேன் விரும்பும் முடவன்</u> Koṭuṅkunṟin nīḷkuṭumi mēl tēn virumpum muṭavaṉ

(1) **இயலாமை** - helpless
'கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றின் நீள்குடுமி மேல் தேன் விரும்பும் முடவனைப் போல மெலியு நெஞ்சே' (திருக்கோ.14: 150. 2-3)

<u>கொண்டல்</u> **(கீழ்க்காற்று)** Koṇṭal **(easterly)**

(1) **வருத்தம்** - grieve
'அழிதக வந்த கொண்டலொடு கழி படர்க் காமர் நெஞ்சம் கையறுபு இனைய' (அகம்.40: 7-8)

<u>கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்தல்</u> Kottaikku mūṅkar vaḻikāṭṭuvittal **(dumb leading the blind)**

(1) **இயலாமை** - inability
'எத்தைக் கொண்டு எத்தகை ஏழை அமணொடு இசைவித்து எனைக் கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்து என்னக் கோகு செய்தாய்' (திருநா.தேவா.2136: 1-4)

<u>கொம்பு</u> Kompu **(pole)**

(1) **உதவி, அருள்** – support, grace
'உழுந்து இட இடம் இலை உலகம் எங்கணும் அழுந்திய உயிர்க்கு எலாம் அருட் கொம்பு ஆயினான்' (கம்ப.பால.703: 1-2)

<u>கொல்லி</u> Kolli **(a mountain)**

(1) **உயர்வு** - height
'உரை சால் உயர் வரைக் கொல்லிக் குடவயின்' (நற்.185: 7)

(2) **பயன்**
'பயம் கெழு பலவின் கொல்லிக் குடவரை' (நற்.192: 8)

(3) **கடவுட்டன்மை** - divine
'செவ் வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லித் தெய்வம் காக்கும் தீது தீர் நெடுங் கோட்டு' (நற்.201: 5-6)

(4) **தண்மை**

'பெருந் தண் கொல்லிச் சிறு பசுங் குளவி' (நற்.346: 9)

(5) **அச்சம்**
'பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லி' (குறு.89: 4)

(6) **வளமை**
'சுரும்பு ஆர் சோலைப் பெரும் பெயற் கொல்லி' (பதி.81: 24)

(7) **மேன்மை / சிறப்பு** - excellence
'வெல் போர் வானவன் கொல்லி மீமிசை' (அகம்.33: 14)

(8) **விரிவு** - wide
'. .. .. .. .. பறையன் கார்புகன்று எடுத்த சூர்புகல் நனந்தலை மாஇருங் கொல்லி உச்சித் தாஅய்' (அகம்.303: 4-6)

**<u>கொவ்வை</u>** Kovvai **(a fruit)**

(1) **சிவப்பு நிறம்**
'.. .. .. .. நசையவர்க்குக் கூடுவ தீவானைக் கொவ்வைபோல் செவ்வாயாய்' (ஏலாதி.34: 2-3)

(ஆ) **<u>கனி</u>** Kaṉi
**சிவப்பு நிறம்**
'கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு' (திருவா.2: 142)

**<u>கொள்ளி மாலை</u>** Koḷḷi mālai

(1) **கடுமை** - cruel
'கொள்ளி மாலையும் கொடிபடு கூறையும் அகலும் .. .. .. கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே' (நீலகேசி.30: 2,4)

**<u>கொற்கை</u>** Koṟkai **(a town / port)**

(1) **வளமை** - prosperity
'முத்துப் படு பரப்பின் கொற்கை முன் துறை' (நற்.23: 6)

(2) **சிறப்பு, புகழ்** – excellence, famous
'புகழ் மலி சிறப்பின் கொற்கை முன்துறை' (அகம்.201: 4)

**<u>கொற்றவை</u>** Koṟṟavai **(a goddess)**

(1) **வீரம்** – valour
'மறம் கடைக்கூட்டிய துடிநிலை சிறந்த கொற்றவை நிலையும் அத்திணைப்புறனே' (தொல்.1005)

(2) **வலிமை** - strong
'நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே, கொற்றவை கோலம் கொண்டு, ஓர் பெண்' (பரி.11: 99-100)

(3) **வெற்றி** - victory
'வெற்றி வெல்போர்க் கொற்றவைச் சிறுவ!' (திருமுரு.258)

(ஆ) **<u>சூலி</u>** Cūli
**வெற்றி** - victory
'விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்கு' (குறு.218: 1)

(இ) **<u>அயிரை</u>** Ayirai

(4) **வலிமை, ஆற்றல்**
'அயிரை பரைஇ, ஆற்றல் சால் முன்போடு' (பதி.3ம் பத்து, பதிகம் 8)

(5) **அச்சம்**
'குருதி விதிர்த்த குவவுச் சோற்றுக் குன்றோடு உருகெழு மரபின் அயிரை பரைஇ' (பதி.38: 11-12)

(ஈ) **<u>கான் அமர் செல்வி</u>** Kāṉ amar celvi

(6) **புகழ்**
'.. .. .. .. .. ஓங்குபுகழ்க் கான்அமர் செல்வி அருளலின்' (அகம்.345: 3-4)

**<u>கொன்றை</u>** Koṉṟai **(a flowering tree)**

(1) **கார்காலம்** – rainy season
'மறந்து கடல் முகந்த கமஞ் சூல் மா மழை பொறுத்தல் செல்லாது இறுத்த வண் பெயல் கார் என்று அயர்ந்த உள்ளமொடு, தேர்வு இல பிடவமும், கொன்றையும், கோடலும் - மடவ ஆகலின், மலர்ந்தன பலவே' (நற்.99: 6-10)

(2) **அழகு, வளமை**
'பொன் தொடர்ந்தன்ன தகைய நன் மலர்க் கொன்றை ஒள் இணர் கோடுதொறும் தூங்க' (நற்.221: 3-4)

(3) **உயர்வு / சிறப்பு**

'கண்ணி கார் நறுங் கொன்றை;
காமர் வண்ண மார்பின் தாரும்
கொன்றை' (புறம். கட. வா: 1-2)

(4) **முல்லைத்திணை** - forest tract
'கொன்றையும் குருந்தும் குலைக்
கோடலும்' (சூளா.18: 1)

(ஆ) **கடுக்கை** Kaṭukkai

(5) **வளம் / மங்கலம்**
'கடி ஏர் பூட்டுநர் கடுக்கை மலைய'
(பதி.43: 16)

(இ) **கொன்றை தார்** Konṟai tār

(6) **புனிதம்** - holy
'காரின்மலி கொன்றைவிரி
தார்கடவுள்'
(திருஞான.தேவா.1410: 5)

**கோங்கு** Kōṅku **(a tree)**

(1) **அழகு**
'புல் இதழ்க் கோங்கின் மெல்
இதழ்க் குடைப் பூ வைகுறு
மீனின் நினையத் தோன்றி'
(நற்.48: 3-4)

(2) **வளமை** - fertile
'வண் சினைக் கோங்கின் தண்
கமழ் படலை இருஞ் சிறை
வண்டின் பெருங்கிளை மொய்ப்ப'
(ஐங்.370: 1-2)

(ஆ) **கோங்கு ஏறுதல்** Kōṇku ēṟutal

(3) **பாதுகாப்பின்மை** - unsafe
'தாமேயும் தம்மைப் புறந்தர
வாற்றாதார் வாமான்றேர்
மன்னரைக் காய்வ
தெவன்கொலோ ஆமா உகளும்
அணிவரை வெற்ப! கேள் ஏமாரார்
கோங்கேறி னார்' (பழமொழி. 282)

(இ) **கோங்கம்** Kōṅkam

(4) **இளவேனில்** - spring
'கோங்கம் குவி முகை அவிழ, .. ..
.. .. முற்றா வேனில் முன்னி
வந்தோரே!' (நற்.86: 7-9)

(5) **திண்மை** - strong
'திணிக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை உடையும்
பொழுதே' (ஐங்.343: 2-3)

(6) **தண்மை, நறுமணம்**
'தண் நறுங் கோங்கம் மலர்ந்த
வரையெல்லாம் பொன் அணி
யானை போல் தோன்றுமே'
(கலி.42: 16-17)

**கோசர்** Kōcar **(a ruling tribe)**

(1) **வாய்மை** - truthful
'தொல் மூதாலத்துப் பொதியில்
தோன்றிய நால் ஊர்க் கோசர்
நன்மொழி போல' (குறு.15: 2-3)

(2) **சூழ்ச்சி** - intringue
'ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும்' (குறு.73: 4-5)

(3) **புகழ்**
'வாய்மொழி நிலைஇய
சேண்விளங்கு நல்இசை
வளம்கெழு கோசர் விளங்குபடை
நூறி' (அகம்.205: 8-9)

**கோட்டம்** Kōṭṭam **(கோட்ட மரம்)**

(1) **வெண்மை**
'பால் வெண் கோட்டமும்
பனிச்சையும் திலகமும்'
(பெருங்,உஞ்.50: 29).

**கோடி** Kōṭi **(crore)**

(1) **மிகுதி, பேரளவு, பெருமை** – much, large, great
'ஒன்று பத்து அடுக்கிய கோடி
கடை இரீஇய பெருமைத்தாக,
நின் ஆயுள்தானே!' (புறம்.18: 5-6)

**கோடை** Kōṭai **(மேற்காற்று) (westerly)**

(1) **விரைவு** - speed
'ததர் பிணி அவிழ்ந்த தாழை
வான் பூ, தயங்கு இருங் கோடை
தூக்கலின், நுண் தாது வயங்கு
இழை மகளிர் வண்டல் தாஅம்'
(நற்.299: 2-4)

(2) **வெப்பம்** - heat
'அழல் எறி கோடை தூக்கலின்'
(அகம்.219: 15)

(3) **வறட்சி** - drought
'கயன் அற வறந்த கோடையொடு
நயன் அற' (அகம்.291: 4)

**<u>கோடையின் கதிர்</u>** Kōṭaiyin̲ katir **(summer sun)**

(1) **கொடுமை** - cruel
'கோடையின் கதிர் எனக் கொடிய கூர்ங்கணை' (கம்ப.யுத்.1520: 2)

**<u>கோதாவரி</u>** Kōtāvari **(a river)**

(1) **புனிதம்** - holy
'புத்தீர்த்திட்டு அலையாமல் புலவர் நாடு உதவுவது புனிதமான அத்தீர்த்தம் அகன் கோதாவரி என்பர்' (கம்ப.கிட்.758: 5-7)

**<u>கோது</u>** Kōtu

(1) **வீண்** – futile, waste
'.. .. .. .. கரும்பூர்ந்த சாறுபோல் சாலவும் பின் உதவி மற்றதன் கோதுபோல் போகும் உடம்பு' (நாலடி.34)

**<u>கோப்பெருந்தேவி</u>** Kōpperuntēvi **(queen)**

(1) **கற்பு** - chastity
'தன்னெறி வழாஅத் தருசக குமரன் தற்பயந்தெடுத்த கற்பமை காரிகைக் கோப்பெருந் தேவிக்கு யாப்புடைத்தாக' (பெருங்.மகத.22: 42-44)

**<u>கோல்</u>** Kōl **(scepter)**

(1) **அரசு, அரசாட்சி** - reign, rule
'சிறு கோற் சென்னி ஆரேற்றன்ன' (நற்.265: 6)

(2) **நடுநிலைமை** – neutral, just
'நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினை வாங்க, கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல' (கலி.8: 1-2)

(3) **முறைமை** – order, regularity
'உறை வரை நிறுத்த கோல், உயிர் திறம் பெயர்ப்பான் முறை செய்தி என நின்னை மொழிவது' (கலி.100.15-16)

(4) **தண்மை / பாதுகாத்தல் / புரத்தல்**
'தமிழ் கெழு கூடல் தண் கோல் வேந்தே' (புறம்.58: 13)

(5) **நிழல் / பாதுகாப்பு / ஆதரவு** - support
'ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும்' (சிறுபாண்.233)

(6) **செங்கோன்மை** – just rule, royal power
'வான் நோக்கி வாழும் உலகு எல்லாம்;- மன்னவன் கோல் நோக்கி வாழும் குடி' (குறள்.542)

(7) **வெற்றி**
'வேல் அன்று, வென்றி தருவது; மன்னவன் கோல்; அதூஉம் கோடாது எனின்' (குறள்.546)

(ஆ) <u>செங்கோல்</u> Ceṅkōl

(8) **அறம்** - righteousness
'அல்லது கடிந்த அறம் புரி செங்கோல்' (பெரும்.36)

(9) **காவல் / பாதுகாப்பு**
'குடி புறங்காத்து ஓம்பும் செங்கோலான் வியன்தானை' (கலி.130: 18)

(ஒப்பு) <u>Sceptre</u> **அமைதி, அரச ஆற்றல், ஆட்சியாளர், உயர் பதவி, உரிமை, உலக ஆற்றல், ஒளி, தூய்மை, நன்மை, நீதி, நேர்மை, படைப்பாற்றல், பொறுப்பு, மகிழ்ச்சி, வளமை.**

**<u>கோவண ஆடை</u>** Kōvaṇa Āṭai **(loin cloth)**

(1) **எளிமை, மானம் காத்தல்** – simple, dignity, have self-respect
'உடைதனில் நால்விரல் கோவண ஆடை உண்பதும் ஊரிடு பிச்சை வெள்ளை' (திருஞான.தேவா.216: 5-6)

**<u>கோவர்த்தனம்</u>** Kōvarttan̲am

(1) **பாதுகாப்பு**
'வட்டத் தடங்கண் மட மான் கன்றினை வலைவாய்ப் பற்றிக் கொண்டு குறமகளிர் கொட்டைத் தலைப் பால் கொடுத்து வளர்க்கும் கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே' (நாலா.264: 5-8)

<u>கோழி</u> Kōli **(fowl, hen)**

(1) **தாழ்வு, இழிசெயல்** – low, mean action
'கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெறினும் குப்பை கிளைப்போவாக் கோழிபோல் மிக்க கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினும் கீழ்தன் மனம்புரிந்த வாறே மிகும்' (நாலடி.341)

(2) **செயலின்மை** - inactive
'தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவாறு ஒன்றும் இன்றி விலக்குவார் இலாமையாலே விளக்கத்திற் கோழி போன்றேன்' (திருநா.தேவா.1510: 1-4)

<u>கோள் நிலை திரிதல்</u> Kōḷ nilai tirital **(change in the course of planet)**

(1) **வறட்சி, வளனின்மை** - drought
'கோள் நிலை திரிந்து கோடை நீடினும்' (மணி.பதி.24)

## ச

<u>சக்கரவாளக் கோட்டம்</u>

cakkaravāḷakkōṭṭam **(a hall)**

(1) **துயர் துடைத்தல்** – remove misery
'துக்கம் துடைக்கும் துகளறு மாதவர் சக்கர வாளக் கோட்டம் உண்டாங்கு' (மணி.17: 75-76)

<u>சகடம்</u> Cakaṭam **(a star)**

(1) **திருமணம், நன்மை** – wedding, good omen
'அம்கண் இருவிசும்பு விளங்க, திங்கட் சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து, கடிநகர் புனைந்து, கடவுட் பேணி, படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ, வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று' (அகம்.136: 4-8)

(ஆ) <u>கோள்</u> Kōḷ

(2) **புகழ், மேன்மை** – fame, excellence
'கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள் கேடு இல் விழுப் புகழ் நாள் தலைவந்தென' (அகம்.86: 6-7)

(இ) <u>உரோகிணி</u> Urōkiṇi

(3) **இணைவு, பிரிவின்மை** – join, inseperate
'முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய, உரோகிணி நினைவனள் நோக்கி' (நெடுநல்.162-163)

(ஈ) <u>மதியம் சகடணைதல்</u>

Matuyam cakaṇaital

**நன்மை, திருமணம்**
'வானூர் மதியம் சகடணைய வானத்துச் சாலி ஒருமீன் தகையாளைக் கோவலன் மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட' (சிலப்.1: 50-52)

<u>சங்கம்</u> Caṅkam **(conch)**

(1) **ஒலி** - sound
'புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து முள்வாய்ச் சங்க முறைமுறை ஆர்ப்ப' (சிலப்.4: 77-78)

(2) **வெண்மை** - whiteness
'பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்' (சிலப்.11: 47)

(ஆ) <u>சங்கு</u> Caṅku

(3) **மேன்மை, வெண்மை** - excellence
'சுரும்பிவர் சந்தும் தொடுகடன் முத்தும் வெண் சங்குமெங்கும் விரும்பினர் பாற்சென்றா மெய்க்கணியாம் வியன் கங்கை என்னும்' (திருக்கோ.16: 248. 1-2)

(4) **வாய்மை, உயர்குடியினர், நற்பண்பு, நிலையான தன்மை** – truth, of high birth, stable
'சங்கினும் பாலினும் சலமில் வாய்மை விழுத்திணைப் பிறந்த ஒழுக்குடை மரபினர்' (பெருங்.இலா.5: 65-66)

(இ) <u>வளை (சங்கம்) ஒலித்தல்</u>

Vaḷai olittal

(5) **நன்மை**
'ஏரணங்கு இளம்பெருந் தேவி நாளுறச் சீர் அணங்கு அவிர் ஒளித் திவிட்டன் தோன்றினான்

நீர் அணங்கு ஒளிவளை நிரந்து விம்மின' (சூளா.72: 1-3)

(ஈ) <u>வரி சங்கம் நின்று ஊதுதல்</u>
Vari caṅkam ni<u>nr</u>u ūtutal

(6) திருமணம்
'மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்று ஊத .. .. .. கனாக் கண்டேன்' (நாலா.561)

<u>சடை</u> Caṭai **(matted hair)**

(1) துறவு (வேடம்) – penance, feign
'சடையினர் உடையினர் சாம்பல் பூச்சினர்' (சிலப்.26: 225)

<u>சமண குருமார்களின் கையிலிருந்து மயிற்பீலி, தடுக்கு, பாய் ஆகியன நழுவி வீழ்தல்</u>
Camaṇa kurumārkaḷi<u>n</u> kaiyiliruntu mayi<u>r</u>pīli, taṭukku, pāy ākiya<u>n</u>a na<u>l</u>uvi vī<u>l</u>tal

(1) தீமை, அழிவு - harm, destruction
'பீலியும் தடுக்கும் பாயும் பிடித்தகை வழுவி வீழ .. .. .. மேல்வரும் அழிவுக்காக வேறு காரணமும் காணார்' (பெரிய.2536: 1-6)

<u>சரவணம்</u> Caravaṇam **(a pond)**

(1) புனிதம், சிறப்பு, கடவுட்டன்மை – holy, divine
'விண்ணோர் ஏத்தும் வியத்தகு மரபில் புண்ணிய சரவணம் பவகாரணியோடு இட்ட சித்தி எனும் பெயர் போகி' (சிலப்.11: 93-95)

<u>சலாகை</u> (நன்மணி) Calākai

(1) சிறப்பு
'சேயிருங் குன்றம் ஈன்ற செழுமணிச் சலாகை போல்வாள்' (சூளா.984: 4)

<u>சனி</u> Ca<u>n</u>i **(Saturn)**

(1) துன்பம் - suffering
'சனியான தமிழை விட்டுத் தையலார்தம் இடமிருந்து தூதுசென்று பிழைத்தோமில்லை' (தனிப்.493: 6-7)

(2) கொடுமை - cruel
'வியந்த நிசாசரனாம் என்றூ சந்திரனும் வெஞ்சனிக்குப் பயந்தவனாம் என்றூ பானுவும் வந்து பணிய' (தனிப்.646: 1-2)

<u>சாகாடு</u> Cākāṭu **(cart)**

(1) வாழ்க்கை / பயணம் – life / journey
'கள் கொண்டு மறுகும் சாகாடு அளற்று உறின்' (அகம்.116: 3)

(2) உலகம் ஆளும் முறை, ஆட்சித்திறம், இயக்கம் – reign, ruling, movement
'கால் பர் கோத்து, ஞாலத்து இயக்கும் காவற்சாகா டுகைப்போன் மாணின், ஊறு இன்றாகி ஆறு இனிது படுமே; உய்த்தல் தேற்றான் ஆயின், வைகலும், பகைக் கூழ் அள்ளற் பட்டு, மிகப் பல் தீ நோய் தலைத்தலைத் தருமே' (புறம்.185)

(3) உடம்பு - body
'பண்டம் அறியார் படுசாந்தும் கோதையும் கண்டு பாராட்டுவார் கண்டிலர்கொல் மண்டிப் பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் குத்தும் முடைச்சாகாடு அச்சிற்று உழி' (நாலடி.48)

<u>சாம்பற்பூச்சு</u> Cāmpa<u>r</u>pūccu

(1) துறவு (வேடம்) - disguise
'சடையினர் உடையினர் சாம்பல் பூச்சினர்' (சிலப்.26: 225)

<u>சாரிகை</u> (நாகணவாய்ப்பறவை) Cārikai

(1) மென்மை
'தண்ணென் சோலை எம்மருங்கும் சாரும் மடமென் சாரிகையின்' (பெரிய.1024: 5-6)

<u>சாறு கொள் ஊர்</u> Cā<u>r</u>u koḷ ūr **(festive town)**

(1) பொலிவு, மகிழ்ச்சி - bright, gladness

'காதலர் உழையராகப் பெரிதுவந்து சாறுகொ ளூரிற் புகல்வேன்' (குறு.41: 1-2)

**<u>சித்திர ரதன்</u>** Cittira ratan

(1) **வள்ளண்மை**
'சீரணி முழவம் ஓவாச் சிரீநிலை அதனை ஆளும் காரணி தடக்கை வேந்தன் கான்முளை கனபொன் ஆர்ந்த' (சூளா.327: 1-2)

**<u>சிதடு</u>** Citaṭu **(blind)**

(1) **சிறப்பின்மை, இயலாமை / பயனின்மை** – insignificant, uncapable, waste
'சிறப்பு இல் சிதடும் உறுப்பு இல் பிண்டமும் .. .. .. .. எண்பேர் எச்சம் என்று இவை எல்லாம் பேதைமை அல்லது ஊதியம் இல் என' (புறம்.28: 1-5)

(ஆ) **<u>துஞ்சு புலி இடறிய சிதடன்</u>**
Tuñcu puli iṭariya citaṭan

(2) **அறியாமை, மடமை** – ignorance, foolish
'துஞ்சு புலி இடறிய சிதடன் போல' (புறம்.)

(ஒப்பு) <u>Blindness, Blindfold</u>
**அறிவாற்றல், உருவ வழிபாடு, தொலை முன்னோக்கு; அறியாமை, இருள், உண்மையை அடைய முடியா நிலை, கண் கட்டப்பட்ட நிலை, தவறு, பித்துப் பிடித்த நிலை, பொறுப்பற்ற நிலை, முட்டாள்தனம்.**

**<u>சிந்துரம்</u>** Cinturam

(1) **சிவப்பு நிறம்**
'சிந்துரக் கால் சிரம் செக்கர் சூடிய' (கம்ப.ஆரண்.892: 3)

(2) **மங்கலம்** - auspicious
'சிந்துரம் இலங்கத் தன் திருநெற்றிமேல் திருத்திய கோறம்பும் திருக்குழலும்' (நாலா.259: 1-2)

**<u>சிமை</u>** Cimai **(peak)**

(1) **உயர்வு** - lofty
'வரை ஓங்கு உயர் சிமைக் கேழல் உறங்கும்' (ஐங்.268: 3)

(2) **அருமை** - superior
'துளியின் உழந்த தோய்வு அருஞ் சிமை. தொறும்' (பரி.7: 13)

(3) **கடவுட்டன்மை** - godly
'அருந் திறல் கடவுள் காக்கும் உயர் சிமை' (புறம்.158: 11)

(ஆ) **<u>சிமையம்</u>** Cimaiyam
**உயர்வு** - high
'வாஅன் தோய் சிமையம் தோன்றலானே' (அகம்.378: 24)

(இ) **<u>சென்னி</u>** Cenni
**உயர்வு** - high
'கல் உயர் சென்னி இமயவில் நாண் ஆகி' (பரி.தி.1: 77)

(ஈ) **<u>சிகரம்</u>** Cikaram
**உயர்வு** - high
'மகர நெற்றி வான் தோய் புரிசைச் சிகரம் தோன்றாச் சேண் உயர் நல் இல்' (அகம்.181: 20-21)

(உ) **<u>முகடு</u>** mukaṭu
**உயர்வு** - high
'திரைப் பிதிர் கடுப்ப முகடு உகந்து ஏறி' (நற்.89: 2)

**<u>சிரல்</u>** Ciral **(king fisher)**

(1) **தலைவி**
'எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து, பொரி அகைந்தன்ன பொங்கு பல் சிறு மீன், வெறி கொள் பாசடை, உணீஇயர், பைப்பயப் பரை தபு முது சிரல் அசைபு வந்து இருக்கும்' (அகம்.106: 1-4)

**<u>சிலம்பி</u>** Cilampi **(spider)**

(1) **படைப்புத்திறன்** - creativity
'கொலை வல் வேட்டுவன் வலை பரிந்து போகிய கானப் புறவின் சேவல் வாய் நூல் சிலம்பிஅம் சினை வெரூஉம், அலங்கல் உலமைஅம் காடு இறந்தோரே?' (நற்.189: 7-10)

(2) **நுட்பம்** – fineness, minute

'நுண் சிலம்பி வலந்தன நுண் துகில்'

(3) அறிவு - wisdom
'ஞானமுடைய ஒரு சிலந்தி நம்பர் செம்பொன் திருமுடிமேல் கானல் விரவும் சருகுதிரா வண்ணம் கலந்த வாய்நூலால் மேனற் றிருமேற் கட்டி என விரிந்து செறியப் புரிந்துளதால்' (பெரிய.4204: 3-8)

(ஆ) <u>சிலம்பி நூல் தூங்குதல்</u> Cilampi nūl tūṅkutal

(4) இயக்கமின்மை - inactive
'சிலம்பி வால் நூல் வலந்தன தூங்க' (நெடுநல்.59)

(ஒப்பு) <u>Spider</u> அரும்புதிர் நெறி, அறிவாற்றல், கடும் உழைப்பு, திறமை, தொடர் தியாகம், நம்பிக்கை, நெசவாளி, நெய்தல், படைப்பாளி, மகிழ்வு, வளமை, விண்ணேறுதல்; இழப்பு, கடுஞ் சிக்கலமைவு, கீழுலகக் கடவுள், சூழ்ச்சி, நம்பிக்கை இழப்பு, பகைமை எண்ணம், பழிசூழ் நோக்கு, பேராசை.

<u>சிலம்பு</u> Cilampu **(anklet)**

(1) ஒலி - tinkling
'முத்து அரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று' (நற்.110: 5)

(ஆ) <u>சிலம்பு கழித்தல்</u> Cilampu kalittal

(2) மாற்றம் - change
'.. .. .. .. தன் கால் அரி அமை சிலம்பு கழீஇ' (நற்.12: 4-5)

(இ) <u>குடைச்சூல்</u> Kuṭaiccūl

(3) வளமை - fertile
'வளம் கெழு குடைச்சூல், அடங்கிய கொள்கை' (பதி.57: 11)

<u>சிலாதலம்</u> Cilātalam

(1) ஒளி - light, sparkling
'இலகொளிச் சிலாதலம் தொழுது வலங்கொண்டு' (சிலப்.10: 25)

(ஆ) <u>நிலாக்கல் வட்டம்</u> Nilākkal vaṭṭam
ஒளி - light, sparkling
'நின்றொளி திகழ்வதோர் நிலாக்கல் வட்டமும்' (சூளா.192: 3)

<u>சிவப்பு</u> Civappu **(red)**

(1) வெகுளி / சினம் - anger
'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல்.855)

(2) வேந்தர் - king, royalty
'செம்மலர்க் கண்ணியர் செம்பொன் தாரினர் கொய்ம்மலர்க் குங்குமம் குழைந்த சாந்தினர் கைம்மலர் மணிநகை கடகம் வில்லிட மெய்ம்மலர் அணியினர் வேந்தர் ஆயினார்' (சூளா.1876)

(ஆ) <u>செவ்</u> (செம்மை) Cev

(3) அழகு
'எய்யா நல் இசை, செவ் வேற் சேஎய்' (திருமுரு.61)

(ஒப்பு) <u>Red</u> அதிர்ஷ்டம், அழகு, அன்பு, ஆண்மை, ஆற்றல், உணர்ச்சி, உயிர்த்தியாகம், உள்ளுயிர்ப்பு, ஒளி, கருப்பை, காதல், சூரியன், தியாகம், துணிவு, தூய்மை, தெற்கு, படைப்பாற்றல், புரட்சி, மகிழ்ச்சி, மீட்பு, வழிபாடு, வளமை, வாழ்க்கை, விருப்பம், விழிப்பு நிலை, வெற்றி; ஆபத்து, இறப்பு, குருதி, குற்றம், கோடைக்காலம், சினம், தீமை, நெருப்பு, பகைமை, பழி, போர், வறட்சி, வெப்பம்; வேட்டையாடுதல்.

<u>சிவலோகம்</u> Civalōkam

(1) மூப்பின்மை, பேரின்பம் – youth, blizz
'திறலுடைச் செய்கை செய்து சிவலோகம் அதனை எய்திப் பெறலரும் இளமை பெற்றுப்

பேரின்பம் உற்றார் அன்றே' (பெரிய.402: 5-8)

(ஆ) <u>வான்பதம்</u> Vāṉpatam

(2) **அழிவின்மை**
'அழிவில் வான்பதம் கொடுத்து எழுந்தருளினார் ஐயர்' (பெரிய.548: 7-8)

(இ) <u>சிவபுரி</u> Civapuri

(3) **நன்மை, தீதின்மை** – good, evilless
'தீதிலா நிலைச் சிவபுரி' (பெரிய.1043: 7)

<u>**சிவிகை**</u> Civikai

(1) **மேன்மை** - esteem
'.. .. .. .. தண்டு ஆர் சிவிகையும், பண்ணி' (பரி. 10: 17)

(2) **உயர்வு** - lofty
'அறத்து ஆறு இது என வேண்டா சிவிகை பொறுத்தானொடு ஊர்ந்தானிடை' (குறள்.37)

(ஆ) <u>**சிவிகை ஏற்றுவித்தல்**</u> Civikai ēṟṟuvittal
**உயர்வு** - honour
'நம்மையும் ஓர் பொருள் ஆக்கி நாய் சிவிகை ஏற்றுவித்த அம்மை எனக்கு அருளிய ஆறு ஆர்பெறுவார்' (திருவா.51: 9. 3-4)

<u>**சிறகு**</u> Ciṟaku **(feather, wing)**

(1) **அழகு** - beautiful
'வரி அணி சிறகின் வண்டு உண மலரும்' (நற்.399: 3)

(2) **விரைவு** - quick
'கடும் பரிக் கதழ் சிறகு அகைப்ப' (பதி.25: 12)

(ஆ) <u>**தூவி**</u> Tūvi

(3) **மென்மை** - soft
'கவிர் இதழ் அன்ன தூவிச் செவ்வாய்' (குறு.103: 2)

(இ) <u>**அன்னத்தூவி**</u> Aṉṉattūvi
**மென்மை**
'இலங்குமான் அவிர்தூவி அன்ன மென்சேக்கையுள்' (கலி.13: 15)

(ஈ) <u>**உடு**</u> Uṭu
**விரைவு** - speed
'உடு உறு கணையின் போகி' (அகம்.292: 12)

(ஒப்பு) <u>Feather</u> **ஆன்மா, இலேசான தன்மை, உண்மை, உயரம், உலர்ந்த நிலை, ஒப்பனை, ஒளிக்கதிர், காலியான நிலை, காற்று, தூய்மைப்படுத்துதல், நிறைவு, நீதி, பகட்டு, பெருமை, மறுபிறப்பு, வலிமை, விரைவு; இறப்பு.**

<u>**சிறை**</u> Ciṟai **(prison)**

(1) **காவல், பாதுகாப்பு** – secure, safe
'சிறை காக்கும் காப்பு எவன் செய்யும்? மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை' (குறள்.57)

(2) **தடை** - obstruction, obstacle
'தூய்மை மனத்தவர் தோழர் மனையகத்தும் தாமே தமியர் புகல்வேண்டா - தீமையான் ஊர்மிகின் இல்லை கரியோ ஒலித்துடன் நீர்மிகின் இல்லை சிறை' (பழமொழி.335)

(3) **காவல் / கட்டுப்பாடு** – watch, control
'நிறையான் மிகுகல்லா நேரிழை யாரைச் சிறையான் அகப்படுத்தல் ஆகா - அறையோ! வருந்த வலிதினின் யாப்பினும் நாய்வால் திருந்துதல் என்றுமோ இல்' (பழமொழி. 336)

(4) **அகப்படுத்தல்** - catch
'கண்சிறைப் படுநிழல் காவு சூழ்ந்தவே' (சீவக.79: 4)

(ஒப்பு) <u>Prison</u> **கட்டுப்பாடு, குற்றம், கூண்டு, நரகம், வரையறை.**

<u>**சீதை**</u> Cītai **(a lady)**

(1) **கற்பு** - chastity
'தாயைப் போலத் தளர்ந்து மயங்கினாள் தீயைச் சுட்டது ஓர் கற்பு எனும் தீயினாள்' (கம்ப.சுந்.1080: 3-4)

(2) **தூய்மை** – purity

'தீயின் தூயவளைத் துயர் செய்ததால்' (கம்ப.சுந்.1137: 4)

(ஆ) புகழாள் Pukaḻāḷ
**கற்பு** - chastity
'ஒன்றுபுரி கற்பொடு உலகு விளக்குறீஇப் பொன்றல் ஆற்றிய புகழாள் போல' (பெருங்.உஞ்.36: 340-341)

**சீதேவி** Cītēvi

(1) **சிறப்பு** - eminence
'தேன்பொழிந்த வாயான் திருவேங்கடத்துடனே ஏன்பிறந்தான் கண்ணுக்கு இனியானே வான்சிறந்த சீதேவியாருடனே செய்ய திருப்பாற்கடலில் மூதேவி ஏன்பிறந்தாள் முன்' (தனிப்.473)

**சீரகம்** Cīrakam

(1) **அழிவின்மை (மோட்சம்)** - eternity
'.. .. .. மங்காத சீரகத்தைத் தந்தீரேல் தேடேன் பெருங்காயம்' (தனிப்.544: 2-3)

**சீவகன்** Cīvakaṉ

(1) **வள்ளன்மை** - benevolence
'கார்தங்கு வண்கைக் கழல் சீவகற் காண்மின் என்றார்' (சீவக.881: 4)
(2) **ஒப்பின்மை** - incomparable
'அருள்வலி ஆண்மை கல்வி அழகறி இளமை ஊக்கம் திருமலி ஈகை பாகம் திண்புகழ் நண்பு சுற்றம் ஒருவர் இவ்வுலகில் யாரே சீவகன் ஒக்கு நீரார் பெரிதரிது இவனைக் கொன்றாய் பெறுகெனச் சிறப்புச் செய்தான்' (சீவக.1165)

**சுக்கு** Cukku

(1) **வற்றல்** - dry
'வெங்காயம் சுக்கானால் வெந்தயத்தால் ஆவதென்ன' (தனிப்.544: 1)

**சுட்டுக்கோல்** Cuṭṭukkōl

(1) **துன்பம், உடனிருப்பு, மெய்யன்பு** – sorrow, true love, co-existant
'சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே நட்டார் எனப் படுவார்' (நாலடி.208: 3-4)

(ஆ) சுட்டுறு கோல் Cuṭuṟu kōl
**துன்பம்** - affliction
'இட்டிடர்ப் பொழுதின் இன்ப நீக்கிக் கட்டழல் புகூஉஞ் சுட்டுறு கோல் போல் நட்டை இட்டு நாட்டகம் துறந்துதம்' (பெருங்.இலா.8: 154-156)

**சுடர்** Cuṭar **(sun)**

(1) **வெம்மை** - hot
'வெஞ் சுடர் கரந்த கமஞ் சூல் வானம்' (நற்.261: 3)
(2) **கடவுட்டன்மை** - divine
'முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி, ஏமுற விளங்கிய சுடரினும்' (நற்.283: 6-7)
(3) **சினம்** - anger
'சுடர் சினம் தணிந்து குன்றம் சேர' (குறு.195: 1)
(4) **வெப்பம்** - heat
'குன்று வறம் கூரச் சுடர் சினம் திகழ' (பதி.43: 13)

(ஆ) சுடருள் இருள் தோன்றுதல்
Cuṭaruḷ iruḷ tōṉṟutal
(5) **தீமை, துன்பம், வருத்தம்** – evil, sorrow, affliction
'தொடர் வரை வெற்பன் துறக்குவன் அல்லன் - தொடர்புள் இனையவை தோன்றின், விசும்பில் சுடருள் இருள் தோன்றியற்று' (கலி.41: 36-38)

(இ) ஞாயிறு Ñāyiṟu
(6) **ஒளி, அழகு**
'வானம் மூழ்கிய வயங்கு ஒளி நெடுஞ் சுடர்க் கதிர் காய்ந்து எழுந்து அகம் கனலி ஞாயிற்று வைகுறு வனப்பின், தோன்றும்' (நற்.163: 9-11)
(7) **வெம்மை**
'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்' (குறு.58: 3)
(8) **தலைவன்**

'ஞாயிறு அனையன் - தோழி ! நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே' (குறு.315: 3-4)

(9) **வெளிப்படை / மறைப்பின்மை** – clear, open / unconcealed
'.. .. .. .. .. அலரே மறைத்தல் ஒல்லுமோ, மகிழ்ந? புதைத்தல் ஒல்லுமோ, ஞாயிற்றது ஒளியே?' (ஐங்.71: 3-5)

(10) **நடுநிலை** – just, neutral
'குடதிசை மாய்ந்து, குணமுதல் தோன்றி, பாய் இருள் அகற்றும், பயம் கெழு பண்பின், ஞாயிறு கோடா நன் பகல் அமயத்து' (பதி.22: 32-34)

(11) **தெறுதல்** - burn
'தெறு கதிர் திகழ்தரும் உரு கெழு ஞாயிற்று' (பதி.52: 29)

(12) **உயர்வு, நீண்ட வாழ்வு** - eminence, long life
'மாகம் சுடர மா விசும்பு உகக்கும் ஞாயிறு போல விளங்குதி, பல் நாள்!' (பதி.88: 37-38)
**ஒளி, வெம்மை** – light, heat
'நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்று உள' (பரி.4: 25)

(13) **குற்றமின்மை** - blemishless
'மாசு இல் ஆயிரம் கதிர் ஞாயிறும்' (பரி.3: 22)
**அழகு / எழில்** - beauty
'ஞாயிற்று ஏர் நிறத் தகை!' (பரி.5: 12)

(14) **முருகன்**
'வெண் சுடர் வேல் வேள்! விரை மயில் மேல் ஞாயிறு!' (பரி.18: 26)
**சினம்** - anger
'.. .. .. .. ஞாயிறு கடுகுபு கதிர் மூட்டிக் காய் சினம் தெறுதலின்' (கலி.8: 2-3)

(15) **பழியின்மை** - blameless
'பழி தபு ஞாயிறே! பாடு அறியாதார்கள் கழியக் கதழ்வை எனக் கேட்டு' (கலி.143: 22-23)

(16) **இயக்கம் / செயல் திறம்** - active
'தொல்இயல் ஞாலத்துத் தொழில்ஆற்றி, ஞாயிறு, வல்லவன் கூறிய வினை தலை வத்தான் போல், கல் அடைபு, கதிர் ஊன்றி, கண்பயம் கெடப்பெயர' (கலி.148: 1-3)

(17) **வளம்** - wealth
'பயம் கெழு திருவின் பல்கதிர் ஞாயிறு' (அகம்.298: 1)

(18) **திறல், ஆண்மை** – strength, manliness
'ஞாயிற்று அன்ன வெந் திறல் ஆண்மையும்' (புறம்.55: 13)

(19) **நிலைபேறு** - stable
'ஒண்கதிர் ஞாயிறு போலவும் மன்னிய பெரும! நீ நிலமிசையானே!' (புறம்.6: 28-29)

(20) **புகழ்** - fame
'ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே' (புறம்.231: 6)

(21) **இறைமை** - divine
'உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு' (திருமுரு.1-2)

(22) **சிறப்பு** - eminence
'விரி கதிர் ஞாயிறு விசும்பு இவர்ந்தன்ன சேண் விளங்கு சிறப்பின், செம்பியர் மருகன்' (புறம்.228: 8-9)

(23) **காலம்** - time
'தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும் கூற்றம் அளந்துநும் நாளுண்ணும்' (நாலடி.7: 1-2)

(ஈ) <u>**ஞாயிறு படுதல்**</u> Ñayiṟu paṭutal (sun set)

(24) **துன்பம், இறப்பு** – sorrow, death
'கடுங் கதிர் ஞாயிறு மலை மறைந்தன்றே; அடும்பு கொடி துமிய ஆழி போழ்ந்து, அவர் நெடுந் தேர் இன் ஒலி இரவும் தோன்றா; இறப்ப எவ்வம் நலியும், நின் நிலை' (நற்.338: 1-4)

(உ) <u>**ஞாயிற்றில் நிலவு**</u> Ñayiṟṟil nilavu

(25) **செயற்கருமை** - impossible
'செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும்' (புறம்.38: 7)

(ஊ) <u>**எல்லை**</u> Ellai

(26) **பொலிவு** - dazzling
'.. .. .. .. .. வானமும் நம்மே போலும் மம்மர்த்து ஆகி, எல்லை கழியப் புல்லென்றன்றே' (குறு.310: 2-4)

**ஒளி**
'எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று' (குறு.355: 3)

(எ) **எல்**

(27) **அறியாமை** - immortal
'அறிவன்று அழகன்று அறிவதூஉம் அன்று சிறியர் எனப்பாடும் செய்யும் - எறிதிரை சென்றுலாம் சேர்ப்ப! குழுவத்தார் மேயிருந்த என்றூடு அறுப்பினும் மன்று' (பழமொழி. 60)

(ஏ) **கதிர்** Katir

(28) **அழிவு** - ruin, perish
'கண் பொர விளங்கிய கதிர் தெறு வைப்பின், மண் புரை பெருகிய மரம் முளி கானம்' (ஐங்.319: 1-2)
**சினம்**
'.. .. .. .. முக்கண்ணான் மூஎயிலும் உடன்றக்கால், முகம் போல ஒண் கதிர் தெறுதலின்' (கலி.2: 4-5)
**தெறுதல்**
'வேரொடு மரம் வெம்ப, விரி கதிர் தெறுதலின்' (கலி.10: 4)

(29) **வலிமை** – strong
'உரவுக் கதிர் தெறும் என ஓங்கு திரை விரைபு' (கலி.127: 20)

(30) **ஆற்றல்** - power
'நிரை கதிர்க் கனலி பாடொடு பகல் செல' (கலி.130: 5)
வெப்பம் - heat
ஆள் வழக்கு அற்ற சுரத்திடைக் கதிர் தெற, நீள் எரி பரந்த நெடுந் தாள் யாத்து' (அகம்.51: 1-2)

(31) **வறட்சி** - drought
'மண் பக வறந்த ஆங்கண், கண் பொரக் கதிர் தெற, கவிழ்ந்த உலறுதலை நோன் சினை' (அகம்.81: 6-7)

(ஐ) **செங்கதிர்ச் செல்வன்**
Ceṅkatirc celvaṉ
**தெறுதல்** - burn
'செங் கதிர்ச் செல்வன் தெறுதலின்' (நற்.164: 2)
**சினம், வெம்மை** – anger, heat
'செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்தினாற் பைங்கொடி முல்லை மணங்கமழ' (ஐந்.எழு.15: 1-2)

(ஒ) **வெங்கதிர்ச் செல்வன்**
Veṅkatirc celvaṉ
**ஒளி, நிலைபேறு** – light, stable
'அம் கண் விசும்பின் ஆர் இருள் அகற்றும் வெங்கதிர்ச் செல்வன் போலவும், .. .. .. நின்று நிலைஇயர் உலகமொடு உடனே' (புறம்.56: 21-24)

(ஓ) **கனலி** Kaṉali
**வெம்மை, சினம்** – heat, anger
'நெருப்பு அவிர் கனலி உருப்புச் சினம் தணிய' (ஐங்.388: 1)
**தெறுதல்** - burn
'வெந்தெறற் கனலியொடு மதிவலம் திரிதரும்' (பெரும்.16)

(ஔ) **கனலி நான்கு திசைகளிலும் தோன்றுதல்** Kaṉali nāṉku ticaikaḷilum tōṉrutal
**தீமை (தீ நிமித்தம்)** – bad omen
'அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும் .. .. .. .. உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே' (புறம்.35: 6,16)

(க) **கனலி பலவிடத்தும் தோன்றுதல்** Kaṉali palaviṭattum tōṉrutal
**தீமை, அழிவு** – bad omen
'வெங் கதிர்க் கனலி துற்றவும்' (புறம்.41: 6)

(ங) **கனலி தென்திசையில் தோன்றுதல்** Kaṉali teṉticaiyil tōṉrutal
**தீமை** - harm
'தெறுகதிர் கனலி தென்திசைத் தோன்றினும்' (புறம்.397: 24)

(ச) **காலை** Kālai

(32) **வாய்மை** - truth
'காலை அன்ன சீர்சால் வாய்மொழி' (பதி.21: 4)
**வெம்மை, தீமை**

'பெயல் மழை புறவு இன்று ஆகி, வெய்துற்று, வலம் இன்று அம்ம, காலையது பண்பு! என' (பதி.26: 6-7)

(ஞ) <u>வைகல்</u> Vaikal
**வாய்மை** - truth
'வாய்மை வயங்கிய வைகல்' (பரி.2: 54)

(ட) <u>பருதி அம் செல்வன்</u> Paruti am celvan̲
**ஒளி**
'பகல் செய் பல் கதிர்ப் பருதி அம் செல்வன்' (அகம்.229: 1)

(ண) <u>பருதி</u> Paruti
**ஒளி**
'இருள் கண் கெடுத்த பருதி ஞாலத்து' (புறம்.174: 3)

(த) <u>இரவி</u> Iravi
**வெம்மை**
'எரிந்து சுடும் இரவி ஈடில் கதிரான்' (திணைமாலை.75: 1)

(ந) <u>வெஞ்சுடர்</u> Veñcuṭar
**தலைவன்**
'நண்ணிநீர் சென்மி னமரவ ராபவே லெண்ணிய வெண்ண மெளிதரோ - வெண்ணிய வெஞ்சுடர் அன்னானை யான்கண்டேன் கண்டாளாம் தண்சுடர் அன்னாளைத் தான்' (திணைமாலை.89)

(ப) <u>இரவி மறைதல்</u> Itavi mar̲aital
(33) **அச்சம், ஒளித்தல்** – fear, hide
'தன் தனிப் புதல்வன் வென்றித் தசமுகன் முடியில் தைத்த மின் தளிர்த்தனைய பல்மா மணியினை வெளியில் கண்டான் ஒன்று ஒழித்தொன்று ஆம் என்று அவ் அரக்கனுக்கு ஒளிப்பான் போல வன் தனிக் குன்றுக்கு அப்பால் இரவியும் மறையப் போனான்' (கம்ப.யுத்.884)

(ம) <u>இரவு நேரத்தில் சூரியன் பாதியாகப் பிளவுபட்டுத் தோன்றுதல்</u> Iravu nērattil cūriyan̲ pātiyāka piḷavupaṭṭut tōn̲r̲utal
(34) **தீமை, அழிவு** - bad omen
'வில் பகல் இன்றியே இரவு விண்டு அற எல் பகல் எறித்துளது என்னத் தோன்றுமால்' (கம்ப.சுந்.372: 1-2)

(ய) <u>ஊழ்திரைப் பாம்பு சேர்ந்த பருதி</u> Ul̲tiraip pāmpu cērnta
(35) **கலக்கம்** – anxiety, confusion
'தோழரை வடுச்செய்திட்டேன் என்று தான் துளங்கி நின்றான் ஊழ்திரைப் பாம்பு சேர்ந்த ஒளிமிகு பருதி ஒத்தான்' (சீவக.1138: 3-4)

(ர) <u>கதிரவன் மறைதல்</u> Katiravan̲ mar̲aital
(36) **துன்பம்** - affliction
'கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்தனவே' (சிலப்.7.41)

(ல) <u>கதிரை இருள் விழுங்குதல்</u>
Katirai iruḷ vil̲iṅkutal
(37) **தீமை, அழிவு, அறத்தை மறம் வெல்லுதல்** – bad omen
'கதிரை இருள் விழுங்கக் காண்பென் காணெல்லா' (சிலப்.20: 5)

(வ) <u>கதிரவன் முளைத்தல்</u>
Katiravan̲ muḷaittal
(38) **துயிலெழுப்புதல், ஒளி** - awaken
'ஊர் துயிலெடுப்ப உரவு நீர் அழுவத்துக் காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலும்' (மணி.7: 125-126)

(ழ) <u>கதிரோன்</u> Katirōn̲
**துயிலெழுப்புதல்** - awake
'உலகு துயிலெழுப்பினன் மலர்கதிரோன்' (மணி.21: 190)

(ள) <u>கதிரவனைப் பரிவேடம் சூழ்தல்</u> Katiravanaip parivēṭam cūḻtal

(39) தீமை, இறப்பு, அழிவு – bad omen
'பருதி வானவன் ஊர் வளைப்புண்டது பாராய்' (கம்ப.ஆரண்.429: 2)

(ற) <u>சூரியன் தோன்றுதல்</u> Cūriyan̲ tōn̲r̲utal

துயிலுணர்தல் - wake
'மின்னும் பூணும் மிளிர் கதிர் ஆரமும் பொன்னும் பூத்ததொர் கற்பகப் பூமரம் அன்ன காளை அமர்துயில் தேறினான் மன்னும் வெஞ்சுடர் மாக்கல் இவர்ந்ததே' (சீவக.1716)

(ன) <u>ஞாயிறு தோன்றுதல்</u> Ñāyir̲u tōn̲r̲utal

(40) பிறப்பு – birth
'இளவள ஞாயிறு தோன்றிய தென்ன நீயோ தோன்றினை நின்னடி பணிந்தேன்' (மணி.10: 11-12)

<u>(i) ஏழ்பரித் தேரோன் கடல் புகுதல்</u> Eḻparit tērōn̲ kaṭal pukutal

(41) தேடுதல் - search
'நாட்டு நல்லிசை நாவலூரன் சிந்தை வேட்ட மின்னிடை இன்னமுதத்தினைக் காட்டு வன்கடலைக் கடைந்து என்ப போல் பூட்டும் ஏழ்பரித் தேரோன் கடல்புக' (பெரிய.303)

(ii) <u>விரிகதிர்ச் செல்வன் தோன்றுதல்</u> Virikatirc celvan̲

(42) பிறப்பு – birth
'விரிகதிர்ச் செல்வன் தோன்றின னென்ன ஈரெண்ணூற்றோடு ஈரெட்டாண்டில் பேரறிவாளர் தோன்றும் அதற்பிற்பாடு' (மணி.12: 76-78)

(ஒப்பு) <u>Sun</u> அதிர்ஷ்டம், அரசாட்சி, அறிவுத்திறம், அறிவாளி, ஆற்றல், ஆரோக்கியம், ஆளுமை, இரத்த சுழற்சி, இயக்கம், இயற்கை, உடலியல் வளர்ச்சி, உண்மை, உரிமை, ஒளி, கடவுள், கிரகணம், கிழமை, சிறந்த நாடோடி, சீர்மை, சுறுசுறுப்பு, செல்வாக்கு, சொர்க்கம், தந்தை, தனித்தன்மை, தனித்த ஆய்வுப்பயணம் செய்பவர், தியாகம், தூய்மைப்பாடு, நடுநிலைமை, நன்மை, நிலைபேறு, நீடிப்பாற்றல், நீதிபதி, நேர்மை, பரிசு, பாதுகாப்பு, புகழ், பெருமை, மகிழ்ச்சி, மறுபிறப்பு, மனிதனின் முழுமைநிலை, மாறி மாறி வரும் வாழ்வு, மீட்பு, முக்கியத்துவம், மெய்யுணர்வு, மேன்மை, வளம், வாழ்வு, வானுலக வலிமை, விண்ணுலகம், விவேகம், விழிப்புணர்வு, வீடுபேறு, வெற்றி; ஆதிக்கம், கிரகணம், குறுகிய வாழ்க்கை, கொடுந்துன்பம், சாதகமற்ற நோக்கு, தன்னல முனைப்பு, நாடோடி, பாவம், வறட்சி, வெப்பம்;
சூரிய உதயம் - ஆட்சியாளரின் நேர்மை, குழந்தைப்பருவம், தியாகம், புதிய ஆரம்பம்;
சூரியன் மறைவு - இறப்பு, உணர்வு வயப்பட்ட துன்பம், முதுமை, வாழ்வின் இருண்ட பகுதியின் தொடக்கம்.

<u>சுடர்</u> <u>Cuṭar</u> **(flame)**

(1) தூய்மை - purity
'கடுக்கி ஒருவன் கடுங்குறளை பேசி மயக்கி விடினும் மனப்பிரிப்பொன்று இன்றித் துளக்கம் இலாதவர் தூய மனத்தார் விளக்கினுள் ஒண்சுடரே போன்று' (நாலடி.189)

<u>சுடுநாராசம் செவிசெறித்தல்</u> Cuṭunārācam Cevicer̲ittal **(insert hot iron in the ear)**

(1) துன்பம் - pain
'மானம் இல்லை மற்றவன் மாட்டென உவந்த ஒள்ளிழை உள்ள நோக்கி நிகழ்ந்தது இற்றென நெருப்பு நுனையுரீஇச்

சுடு நாராசம் செவி செறித்தாங்கு வடிவேல் தானை வத்தவன் தன்னொடு' (பெருங்.உஞ்.47: 235-239)

**சுநந்தை** (குணமாலையின் மாமி)
Cunantai

(1) **கற்பு**
'வசையற நிறைந்த கற்பின் மாலையு மாமி தானும்' (சீவக.1132: 1)

**சுரமை** Curamai **(a town)**

(1) **வளம், செல்வம்**
'விஞ்சை நீள் உலகுடன் விழாக் கொண்டன்னது துஞ்சுநீள் நிதியது சுரமை என்பவே' (சூளா.7: 3-4)

**சுழி** Culi **(whirl)**

(1) **ஆபத்து** - danger
'வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரை நின்றார்' (கலி.140: 25)

(2) **துன்பம், அவலம்** – suffering, affliction
அவல மறு சுழி மறுகலின்' (புறம்.238: 19)

**சுறா** Curā **(shark)**

(1) **வலிமை, கொடுமை** – strong, cruel
'.. .. .. .. செங் கோல் கொடு முடி அவ் வலை பரியப் போகிய கோட் சுறாக் குறித்த முன்பொடு' (நற்.215: 10-12)

(2) **கடுமை** - fierce
'கடுஞ் சுறா எறிந்த கொடுந் தாட் தந்தை' (நற்.392: 1)

(3) **சினம்**
'இன மீன் இகல்மாற வென்ற சினமீன் எறிசுறா வான் மருப்புக் கோத்து நெறிசெய்த' (கலி.131: 6-7)

(4) **விரைவு** - quick
'.. .. .. .. கடுஞ் செலல் வாட் சுறா வழங்கும் வளை மேய் பெருந் துறை' (அகம்.150: 6-7)

(ஆ) <u>சுறா ஏறு எழுதிய மோதிரம்</u> Curā ēru elitiya mōtiram

(5) **காமம்** – love, passion
'அவற்றுள் நறா இதழ் கண்டன்ன செவ் விரற்கு ஏற்பச் சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள் குறி அறிந்தேன்' (கலி.84: 22-24)

(இ) <u>சுறவம் செறி கொடி</u>
Curavam cerI koṭi

(6) **மன்மதன்**
'சுறவம் செறி வண் கொடியோன் உடலம் பொடியா விழி செய்தான்' (திருஞான.தேவா.12: 3-4)

(ஈ) <u>சுறவு</u> Curavu

(7) **காமம்**
'சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவு எறிய அழிகின்றனன்' (திருவா.24: 4)

(ஒப்பு) <u>Shark</u> **வலிமை; ஆபத்து, இறப்பு, தீமை.**

**சூது** Cūtu **(gambling)**

(1) **துன்பம்**
'கட்டு இலா மூதூர் உறைஇன்னா ஆங்கின்னா நட்ட கவற்றினால் சூது' (இன்னா.25: 3-4)

**சூர்** (சூரபன்மன்) Cūr

(1) **கடுமை / தீமை**
'கடுஞ்சூர் மாமுதல் தடிந்து' (பரி.9: 70)

**சூர்ப்பநகை** Cūrppanakai

(1) **கொடுமை** – cruel, inhuman
'சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல் வடிவு கொண்டாளைப் பெண்டு என்று கொண்டாயே' (தனிப்.15: 1-2)

**சூரியகாந்தம்** Cūriyakāntam **(a gem)**

(1) **ஒளி / வெம்மை**
'சூரியற் காண்டலும் சூரிய காந்தம் அஃது ஆரழல் எங்ஙனம் கான்றிடும் அங்ஙனம்' (சீவக.2208: 1-2)

<u>சூரியகுண்டம்</u> Cūriyakuṇṭam **(a pond)**

(1) மீயாற்றல், கடவுட்டன்மை – supernatural, divine
'சோமகுண்டம் சூரிய குண்டம் துறை மூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்' (சிலப்.9: 59-61)

<u>சூளாமணி</u> Cūḷāmaṇi

(1) உயர்வு, சிறப்பு – lofty, special
'மஞ்சு சூழ் மலைக்கோர் சூளா மணியெனக் கருது மன்னா' (சூளா.329: 4)

<u>செங்கோட்டியாழ்</u> 'Ceṅkōṭṭiyāḻ **(a lyre)**

(1) நன்மை - goodness
'பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து செந்திறம் புரிந்த செங்கோட்டி யாழின்' (சிலப்.334: 105-106)

<u>செச்சை மலர்</u> Ceccai malar

(1) சிவப்பு நிறம்
'செச்சை மலர் புரைமேனியன் திருப்பெருந்துறை உறைவான்' (திருவா.34: 9.3)

<u>செம்பியன்</u> Cempiyaṉ **(a monarch)**

(1) ஈரம் / இரக்கம் - compassion
'புள் உறு புன்கண் தீர்த்த, வெள் வேல், சினம் கெழு தானை, செம்பியன் மருக!' (புறம்.37: 5-6)

(2) வள்ளன்மை, ஈகை
'புறவின் அல்லல் சொல்லிய கறையடி யானை வன்மருப்பு எறிந்த வெண்கடைக் கோல்நிறை துலாம் புக்கோன் மருக ஈதல்நின் புகழும் அன்றே' (புறம்.39: 1-4)

<u>செம்பு</u> Cempu **(copper)**

(1) சிவப்பு நிறம்
'செம்பு காட்டிய கண் இணை பால் எனத் தெளிந்தீர்' (கம்ப.ஆரண்.504: 1)

<u>செம்பொறி ஆகம்</u> Cempoṟi Ākam

(1) அழகு
'அம் பகட்டு எழிலிய செம் பொறி ஆகத்து' (புறம்.68: 5)

(2) மாண்பு, மாட்சி
'புகன்ற மாண் பொறிப் பொலிந்த சாந்தமொடு' (பதி.88:30)

<u>செம்மூதாய்</u> Cemmūtāy

(1) அழகு
'அணி மிகு கானத்து அகன் புறம் பரந்த கடுஞ் செம்மூதாய் கண்டும், கொண்டும்' (நற்.362: 4-5)

(ஆ) <u>கோவம்</u> Kōvam

(2) சிவப்பு நிறம்
'.. .. .. .. தீம்பெயற் காரும் ஆர்கலி தலையின்று தேரும் ஓவத்தன்ன கோவச் செந் நிலம்' (அகம்.54: 2-4)

<u>செயலை</u> Ceyalai **(a tree)**

(1) அழகு
'மணி கெழு நெடு வரை அணி பெற நிவந்த செயலை அம் தளிர் அன்ன' (நற்.244: 9-10)

<u>செருந்தி</u> Cerunti **(a flower)**

(1) நறுமணம்
'எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ' (ஐங்.141: 1)

(2) தண்மை
'நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ, மாலை மணி இதழ் கூம்ப, காலைக் கள்நாறு காவியொடு தண்ணென மலரும்' (அகம்.150: 9-11)

<u>செருப்பிடை பரல்</u> Ceruppiṭai paral

(1) துன்பம் - affliction
'செருப்பிடைச் சிறு பரல் அன்னன்' (புறம்.257: 1)

<u>செல்வம்</u> Celvam **(wealth)**

(1) நிலையாமை - transient
'அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட மறுசிகை நீக்கி உண்டாரும் வறிஞராய்ச் சென்றிரப்பர் ஓரிடத்துக்

கூழ்எனின் செல்வம் ஒன்றுண்டாக வைக்கற்பாற் றன்று' (நாலடி.1)

<u>செல்வர் மனம்</u> Celvar Maṉam

(1) அழகு
'கல்பயில் கானம் கடந்தார் வர, ஆங்கே நல்லிசை ஏறொடு வானம் நடுநிற்பச் செல்வர் மனம்போல் கவின்ஈன்ற, நல்கூர்ந்தார் மேனிபோல் புல்லென்ற காடு' (கார்.18)

<u>செவ்வல் குன்றம்</u> Cevval Kuṉṟam

(1) சிவப்பு நிறம், சிறப்பு, பழமை
'.. .. .. தொல்சிறப்பில் செவ்வல்அம் குன்றம்போல் தோன்று புனல்நாடன் தெவ்வரை அட்ட களத்து' (களவழி.10: 2-4)

<u>செவ்வழி</u> Cevvaḻi (பண்)

(1) மாலைக்காலம் – evening time
'சேக்கை நல்லியாழ் செவ்வழி பண்ணி' (பெருங்.உஞ்.33: 89)

<u>சேக்கை</u> (கிளை) Cēkkai (branch)

(1) உடம்பு - body
'கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி வாளாதே போவரால் மாந்தர்கள் வாளாதே சேக்கை மரனொழியச் சேண்நீங்கு புள்போல யாக்கை தமர்க்கொழிய நீத்து' (நாலடி.30)

<u>சேடம்</u> Cēṭam

(1) புனிதம், இறைத்தொடர்பு
'செய்தவப் பாவமெல்லாம் தீர்த்திடும் தீர்த்தன் பாதம் எய்திய சேடம் கூவித் திறைஞ்சுபு தொழுது வாழ்த்தி' (சீவக.821: 1-2)

(ஆ) <u>சேடப்பூ</u> Cēṭappū
புனிதம்
'இன்னணம் இறைவனை ஏத்தி ஏந்தறன் சென்னியுள் சேர்த்திய சேடப் பூவினன்' (சூளா.185: 1-2)

<u>சேயோன்</u> Cēyōṉ

(1) குறிஞ்சித்திணை
'சேயோன் மேய மைவரை உலகமும்' (தொல்.951)

(ஆ) <u>முருகு</u> Muruku

(2) வலிமை, சீற்றம்
'முருகு உறழ் முன்பொடு கடுஞ் சினம் செருக்கி' (நற்.225: 1)

(3) அருள்
'என்னை அருளி அருள் முருகு சூள் சூளின்' (பரி.8: 65)

(4) இனிமை
'உருவ வெண் மணல் முருகு நாறு தண் பொழில்' (அகம்.137: 8)

(5) சிறப்பு
'உரு கெழு சிறப்பின் முருகு மனைத் தரீஇ' (அகம். 138: 10)

(6) ஆற்றல்
'முருகு உறழ் முன்பொடு பொருது களம் சிவப்ப' (அகம்.181: 6)

(7) மேன்மை
'முருகு ஒத்தீயே, முன்னியது முடித்தலின்' (புறம்.56: 14)

(8) இறைமை
'வல்லோன் தைஇய வரிப் புனை பாவை முருகு இயன்றன்ன உருவினை ஆகி' (மது.724)

(இ) <u>முருகன் Murukaṉ</u>
சினம்
'சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து' (அகம்.59: 11)

(9) கடவுட்டன்மை
'அணங்குடை முருகன் கோட்டத்து' (புறம்.299:6)

(10) உயர்வு
'அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருக!' (திருமுரு.269)

(ஈ) <u>வேள்</u> Vēḷ

(11) வெற்றி
'வென்றி நெடுவேள் என்னும் அன்னையும்' (குறு.111: 2)
சினம்
'கடுஞ் சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு' (பதி.11: 6)

(12) வீரம்
'கடம்பு அமர் நெடு வேள் அன்ன, மீளி' (பெரும்.75)

(13) வளம்

'சீர் மிகு நெடு வேட் பேணி' (மது.614)

(உ) <u>சேஎய்</u> Cēey
வெற்றி
'ஒருவனை வாழி ஓங்குவிறற் சேஎய்' (பரி.5: 54)

(14) புகழ்
'எய்யா நல்லிசைச் செவ்வேல் சேஎய்' (திருமுரு.61)

(ஒப்பு) <u>Karthikeya</u> தற்கட்டுப்பாடு, தீமையை அழித்தல், படைத்தலைவன், போர்க்கடவுள், மாறாத இளமை.

<u>சேல்</u> Cēl

(1) கருமை
'கயல சேல கருங்கண்ணியர் நாள்தொறும்' (திருஞான.தேவா.1442: 1)

(2) சிவப்பு நிறம்
'செஞ்சேல் அன்ன கண்ணார் திறந்தே கிடந்து உற்றலறி' (சுந்.தேவா.640: 1)

<u>சேவல்</u> Cēval **(male bird)**

(1) ஆண் - male
'வண்ணப் புறவின் செங்காற் சேவல்' (நற்.71: 8)

(2) அழகு
'மணி நிற மலர்ப்பொய்கை, மகிழ்ந்து ஆடும் அன்னம்தன் அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென' (கலி.70: 1-2)

(3) விடியல் - dawn
'குடுமி நெற்றி நெடு மரச் சேவல் தலைக் குரல் விடியற் போகி' (அகம்.87: 5-6)

(4) வீரம்
'மனையுறை கோழி மறனுடைச் சேவல்' (அகம்.277: 15)

(5) துயிலெழுப்புதல் - awaken
'ஒண்பொறிச் சேவல் எடுப்ப, ஏற்று எழுந்து' (புறம்.383: 1)

(ஆ) <u>சேவல் கொடி</u> Cēval koṭi

(6) விடியல் / ஒளி / அறிவு
'.. .. .. .. புகர்இல் சேவல்அம் கொடியன்' (திருமுரு.210-211)

(இ) <u>வாரணம்</u> Vāraṇam

(7) காலம், வெப்பம் – time, heat
'அல்லல் இல் அனலன் தன் மெய்யின் பிரித்து, செல்வ வாரணம் கொடுத்தோன்' (பதி.5: 57-58)
விடியல்
'பொறி மயிர் வாரணம் பொழுது அறிந்து இயம்ப' (புறம்.398: 3)

(ஈ) <u>வாரணக்கொடி</u> Vāraṇakkoṭi
அறிவு / ஒளி / விடியல்
'வாரணக் கொடியொடு வயிற் பட நிறீஇ' (திருமுரு. 119)

(உ) <u>கோழி</u> Kōḻi
துயிலெழுப்புதல் - awaken
'கூட்டு முதலுறையும் கோழி துயிலெடுப்பப் பாட்டு முரலுமாம் பண்' (திணைமாலை.143: 3-4)

(ஊ) <u>கான வாரணம்</u> Kāṉa vāraṇam
விடியல்
'கான வாரணம் கதிர் வர இயம்ப' (சிலப்.13: 37)

(எ) <u>வாரணக் கம்பலை</u> Vāraṇak kampalai

(8) மருதம்
'கணங்கொள் வாரணக் கம்பலைச் செல்வமும்' (சூளா.15: 2)

(ஏ) <u>வாரணம் ஆயிரம் சூழ்தல்</u> Vāraṇam āyiram cūḻtal

(9) திருமணம்
'வாரணம் ஆயிரம் சூழ வலம் செய்து நாரணன் நம்பி நடக்கின்றான் என்று' (நாலா.556: 1-2)

(ஒப்பு) <u>Cock, Cockeral</u> அதிர்ஷ்டம், அறிவாற்றல், ஒளி, சூரியன், தன்னம்பிக்கை, நேரம், பாதுகாப்பு, முன்னறிதிறம், மீட்பு,

வளமை, விடியல், விவேகம், விழிப்புணர்வு; எதிர்ப்பு, கழிகாமம், தன்முனைப்பு; காட்டிக்கொடுத்தல், தீமையை விரட்டுதல், தூய்மைப்படுத்தல்.

**சேறு** Cēṟu

(1) **ஈரம் / குளிர்ச்சி**
*'தண் சேறு தாஅய், மதனுடை நோன் தாள்'* (*நற்.* 8 :7)

(2) **வளம்**
*'ஆறு செல் வம்பலர் சேறு கிளைத்து உண்ட'* (*அகம்.*137:1)

(3) **ஆபத்து**
*'ஆற்ற வினைசெய்தார் நிற்பப் பலவுரைத்து ஆற்றாதார் வேந்தனை நோவது- சேற்றுள் வழாமைக் காத்தோம்பி வாங்கும் எருதாங் கெழாமைச் சாக்கா டெழல்* (*பழமொழி*. 313)

(ஆ) **அள்ளல்** Aḷḷal

(4) **துன்பம்**
*'கடும்புனல் தொகுத்த நடுங்கஞர் அள்ளல்'* (*குறு.* 103:1)

(5) **தீமை, பகை**
*'பகைக் கூழ் அள்ளல் பட்டு, மிகப் பல் தீ நோய் தலைத்தலைத் தருமே'* (*புறம்.* 185: 5-6)

(இ) **அளறு** Aḷaṟu

(6) **நரகம்**
*'ஒருமைச் செயல் ஆற்றும் பேதை- எழுமையும் தான் புக்கு அருந்தும் அளறு'* (*குறள்.* 835)

(7) **குருதி**
*'.. .. .. .. .. பறியா நீள் இரும் பனைமிசைப் பல பதினாயிரம் குலை தரை உதிர்வபோல .. .. .. .. .. .. .. .. .. அளறு சொரிபு, நிலம் சோர'* (*பரி.*2: 43-47)

(8) **காம இன்பம்**
*'படுகடன் ஆதியில் பட்டது நினையான் தொடுகழல் குருசில் வடுவுரை நிற்ப இன்ப அளற்றுள் இறங்கினன் ஆதலின் துன்பம் துடைத்த தொழிலே போல'* (*பெருங்.இலா.*9: 225-228)
**துன்பம்**
*'கொழுங்களி அளற்றுள் வீழ்ந்தும் கொழும்புகை மடுக்கப் பட்டும்'* (*சீவக.*2775.2)

(ஈ) **தொளி** Toḷi

(9) **வளமை**
*'உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர் முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறுவில்* (*பெரும்.*211-212)

(ஒப்பு) Mud, Marsh, swamp
**வளமை, வளர்ச்சியின் தொடக்க நிலை, இறப்பு, இருள், சுயநலம், மயக்கநிலை, வறுமை.**

**சேனை** Cēṉai **(army)**

(1) **மிகுதி** - abundance
*'வீறுசால் வேந்தன் வினையும் முடிந்தன; ஆறும் பதமினிய ஆயின - ஏறொ(டு) அருமணி நாகம் அனுங்கச் செருமன்னர் சேனைபோல் செல்லும், மழை'* (*கார்.*20)

**சோதமன்** Cōtamaṉ **(a person)**

(1) **நடுநிலைமை** - neutral
*'சொரிதரு விசும்பில் சோதமன் குறுகிப் பாத்தில் பெருமைப் பரதன் முதலாச் சேய்த்தின் வந்தநின் குலமும் செப்பமும்'* (*பெருங்.நர.*3: 169: 171)

**சோமகுண்டம்** Cōmakuṇṭam **(a pond)**

(2) **மீயாற்றல், கடவுட்டன்மை** – supernatural power, divine
*'சோமகுண்டம் சூரிய குண்டம் துறை மூழ்கிக் காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்'* (*சிலப்.*9: 59-61)

# ஞ

**ஞமலி** Ñamali **(dog)**

(1) **எளிமை** - simple
*'வன் கைக் கானவன் வெஞ் சிலை வணக்கி, ஊமிசைத் தவிர்த்த*

முளவுமான் ஏற்றையோரு மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட' (நற். 285: 3-5)

(2) **சினம்** - angry
'சினவுக்கொள் ஞமலி செயிர்த்துப்புடை ஆட' (அகம். 388: 14)

(3) **கொலைத்தன்மை** - killing
'கூடினர் விடு பகழிகளொடு கொலை ஞமலிகள் வழுவி' (பெரிய.738: 5-6)

(ஆ) <u>நாய்</u> Nāy

**சினம்** - angry
'கடுங் குரற் பம்பைக் கத நாய் வடுகர்' (நற். 212: 5)

(4) **கொடுமை** - cruel
'கொலை வெங் கொள்கையொடு நாய் அகப்படுப்ப' (கலி. 23:16)

(5) **வலிமை** - strong
'இயல் முருகு ஒப்பினை, வயநாய் பிற்பட'
(அகம். 118: 5)

(6) **விரைவு** - quick
'மான் கணம் தொலைச்சிய கடு விசைக் கதநாய்' (புறம்.205: 8)

(7) **காவல்** - watch
'தொடர் நாய் யாத்த துன் அருங் கடி நகர்' (பெரும்.125)

(8) **இகழ்ச்சி, இழிவு, தாழ்வு** - chide, despise, lowly
'தாயானும் தந்தையா லானும் மிக(வு) இன்றி வாயின்மீக் கூறும் அவர்களை ஏத்துதல் நோயின்(று) எனினும் அடுப்பின் கடைமுடங்கும் நாயைப் புலியாம் எனல்' (பழமொழி.67)

(9) **கீழ்மை** – meanness, base
'கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம் வாயாற் போர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை - நீர்த்தன்றிக் கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ மேன்மக்கள் தம்வாயால் மீட்டு' (நாலடி.70)

(10) **நன்றி, நட்பு, பெருமை, உயர்வு** - gratitude, friendship, greatness, eminence
'யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார் கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல் மெய்யதா வால்குழைக்கும் நாய்' (நாலடி.213)

(11) **அறிவிலார்** - ignorant
'கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து நல்லறிவாளர் இடப்புக்கு மெல்ல இருப்பினும் நாயிருந் தற்றே இராஅது உரைப்பினும் நாய் குரைத்தற்று' (நாலடி.254)

(12) **அடிமை**
'உத்தம அடி நாயேன் ஓதுவது உளது என்றான்'
(கம்ப.அயோ.671: 4)

(13) **கேவலம், கீழ்மை**
'நாய் தரக் கொள்ளும் சீயம் நல்லரசு' (கம்ப.யுத்.943: 3)

(14) **தொண்டு**
'ஆரூரைம் மறத்தற்கு அரியானை அம்மான் தன்திருப் பேர்கொண்ட தொண்டன் ஆரூரன் அடி நாய் உரை வல்லார் அமர லோகத்து இருப்பவர் தாமே' (சுந்.தேவா.986: 5-8)

(15) **தீமை, பொல்லாமை**
'நாசனே நான் யாதும் ஒன்று அல்லாப் பொல்லா நாயான நீசனேனை ஆண்டாய்க்கு நினைக்க' (திருவா.5: 51. 3-5)

(இ) <u>நாய்க்கால் சிறுவிரல்</u> Nāykāl ciṟuviral

(16) **நெருக்கம், இழிவு** - closeness, degraded
'நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணியர் ஆயினும் ஈக்கால் துணையும் உதவாதார் நட்பென்னாம்' (நாலடி.218: 1-2)

(ஈ) <u>செந்நாய்</u> Sennāy

(17) **தலைவன்**
'ஒய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி' (நற்.43: 3)

(18) **வேட்டை** - hunting
'வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்' (குறு.56: 1)

(ஈ) <u>நாய்வால்</u> Nāyvāl

(19) **அடக்கமின்மை, திருந்தாமை** – immodest, unreformed
'நிறையான் மிகுகல்லா நேரிழை யாரைச் சிறையான் அகப்படுத்தல் ஆகா- அறையோ!வருந்த வலிதினின் யாப்பினும் நாய்வால் திருந்துதல் என்றுமோ இல்' (பழமொழி.336)

(உ) **<u>சுணங்கன்</u>** Suṇaṅkan

(20) **ஆசை / பேராசை** - desire, avarice
'பெருகு தெண்கடல் ஊற்றுண் பெருநசை ஒரு சுணங்கனை ஒக்கும் தகைமையேன்' (பெரிய.6: 3-4)

(ஊ) **<u>ஞமலி நா</u>** Ñamali nā

(21) **சிவப்பு, மென்மை, அழகு**
'இளைப்புறு ஞமலி நலத்தகு நாவின் செம்மையும் மென்மையும் சிறந்து வனப்பெய்தி' (பெருங்.இலா.19: 176-177)

(ஒப்பு) <u>Dog</u> **ஆற்றல், உண்மை, காவல், தந்திரம், நேர்மை, பாதுகாப்பு, மீட்பு, வளமை, விடியல், விழிப்புணர்வு, வேட்டை, இழிவு, இறப்பு, அடிமைத் தனம், இரக்கமின்மை, ஏறுமாறான பண்பு, சீற்றம், தற்பெருமை பேசுதல், தன்முனைப்பு, தீமை, தெருச்சுற்றல், பேராசை, பொறாமை, போர், பேருண்டி, மடமை.**

**<u>ஞாழல்</u>** Ñāḻal **(a tree)**

(1) **தலைவி, நறுமணம்**
'புது வீ ஞாழலொடு புன்னை தாஅம் மணம் கமழ் கானல்' (நற்.167: 8-9)

(2) **இன்பம்**
'பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை ஒள் இணர் ஞாழல் முனையின், பொதி அவிழ் புன்னை அம் பூஞ் சினைச் சேக்கும் துறைவன்' (ஐங். 169: 1-3)

**<u>ஞெகிழி</u>** Ñekiḻi **(fire brand)**

(1) **ஒளி**
'கானவன் எறிந்த கடுஞ் செலல் ஞெகிழி வேய் பயில் அடுக்கம் சுடர மின்னி, நிலை கிளர் மீனின், தோன்றும் நாடன்' (நற்.393: 5-7)

(2) **காப்பு**
'ஏனல் அம் சிறுதினை காக்கும் சேணோன் ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை மீன்படு சுடர்ஒளி வெரூஉம்' (குறு.357: 5-7)

**<u>ஞெமன்ன் தெரிகோல்</u>** Ñemann terikōl **(balance)**

(1) **நடுநிலைமை** – just, neutral
'.. .. .. .. .. .. ஞெமன்ன் தெரி கோல் அன்ன செயிர் தீர் செம் மொழி' (அகம். 349: 3-4)

(2) **துல்லியம் / சமன்** – exact, equal, unbiased
'உருவும் புகழும் ஆகி, விரி சீர்த் தெரிகோல் ஞமன்ன் போல, ஒரு திறம் பற்றல் இலியரோ! நின் திறம் சிறக்க!' (புறம்.6: 8-10)

(ஆ) **<u>துலாஅம்</u>** Tulāam

(3) **நடுநிலைமை / ஒருபாற்கோடாமை** – just, balanced
'புறவின் அல்லல் சொல்லிய, கறை அடி யானை வால் மருப்பு எறிந்த வெண் கடைக் கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக!' (புறம். 39: 1-3)

(இ) **<u>ஞெமன் கோல்</u>** Ñeman kōl

(4) **நடுநிலைமை**
'ஞெமன் கோல் அன்ன செம்மைத்து ஆகி, சிறந்த கொள்கை அறம் கூறு அவையமும்' (மது.491-492 )

(ஈ) **<u>சமன் செய்து சீர் தூக்கும் கோல்</u>** Caman ceytu cīr tūkkum kōl

(5) **நடுநிலைமை**
'சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால் கோடாமை சான்றோர்க்கு அணி.' (குறள். 118)

(உ) **<u>சீர்நிறை கோல்</u>** Cīrniṟai kōl

**நடுவுநிலைமை**
*'வாலிழைப் பணைத்தோள் வாசவ தத்தைக்கும் பாசிழை அல்குல் பதுமா பதிக்கும் சீர்நிறை கோல் போல் தான் நடுவாகி'* (பெருங்.வத்.5: 42-44)

**(ஊ) துலை** Tulai
**நடுநிலைமை**
*'சீலம் அல்லன நீக்கிச் செம் பொன் துலைத் தாலம் அன்ன தனி நிலை தாங்கிய'* (கம்ப.அயோ.112: 1-2)

**(ஒப்பு)** Balance **துலாம் இராசி, நீதி; இறப்பு, பஞ்சம், வறட்சி.**

## த

**தகர்** Takar **(ram, goat)**

(1) **வலிமை**
*'வார் கோட்டு வயத் தகர் வாராது மாறினும்'* (ஐங். 238:1)

(2) **அழகு, மென்மை**
*'திருந்துகோன் ஞமன்தன் மெய்யிற் பிரிவித்து இருங்கண் வெள்யாட்டு எழின்மறி கொடுத்தோன்'* (பரி. 5:61-62)

**(ஆ) கிடாஅய்** Kitāay

(3) **பலி** - sacrifice
*'நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய் நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி'* (அகம். 156:14-15)

**(இ) துரூஉ** turūu

(4) **தியாகம்** - selflessness
*'நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்'* (அகம். 35:8-9)

**(உ) விடை** viṭai

(5) **வலிமை**
*'மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடை'* (திருமுரு. 232)

**(ஊ) மை விடை வீழ்த்தல்** Mai viṭai vīlttal

(6) **பலி / வளமை**
*'மட்டு வாய் திறப்புவும் மை விடை வீழ்ப்பவும் அட்டு ஆன்று ஆனாக் காழுந்துவை ஊன் சோறும் பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி'* (புறம். 113:1-3)

**(எ) மறிகள் விளையாடாதிருத்தல்** Marikaḷ viḷaiyāṭātiruttal

(7) **தீமை**
*'மறி தெறித்தாடா வருவதொன்று உண்டு'* (சிலப்.17: 3.2)

**(ஏ) மறி** Mari

(10) **அறிவின்மை**
*'அன்றக் கோட்டத்துள் அறிவிலா மறிதலை அறுப்பான்'* (நீலகேசி.34: 1)

**(ஐ) மறியறுத்தல்** Mariaruttal

(11) **தெய்வத்தை மகிழ்வித்தல்**
*'வுண்டதாயிற் றோர்குழவி யென்னவுவப் பித்தற்குக் கொண்டுவந்தே மறியறுக்க வென்றார் கொலையாளர்'* (நீலகேசி.36: 3-4)

**(ஒ) மேழகம்** Mēlakam

(12) **விரைவு**
*'விரைசெலல் வெம்பரி மேழகம் ஏற்றிக் குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான்'* (சீவக.521: 3-4)

**(ஒப்பு)** Goat, Sheep **அன்பு, அறியாமை, எளிமை, உதவியற்ற நிலை, கபடமற்ற தன்மை, சுதந்திரம், திக்கற்ற நிலை, நன் மனப்பாங்கு, நேர்த்தி, நுட்பமாகக் கேட்கும் திறன், பிடிவாதம், மென்பண்பு, முன்னறிவிப்பு, வளமை, விரைவீக்கம், வீரியம், வேனிற்காலம், அறிவு மழுக்கம், ஒழுக்கக் கேடு, கழிகாமம், நேர்மையற்ற தன்மை, பழியார்வம், மிக்க அருவருப்பு, கறுப்பு ஆடு - அழிவு, தீமை, துரதிர்ஷ்டம்.**

ஆட்டுக்குட்டி - அறியாமை, அமைதி, இனிமை, எளிதில் வசப்படுத்தக்க நிலை, குறும்பு, தன்னடக்கம், தியாகம், தூய்மை, பணிவு, மன்னிக்கும் மனநிலை.
பலியாடு - கண்டனம், தண்டனை, பாவ நிராகரிப்பு.

**தகரம்** Takaram (வாசனைப்பொருள்)

(1) நறுமணம், இன்பம்
*'தகர நாறிருஞ் சோலைச் சயம்பூறான்'* (சூளா.1810: 1)

**தண்டு** Taṉṭu (rod)

(1) ஆதரவு - support
*'இடையன் ... ... ... ... ... ... ... ... ... தண்டு கால் வைத்த ஒடுங்கு நிலை மடி விளிி'* (நற்.142: 4,6)

(ஆ) கதை, சக்கரம், வாள், வில் போன்ற போர்க்கருவிகள் தாமே போர் செய்தல் Katai, cakkaram, vāḷ, vil pōṉra pōrkkaruvikaḷ tāmē pōr ceytal

(2) அழிவு, தீமை – evil omen
*'தண்டோடுதிகிரி வாள் தனு என்று இன்னை மண்ட அமர் புரியுமால் ஆழி மாறு உற'* (கம்ப.சுந்.375: 3-4)

**தண்ணம்** Taṉṉam

(1) இறப்பு
*'இழைத்தநாள் எல்லை இகவா பிழைத்தொரீஇக் கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கில்லை ஆற்றப் பெரும்பொருள் வைத்தீர் வழங்குமின் நாளைத் தழீஇம் தண்ணம் படும்'* (நாலடி.6)

**தந்தை** tantai (father)

(1) மேன்மை – superiority, excellence
*'.. .. .. மேதக்க தந்தை யெனப்படுவான் தன்னுவாத்தி தாயென்பாள் முந்துதான் செய்த வினை'* (நான். 45: 2-4)

**தமனகம்** (மருக்கொழுந்து) Tamaṉakam

(1) பச்சை நிறம்
*'பச்சைத் தமனகத்தோடு பாதிரிப் பூச் சூட்ட வாராய்'* (நாலா.184: 7-8)

**தமிழ்** Tamiḻ

(1) நன்மை - goodness
*'இரு பாற்படுக்கும் நின் வாள்வாய் ஒழித்ததை அதூஉம் சாலும் நல் தமிழ் முழுது அறிதல்'* (புறம். 50: 9-10)

(2) நிலைபேறு – stable, everlasting
*'தமிழ் நிலைபெற்ற, தாங்கு அரு மரபின்'* (சிறுபா. 66)

(3) ஈடிலா இனிமை – unmatched sweetness
*'முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண் முத்துக் கனிந்தார் களவியற் கொள்கைக் கணிந்தார் இணைமாலை ஈடிலா இன்தமிழால் யாத்த திணைமாலை கைவரத் தேர்ந்து'* (திணைமாலை.பாயிரம்.154)

(4) வளமை - flourishing
*'வண் தமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்து'* (தனிப்.69: 1)

**தயரதன்** Tayarataṉ (a king)

(1) கொடை, வள்ளன்மை
*'தருகை நீண்ட தயரதன்தான் தரும் இரு கை வேழத்து இராகவன்தன் கதை'* (கம்ப.பால.1: 1-2)

**தயிர்** Tayir (curd)

(1) இனிமை
*'தீம் தயிர் கடைந்த திரள் கால் மத்தம்'* (அகம். 87:1)

(2) வெண்மை
*'வேளை வெண்பூ வெண் தயிர் கொளீஇ '* (புறம். 215:3)

(3) தண்மை
*'தாழி தரை ஆக தண் தயிர் நீர் ஆக'* (கம்ப.ஆரண்.100: 5)

(4) நிற்றல்
'உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பால் தயிர் மோர் பருவத்தினாம் பரியாயப் பெயரென்பன் பாலழிந்து தருவித்து உரைத்த தயிர் உருவாய் மும்மைத் தன்மையதாம் திருவத்ததென் பொருளாதலைத்

தேர தெளியிதென்றாள்' (நீலகேசி.387)

(ஆ) மத்தார் தயிர் Mattār tayir

(5) சஞ்சலம், அசைவு
'மத்தார் தயிர்போல் மறுகும் என் சிந்தை' (திருநா.தேவா.867: 2)

(இ) மத்துறு தயிர் Mattaṟu tayir

(6) கலங்குதல், மறுகுதல்
'மத்துறு தயிரின் உள்ளம் மறுகினன் மயங்குகின்றான்' (கம்ப.யுத்.2151: 2)

<u>தருப்பை</u> Taruppai **(a grass)**

(1) தூய்மை
'தாழை முழத்து தருப்பை வேய்ந்த' (பெரும். 264)

(2) புனிதம் - holy
'உய்த்தபோது தருப்பையில் ஒண் பதம் வைத்த வேதிகைச் செய்தி மனக்கொள்வாள்' (கம்ப.சுந்.352: 3-4)

(ஆ) தீர்த்தப்புல் Tirttappul
தூய்மை
'வெஞ்சுடர் வீரன் நெஞ்சுமுதல் நீவித் தென்மருங்கு மடுத்த தீர்த்தப் புன்மிசை மென்மருங்கு எழிலியை மெல்லென நடாஅய்' (பெருங்.இலா.3: 115-117)

<u>தருமணல் பரப்புதல்</u> Tarumaṇal parapputal

(1) திருமணம், எழில், வளம்
'தருமணல் தாழப்பெய்து, இல் பூவல் ஊட்டி எருமைப் பெடையோடு, எமர் ஈங்கயரும் பெரு மணம் எல்லாம் தனித்தே ஒழிய' (கலி. 114:12-14)

(2) புதுமை
'வரைப்பில் மணல் தாழப் பெய்து, திரைப்பில் வதுவையும் ஈங்கே அயர்ப ' (கலி. 115:19-20)

<u>தருமன்</u> Taruma<u>n</u> **(a king)**

(1) அருள் / இரக்கம், கொடை - grace / sympathy, benevolence
'தருமன் தண்ணளியால் தனது ஈகையால்' (சீவக.160: 1)

<u>தலை</u> Talai **(head)**

(1) தலைவன்
'அரு நிலை உயர் தெய்வத்து அணங்கு சால் தலை காக்கும் உருமுச் சூழ் சேண் சீமை' (பரி. 9:2-3)

(2) முதல் - main
'விரி கதிர் மதியமொடு, வியல் விசும்பு, புணர்ப்ப எரிசடை எழில் வேழம், தலையெனக் கீழ் இருந்து' (பரி. 11:1-2)

(3) தலைமை
'அறம் தலைப்பிரியா ஆறும் மற்று அதுவே' (கலி. 9:24)

(4) சிறப்பு
'தீது இல் யாக்கையொடு மாய்தல் தவத் தலையே' (புறம். 214:14)

(5) தொடக்கம்
'மலைத் தலைய கடற்காவிரி' (பட். 6)

(6) உயர்வு
'நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம், கொலை அஞ்சிக் கொல்லாமை சூழ்வான், தலை' (குறள். 325)

(ஒப்பு) <u>Head</u> அறிவு நுட்பம், ஆண்மை, ஆற்றல், ஆன்மீக வாழ்வு, உரிமை, எண்ணங்கள், ஒளி, சூரியன், தலைமை, தனித்தன்மை, தியாகம், தீமையை அழித்தல், மேடராசி, வளமை.

<u>தலை மழித்தல்</u> Talai maḻittal

(1) துறவு
'மழிக்கு மாறுந் தலைகளை மையிட்டு' (நீலகேசி.238: 3)

(ஆ) <u>தலையைச் சிரைத்தல்</u> Talaiyaic ciraittal

(2) அவமானம், தண்டனை – dishonour, punishment
'செருக்கு உற்றான் வீரம் சிதையத் தலையைச் சிரைத்திட்டான்

வன்மையைப் பாடிப் பற' (நாலா.309: 3-4)

**தலையில் சூடப்பட்ட மலர்கள் நிலத்தில் உதிர்தல்** Talaiyil cūṭappaṭṭa malarkaḷ nilattil utirtal

(1) **துன்பம், இறப்பு, நிலையாமை**
'தாதின வினமலர் பலவும் தலையன நிலமிசை உதிர .. .. .. வேதனை பெரிதுடைத்து அடிகள் விளிகவிப் பிறப்பென உரைத்தாள்' (நீலகேசி.73: 2,4)

**தலையில் சூட்டப்பட்ட மாலை சரிதல்** Talaiyil cūṭṭappaṭṭa mālai carital

(1) **தீமை**
'சீர் அலங்காரச் சித்திர முடிமிசைத் தாரணி கோதை தாழ்ந்து புறத்தசைய' (பெருங்.மகத.24: 185-186)

**தவ்வை** Tavvai

(1) **வறுமை** - poverty
'அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்' (குறள்.167)

(ஆ) **முகடி** Mukaṭi
**சோம்பல்**
'மடி உளாள் மா முகடி என்ப மடி இலான் தாள் உளாள் தாமரையினாள்' (குறள். 617)

**தவசியர்** Tavaciyar

(1) **பொலிவு** - radiance
'நீடிய சடையோடு ஆடா மேனிக் குன்று உறை தவசியர் போல, பலவுடன் என்றுழ் நீள் இடைப் பொற்பத் தோன்றும்' (நற். 141:4-6)

**தளவம்** Taḷavam **(a creeper)**

(1) **நறுமணம்**
'தண் துளிக்கு ஏற்ற பைங்கொடி முல்லை முகை தலை திறந்த நாற்றம் புதல்மிசைப் பூஅமல் தளவமொடு, தேம் கமழ்பு கஞல்' (குறு. 383:1-3)

(2) **அழகு**
'காயா, கொன்றை, நெய்தல், முல்லை, போதவிழ் தளவமொடு பிடவு, அலர்ந்து கவினிப் பூ அணி கொண்டன்றால் புறவே' (ஐங். 412:1-3)

(3) **கார்காலம்**
'தண் பெயல் அளித்த பொழுதின் ஒண் சுடர்த் தோன்றியும் தளவமும் உடைத்தே' (ஐங்.440: 2-3)

(ஆ) **தளவு** Taḷavu

(7) **தண்மை, தலைவி**
'எல்லை தருவான் கதிர்பருகி ஈன்றகார் கொல்லைதரு வான்கொடிகள் ஏறுவகாண் முல்லை பெருந்தண் தளவொடுதம் கேளிரைப்போல் காணாய் குருந்தம் கொடுங்கழுத்தம் கொண்டு' (திணைமாலை.105)

**தளிர்** Taḷir **(leaf sprout)**

(1) **அழகு**
'அடைகரை மாஅத்து அலங்கு சினை பொலியத் தளிர் கவின் எய்திய தண் நறும் பொதும்பில்' (நற். 118:1-2)

(2) **மென்மை**
'துளிதலைத் தலைஇய தளிர் அன்னோளே' (குறு. 222:7)

(3) **தண்மை**
'அந்தண் தளிர வெளவும் மேனி' (ஐங். 38:3)

(8) **இளமை** – young age
'தாஞ்சால வாழ்நாள் தளிர் ஈனும் தகைய துண்டு' (நீலகேசி.10: 3)

(ஆ) **குறுமுறி** Kuṟumuṟi

(4) **பிறப்பு, உயிர்ப்பு** – birth, alive
'குறு முறி ஈன்றன, மரனே' (அகம். 259:1-4)

(இ) **எரியுறு தளிர்** Eriyuṟu taḷir

(6) **துன்பம்** – grief

'என்னுறு நிலைமை ஓராது எரியுறு தளிரின் வாடி' (சீவக.1726: 1)

**<u>தறை இடைப்படுத்தல்</u>** Tar̲ai iṭaippaṭuttal

(1) **வெற்றி**
'அடியனேன் அவரை எல்லாம் தறையிடைப் படுத்துகின்றேன்' (பெரிய.419: 6-7)

**<u>தாடகை</u>** Tāṭakai **(a demoness)**

(1) **கொடுமை** - cruel
'சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல் வடிவு கொண்டாளைப் பெண்டு என்று கொண்டாயே' (தனிப்.15: 1-2)

**<u>தாடகை இறப்பு</u>** Tāṭakai ir̲appu

(1) **அழிவு, தீமை** – bad omen
'பொடியுடை கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த தடியுடை எயிற்றுப் பேழ் வாய்த் தாடகை தலைகள் தோறும் முடியுடை அரக்கற்கு அந்நாள் முந்தி உற்பாதம் ஆக படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள்' (கம்ப.பால.395)

**<u>தாமம்</u>** **(மாலை)** Tāmam

(1) **புதல்வர்**
'செல்வப் பொற் சிறுவர் என்னும் தாமங்கள் தாழ்ந்து நின்றது' (சீவக.2728: 3)

**<u>தாமரை</u>** Tāmarai

(1) **தலைவி**
'கழுநீர் மேய்ந்த கருந் தாள் எருமை பழனத் தாமரைப் பனிமலர் முனைஇ, தண்டு சேர் மள்ளரின் இயலி, அயலது குன்று சேர் வெண் மணல் துஞ்சும் ஊர!' (நற். 260:1-4)

(2) **அழகு**
'தாமரை புரையும் காமர் சேவடி' (குறு. கட.வா. 1)

(2) **பெருமை / சிறப்பு**
'கன்னி விடியல், கணைக்கால் ஆம்பல் தாமரை போல மலரும் ஊர!' (ஐங். 68:1-2)

(4) **வளமை**
'மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத் தண் துறை ஊரன் வரைக' (ஐங். 6:4-5)

(5) **எழில் / வனப்பு**
'பைஞ்சுனைப் பாஅய் எழு பாவையர் ஆய் இதழ் உண்கண் அலர் முகத் தாமரை தாட் தாமரை, தோட் தமியக் கயமலர்எம் கைப் பதுமம், கொங்கைக் கயமுகை, செவ் வாய் ஆம்பல் செல் நீர்த் தாமரை புனற் தாமரையொடு, புலம் வேறுபாடுறா' (பரி. 8:112-117)

(6) **இறை இருக்கை** - divine existance
'எரி மலர்த் தாமரை இறை வீழ்த்த பெரு வாரி' (பரி. 9:4)

(7) **தண்மை, நறுமணம்**
'ஒருசார் - தண் நறுந் தாமரைப் பூவின் இடைஇடை' (பரி.தி. 1:10)

(8) **தூய்மை**
'தூ மலர்த் தாமரைப் பூவின் அம் கண்' (அகம். 361:1)

(9) **உயர்வு**
'சேற்று வளர் தாமரை பயந்த, ஒண் கேழ், நூற்று இதழ் அலரின் நிரை கண்டன்ன, வேற்றுமை இல்லா விழுத் திணைப் பிறந்து' (புறம். 27:1-3)

(10) **படைப்பு**
'தாமரை பயந்த தா இல் ஊழி' (திருமுரு. 164)

(11) **தெய்வத்தன்மை**
'திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை' (சிறுபா. 73)

(14) **தகைமை** – quality, commendable
'தகை பெறு தாமரைக் கையினேந்தி' (சிலப்.11: 48)

(15) **மருதத்திணை**
'சேறு விண்ட செந்தாமரைக் கானமும்' (சூளா.19: 2)

(16) **செல்வம்**
'திருக்கவின்ற செல்வச் செழுந் தாமரை' (சூளா.627: 2)

(17) **குல மகளிர்** - noble ladies

'விரைசெய் தாமரை மேல் விளையாடிய அரைச அன்னம் அமர்ந்துள ஆயினும்' (சீவக.1401: 1-2)

(ஆ) <u>தாமரையினாள்</u> Tāmaraiyiṉāṉ
(16) **செல்வம்**
'மடி உளாள் மா முகடி என்ப மடி இலான் தாள் உளாள் தாமரையினாள்' (குறள். 617)

(இ) <u>தாமரைப் போது</u> Tāmaraip pōtu
(17) **குழவி** - child
'தண் கதிர் மதாணி, ஒண் குறுமாக்களை ஓம்பினர்த் தழீஇ, தலம் புணர்ந்து முயங்கி, தாது அணி தாமரைப் போது பிடித்தாங்கு தாமும் அவரும் ஓராங்கு விளங்க' (மது. 461-464)

(ஈ) <u>பொற்றாமரை</u> Poṟṟāmarai
(18) **சிறப்பு** - splendor
'எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை சுரி இரும் பித்தை பொலியச் சூட்டி' (பொரு. 159-160)

(உ) <u>கடவுள் ஒண் பூ</u> Kaṭavuḷ oṇ pū
(19) **தெய்வத்தன்மை** - divine
'நீத்துடை நெடுங் கயம் தீப் பட மலர்ந்த கடவுள் ஒண் பூ அடைதல் ஓம்பி'
(பெரும். 289-290)

(ஊ) <u>அழல் முளரி</u> (நெருப்புத் தாமரை) alal muḷari
(20) **இல்லாதது, அரியது** – unknown, unusual, rare
'ஆரழல் முளரி அன்ன அருந்தவம் அரிது' (சீவக.2632: 1)

(எ) <u>கமலம்</u> Kamalam
**தெய்வத்தன்மை** - divine
'புல்லிதழ் கமலத் தெய்வ பூவிற்கும் உண்டு பொற்பின்' (கம்ப.கிட்.797: 1)

(ஏ) <u>கமலப்பூ</u> Kamalappū
**நறுமணம்**
'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ' (நாலா.567: 1)

(ஐ) <u>நாற்ற மலர்</u> Nāṟṟa malar
(21) **அயன்**
'நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில் ஆற்றல் அணைமேல் அவனும் காண்கிலா' (திருஞான.தேவா.31: 1-2)

(ஒ) <u>மலராத தாமரை</u> Malarāta tāmarai
(22) மகப்பேறின்மை
'தொக்கிள மலர் துதைவிலாத சோலையும் புக்கிளம் தாமரை நகாத பொய்கையும் மிக்கிளம் பிறை விசும்பிலாத அந்தியும் மக்களை இலாததோர் மனையும் ஒக்குமே' (சூளா.413)

(ஓ) <u>ஆயிரம் இதழ்த் தாமரை</u> Āyiram italt tāmarai
**உதயணன் கனவின் பயன்** – Utayaṇaṉ's dream
'ஆயிர நிரைத்த வாலிதழ்த் தாமரைப் பூவெனப் படுவது பொருந்திய புணர்ச்சிநின் தேவியா குமதன் றாதக டுரிஞ்சி முன்றாண் முடக்கிப் பின்றா ணிமிர்த்துக் கொட்டை மீமிசைக் குளிர்மதி விசும்பிடை எட்டு மெய்யோடு இசைபெறக் கிடந்த விள்ளா விழுப்புகழ் வெள்ளேறு என்பதை முகனமர் காதனின் மகனெனப் படுமது' (பெருங்.வத்.5: 109-116)

(ஒப்பு) <u>Lotus</u> **அழகு, அறிவாளி, அமைதி, இதயம், இருக்கை, ஆன்மீகம், உறுதி, உயிர்ப்பாற்றல், இளமை, ஆண்மை, ஒளி, கருப்பை, சூரியன், செல்வச் செழிப்பு தூய்மை, தெய்வத்தன்மை, நிலைபேறு, நெருப்பு, நெஞ்சுரம், படைப்பு, பயனிறைவு, பெண்பால், பெண்ணியல்பு, பிறப்பு,**

புதுப்பித்தல், புனிதம், மறுமலர்ச்சி, மறுபிறப்பு, முதன்மை, வளமை, விடியல், விரிவடைதல், வெற்றி.
ஐந்து இதழ் தாமரை - இறப்பு, ஓய்வு, திருமணம், துவக்கம், பிறப்பு.
எட்டு இதழ் தாமரை - பிரமனின் இருப்பிடம்.
ஆயிரம் இதழ் தாமரை - ஆன்மீக வெளிப்பாட்டின் முழுமை.
நீலத்தாமரை - தெய்வீக வாழ்க்கை.
சிவப்புத்தாமரை - இருக்கை.

**தாமரை இலை நீர்** Tāmarai ilai nīr

(1) மன நடுக்கம் - tremble
*'அளற்றெழு தாமரை அள்ளிலை நீரில் துளக்குறு நெஞ்சின் நடுக்கமொடு விம்மி'* (பெருங்.உஞ்.42: 119-120)

**தாமரை நகாத பொய்கை** Tāmarai nakāta poykai

(1) மகப்பேறின்மை
*'புக்கிளம் தாமரை நகாத பொய்கையும் .. .. .. மக்களை இலாததோர் மனையும் ஒக்குமே'* (சூளா.413)

**தாய் இல் முட்டை** Tāy il muṭṭai

(1) பாதுகாப்பின்மை, அழிவு - unsafe, ruin
*'தாய் இல் முட்டை போல, உட்கிடந்து'* (குறு. 152: 2)

**தாய் முலை** Tāy mulai **(breast)**

(1) பயன் - useful
*'சரயு என்பது தாய்முலை அன்னது இவ் உரவு நீள் நிலத்து ஓங்கும் உயிர்க்கு எலாம்'* (கம்ப.பால.24: 3-4)

**தாரணி** Tāraṇi

(1) கற்பு
*'படைப்பருங் கற்பினாள் தான் பாவையைப் பரிவு நீக்கி'* (சீவக.555: 1)

**தாழ்** Tāl **(bolt, latch)**

(1) காவல், காப்பு
*'தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர்'* (கலி. 48:10)

(2) தடை - obstruction
*'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கண்நீர் பூசல் தரும்'* (குறள். 71)

(3) தடை / இடையூறு - obstacle
*'தெரியா தவர்தம் திறனில்சொல் கேட்டால் பரியாதார் போல இருக்க - பரிவுஇல்லா வம்பலர் வாயை அவிப்பான் புகுவரே அம்பலம் தாழ்க்கூட்டு வார்'* (பழமொழி.55)

**தாழம் பூ** Tālam pū

(1) நறுமணம்
*'தாழம் பூ மணம் நாறிய தாழ்பொழில்'* (திருநா.தேவா.727: 3)

**தாழை** Tālai

(1) அழகு
*'அரவு வாள் வாய முள் இலைத் தாழை பொன் நேர் தாதின் புன்னையொடு கமழும்'* (நற்.235:2-3)

(2) நறுமணம்
*'கமழும் தாழைக் கானல்அம் பெருந்துறை'* (பதி. 55: 5)

(3) தலைவி
*'கொடுமுள் மடல் தாழைக் கூம்பவிழ்ந்த ஒண்பூ விடையுள் இழுதொப்பத் தோன்றி'* (ஐந்.ஐம்.49: 1-2)

(3) நெய்தல் திணை
*'கோடுடைந்தன தாழையும் கோழிருள்'* (சூளா.20: 1)

**தாள் பற்றி அம்மி மிதித்தல்** Tāḷ parri ammi mitittal

(1) திருமணம் - wedding
*'இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்று ஆவான், நம்மை உடையவன், நாராயணன் நம்பி செம்மை உடைய திருக்கையால் தாள் பற்றி அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன்'* (நாலா.563)

**<u>தாள் புகைதல்</u>** Tāḷ pukaital **(smokey star)**

(1) **தீமை**
'குளமீனொடுந் தாள் புகையினும்' (புறம். 395: 35)

**<u>திகிரிப்புள்</u>** **(சக்கரவாளப் பறவை)** Tikirippuḷ

(1) **இணைபிரியாமை** - inseperable
'திணைவிராய்ப் பொய்கையும் திகிரிப் புள்ளினுக்கு இணையிராப் பிரிந்தபின் எரியோடு ஒக்குமால்' (சூளா.1050: 1-2)

**<u>திங்கள்</u>** Tiṅkaḷ **(moon)**

(1) **காலம்**
'திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல் எமதும் உண்டு, ஓர் மதிநாட் திங்கள்'
(நற். 62: 6-7)

(2) **அறம்**
'அறுமீன் பயந்த அறம் செய் திங்கள்' (நற். 202: 9)

(3) **தண்மை, சாயல்**
'நின் தண்மையும் சாயலும் திங்கள் உள' (பரி. 4: 26)

(4) **வாய்மை**
'குன்று அகல் நல் நாடன் வாய்மையில் பொய் தோன்றின் திங்களுள் தீ த் தோன்றியற்று'
(கலி. 41:23-24)

(5) **இளமை / மென்மை**
'ஐய! திங்கட்குழவி, வருக! என' (கலி. 80:18)

(6) **வெண்மை**
'நெடு வெண் திங்களும் ஊர் கொண்டன்றே' (அகம். 2:17)

(7) **தேய் திங்கள் - இறப்பு, வளர் திங்கள் - பிறப்பு**
'தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும் மாய்தல் உண்மையும் பெருகல் உண்மையும் அறியா தோரையும் அறியக் காட்டித் திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து'
(புறம். 27:11-14)

(8) **தண்மை, அருள்**
'ஞாயிறு அனையை, நின் பகைவர்க்கு திங்கள் அனையை, எம்மனோர்க்கே' (புறம். 59:6-7)

(9) **புகழ்**
'விரிகதிர வெண்திங்களின் விளங்கித் தோன்றுக அவன் கலங்கா நல்இசை!'
(புறம். 396:27-28)

(10) **முதன்மை** - main
'மீன் பூத்தன்ன வான் கலம் பரப்பி, .. .. .. .. மங்குல் வானத்துத் திங்கள் ஏய்க்கும்' (பெரும். 477-480)

(11) **உயர்குடிப்பிறந்தார்** - noble birth
'ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் திங்கள்போல் செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்கு ஒல்கார் குடிப்பிறந்தார்' (நாலடி.148)

(18) **சான்றோர்** - great persons
'அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும் திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் திங்கள் மறுவாற்றும், சான்றோர் அஃதாற்றார் தெருமந்து தேய்வர் ஒருமாசு உறின்' (நாலடி.151)

(19) **அறிவு, குற்றமின்மை** – knowledge, blemishless
'மைவினை மறுவிலாத மதியெனும் திங்கள் மாதோ' (சீவக.3145: 2)

(ஆ) **<u>வெண் திங்களுள் வெயில் வேண்டல்</u>** Veṇtiṅkaḷuḷ veyil vēṇṭal

(20) **செயற்கருமை**
'வெண் திங்களுள் வெயில் வேண்டினும்' (புறம்.38: 8)

(இ) **<u>குழவித் திங்கள்</u>** Kuḻavit tiṅkaḷ

(21) **சிறப்பு**
'குழவித் திங்கள் இமயவரேத்த அழகொடு முடித்த வருமைத் தாயினும்' (சிலப்.2: 38-39)

(ஈ) **<u>நிலவு</u>** Nilavu

(14) **ஒளி**
'நிலவும் மறைந்தன்று; இருளும் பட்டன்று' (நற். 182:1)
**வெண்மை**

'நல்லை அல்லை - நெடுவெண் நிலவே!' (குறு. 47:4)

(உ) நிலா Nilā

**ஒளி**

'மணி நிற மை இருள் அகல, நிலா விரிபு' (பதி. 31:11)

(15) **அழகு**

'அம் கண் வானத்து அணி நிலாத் திகழ்தரும்' (பரி. 1:44)

**வெண்மை**

'வாள்நிலா ஏய்க்கும் வயங்குஒளி எக்கர் மேல்' (கலி. 131:17)

வெண்மை

'விட்ட வெறுங் கூட்டையினிச் சுட்டதனால் என்னபயன் வெண்ணிலாவே' (தனிப்.700: 7-8)

(ஊ) மதி Mati

(16) ஈரம் - sympathy

'- - - - - - - மதி பல் உள்ளமொடு மறைந்தவை ஆடி' (நற். 122:8)

(17) **தூய்மை** - pure

'மதி மயக்குறுஉம் நுதலும்' (குறு. 226:3)

(18) **அறிவு**

'புது வழிப் படுத்த மதியுடை வலவோய்!' (குறு. 400:5)

(19) **தொன்மை** - ancient

'தொல் முறை இயற்கையின் மதியோ' (பரி. 2:1)

**அழகு**

'விண் அளி கொண்ட வியன் மதி அணி கொள' (பரி. 13:5)

**தூய்மை, வெண்மை**

'சுடர் மதிக் கதிரெனத் தூ நரையோரும்' (பரி.தி. 1:43)

(20) **நிலையாமை** - changing

'நீள் கதிர் அவிர் மதி நிறைவு போல் நிலையாது' (கலி. 17:7)

(21) **முழுமை** – fullness, totality

'மை தீர்ந்தன்று, மதியும் அன்று' (கலி. 55:10)

**ஒளி**

'ஆர் இருள் நீக்கும் விசும்பின் மதி போல, நீருள்ளும் தோன்றுதி, ஞாயிறே!' (கலி. 147:30-31)

(23) **மாசின்மை**

'மதி இருப்பன்ன மாசு அறு சுடர் நுதல்' (அகம். 192:1)

(23) **தொன்மை**

'தொல் நிலக் கிழமை சுட்டின், நல் மதி' (புறம். 32:7)

(24) **சேய்மை**

'சேண் விளங்கு இயற்கை வாள் மதி கவைஇ' (திருமுரு. 87)

(25) **தலைமை**

'பல் மீன் நடுவண் பால் மதி போல, இன் நகை ஆயமொடு இருந்தோர் குறுகி' (சிறுபா. 219-220)

**அறிவு**

'ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால் மாயிரு ஞாலத்து மாண்(பு) ஒருவன் போல்கலார் பாய்இருள் நீக்கும் மதியம்போல் பல்மீனும் காய்கலா ஆகும் நிலா' (பழமொழி. 27)

(26) **உயர்வு, அறிவுடையோர்**

'நெறியால் உணராது நீர்மையும் இன்றி சிறியார் எளியரால் என்று - பெரியாரைத் தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுதல் திங்களை நாய்குரைத் தற்று' (பழமொழி. 107)

(27) பழி, **களங்கம்**

'விதிப்பட்ட நூலுணர்ந்து வேற்றுமை யில்லார் கதிப்பவர் நூலினைக் கையிகந்தா ராகிப் பதிப்பட வாழ்வார் பழியாய செய்தல் மதிப்புறுத்துப் பட்ட மறு' (பழமொழி. 10)

**குளிர்ச்சி**

'கதிர்சுடும் அமயத்துப் பனிமதி முகத்தோன்' (மணி.5: 60)

**அரசன் (தயரதன்)**

'ஆன மா மணி மண்டபம் அன்னதில் தானை மன்னன் தமரொடும் சார்ந்தனன் மீன் எலாம் தம் பின் வர வெண்மதி வான் நிலா உற வந்தது மானவே' (கம்ப.பால.1054)

(எ) வானூர் மதியம் Vānūr matiyam

(28) **கீழ்மக்கள், தாழ்வு, தேய்வு** - low born, lowly, decline

'.. .. .. .. வரிசையால் வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே

*தானே சிறியார் தொடர்பு'*
(நாலடி.125: 2-4)

(ஏ) <u>இருள் மதி</u> Iruḷ mati

(29) **இல்லாதாதல், குறைதல், சுருங்குதல்** – non existant, disappear, reduce, thin
*'மதி நிறைவு அழிவதின், வரவு சுருங்க; எண் மதி நிறை, உவா இருள் மதி போல நாள் குறைபடுதல் காணுநர் யாரே?'*
(பரி. 11: 36-38)

(30) **நிலையாமை, மாற்றம்**
*'குணமுதல் தோன்றிய ஆர் இருள் மதியின் தேய்வன கெடுக, நின் தெவ்வர் ஆக்கம்'* (மது. 195-196)

(ஐ) <u>உவவுமதி</u> Uvavumati

(31) **கடவுட்டன்மை** - divine
*'முந்நீர் நாப்பண் திமில் சுடர் போல செம்மீன் இமைக்கும் மாக விசும்பின் உச்சி நின்ற உவவு மதி கண்டு, கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த, வளை விறலியும், யானும், வல் விரைந்து தொழுதெனம் அல்லமோ, பலவே'*
(புறம். 60: 1-6)

(ஒ) <u>பிறை</u> Pirai

(32) **நட்பு** - friendship
*'நிரை நீர நீரவர் கேண்மை பிறைமதி பின்நீர பேதையார் நட்பு'* (குறள்.782)

(32) **வளர்ச்சி, நட்பு** – growth, friendship
*'பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் வரிசை வரிசையா நந்தும்'*
(நாலடி.125: 1-2)

(33) **அழகு**
*'அறைக்கல் இறுவரைமேல் பாம்பு சவட்டிப் பறைக்குரல் ஏறொடு பௌவம் பருகி, உறைத்து இருள் கூர்ந்து அன்று வானம் பிறைத்தகை கொண்டன்று பேதை நுதல்'* (கார்.17)

(34) **காலம்** - time
*'மடையில் வாளை பாய மாதரார் குடையும் பொய்கைக் கோலக் காவுளான் சடையும் பிறையும் சாம்பல் பூச்சும் கீழ் உடையும் கொண்ட உருவம் என்கொலோ'*
(திருஞான.தேவா.23)

(35) **ஒளி, பெருகுதல்**
*'சுருக்கம் இன்றிச் சுடர்ப்பிறை போலப் பெருக்கம் வேண்டிப் பெருநில மன்னவன்'*
(பெருங்.இலா.6: 35-36)

(36) **வளைவு**
*'கூனல் இளவெண் பிறைச் சடையார்'* (பெரிய.3362: 3)

(37) **வெண்மை / இளமை / தண்மை**
*'செவ்வான் அடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே'*
(திருக்கோ.8: 67: 4)

(38) **தேய்பிறை - அழிதல்**
*'மெய்யருக்குப் பொய்யுரைத்தால் தேய்பிறைபோல் தவம்குறையும் மிடி உண்டாகும்'* (தனிப்.490: 3-4)

(ஓ) <u>தண்சுடர்</u> Taṇcuṭar

(39) **தலைவி**
*'நண்ணிநீர் சென்மி னமரவ ராபவே லெண்ணிய வெண்ண மெளிதரோ - வெண்ணிய வெஞ்சுடர் அன்னானை யான்கண்டேன் கண்டாளாம் தண்சுடர் அன்னாளைத் தான்'*
(திணைமாலை.89)

(ஔ) <u>கதிரோன் எழ மழுங்கிய மதி</u> Kar̲irōn̲ e̲la malu̇nkiya mati

(40) **அழிவு**
*'கதிரோன் எழ மழுங்கிக் கால் சாயும் காலை மதிபோல் அழிந்து பொறா மற்றவனும் சுற்ற'*
(பெரிய.615: 1-4)

(க) <u>கோள் நின்ற மதியம்</u> **(கிரணத்தால் பீடிக்கப்பட்ட உவாமதி)** Kōḷ nin̲ra matiyam

(41) **பொலிவின்மை**
*'கோள் நின்ற மதியம் போலக் குழைமுகம் சுடரக் கோட்டி'*
(சூளா.982: 1)

(ங) <u>மதியம்</u> Matiyam

**கடவுட்டன்மை**
*'உலகு தொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்'* (சிலப்.28: 39)

**வெண்மை**

'வெள் எயிற்று இலவச் செவ்வாய் முகத்தை வெண் மதியம் என்று' (கம்ப.பால.745: 1)

(ச) <u>வெண்மதி</u> Veṇmati

(43) அறியாமை
'கள் மதியாதது எக்காரியமே இன்ன வண்மதியாயை விலக்குநர் யாரோ' (நீலகேசி.608: 3-4)

(ஒப்பு) <u>Moon</u> அன்பு, அரசியல் மெய்ஞ்ஞானி, அனுமதி, இசை, ஈரத்தன்மை, உணர்ச்சிகள், ஒளி, கிறித்துவின் புனிதத்தன்மை, குளிர்ச்சி, கோள், கற்புடைமை, கடமையிற் சிறந்த கணவன் மனைவி, காலந்தவறாமை, சிந்தனை, சீர்திருத்தவாதி, தன்னடக்கம், தூய்மை, தூய அகநிலை, தூய ஆன்மா, தனிமை, துறவி, நடுவுநிலைமை, நாள், நினைவு, நிறம் மாறும் மணிவகை, பயணம், பெண், படித்தவன், பெருக்கத்தன்மை, மெய்யுணர்வு, மாறும் இயல்பு, முத்து, வளர்ச்சி, வெண்மை, வெள்ளி உலோகம், விருப்பம், வளமை, வணிகர், விவேகம், அறியாமை, ஆபத்தான வழி, இறப்பு, இருள், அக்கறை இன்மை, அறிவுக்கோளாறு, இருண்ட மற்றும் பழி சூழ்கிற நிலை, கர்மவினை, கேடு, சோம்பல், சார்புத்தன்மை, தீமை, துயர், தேய்வு, நிலையாமை, பூண்டோடொழித்தல், மயக்க நிலை, மாயவித்தை, மலடு, மிகுகாலம், முட்டாள்.

**<u>திசைகள் எரிதல்</u>** Ticaikaḷ erital **(directions burning)**

(1) **தீமை, அழிவு**
'.. .. .. எரிந்திடும் பெருந்திசை எவர்க்கும்' (கம்ப.ஆரண்.431: 3)

**<u>திட்டிவிடம்</u>** Tiṭiviṭam **(a poison) (poisonous snake)**

(1) **தீமை, இறப்பு** – vile, death
'திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி' (மணி.11: 100)

**<u>திமில்</u>** Timil **(boat)**

(1) **திண்மை** - strong
'வளை நீர் வேட்டம் போகிய கிளைஞர் திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப' (நற். 331:7-8)

(2) **விரைவு** - quick
'கடுஞ் செலல் கொடுந் திமில் போல' (அகம்.330: 16)

(ஆ) <u>நாவாய்</u> Nāvāy

(3) **பயணம்** – voyage / journey
'தாம் வேண்டும் பட்டினம் எய்திக் கரை சேரும் ஏமுறு நாவாய் வரவு எதிர்கொள்வார்போல்' (பரி.10: 38-39)

(4) **பெரும் வளம்** - treasures
'ஆடு இயற் பெரு நாவாய்' (மது.83)
**விரைவு**
'கடுவிசை நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப' (நாலடி.224: 2)

(5) **வளைவு** - curved
'நாவாய பிறைச்சென்னி நலம் திகழும் இலங்கிப்பி' (திருஞான.தேவா.1830: 1-2)

(இ) <u>புணை</u> Puṇai (float)

(6) **உய்வு, நன்மை** – saved, benefit
'கரை காணாப் பௌவத்து, கலம் சிதைந்து ஆழ்பவன் திரை தரப் புணை பெற்று, தீது இன்றி உய்ந்தாங்கு' (கலி.134: 24-25)

(7) **அறம்** - virtue
'அறம் புணையாகலும் உண்டு' (கலி. 144:48)

(8) **பாதுகாப்பு** – safety / support
'பிரிந்தவர்க்கு நோய் ஆகி, புணர்ந்தவர்க்குப் புணை ஆகி' (கலி. 148:18)

(9) **நன்மை** - goodness
'தீது இன்றாக, நீ புணை புகுக! என' (அகம்.392: 8)

(10) **வாழ்க்கை** - life
'நீர் வழிப்படூஉம் புணை போல், ஆர் உயிர் முறை வழிப்படூஉம்' (புறம்.192: 9-10)

(11) **பிடிப்பு, காப்பு** – hold / grip, security
'புணை கைவிட்டோர்க்கு அரிதே' (புறம்.357: 7)

(12) **துணை, உதவி, பாதுகாப்பு** – support, help, protection
'நெடுநீர் புணையின்றி நீந்துதல் இன்னா' (இன்னா.3)

(13) **கல்வியறிவு** - knowledge
'மூப்பின்கண் நன்மைக்கு அகன்றானும் கற்புடையாள் பூப்பின்கண் சாராத் தலைமகனும் - வாய்ப்பகையுள் சொல்வென்றி வேண்டும் இலிங்கியும் இம்மூவர் கல்விப் புணை கைவிட்டார்' (திரி.17)

(ஈ) <u>அம்பி</u> Ampi

(14) **அசைவு** - move, oscillate
'பனைவெளிறு அருந்து பைங்கண் யானை ஒண்சுடர் முதிரா இளங்கதிர் அமையத்து, கண்படுபாயல் கைஒடுங்கு அசைநிலை வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி, நாள்வேட்டு எழுந்த நயன்இல் பரதவர் வைகுகடல் அம்பியின் தோன்றும்' (அகம்.187: 18-23)
**அறம்** – moral, virtuous
'உறுவரும் சிறுவரும் ஊழ்மாறு உய்க்கும் அறத்துறை அம்பியின் மான' (புறம்.381: 23-24)

(உ) <u>வெற்று யாற்று அம்பி</u> Veṟṟu yāṟṟu ampi

(15) **பொலிவின்மை** - gloomy
'அந்தோ! எந்தை அடையாப் பேர் இல் வண்டு படு நறவின் தண்டா மண்டையொடு வரையாப் பெருஞ் சோற்று முரி வாய் முற்றம், வெற்று யாற்று அம்பியின் எற்று? அற்று ஆகக் கண்டனென், மன்ற' (புறம்.261: 1-5)

(ஊ) <u>கலம்</u> Kalam

(16) **பயணம்** – voyage / journey
'யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்' (அகம்.149: 9-10)

(எ) <u>ஆழ்கலம்</u> A̱lkalam (sinking ship)

(17) **துன்பம்** - suffering
'நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினார் அற்புத் தளையும் அவிழ்ந்தன - உட்காணாய் வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம்? வந்ததே ஆழ்கலத்து அன்ன கலி' (நாலடி.12)

(ஏ) <u>ஆழ்கல மாந்தர்</u> A̱lkala māntar (people in sinking ship)
**துன்பம்** - affliction
'போழ்படப் பிளந்து வாளில் புரட்டியிட் டரியக் கண்டே ஆழ்கல மாந்தர் போல வணிகர் அழுங்கிற்றன்றே' (சீவக.1163: 3-4)

(ஐ) <u>கடலில் கலம் கவிழ்தல்</u> Kaṭalil kalam kaviltal (ship sinking at sea)
**துன்பம்** - distress
'மறிகடலில் கலம் கவிழ்த்தார் போல நின்றேன்' (பெரிய.2384: 2)

(ஒ) <u>பண்டம் களை கலம்</u> Panṭam kaḷai kalam (unloaded ship)

(18) **வெறுமை** – empty, desolate, bare
'கலிகெழு பண்டம் களை கலம் போல வலிகெழு சிறப்பின் மதிலுஞ் சேனை உள்ளகம் வறுமை எய்திப் புல்லென' (பெருங்.இலா.8: 123-125)

(ஓ) <u>தோணி</u> Tōṇi

(19) **துணை / உதவி** - support / help
'ஏணியை இடர் கடலுள் கழிக்கப் பட்டிங் கிளைக்கின்றேற் கக்கரைக்கே ஏற வாங்கும் தோணியைத் தொண்டனேன் தூய சோதி' (திருநா.தேவா.739: 3-5)

(20) **மீட்சி** - rescue
'துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பது ஓர் தோணி பெறாது உழல்கின்றேன்' (நாலா.548: 3-4)

(ஔ) <u>மயங்குகால் எடுத்த வங்கம்</u> (கடுங்காற்றினால் அலைக்கப்பட்ட மரக்கலம்) Mayaṅkukāl eṭutta vaṅkam
**துன்பம்**

'மயங்குகால் எடுத்த வங்கம் போலக் காழோர் கையற மேலோரின்றி' (மணி.4: 34-35)

(க) <u>வங்கம்</u> Vaṅkam

(21) வருவாய்
'வங்க வாரியும் வார் அலை வாரியும்' (சூளா.32: 3)

(ஒப்பு) <u>Boat, Canoe, Sail, Ship</u>
அரசுரிமை, ஆன்மா, இனப்பெருக்க வளம், கடற்பயணம், கடந்தநிலை, கருப்பை, காற்று, செல்வ வளம், துணிவான செயல், தேவாலயம், நற்பேறு, நம்பிக்கை, நிலைபேறு, நீண்ட வாழ்நாள், நிலைமாற்றம், பாதுகாப்பு, மகிழ்ச்சி, மீட்பு, வலிமை, வளமை, வெற்றி, வாணிபம்; இடையூறு, இறப்பு, நிலையற்ற தன்மை.

<u>திரி</u> Tiri **(wick)**

(1) உயிர் - life, soul
'உயிர் திரியா மாட்டிய தீ' (கலி. 142:40)

<u>திரிசூலவேல்</u> Tircūlavēl **(trident)**

(1) கூர்மை - sharp
'கூர் விளங்கும் திரிசூலவேலர் குழைக்காதினர்' (திருஞான.தேவா.4024: 1)

<u>திரியழல்</u> Tiriyaḻal **(flame, lamp)**

(1) வழிபாடு, கடவுட்டன்மை, கல்வி - worship, divine, education
'திரியழல் காணில் தொழுப விறகின் எரியழல் காணின் இகழ்ப - ஒருகுடியில் கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான் இளமை பாராட்டும் உலகு' (நான்.66)

<u>திரு</u> Tiru **(goddess of wealth)**

(1) நன்மை
'பெருவரை அன்ன திருவிறல் வியல் மார்பு' (ஐங். 220: 3)

(2) புகழ்
'சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவிற்' (பரி. 15: 22)

(3) அழகு
'திகழ் மலர்ப் புன்னைக் கீழ்த் திருநலம் தோற்றாளை' (கலி. 135: 12)

(4) செல்வம்
'திருநிலை இய பெருமன் எயில்' (பட். 291)

(5) சிறப்பு, நன்மை
'திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்' (நெடுநல். 89)

(6) பெருமை
'செருமிக்குப் புகலும் திருவார் மார்பன்' (மலைபடு. 356)

(9) நிலையாமை - unstable
'மாரியும் திருவும் மகளிர் மனமும் தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனும்' (பெருங்.உஞ்.35: 156-157)

(ஆ) <u>செய்யோள்</u> Ceyyōḷ
செல்வம்
'செய்யோள் நீங்க, சில் பதம் கொழித்து' (அகம். 316:137)

(இ) <u>செய்யவள்</u> Ceyyavaḷ
செல்வம்
'அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்' (குறள். 167)

(ஈ) <u>செய்யாள்</u> Ceyyāḷ
செல்வம்
'கைத்துடையான் காமுற்றது உண்டாகும் வித்தின் முளைக்குழாம் நீருண்டேல் உண்டாம் திருக்குழாம் ஒண்செய்யாள் பார்த்துறின் உண்டாகும் மற்றவள் துன்புறுவாள் ஆகிக் கெடும்' (நான். 67)

(உ) <u>நல்லாள்</u> Nallāḷ
செல்வம்
'பிறக்குங்கால் பேரெனவும் பேரா இறக்குங்கால் நில்லெனவும் நில்லா உயிரெனைத்தும் - நல்லாள் உடம்படின் தானே பெருகும் - கெடும்பொழுதில் கண்டனவும் காணா கெடும்' (நான். 43)

(ஊ) அலர்மகள் Alarmakaḷ
செல்வம்
'அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்பவர்' (திருஞான.தேவா.2327: 1)

(எ) பொன் Pon
அழகு
'என்னை ஈண்டைக்கு வரவென்று அருந்தவன் வினவலும் எழிலார் பொன்னனாள் புடை பெயர்த்திட்ட பொலங்கல மனங்கலக்குவ போல்' (நீலகேசி.65: 1-2)

(ஏ) திருவிளக்கை ஏந்தித் திருமகள் இரவணன் மனையை விட்டு வீடணன் கோயிலை மேவுதல் Tiruviḷakkai ēntit tirumakaḷ irāvaṇan maṉaiyai viṭṭu vīṭaṇan kōyilai mēvutal (Goddess of wealth bearing light)
இராவணன் அழிவு, வீடணன் வாழ்வு - deterioration for Ravanan and betterment for vitanan
'ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய சேயொளி விளக்கம் ஒன்று ஏந்திச் செய்யவள் நாயகன் திருமனை நின்று நண்ணுதல் மேயினள் வீடணன் கோயில் மென் சொலாய்' (கம்ப.சுந்.380)

(ஒப்பு) Lakshmi அழகு, ஆற்றல், செல்வம், நற்பேறு, புகழ், வளமை.

திரு எதிர்தல் Tiru etirtal
(1) நன்மை
'மண்ணிலா மறுகிடை வலங்கொண்டு ஏகினாள் எண்ணிலாங்கு அதுதிரு எதிர்ந்த வண்ணமே' (சூளா.383: 3-4)

திருப்பஞ்ச முத்திரை Tiruppañca muttirai (five signs)
(1) சிறப்பு, உயர்வு
'திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க' (பெரிய.894: 7-8)

திருப்புலியூர் Tiruppuliyūr (a town)
(1) செல்வம்
'திருவின் பொலியும் திருப்புலியூர்' (பெரிய.3804: 5)

திருமஞ்சனம் Tirumañcaṉam (bathing, oblution)
(1) தூய்மை, குற்றமின்மை – pure, blemishless, flawless
'வழுவில் திருமஞ்சனமே முதலாக வரும் பூசை' (பெரிய.788: 5-6)

திருமயிலாபுரி Tirumayilāpuri (a city)
(1) செல்வம்
'செல்வம் மல்கு திருமயிலாபுரி' (பெரிய.4084: 4)

திருமா மணி Tirumā maṇi (rare gem)
(1) உயர்வு, சிறப்பு
'ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய திருமா மணி' (சிலப்.12: 49-50)

திருவாரூர் Tiruvārūr (a town)
(1) செல்வம், வளமை
'செல்வமலி திருவாரூர்த் தேவரொடு முனிவர்களும்' (பெரிய.29)

திரை Tirai (wave)
(1) ஒலி
'முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்' (நற். 15:1)
(2) வலிமை
'உரவுத் திரை கொழீஇய பூ மலி பெருந்துறை' (நற். 159:2)
(3) விரிவு
'- - - - - - - - - - - -விரி திரைக் கடல் பெயர்ந்தனைய ஆகி' (நற். 259:8-9)
(4) தூய்மை
'.. .. .. .. .. .. .. தூத்திரைப் பொங்க பிதிர்த் துவலையொடு மங்குல் தைஇ' (குறு. 55:1-2)
(5) வளமை
'முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங் கிளை புணரி இருதிரை தரூஉம் துறைவன்' (குறு. 109:1-2)

(6) வெண்மை
'வெண்திரை முந்நீர் வளைஇய உலகத்து' (பதி. 31:21)
(7) பெருகுதல் – increase, abound
'வளர் திரை மண்ணிய கிளர் பொறி நாப்பண்' (பரி. 2:32)
(8) அழகு
'நீல் நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை' (கலி. 124:3)
(9) துன்பம்
'யாமத்தும் எல்லையும் எவ்வத் திரை அலைப்ப' (கலி. 139:14)
(10) அளவின்மை - unmeasurable
'வரை அளந்து அறியாத் திரை அரு நீத்தது' (புறம். 238:18)

(ஆ) அலை Alai
வளம்
'நத்தொடு, நள்ளி, நடை இறவு, வய வாளை, வித்தி அலையில், விளைக பொலிக என்பார்'
(பரி. 10: 85-86)

(ஒப்பு) Wave ஆடல், கனவுகள், தூய்மை, நீதி, பெண்மை, மறுபிறப்பு, இறப்பு.

**தில்லை** Tillai **(a town)**
(1) வளம்
'தில்லை வேலி இவ் ஊர்க் கல்லென் கௌவை எழாஅக்காலே'
(ஐங். 131:2-3)
(2) அறிவு
'அறிவின் எல்லை ஆய திருத் தில்லை எல்லை அமர்ந்திறைஞ்சி'
(பெரிய.3813: 1-2)
(3) புகழ்
'மன்றுபுகழ்த் திருத்தில்லை மன்றாடும் மலர்ப்பாதம்'
(பெரிய.4208: 5-6)

**தில்லை அம்பலம்** Tillai ampalam **(a temple)**
(1) அழகு
'ஆலத்தினால் அமிர்தாக்கிய கோன் தில்லை அம்பலம்போல் கோலத்தினாள் பொருட்டாக அமிர்தம் குணம்கெடினும்'
(திருக்கோ.2: 27.1-2)

**திலகம்** Tilakam **(mark on forehead)**
(1) வனப்பு / அழகு
'திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல்' (நற். 62:6)
(2) மங்கலம்
'நல் நுதல் நீத்த திலகத்தள்' (கலி. 143:3)
(3) உயர்வு, சிறப்பு, பெருமை
'மறந்து மழைமறா மகத நன்னாட்டுக்கு ஒரு பெருந் திலகமென்று உரவோர் உரைக்கும்'
(மணி.26: 42-43)
(4) முதன்மை - important
'திலகமாய திறலோய் நீ தேவர் ஏத்தப் படுவோய் நீ' (சீவக.1244: 2)

**தினை** Tiṉai
(1) பலி - sacrifice
'உருவச் செந்தினை குருதியொடு தூஉய்' (பதி. 19:6)
(2) சிறிய அளவு - small measure
'கிளை மலி சிறு தினைக் கிளி கடிந்து அசைஇ'
(நற். 25:6)

**தீ** Ti **(fire)**
(1) ஒளி - light
'மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய சிறு தீ விளக்கில் துஞ்சும்' (நற். 175:3-4)
(2) தெறல், வெம்மை
'தீ உமிழ் தெறலின் வெய்தாகின்றே' (நற். 236:2)
(3) வலிமை
'தீ ஓரன்ன என் உரன் அவித்தன்றே' (குறு. 95:5)
(4) வளம்
'நெய்பெய் தீயின் எதிர்கொண்டு, தான் மணந்தனையம் என விடுகம் தூதே' (குறு. 106:5-6)
(5) துன்பம், நடுக்கம்
'தீ உறு தளிரின் நடுங்கி'
(குறு. 383:5)
(6) சிவப்பு
'இலை இல மலர்ந்த ஓங்கு நிலை இலவம் மலை உறு தீயின் சுரமுதல் தோன்றும்' (ஐங். 338:2-3)
(8) வெளிப்படை - open

'தட்டைத் தீயின் ஊர் அலர் எழவே' (ஐங். 340:4)

(8) **அழிவு**
'பொங்கு பிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின் மடங்கல் தீயின் அனையை' (பதி. 72:14-15)

(9) **சினம்**
'செறு தீ நெஞ்சத்துச் சினம் நீ டினோரும்' (பரி. 5:73)

(10) **அன்பு, காமம்**
'பாய் இருள் அற நீக்கும் நோய் தபு நெடுஞ் சுடர்த் தீயினால் சுடுதலோ இலர்மன்; ஆயிழை! தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்' (கலி. 137:20-22)

(11) **பொய்**
'குன்று அகல் நல்நாடன் வாய்மையில் பொய் திங்களுள் தீத்தோன்றியற்று' (கலி. 41:23-24)

(12) **பசி**
'மதுகை இன்றி, வயிற்றுத் தீத் தணிய தாம் இரந்து உண்ணும் அளவை' (புறம். 74:5-6)

(13) **திறல் / வெற்றி**
'தீ எழுந்தன்ன திறலினர்' (திருமுரு. 171)

(13) **கடுஞ்சொல்**
'தீயினால் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே நாவினால் சுட்ட வடு' (குறள்.129)

(14) **அச்சம்**
'தீயவை தீய பயத்தலான், தீயவை தீயினும் அஞ்சப்படும்' (குறள். 202)

(15) **பகை**
'அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க இகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்' (குறள். 691)

(16) **தூய்மை**
'தீயின் தூயவளைத் துயர் செய்ததால்' (கம்ப.சுந்.1137: 4)

(17) **கற்பு**
'தீயைச் சுட்டது ஓர் கற்பு எனும் தீயினாள்' (கம்ப.சுந்.1080: 4)

(20) **கொடிய தன்மை**
'தீ மனத்து அரக்கர் திறல் அழித்தவனே' (நாலா.1272: 1)

(ஆ) **<u>உலையூதும் தீ</u>** 'Ulaiūtum ti

**சினம்**
'நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச் செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால் கொல்லன் உலையூதும் தீயேபோல் உள்கனலும் கொல்லோ தலையாய சான்றோர் மனம்' (நாலடி.298)

(இ) **<u>தீ இயல்பு மாறல்</u>** Ti iyalpu māṟal

(16) **அரிய தன்மை** – unnatural, rare
'.. .. .. ..நீர்த்தீப் பிறிழினும்' (குறு. 373:1)

(ஈ) **<u>எரி</u>** Eri

(17) **காமம்** – love, passion
'கண்தர வந்த காம ஒள்எரி' (குறு. 305:1)

**ஒளி** - gloss
'பொரி கால் மாஞ் சினை புதைய எரி கால் இளந் தளிர் ஈனும் பொழுதே!' (ஐங். 349:2-3)

**சிவப்பு**
'எரிப் பூ இலவத்து ஊழ் கழி பல் மலர்' (ஐங். 368:1)

**அழிவு**
'யாண்டு தலைப் பெயர வேண்டு புலத்து இறுத்து முனை எரி பரப்பிய துன் அருஞ் சீற்றமொடு' (பதி. 15:1-2)

**சீற்றம்**
'எரி நிகழ்ந்தன்ன நிறை அருஞ் சீற்றத்து' (பதி. 1:7)

**வெம்மை**
'வெம்மை தண்டா எரி உகு பந்தலை' (அகம். 29:15)

(18) **துன்பம் / இன்னாமை**
'இணர் எரி தோய்வன்ன இன்னா செயினும்' (குறள். 308)

(உ) **<u>அழல்</u>** Aḻal

**சிவப்பு**
'அழல் போல் செவிய சேவல் ஆட்டி' (நற். 352:4)

**அழிவு**
'அழல்கவர் மருங்கின் உருஅறக் கெடுத்து' (பதி. 15:7)

(19) **தூய்மை**
'அழல் வினை அமைந்த நிழல் விடு கட்டி கட்டளை வலிப்ப' (பதி. 81:16-17)

**வெம்மை**
'அறந்தாங்கும் அளவு இன்றி, அழல் அன்ன வெம்மையால்' (கலி. 11:6)
**காமம்**
'அழல் மன்ற, காம அரு நோய்' (கலி. 139:30)
**ஒளி**
'முளரித் தீயின் முழங்குஅழல் விளக்கத்து' (அகம். 301:13)

(20) **இறப்பு**
'கரி புற விறகின் ஈம ஒள் அழல்' (புறம். 231:2)
**துன்பம்**
'அழல் என உயிர்க்கும் அஞ்சுவரு கடுத்திறல் பாம்புபடப் புடைக்கும்' (திருமுரு. 149-150)

(ஊ) <u>நெருப்பு</u> Neruppu
**சிவப்பு**
'நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்' (குறள். 160:1)
**சினம்**
'நெருப்பு அவிர் கனலி உருப்புச் சினம் தணிய' (ஐங். 388:1)

(21) **அழகு**
'முருக்குத் தாழ்பு எழிலிய நெருப்பு உறழ் அடைகரை' (பதி. 23:20)

(22) **தீமை**
'நெருப்புக் கை தொட்டவர் போல விதிர்த்திட்டு' (கலி. 115:11)

(23) **வலிமை**
'பொன் சுடு நெருப்பின் நிலம் உக்கென்ன' (மது. 682)

(24) **அழிவின்மை**
'நிலனும் நீரும் மாய் நெருப்பும் காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்' (கம்ப.கிட்.116: 1-2)

(எ) <u>நீர் அடு நெருப்பு</u> Nir aṭu neruppu

(25) **தணிதல் / அழிதல்**
'நீர் அடு நெருப்பின் தணிய' (நற். 154:9)

(ஏ) <u>ஊழி எரி</u> Ūḻi ēri (aeonian fire)

(26) **கொடுமை**
'ஊழி எரி கொடிய பாய் பகழி ஒன்பான்' (கம்ப.ஆரண்.532: 1)

(ஐ) <u>எரி புகுதல்</u> Eri pukutal

(27) **உயர்வு / ஏற்றம்**
'முளியெரிப் புகூஉ முதுகுடிப் பிறந்த பத்தினிப் பெண்டிர் அல்லேம்' (மணி.18: 14-15)

(28) **கைம்மை** - widowhood
'நெறியினால் நோற்றல் ஒன்றோ நீள் எரி புகுதல் ஒன்றோ அறியலென் கொழுநன் மாய்ந்தால் அணி சுமந்திருப்பது என்றான்' (சீவக.1706: 3-4)

(29) <u>பாண்டிய மன்னன் நெருப்பில் முழுகுதலும், அதன்பின் எழுதலும்</u>
Pāṇṭiya mannan neruppil mulukutalum, atanpin elutalum (immersion in fire)
**தீமையும் துன்பமும் நீங்குதல் / நோய்நீக்கம்** – removal of affliction / disease
'கோனவன் தானும் வெய்ய கொழுந்தழல் முழுகக் கண்டோம், ஆனபின் எழவுங் கண்டோம் அதிசயம் இதுவாம் என்பார்' (பெரிய.2542: 5-8)

(ஒ) <u>காடு கவர் தீ</u> Kāṭu kavar ti (forest fire)
**சினம்**
'காடுகவர் தீயின் மிகை சீறுபு வெகுண்டான்' (சீவக.281: 4)

(ஓ) <u>சுடரேந்தி வலன் சுழல்வது</u>
Cutarēnti valan culalvatu (waving the torch to the right)

(29) **நன்மை**
'கந்துள் உமிழும் கரிய சூழ்புகைகள் விம்ம வந்துசுடர் ஏந்திவலனே சுழல மாட்டி' (சூளா.1101: 1-2)

(ஔ) <u>விறகில் தீ</u> Virakil ti

(30) **இறைமை, மறைந்து உறைதல், உட்படுதல்**
'விறகில் தீயினன் பாலில் படு நெய் போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்' (திருநா.தேவா.30: 1-2)

(க) <u>தழலில் முழுகல்</u> Talalil mulukal

(33) வெப்பு நோய்
'கோனவன் தானும் வெய்ய கொழுந்தழல் முழுகக் கண்டோம் ஆனபின் எழவும் கண்டோம் அதிசயம் இதுவாம் என்பார்' (பெரிய.2542: 5-8)

(ங) தழலிலிருந்து எழுதல் Talalilirunṭu elutal

(34) நோய் நீங்கல்
'கோனவன் தானும் வெய்ய கொழுந்தழல் முழுகக் கண்டோம் ஆனபின் எழவும் கண்டோம் அதிசயம் இதுவாம் என்பார்' (பெரிய.2542: 5-8)

(ச) புனல் படு நெருப்பு Punal paṭu aṭuppu

(35) அவிதல், குளிர்தல்
'முகைத்தார் வேந்தற்கு முகத்தெழு பெருஞ்சினம் புனல்படு நெருப்பில் பொம்மென உரறி ஆறிய வண்ண மணிமுக நோக்கி' (பெருங்.உஞ்.47: 128-130)

(ஒப்பு) Fire அறிவாற்றல், அதிகாரம், இதயம், உள்ளுணர்வு, எளிமை, ஒளி, கன்னிமை, கிளர்ச்சி, கோடைக்காலம், சொல்லாற்றல், சிவப்பு நிறம், தன் விருப்ப நிலை, தூய்மைப்படுத்தல், தியாகம், தீவிர ஆர்வம், துடிப்புள்ள தன்மை, தெற்கு திசை, தன்னடக்கம், தற்கட்டுப்பாடு, நன் மனப்பாங்கு, நண்பகல், நிலைபேறு, நீடிப்பாற்றல், பண்புயர்வு, பாலியல்பு, மறுபிறப்பு, வளமை, வலிமை, வாழ்வில் விடா உறுதி வாய்ந்த தன்மை, வாழ்வின் பேரார்வம், வெப்பம், அபாயம், அழிவு, கலகம் செய்கிற குணம், சட்ட விரோதமான உணர்வுகள்.

**தீ வலம் வருதல்** Ti valam varutal

(1) திருமணம்
'வாய் நல்லார் நல்ல மறை ஓதி மந்திரத்தால் பாசிலை நாணல் படுத்துப் பரிதி வைத்து காய் சின மா களிறு அன்னான் என் கைப்பற்றி தீ வலம் செய்யக் கனாக் கண்டேன்' (நாலா.562)

**தீபமாமரம்** Tipamāmaram

(1) ஒளி
'செந்தழல் ஒளியில் பொங்கும் தீப மாமரங்களாலும்' (பெரிய.780: 1-2)

**தீய புள்ளினம் தம்முள் பூசலிடல்** Tiya puḷḷinam tammuḷ pūcalital

(1) தீமை, கேடு, அழிவு
'பள்ளிகள் மேலும் மாடு பயில் அமண் பாழிமேலும் ஒள்ளிதழ் அசோகின் மேலும் உணவுசெய் கவளங்கையில் கொள்ளு மண்டபங்கள் மேலும் கூகையோடு ஆந்தை தீய புள்ளினமான தம்மிற் பூசலிட்டு அழிவு சாற்றும்' (பெரிய.2535)

**தீயில் காய்ப்புண்ட செம்பு** Tiyil kāyppunṭa cempu

(1) சிவப்பு நிறம்
'தேய்ப்புண்ட தம்பியர்க்கை சிவப்புண்ட கண்கள் தீயில் காய்ப்புண்ட செம்பின் தோன்ற கறுப்புண்ட மனத்தன் கண்டான்' (கம்ப.சுந்.1001: 3-4)

**தீயில் மூழ்குதல்** Tiyil mūlkutal

(1) துன்பம்
'தாயர் தவ்வையர் தன் துணைச் சேடியர் ஆயம் மன்னிய அன்பினர் என்று இவர் தீயில் மூழ்கினர் ஒத்தனர் செங்கணான்' (கம்ப.அயோ.516: 1-3)

**தீர்வை** (கீரி) Tirvai (mongoose)

(1) வலிமை – strength
'அரவுக் குறும்பு எறிந்த சிறுகட் தீர்வை' (மலை. 504)

**தீவளி** Tivaḷi (cyclone)

(1) அழிவு, கொடுமை – destruction, cruel
'.. .. .. .. கலநலத்தைத் தீவளி சென்று சிதைத்தாங்குச்

சான்றாண்மை தீயினஞ் சேரக் கெடும்' (நாலடி.179: 2-4)

**துடி** Tuṭi **(drum)**

(1) **ஒலி**
'புலையன் பெருந் துடி கறங்க பிற புலம் புக்கு' (நற். 77:1-2)

(2) **கொடுமை**
'வலி துரந்து சிலைக்கும் வன் கண் கடுந்துடி புலி துஞ்சு நெடு வரைக் குடிஞையோடு இரட்டும்'
(புறம். 170:6-7)

(2) **நுண்மை** – narrow / small
'துடி நுண்ணிடைப் பெருந்தோள் துவர்வாய் ஏழை மலர்மார்பன்' (சீவக.2503: 3)

(ஆ) துடியின் இடக்கண் Tuṭiyin̲ iṭakkaṇ

(3) **பயனின்மை** - futile
'கொடியவை கூறாதி பாண நீ கூறின் அடிபைய இட்டொதுங்கிச் சென்று துடியின் இடக்கண் அனையம்யாம் ஊரற்கு அதனால் வலக்கண் அனையார்க்கு உரை' (நாலடி.388)

(இ) துடியின் வலக்கண் Tuṭiyin̲ valakkaṇ

(4) **பயன்** - use
'கொடியவை கூறாதி பாண நீ கூறின் அடிபைய இட்டொதுங்கிச் சென்று துடியின் இடக்கண் அனையம்யாம் ஊரற்கு அதனால் வலக்கண் அனையார்க்கு உரை' (நாலடி.388)

(ஈ) துடியின் ஒலி Tuṭiyin̲ oli

(3) **பொருளுடன் அமைதல்** - meaningful
'உருள் துடி மகுளியின் பொருள்தெரிந்து இசைக்கும் கடுங் குரற் குடிஞையை நெடும் பெருங் குன்றம்' (அகம். 19:4-5)

**துணங்கை** Tuṇaṅkai **(a dance)**

(1) **மகிழ்ச்சி** - joy
'விழவு அயர் துணங்கை தழூஉகம் செல்ல' (நற். 50:3)

**தும்பி** Tumpi **(a fly / bee / beetle)**

(1) **தோழி**
'புன் கால் நாவல் பொதிப் புற இருங்கனி கிளை செத்து மொய்த்த தும்பி, பழம் செத்துப் பல் கால் அலவன் கொண்ட கோட்கு அசாந்து, கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்' (நற். 35:2-5)

(2) **முயற்சி / அறிவு** - effort / wisdom
'கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!' (குறு. 2:1)

(3) **வளம்** - fertile
'மலர்ந்த காந்தள் மாறாது ஊதிய கடும் பறைத் தும்பி சூர் நசைத்தா - அய்' (பதி. 67:19-20)

(4) **உவகை** - happy
'பன் மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை இன் மலர் இமிர்பு ஊதும் துணை புணர் இருந்தும்பி'
(கலி. 78:1-2)

(ஆ) நடுநாள் தும்பி ஒலித்தல் Naṭunāḷ tumpi olittal

(5) **இறப்பு, தீமை** – death, bad omen
'என்னை மார்பில் புண்ணும் வெய்ய நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்' (புறம். 280:1-2)

(இ) வண்டு Vaṇṭu

(6) **ஆண், தலைவன்** –male, hero
'புலி வரிபு எக்கர்ப் புன்னை உதிர்த்த மலி தாது ஊதும் தேனோடு ஒன்றி வண்டு இமிர் இன் இசை கறங்க' (நற். 322:7-9)

(7) **பயனின்மை, நயனின்மை** – furtile, unloving
'நிறைந்தோரத் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர் பயன் இன்மையின் பற்று விட்டு, ஒரூஉம் நயன் இல் மாக்கள் போல, வண்டினம் சுனை பூ நீத்து, சினைப் பூப் படர' (அகம். 71:1-4)

(8) **காம வேட்கை** - passion
'கேட்பாரை நாடிக் கிளக்கப் படும்பொருட்கண் வேட்கை அறிந்துரைப்பர் வித்தகர் -

வேட்கையால் வண்டு வழிபடரும் வாட்கண்ணாய்! தோற்பன கொண்டு புகாஅர் அவை' (பழமொழி. 17)

(9) **திரிதல்**
'உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல் தொண்டா யிரவர் தொகுபவே; வண்டாய்த் திரிதரும் காலத்துத் தீதிலிரோ என்பார் ஒருவரும் இவ்வுலகத் தில்' (நாலடி.284)

(10) **மயக்கம்**
'மாதரார் கண்ணு மதிநிழல் நீரினைக் கொண்டு மலர்ந்த நீலப் போது மறியாது வண்டுசலாடும் புகாரே எம்மூர்' (சிலப்.7.6)

(11) **காமுகர்**
'பசைந்துழிப் பழகல் செல்லாது பற்றுவிட்டு உவந்துழித் தவிராது ஓடுதல் காமுறும் இளையோர் உள்ளம் போலத் தளையவிழ்ந் தாதுமலர் ஒழியத் தாதுபெற நயந்து கார்ப்புன மருங்கின் ஆர்த்தனை திரிதரும் அஞ்சிறை அறுகால் செம்பொறி வண்டே' (பெருங்.மகத.1: 169-174)

(12) **நாண்**
'கற்பெனும் மாலை வீசி நாணெனும் களிவண்டு ஒப்பி' (சீவக.2073: 3)

(13) **மேன்மை**
'நிலத்துறும் கமலத்தை நேடும் வண்டது ஈ தலைக்குறை கமலத்தைச் சாரும் தன்மைபோல்' (தனிப்.31: 3-4)

(14) **கருமை**
'வண்டு ஒத்து இருண்ட குழல்வாராய்' (நாலா.168: 4)

(ஈ) **<u>வண்டு தாதுண்ணல்</u>** Vaṇṭu tātuṇṇal

(15) **இன்பம் துய்த்தல்** - enjoyment
'தகை வண்டு புதிது உண்ணத் தாது அவிழ் தண் போதின்' (கலி. 17-15)

(உ) **<u>சிதடி</u> (சிள்வண்டு)** Citaṭi (cicoda)

(16) **வறட்சி** - drought
'அலந்தலை உன்னத்து அம் கவடு பொருந்திச் சிதடி கரைய, பெரு வறம்கூர்ந்து, நிலம் பைது அற்ற புலம் கெடு காலையும்' (பதி. 23:1-3)

(ஊ) **<u>ஞிமிறு</u>** Ñimiṟu

(17) **அழகு, ஒலி** - beauty, noise
'வண்ணம் நீவி, வகை வனப்புற்ற, வரி ஞிமிறு இமிரும் மார்பு பிணி மகளிர்' (பதி. 50:17-18)

(எ) **<u>அரி</u>** Ari
**தலைவன்** - hero
'பூ வீழ் அரியின் புலம்பப் போகாது, யாம் வீழ்வார், ஏமம் எய்துக!' (பரி. 11:118-119)

(ஏ) **<u>தாதுதேர்பறவை</u>** Tārutēr paṟavai
**தலைவன்** - hero
'.. .. .. .. .. தாம் தம் நலம், தாது தேர் பறவையின் அருந்து, இறல் கொடுங்கால்' (கலி. 27:6-7)

(ஐ) **<u>அறு காற் பறவை</u>** Aṟu kāṟ paṟavai

(18) **முகர்ச்சி** - smelling / obfactory
'நாற்ற நாட்டத்து அறு காற் பறவை' (புறம். 70:11)

(ஒ) **<u>வண்டினம்</u>** Vaṇṭinam

(19) **இரவலர்**
'உறியோர்க்கு உதவுதல் செல்லாது ஒய்யெனச் சிறியோர் உற்ற செல்வம் போலப் பொருசிறை வண்டினம் பொருந்தாது மறக்க' (பெருங்.இலா.14: 32-34)

**(ஒப்பு)** <u>Bee, Beetle</u> **அன்பு, ஆன்மா, இடபராசி, இயல்புணர்ச்சிக் கட்டளை, ஒற்றுமை, கடும் உழைப்பு, கற்பு, கவர்ச்சி, காதல், கீழ்ப்படிதல், கூட்டு வாழ்வுக்குழு, கிறித்து, சொல்வன்மை, சுறுசுறுப்பான உழைப்பு, தன்னடக்கம், தூய்மை, நன்மை, நிலைபேறு, பணித்துறை ஆட்சி, படைப்புச்செயல், பாலியல்**

சாரா இனப்பெருக்கம், மகிழ்வுடன் பணியாற்றுதல், மீட்பு, முன்னறிவித்தல், வளமை, விடாமுயற்சி, விவேகம், இறப்பு, குருடன், சிறுமை, சூரியனின் மறைவு, நாணம், பில்லிசூனியம், போலிப்புகழ்ச்சி, முட்டாள், வனதேவதைகள்.

**<u>தும்பை</u>** Tumpai **(a flower)**

(1) **நெய்தல் திணை, போர்** - Seashore, war
*'தும்பைதானே நெய்தலது புறனே மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்றுதலையழிக்கும் சிறப்பிற்றென்ப'*
(தொல். 1015, 1016)

(2) **போர்** - war
*'துப்புத் துறைபோகிய வெப்புடையத் தும்பை'* (பதி. 39:3)

(3) **வெற்றி** - victory
*'மை அணிந்து எழுதரு மா இரும் பல் தோல் மெய் புதை அரணம் எண்ணாது, எஃகு சுமந்து, முன் சமத்து எழுதரும் வன்கண் ஆடவர் தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க, உயர்நிலை உலகம் எய்தினர்'* (பதி. 52:5-9)

(4) **சிறப்பு** - magnificent
*'விழுமிய வீழ்ந்த குரிசிலர்த் தம்மின்; புரையோர்க்குத் தொடுத்த பொலம் பூந் தும்பை'* (மது.736-737)

**<u>தும்மல்</u>** Tummal **(sneeze)**

(1) **குறிப்பின்மை, அடங்காமை, எதிர்பாராமை**– unespected, uncontrolled
*'மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றிவிடும்'* (குறள். 1253)

(2) **வாழ்த்து** - bless
*'ஊடி இருந்தேமா தும்மினார் யாம் தம்மை நீடு வாழ்க என்பாக்கு அறிந்து'* (குறள். 1312)

(3) **நினைத்தல், வாழ்த்துதல்** – remembering, bless
*'வழுத்தினாள், தும்மினோனாக அழித்து அழுதாள் யார் உள்ளித் தும்மினீர்? என்று'* (குறள். 1317)

(5) **நன்மை** – good omen
*'மன்ற முதுமரத்து ஆந்தை குரலியம்பக் குன்றக நண்ணிக் குறும்பிறந்து - சென்றவர் உள்ளிய தன்மையர் போலும் அடுத்தடுத்து ஒள்ளிய தும்மல் வரும்'*
(ஐந்.எழு.38)

**(ஒப்பு)** <u>Sneezing</u> **உடலை விட்டு ஆன்மா வெளியேற முயற்சித்தல், கடவுளின் ஒப்புதல், நன்மை.**

**<u>துயில்</u>** Tuyil **(sleep)**

(1) **இனிமை** - delightful
*'தெறு கதிர் இன் துயில் பசு வாய் திறக்கும்'* (நற். 275:5)

(2) **இயக்கமின்மை** - inactive
*'முரசு முழங்கு நெடுநகர் அரசு துயிலீயாது, மாதிரம் பனிக்கும் மறம் வீங்கு பல்புகழ்'* (பதி. 12:7-8)

(3) **அக இன்பம்** – pleasure / sexual pleasure
*'அணை மருள் இன் துயில் அம் பணைத் தடமென் தோள்'*
(கலி. 14:1)

(4) **அமைதி** - peaceful
*'அருள் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான்போல், பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டு இமிர் நறுங்கானல்'*
(கலி. 123:4-5)

(5) **இன்பம்** – pleasure / joy
*'இருள் மென் கூந்தல் ஏமுறு துயிலே'* (அகம். 92:13)

(6) **இருள்** - darkness
*'துயில் மடிந்தன்ன தூங்கு இருள் இறும்பின்'* (புறம். 126:7)

(7) **தீமை, இறப்பு** – bad omen, death
*'என்னை மார்பில் புண்ணும் வெய்ய, துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்'* (புறம். 280:4)

**(ஆ) <u>தோளில் துயில் பெறுதல்</u>**
Tōḻil tuyil pe<u>r</u>utal

(8) **காம இன்பம்** – sexual pleasure
*'வேய் உறழ் மென் தோள் துயில் பெறும்'* (கலி. 104:24)

**(இ) <u>கூந்தலில் துயில் பெறுதல்</u>**
Kūntalil tuyil pe<u>r</u>utal

(9) **காம இன்பம்** – sexual pleasure
*'ஒள்ளிழை வாருறு கூந்தல் துயில் பெறும், வை மருப்பின்'*
(*கலி*. 104:20)

(ஒப்பு) Sleep **அறிவு நுட்பம், உடலை விட்டு ஆன்மா வெளியேறுதல், படைப்பு, புனிதநிலை, மறுஎழுச்சிக்குரிய தேவை; அபாய நிலை, இறப்பு, பாலியல்.**

**துரும்பு** Turumpu **(scrape)**

(1) **அற்பம்** – worthless, negligible
*'போந்த உதாரனுக்குப் பொன் துரும்பு'* (*தனிப்*.65: 1)

**துவர்க்காய் தவறப் பழுக்காய் பெறல்**

Tuvarkkāy tavarap palukkāy peral
**(discard berry and get fruit)**

(1) **நன்மை** - good
*'வம்பவிழ் கோதை தந்த வான் துவர்க் காயை வீழ்த்தோர் செம்பழுக் காயை வாங்கித் திருநலத்து எடுத்துக் கொண்டாங்கு அம்பழ நீண்ட வாட்கண் அலமரு மணிசெயம் பூங்கொம்படு நுசுப்பினாய்க்குத் தந்தனென் பேணிக் கொண்டாய்'* (*சீவக*.1128)

**துழாஅய்** Tulāay **(basil)**

(1) **உயர்வு** - lofty
*'வண்டு ஊது பொலி தார், திரு ஞெமர் அகலத்து, கண்பொரு திகிரி, கமழ் குரல் துழாஅய் அலங்கல், செல்வன் சேவடி பரவி'* (*பதி*. 31:7-9)

(2) **சிறப்பு** - eminence
*'நக்கு அலர் துழாஅய் நாறு இணர்க் கண்ணியை'* (*பரி*. 4:59)

(ஆ) **துழாய் மாலை** Tulāy mālai

(3) **திருமால்** - vishnu
*'தொல்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே'* (இனியவை.கட.வா:2)

**(இ) துளவம்** Tuḷavam

(4) **மேன்மை, புனிதம்** – excellence / sacred
*'துளவம் சூடிய அறிதுயிலோனும்'* (*பரி*. 13:29)

(ஈ) **துளபம்** Tuḷapam

(5) **நறுமணம்** - fragrance
*'மெய்யனர் துளப விரையார் கமழ்நீள் முடி'* (*நாலா*.933: 3-4)

(ஒப்பு) Basil **தீமைகளிலிருந்து பாதுகாப்பு, மருத்துவ இயல்பு, வளமை.**

**துறு பறித்தல்** Turu parittal

(1) **பிறப்பறுத்தல், வினைநீக்கல்**
*'அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நான்கும் துறுபறித்து அனைய நோக்கிச் சொல்லிற்று ஒன்றாகச் சொல்லார்'* (*சுந்.தேவா*.926: 1-2)

**தூண்** Tūṇ **(pillar)**

(1) **உறுதி** - firmness
*'தட மருப்பு எருமை மட நடைக் குழவி தூண் தொறும் யாத்த காண் தகு நல் இல்'* (*நற்*. 120:1-2)

(2) **வலிமை** - strength
*'கயிறு அரை யாத்த காண் தகு வனப்பின் அருங் கடி நெடுந் தூண் போல'* (*அகம்*. 220:7-8)

(3) **பாரம் தாங்குதல்** – bear burden / load
*'இன்பம் விழையான் வினை விழையான் தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண்'* (*குறள்*. 615)

(4) **ஆதாரம், அடிப்படை** - foundation / basic
*'அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு ஐந்து சால்பு ஊன்றிய தூண்'* (*குறள்*. 983)

(5) **வலிமை, நிலைபேறு** – strong, stable
*'நாணின் வரைநிற்பர் நற்பெண்டிர் நட்டமைந்த தூணின்கண் நிற்குங் களிறு'* (*நான்*. 90: 3-4)

(6) **திரட்சி** - plumb

'தூண் தகு திரள் புயம் துளங்க துண்ணெனா' (கம்ப.அயோ.443: 2)

(ஆ) <u>கந்தம்</u> Kantam (pole)
**வலிமை**
'கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து' (அகம். 307:1-2)

(இ) <u>கம்பம்</u> Kampam
(6) **நிலைபேறு, அசைவின்மை** – stable, unmoving
'பெரு மரக் கம்பம் போல பொருநர்க்கு உலையா நின் வலன் வாழியவே' (புறம். 169:11-12)

(ஈ) <u>காழ்</u> Kā<u>l</u> (firmness)
(7) **திண்மை**
'மணி கண்டன்ன மாத்திரள் திண்காழ்' (நெடு. 111)

(உ) <u>கந்து</u> Kantu
(10) **திரட்சி** - plumbness
'கந்தெனத் திரண்ட திண்தோள்' (சூளா.1628: 3)

(ஊ) <u>கல் அணை</u> (கல் தூண்) Kal aṇai
(11) **ஆதாரம், தாங்கிப்பிடித்தல்** – support, bear
'கணையானது புவியெல்லாம் எடுத்துண்ணும் கைச்சிலை கல் அணையாக நின்று புவியினைத் தாங்குமென்றால்' (தனிப்.562: 2-3)
(ஒப்பு) <u>Pillar</u> **அறிவாற்றல், ஆண்மைக்கொள்கை, ஆதாரம், இலிங்க உரு, உலக அச்சு, உளஉறுதி, தாங்கும் தன்மை, நிலைபேறு.**
**இரு தூண்கள் - இருமைத் தன்மை.**
**உடைந்த தூண் - அழிவு, இறப்பு, உடைந்த உண்மை, உடைந்த வலிமை**

## <u>தூண்டில்</u> Tūṇṭil (angle / fish hook)

(1) **விரைவு** - speed
'வாங்கு விசைத்தூண்டில் ஊங்குஊங்கு ஆகி' (நற். 199:7)
(2) **ஆசைகாட்டுதல்** – lure / tempt
'பொய் போர்த்துப் பாண் தலை இட்ட பல வல் புலையனைத் தூண்டிலா விட்டுத் துடக்கி, தான் வேண்டியார் நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்' (கலி. 85:22-24)
(3) **கவர்தல்** - entyce
'நிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்' (மலை. 456)
(4) **ஏமாற்று** - cheat
'வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம் தூண்டில் பொன் மீன் விழுங்கியற்று' (குறள். 931)

(ஆ) <u>தூண்டில் இரை</u> Tūṇṭil irai
(7) **பிணித்தல், ஈர்த்தல்** – bind, entyce
'தூண்டில் இரையின் துடக்கு உள்ளுறுத்து' (பெருங்.உஞ்.35: 108)

(ஒப்பு) <u>Hook</u> **ஆண், கவர்ச்சிப் பொருள், காதல், மீன் பிடித்தல்.**

## <u>தூதுளங்கனி</u> Tūtuḷaṅka<u>n</u>i (a fruit)

(1) **சிவப்பு நிறம்**
'தூதுளங் கனியை வென்ற துவர்த்த வாய் வெண்மை தோன்ற' (கம்ப.சுந்.202: 2)

## <u>தூமகேது</u> Tūmakētu (comet)

(1) **துன்பம், தீமை / கேடு** (bad omen)
'தூமகேது புவிக்கு எனத் தோன்றிய வாம மேகலை மங்கையரால் வரும் காமம் இல்லை எனின் கடுங்கேடு எனும் நாமம் இல்லை நரகமும் இல்லையே' (கம்ப.அயோ.114)

(ஆ) <u>தூமம் தோன்றுதல்</u> Tūmam tō<u>n</u><u>r</u>utal
(2) **தீமை, வறட்சி** - bad omen, drought
'மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும், ,, ,, ,, ,, பெயல் பிழைப்பு அறியாப் புன்புலத்ததுவே' (புறம். 117:1-7)

**தூற்றின்கண் தூவிய வித்து** Tūrriṉkaṇ tūviya vittu

(1) **வீண்** - furtile
'முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சில் நிறையிலான் கொண்ட தவமும் - நிறையொழுக்கம் தேற்றாதான் பெற்ற வனப்பும் இவைமூன்றும் தூற்றின்கண் தூவிய வித்து' (திரி.80)

**தெங்கு** Teṅku **(coconut palms)**

(1) **வளமை**
'ஒலி தெங்கின், இமிழ் மருதின் புனல் வாயில், பூம்பொய்கை, பாடல் சான்ற பயம்கெழு வைப்பின்' (பதி, 13:7-9)
**இடைநிலை நட்பு** – friendship
'கடையாயார் நட்பில் கமுகனையர் ஏனை இடையாயார் தெங்கின் அனையர்' (நாலடி.216: 1-2)

**தென்குமரி** Teṉkumari **(capecomorine)**

(1) **பெண்மை** - feminine
'தென்குமரி வட பெருங்கல் குண குட கடலா எல்லை' (புறம். 17:1-2)

**தென் புலம்** Teṉpulam **(south)**

(1) **இறப்பு** - death
'தென்புல வாழ்நர்க்கு அருங் கடன் இறுக்கும் பொன் போல் புதல்வர்ப் பெறாஅதீரும்' (புறம். 9:3-4)

(ஆ) **தென்திசை** Teṉticai

(2) **சிறப்பு** - greatness
'மா தவம் செய்த தென்திசை வாழ்ந்திட' (பெரிய.35: 1)

(3) **மேன்மை**
'பந்த மானுடப் பாற்படு தென்திசை இந்த வாந்திசை எட்டினும் மேற்பட வந்த புண்ணியம் யாதென' (பெரிய.40: 2-4)

(இ) **இராவணன் பிள்ளைகளும், உறவினரும் மற்றுமுள்ள அரக்கர்களும் தென்திசையில் சென்று திரும்பி வராதது** Itāvaṇaṉ piḷḷaikaḷum maṟṟumyḷḷa arakkarkaḷum teṉticaiyil çeṉṟu tirumpi varātatu (Ravana and kindred going south)

(4) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
'மக்களும் சுற்றமும் மற்றுளோர்களும் புக்கனர் அப் புலம் போந்தது இல்லையால் சிக்கு அற நோக்கினேன் தீய இன்னமும் மிக்கன கேட்க என வியம்பல் மேயினாள்' (கம்ப.சுந். 369)

(உ) **தென்புலத்தார்** Teṉpulattār

(5) **இறந்தோர்** - the death
'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு ஐம்புலத்தாறு ஓம்பல் தலை' (குறள்.43)

(ஒப்பு) South உடலின் மேல்பாதி, சூரியன், நெருப்பு, பாலைவனம், புது மலர்ச்சிப் பருவம், போனிக்ஸ் பறவை, மழை, வெப்பம், தீமை, நரகத்தின் இயல்புடைய பகுதி.

**தென்றல்** Teṉṟal **(southerly)**

(1) **இனிமை** - delightful
'கோடு அறை கொம்பின் வீ உகத் தீண்டி மராஅம் அலைத்த மண வாய்த் தென்றல் சுரம் செல் மள்ளர் சுரியல் தூற்றும் என்றூழ் நின்ற புன் தலை வைப்பில்' (அகம். 21:11-14)

(2) **குளிர்ச்சி** - cool
'எல்லுறு மாலை இமயத்து உயர்வரை அல்குதற்கு எழுந்த வந்தண் தென்றால்' (பெருங்.மகத.1: 198-199)

(ஒப்பு) Breeze உணர்வு, காதலுக்குரிய ஆர்வநாட்டம், கடவுளின் தூதுவன், சுவாசம், வளமை.

**தேமாத் தீங்கனி** Tēmāt tīṅkaṉi **(mango fruit)**

(1) **இனிமை** – sweetness

'தேமாத் தீங்கனி போலத் தித்திக்குமே' (திருநா.தேவா.201: 4)

**தேர்** Tēr **(chariot)**

(1) **விரைவு / வேகம்** – speed / quickness
'கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே' (நற். 45:5)

(2) **திண்மை** - firmness
'திண்தேர்ப் பொறையன் தொண்டி முன் துறை' (குறு. 128:2)

(3) **மாட்சி** - dignity / honour
'திண்ணிதின் மாண்டன்று தேரே' (ஐங்.449: 3)

(4) **இருக்கை / இடம் / நிலம்** – seat / place / world
'வேத மா பூண் வையத் தேர் ஊர்ந்து' (பரி. 5:23)

(5) **அழகு**
'அணிகிளர் நெடுந்திண்தேர் அயர்மதி' (கலி. 30:19)

(6) **வருத்தம்** – distress
'அளிய என் உள்ளத்து உயவுத் தேர் ஊர்ந்து விளியா நோய் செய்து, இறந்த அன்பிலவனை' (கலி. 144:37-39)

(8) **கானல்** – mirage
'இடு மருப்பு யானை இலங்கு தேர்க்கு ஓடும் நெடுமலை வெஞ்சுரம் போகி' (கலி. 24: 10-11)

(ஆ) **தேர்மணிக் குரல்** Tērmaṇik kural

(8) **முன்னறிவிப்பு** – herald / announce
'வள் வாய் ஆழி உள் வாய் தோயினும் புள்ளு நிமிர்ந்தன்ன பொலம் படைக் கலி மா வலவன் கோல் உற அறியா உரவு நீர்ச் சேர்ப்பன், தேர்மணிக் குரலே!' (நற். 78:8-11)

(இ) **இரவி தேர்** Iravi tēr (sun's chariot)
**விரைவு** - speed
'ஈண்டு இவை நிகழ்உழி இரவி தேர் எனத் தூண்டுறு தேரின்மேல் தோன்றும் தோன்றலை' (கம்ப.சுந்.1005: 1-2)

(ஈ) **தனிக்கால் தேர்** Taṉikkāl tēr - one wheeled chariot (sun)

(12) **தனிமை, ஒப்பின்மை**
'கனல்கதிர் கான்று கடுமை கூராத் தனிக்கால் தேரோன் தனிமை எய்த' (பெருங்.உஞ்.53: 160-161)

(உ) **வையம்** Vaiyam
**விரைவு**
'கடிது இயல் வையம் கவ்வையின் ஏற்றி' (பெருங்.உஞ்.35: 151)

(ஒப்பு) Chariot **அரச ஆற்றல், ஆனையுரிமை, கீழ்ப்படுத்தல், செல்வ வளமை, தகுதி, போர்.**

**தேரின் கொடுஞ்சியில் ஏறிக் காக்கைகள் ஒலித்தல்** Tērin koṭuñciyil ēṟik kākkaikaḷ olittal

(1) **தீமை, தோல்வி**
'கதிர்மணித் தேர்க் கொடுஞ்சேறிக் காக்கைகள் எதிரெதிர் சிலம்பின' (சூளா.1220: 1-2)

**தேரை** Tērai **(toad / frog)**

(1) **நீர்வளம்** – water aboundance
'இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை' (குறு. 193:2)

(2) **ஒலி** - sound
'நெடு நீர் அவல பகுவாய்த் தேரை' (ஐங். 453:1)

(3) **சிறுமை** – mean, smallness
'உறுபுலி ஊனிரை இன்றி ஒருநாள் சிறுதேரை பற்றியும் தின்னும்' (நாலடி.193: 1-2)

(ஆ) **தேரை தெவிட்டல்** Tērai teviṭṭal (croak)

(3) **கார்காலம்** – rainy season
'வரிநுணல் கறங்க, தேரை தெவிட்ட கார் தொடங்கின்றே காலை' (ஐங். 468:8-1-2)

(இ) **நுணல்** Nuṇal

(4) **பேதைமை** - foolish
'பொல்லாத சொல்லி மறைத்தொழுகும் பேதைதன் சொல்லாலே தன்னைத்

துயர்ப்படுக்கும் - நல்லாய் மணலுள் முழுகி மறைந்து கிடக்கும் நுணலும்தன் வாயால் கெடும்!' (பழமொழி. 114)

(ஈ)**கிணற்றுத்தவளை** Kinarruttavalai

(5) **அறியாமை** - ignorance
'உணற்(கு) இனிய இன்னீர் பிறி(து) உழிஇல் என்றும் கிணற்(று) அகத்துத் தேரைபோல் ஆகார் - கணக்கினை முற்றப் பகலும் முனியா(து) இனிதோதிக் கற்றலிற் கேட்டலே நன்று' (பழமொழி. 5)

## தேள் Tēḷ - scorpion

(1) **காம வேட்கை** - lust
'இடு தேள் மருந்தோ, நின் வேட்கை?' (கலி. 110:2-3)

(2) **இடுதேளிடுதல்** – false accuse
'பட்ட பதியிற் படாத தொருவார்த்தை இட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன்மேல்' (சிலப். 9: 47-48)

(ஆ) **தேள் எறிதல்** Tēḷ erital

(3) **துன்பம்** - affliction
'விடத் தேள் எறிந்தாலே போல வேதனை ஆற்றவும் பட்டோம்' (நாலா.529: 3-4)

(ஒப்பு) Scorpion **ஆபத்து, இகழ்ச்சி, கடும் பாறைகள், கழிகாமம், கழிவிரக்கம், கண்டனம், தற்கொலை, தீமை, துயருறுதல், தொல்லை, நெருப்பு, பாலைவனம், பாழ்நிலை, வறட்சி, நச்சுத்தன்மை.**

## தேன் Tēn (honey)

(1) **இனிமை** - sweetness
'சாந்தில் தொடுத்த தீம் தேன் போல' (நற். 1:4)

(2) **நட்பு / அன்பு** – friendship / love
'பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே' (குறு. 3:4)

(3) **வேட்கை** - strong desire
'பருவத் தேன்நசைஇப் பல்பறைத் தொழுதி' (குறு. 175:1)

(4) **விருப்பம்** - desire
'யாமக்குறை ஊடல் இன் நசைத் தேன் நுகர்வோர்' (பரி. 10:32)

(5) **காமம்** – passion
'திருவில் திகழ் காமத் தேன் பருகித் தேவர்' (சீவக.3141: 3)

(6) **இன்பம்** – pleasure
'மையேர் குவளைக்கண் வண்டினம் வாழும் செந்தாமரை வாய் எய்யேம் எனினும் குடைந்தின்பத் தேனுண்டு எழில் தருமே' (திருக்கோ.7: 66. 3-4)

(ஆ) **பிரசம்** Piracam

(5) **இனிமை, சுவை** – sweet, tasty
'பிரசம் கலந்த வெண் சுவைத் தீம் பால்' (நற். 110:1)

(6) **நறுமணம்** - fragrance
'நாறு கொள் பிரசம் ஊறு நாடற்கு' (நற். 268:5)

(7) **களிப்பு** – joy / exultation
'இருங் களிப் பிரசம் ஊத' (நற். 311:10)

(இ) **நறவு** Naravu

(8) **மகிழ்ச்சி** - happiness
'நறவு மகிழ் இருக்கை நல் தேர்ப் பெரியன்' (நற். 131:7)

(9) **மயக்கம்** - intoxication
'தேறுகள் நறவு உண்டார் மயக்கம் போல்' (கலி. 147:2)

(10) **வளமை** - exuberance
'நறவு நொடை நெல்லின் நாள் மகிழ் அயரும்' (அகம். 61:10)

**களிப்பு**
'நறவு உண் மண்டை நுடக்கலின், இறவுக்களித்து பூட்டு அறு வில்லின் கூட்டுமுதல் தெறிக்கும்' (நற். 131:7)

**இனிமை, களிப்பு**
'இன்களி நறவின் இயல்தேர் நன்னன்' (அகம். 178:16)

**விருப்பம்**
'நல் அமிழ்து ஆக, நீ நயந்து உண்ணும் நறவே' (புறம். 125:8)

(ஈ) **நறா** Narā

**மகிழ்ச்சி** - joy
'ஒப்புரவினான் அறிப சான்றாண்மை - மெய்க்கண் மகிழான் அறிப நறா' (நான்.80: 3-4)

(ஈ) **தாது** Tātu (pollen)

(11) **தண்மை**
'தண் தாது ஊதிய வண்டினம் களிசிறந்து' (அகம். 170:6)

(12) **செல்வம்** - wealth
'வறியோர்க்கு உதவுதல் செல்லாது ஒய்யெனச் சிறியோர் உற்ற செல்வம் போலப் பொருசிறை வண்டினம் பொருந்தாது மறக்க' (பெருங்.இலா.14: 32-34)

(உ) **மடல்பனைக்குள் வைத்த தேன்** Maṭalpaṉaikkuḷ vaitta tēṉ

(13) **பயனின்மை**
'சுற்றும் கழிங்குளவி சூரைத்தூறு ஆரியப்பேய் எற்றும் சுடுகாடு இடிகரையின் புற்றில் வளர்ந்த மடல்பனைக்குள் வைத்த தேன் ஒக்கும் தளர்ந்தோர்க்கு ஒன்று ஈயார் தனம்' (தனிப்.44)

(ஒப்பு) Honey **அறிவு நுட்பம், இனிமை, எளிமை நயம், கற்புடைமை, கன்னிமை, காதல், கவர்ச்சி, செயல்நிறம், செல்வ வளம், தன்னடக்கம், தியாகம், தூய்மை, தேர்ச்சித்திறம், தொடக்கம், நடுநிலைமை, நாநலம், மரியாதை, மிகுதி, முழுமை, விவேகம், சிற்றின்ப வேட்கை, போலித்தோற்றம், போலிப் புகழ்ச்சி.**

**தேன்மாரி பாற்கடல் பெய்தல்** Tēṉmāri pāṟkaṭal peytal

(1) **செல்வம்**
'திருவிளை தேன்பெய் மாரி பாற்கடல் பெய்த தென்றாள்' (சீவக.2077)

(2) **இன்பம், நன்மை (மிகுதல்)**
'ஆன்பால் தெண்கடல் அமுதுற வளைஇய தேன்பெய் மாரியின் திறவதாக' (பெருங்.உஞ்.34: 101-102)

**தேனீ** TēṉI **(honey bee)**

(1) **பொருளிழப்பு** - loss
'உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும் கெடாஅத நல்லறமும் செய்யார் கொடாஅது வைத்து ஈட்டினார்இழப்பர் வான்தோய் மலைநாட உய்த்து ஈட்டும் தேனீக் கரி' (நாலடி.10)

**தேனை மாரி** Tēṉai māri **(honey rain)**

(1) **இனிமை**
'தேனை மாரியன்னான் திசை காவலன்' (சீவக.161: 3)

(ஆ) **தேன்தரு மாரி** Tēṉtaru māri
**இனிமை**
'தேன்தரு மாரி போன்று தீவிய கிளவி தம்மால்' (சீவக.581: 1)

**தைத்திங்கள்** Taittiṅkaḷ **(a month)**

(1) **தண்மை** - cool
'தைஇத் திங்கள் தண் கயம் படியும்' (நற். 80:7)

(ஆ) **தைந்நீராடல்** Tainnīrāṭal (a festival)

(2) **பலன் எதிர்பார்ப்பு, பயன் கருதுதல்** - expectation
'இழை அணி ஆயமொடு தகு நாண் தடைஇ, தைஇத் திங்கள் தண் கயம் படியும் பெருந் தோட் குறுமகள்' (நற். 80:6-8)

**தொடர்** **(சங்கிலி)** Toṭar **(chain)**

(1) **உறவு** - relationship
'பின்னிய தொடர்நீவி, பிறர் நாட்டுப் படர்ந்து, நீ மன்னிய புணர்ச்சியான் மறுத்தரல் ஒல்வதோ' (கலி. 15:18-19)

(2) **வலிமை** - strong
'மென்பிணி வன்தொடர் பேணாது, காழ் சாய்த்து' (மது. 382)

**தொடர்ந்து பல பிணங்களும் தூங்குதல்** Toṭarntu pala piṇaṅkaḷum tūṅkutal( **hanging corpses)**

(1) **அச்சம்** - fear
'தூக்களிர்ப்பன தொடர்ந்த பல் பிணங்களும் தூங்க .. .. .. யாக்கை கொண்டவர்க்கு அணைதலுக்கு அரிதது பெரிதும்' (நீலகேசி.31: 2,4)

**தொடி** Toṭi **(armlet)**

(1) **பெண்** - women
'வில்லோன் காலன கழலே; தொடியோள் மெல்லடி மேலவும் சிலம்பே' (குறு. 7:1-2)

(2) **வெற்றி**
'வென்றி ஆடிய தொடித் தோல் மீகை' (பதி. 40:12)

(3) **அழகு, பொலிவு** - radiance
'ஐ இரு தலையின் அரக்கர் கோமான் தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து'
(கலி. 38:3-4)

(ஆ) <u>**தொடி செறிதல்**</u> Toṭi ceṟital (armlet tightening)

(4) **மகிழ்ச்சி** - happiness
'தொடி செறி யாப்பு அமை அரிமுன்கை' (கலி. 54:3)

(இ) <u>**தொடி நீக்குதல்**</u> Toṭi nīkkutal (remove armlet)

(5) **இழப்பு / அமங்கலம் / விதவை** – loss / inanspicious / widowhood
'கூந்தல் கொய்து, குறுந் தொடி நீக்கி, அல்லி உணவின் மனைவியொடு' (புறம். 250:4-5)

(ஈ) <u>**தொடி நெகிழ்தல்**</u> Toṭi nekiḻtal (loosen)

(6) **துன்பம், பிரிவு** - woe, seperation
'கோதை மயங்கினும், குறுந் தொடி நெகிழினும், காழ் பெயல் அல்குல் காசு முறை திரியினும், மாண் நலம் கையறக் கலுழும் என் மாயக் குறுமகள் மலர் ஏர் கண்ணே?'
(நற். 66:8-11)

(உ) <u>**கைவளை**</u> Kaivaḷai

(7) **இன்பம் / மங்கலம்** – joy / anspicious
'கார்எதிர் தண்புன்ம் காணின், கைவளை, நீர்திகழ் சிலம்பின் ஓராங்கு விரிந்த வெண்கூதாளத்து அம்தூம்பு புதுமலர் ஆர்கழல்பு உகுவ போல சோர்குவ அல்ல என்பர்கொல் - நமரே?'
(குறு. 282:4-8)

(ஊ) <u>**வளை**</u> Vaḷai

(8) **உரிமை** - right
'காவிரி வைப்பின் போஓர் அன்ன, என் செறிவளை உடைத்தலோ இலெனே' (அகம். 186:16-17)

(9) **அழகு, ஒளி** - dazzling, beautiful
'வாள் ஏர் எல் வளை நெகிழ்த்த' (அகம். 267:16)

(10) **வெற்றி** - victory
'இகலின் வலியாரை எள்ளி எளியார் இகலின் எதிர்நிற்றல் ஏதம் - அகலப்போய் என்செய்தே யாயினும் உய்ந்தீக சாவாதான் முன்கை வளையுந் தொடும்'
(பழமொழி. 293)

(எ) <u>**வளை நெகிழ்தல்**</u> Vaḷai nekiḻtal (loosing bangles)

(11) **துன்பம்** - sorrow
'எல் வளை ஞெகிழ்த்தோர்க்கு அல்லல் உறீஇ' (நற். 263:2)

(12) **பிரிவு** - seperation
'இறை வரை நில்லா வளையும்'
(நற். 263:2)

(13) **தனிமை** – loneliness
'இலங்கு வளை நெகிழ, சாஅய்ப் புலம்பு அணிந்தன்று' (குறு. 50:4-5)

(ஏ) <u>**வளை செறிதல்**</u> Vaḷai ceṟital (bangles tighten)

(14) **இன்பம்** - pleasure
'பொய்கை ஊரன் கேண்மை செய்து இன்புற்றனெம்; செறிந்தன வளையே' (குறு. 61:5-6)

(15) **நன்மை, எதிர்பார்ப்பு** – good omen, expectation
'சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்; வருவர்கொல் வாழி - தோழி!' (குறு. 260:3-4)

(ஐ) <u>**வளை உடைத்தல்**</u> Vaḷai uṭaittal (bangles break)

(16) **உரிமை** – right
'காவிரி வைப்பிற் போஓர் அன்னஎன் செறிவளை உடைத்தலோ இலனே'
(அகம். 186:16-17)

(ஒ) <u>**வளை கழலுதல்**</u> Vaḷai kaḻalutal

(!7) **துன்பம்** - sorrow
'காதின கனகப் பைந்தோடும் கைவெள் வளைகளும் கழல .. .. .. வேதனை பெரிதுடைத்து அடிகள் விளிகவிப் பிறப்பென உரைத்தார்' (நீலகேசி.73: 1,4)

**(ஓ) <u>வளை நெகிழ்தல்</u>** Vaḷai nekiltal

(13) **தனிமை, பிரிவு, இரங்கல்**
'இளையிருள் பரந்ததுவே எற்செய் வான் மறைந்தனனே களைவரும் புலம்புநீர் கண்பொழீஇ உகுத்தனவே தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார் நாட்டுளதாம்கொல் வளை நெகிழ வெரிசிந்தி வந்த இம் மருண்மாலை' (சிலப்.7.40)

**(ஔ) <u>பொன் தொடி தகர்த்தல்</u>**
Pon toṭi takarttal

(14) **அவலம்**
'திருத்தலு மில்லேன் நிற்றலும் இலனெனக் கொற்றவை வாயில் பொற்றொடி தகர்த்துக் கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன் மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கென இரவு பகலும் மயங்கினள்' (சிலப்.23: 180-184)

**(க) <u>வளை கொள்வது</u>** Vaḷai koḷvatu
**துன்பம்**
'நக்கம் வந்து பலியிடு என்றார்க்கு இட்ட மிக்க தையலை வெள்வளை கொள்வது தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத் தக்கது அன்று தமது பெருமைக்கே' (திருநா.தேவா.429)

**(ங) <u>வளை நீக்குதல்</u>** <u>Vaḷai nīkkutal</u>

(15) **கைம்மை**
புண்ணியன் பொன்றினானேல் வெறிகுலாய்க் கிடந்த மாலை வெள்வ 'பொறிகுலாய்க் கிடந்த மார்பின் ளை முத்தம் நீக்கி நெறியினால் நோற்றல் ஒன்றோ நீள் எரி புகுதல் ஒன்றோ அறியலென் கொழுநன் மாய்ந்தால் அணி சுமந்திருப்பது என்றான்' (சீவக.7: 1706)

**(ச) <u>வளை நீத்தல்</u>** Vaḷai nīttal
**பிரிவு**
'பூப்பரிவார் பொன்செய் கலம்பரிவார் பொன்வளையை நீப்பிர் எனப்புடைப்பார் நீள்தாமம் சிந்துவார்' (சீவக.2965: 1-2)

**<u>தொடுதோல்</u> (செருப்பு)** Toṭutōl

(1) **உடைமை** - posession
'தொடுதோற் கானவன் கவை பொறுத்தன்ன' (அகம். 34:3)

**(ஆ) <u>அடிபுதை அரணம்</u>** Aṭi putai araṇam

(2) **பாதுகாப்பு** – safety, protect
'அரும்பொருள் அருத்தும், திருந்து தொடை நோன்தாள் அடிபுதை அரணம் எய்தி' (பெரும். 68-69)

**(இ) <u>செருப்பு</u>** Ceruppu

(3) **கீழ்மை / தாழ்வு** - low, mean
'மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச் செய்தது எனினும் செருப்புத்தன் காற்கேயாம் எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச் செய்தொழிலாற் காணப் படும்' (நாலடி.347)

(4) **அடிமை** - slave
'ஆசான் என்னும் சொல் பிறிதாமோ அண்ணல் குமரற்கு அடிச்செருப்பு ஆகென' (பெருங்.உஞ்.36: 309-310)

**(ஈ) <u>பாதுகை</u>** Pātukai (ownership, right)

(5) **அரசத்தன்மை, செல்வம்** – royality, wealth
'அனைய னாய பரதன் அலங்கலின் புனையும் தம்முனார் புனையும் பாதுகைப் பூசனை' (கம்ப.யுத்த.4100: 1-2)

**(உ) <u>தொடுகழல்</u>** Toṭukalal

(6) **உடைமை** – possession
'தொடுகழல் செம்பொன் மோலி சென்னியில் சூட்டிக்கொண்டான்' (கம்ப.யுத்த.449: 4)

(ஊ) திருவடி Tiruvaṭi

(7) மேலாண்மை, வல்லன்மை - authority, power
'திருவடி முடியின் சூடி செங்கதிர் உச்சி சேர்ந்த அருவரை யென்ன நின்ற அரக்கர் தம் அரசை..' (கம்ப.யுத்த.450: 1-2)

(எ) செருப்பிடைப்பட்ட பரல் Ceruppiṭaippaṭṭa paral

(8) இடையூறு - hindrance
'செருப்பு இடைச் சிறு பரல் அன்னன்' (புறம். 257:1)

(ஒப்பு) Sandal, Slipper, Shoe
அடையாளப்படுத்துதல், அரசமைவு, அன்பு, இணைவு, இசைவு, உடைமை, உரிமை, ஏற்பு, கருப்பைவாய், பயணம், பணிவு, மகிழ்ச்சி, வலிமை, வளமை, விடுதலை, தாழ்நிலை, துயருறுதல், வறுமை, வெட்கக்கேடு.

**தொடை (அம்பு) Toṭai (arrow)**

(1) வீரம், செம்மை – valour, uprightness
'துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்' (நற். 33:6)

(2) வலிமை - strength
'வீங்கு விளிம்பு உரீஇய விசைஅமை நோன்சிலை வாங்கு தொடை பிழையா வன்கண் ஆடவர்' (அகம். 175:1-2)

(ஆ) அம்பு Ampu

(3) செயல்திறம் - capability
'வடி நவில் அம்பின் வினையர் அஞ்சாது' (நற். 48:7)

(4) வலிமை - powerful
'வல் வில் அம்பின் எய்யா வண் மகிழ்' (நற். 198:10)

(5) செம்மை, தீமை அழிதல் – upright, destroying, evil
'செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த செங்கோல் அம்பு' (குறு. 1:1-2)

(6) வெற்றி - victory, success
'அம்புடை வலத்தர் உயர்ந்தோர் பரவ' (பதி. 80:11)

(7) கூர்மை - sharp
'வள் வாய் அம்பின், கோடைப் பொருநன்' (அகம். 13:10)

(8) ஆற்றல் – ability, power
'வினை வல் அம்பின் விழுத் தொடை மறவர்' (அகம். 105:13)

(9) கொலை - killing
'செந் தொடை பிழையா வன்கண் ஆடவர் அம்பு விட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை' (புறம். 3:20-21)

(10) விரைவு - quick
'எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின் என' (புறம். 9:5)

(11) காவல் - security, safety
'அம்பு துஞ்சும் கடி அரணால்' (புறம். 20:11)

(12) புகழ் / சிறப்பு – fame / glory
'புகழ்சால் சிறப்பின் அம்பு மிகத் திளைக்கும் கொலைவன் யார் கொலோ?' (புறம். 152:7-8)

(13) பகை, ஆற்றல் – enmity, ability
'வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல் விசும்பில் தூங்கும் எயிலும் தொலைத்தலால் - ஆங்க முடியும் திறத்தால் முயல்கதாம் கூரம் படியிழுப்பின் இல்லை யரண்' (பழமொழி. 155)

(14) அழிவு
'கொண்டொழுகு மூன்றற் சூதவாய் பசித்தோற்றம் பண்டொழுகி வந்த வளமைத்தங் - குண்டது கும்பியிலுந் திச்சென் றெறிதலால் தன்னாசை அம்பாயுள் புக்கு விடும்!' (பழமொழி. 392)

(18) விரைவு, தீமை – quickness, evil
'.. .. .. விசையின் நரிமா உளங்கிழித்த அம்பினின் தீதோ, அரிமாப் பிழைப்பெய்த கோல்?' (நாலடி.152: 2-4)

(இ) காமன் அம்பு Kāmaṉ Ampu (cupid's arrow)

(16) அன்பு, காதல் – liking, love
'தன் நெஞ்சு ஒருவற்கு இணைவித்தல் யாவர்க்கும் அன்னவோ - காம! நின் அம்பு?' (கலி. 147:47)

(ஈ) மலர் அம்பு Malar ampu (flower arrow)

(17) **காதல்** - love
'விரை மலர் அம்பினோன்'
(பரி. 22:26)

(உ) <u>அம்பும் வில்லும்</u> Ampum villum (bow and arrow)

(18) **ஆற்றல், பெருமை** – power, greatness
'வரி சிலை வய அம்பினவை'
(பரி. 15:60)

(19) **அழிவு** -
'சிலை மாண் வல் வில் சுற்றி, பல மாண் அம்புடைக் கையர் அரண் பல நூறி நன் கலம் தரூஉம் வயவர் பெருமகன் சுடர் மணிப் பெரும் பூண் ஆஅய் கானத்து'
(அகம். 69:15-18)

(ஊ) ஏ E

(20) **துன்பம்** - sorrow
'ஏ மான் பிணையின் வருந்தினெனாக' (நற். 61:3)

(21) **விரைவு, வேகம்** – quick, speed
'ஏத்தொழில் நவின்ற எழில்நடைப் புரவி' (அகம். 160:11)

(22) **ஆபத்து** - danger
'நலிந்தொருவர் நாளும் அடுபாக்குப் புக்கால் மெலிந்தொருவர் வீழாமை கண்டு - மலிந்தடைதல் பூப்பிழைத்து வண்டு புடையாடும் கண்ணினாய் ஏப்பிழைத்துக் காக்கொள் ளுமாறு'
(பழமொழி. 309)

(எ) <u>பகழி</u> Pakali

(23) **கொடுமை** - cruel
'பச்சூன் பெய்த பகழி போல'
(நற். 75:7)
**விரைவு** - speed
'ஆட்டு அயர்ந்து - அரி படும் ஐ விரை மாண் பகழி' (பரி. 10:97)

(24) **துன்புறுதல்** - suffer
'அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழி' (அகம். 167:8)
**கூர்மை** - sharp
'குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி' (அகம். 248:7)

(25) **கொலைத்தன்மை** - killing
'கடுங்கண், மறவர் பகழி மாய்த்தென' (அகம். 297:6)
**விரைவு** - speed
'நொவ்வு இயற் பகழி பாய்ந்தென'
(அகம். 388:11)

(26) **ஆற்றல்** - power
'வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி' (புறம். 152:1)

(ஏ) <u>வாளி</u> Vāḷi

(27) **கொலை** - killing
'செங்கோல் வாளிக் கொடு வில் ஆடவர் வம்ப மாக்கள் உயிர்த் திறம் பெயர்த்தென' (நற். 164:6-7)
**விரைவு** - speed
'சிலைமாண் கடுவிசைக் கலைநிறத்து அழுத்திக் குருதியொடு பறித்த செங்கோல் வாளி'
(குறு. 272:5-6)
**கூர்மை** - sharp
'அவ் விளிம்பு உரீஇய கொடுஞ் சிலை மறவர் வை வார் வாளி விறற் பகை பேணார்'
(குறு. 297:1-2)

(28) **சீற்றம்** – rage, wrath
'செருச் செய்த வாளி சீற்றத்தவை அன்ன' (பரி. 20:37)

(ஐ) <u>கணை</u> Kaṇai

(29) **வலிமை** - strength
'.. .. .. .. உரவுக் கணை வன் கைக் கானவன் வெஞ் சிலை வணக்கி'
(நற். 285:2)

(30) **செம்மை** - straight
'செங் கணை தொடுத்த செயிர் நோக்கு ஆடவர்' (நற். 298:2)
**விரைவு** - quickness
'ஒடுங்கார் உடன்றவன் தானை வில் விசை விடும் கணை ஒப்பின் கதழ் உறை சிதறுஉ' (பரி. 22:5-6)
**துன்புறுதல்** - affliction
'பணை அமை பாய்மான் தேர் அவன் செற்றார் நிறம் பாய்ந்த கணையினும், நோய் செய்தல் கடப்பு அன்றோ?' (கலி. 57:14-15)

(31) **இறப்பு** - death
'பாம்புஊன் தேம்பும் வறம்கூர் கடத்திடை, நீங்கா வம்பலர் கணைஇடத் தொலைந்தோர்'
(அகம். 313:12-13)
**கொடுமை** – cruel

'கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன வினைபடு பாலால் கொளல்' (குறள். 279)

(32) **கடுமை** – fierce
'யானைமேல் யானை நெரிதர ஆனாது, கண்நேர் கடுங்கணை மெய்ம்மாய்ப்ப' (களவழி.8: 1-2)

(33) **துன்பம்** - pain
'பல்கணை எவ்வாயும் பாய்தலால் செல்கலாது ஒல்கி உயங்கும் களிறெல்லாம்' (களவழி.10: 1-2)

(ஓ) **காமன்கணை** Kāman kaṇai (cupid's arrow)

(34) **இன்பம் / காமம்** – pleasure, passion
',, ,, ,, ,, கவர் கணைச் சாமனார் தம்முன் செலவு காண்'
(கலி. 94:33-34)

(ஓ) **நாராயம்** Nārāyam

(35) **உயர்வு** - lofty
'காழார மார்ப! கசடறக் கைகாவாக் கீழாயோர் செய்த பிழைப்பினை மேலாயோர் உள்ளத்துக் கொண்டுநேர்ந்(து) ஊக்கல் குறுநரிக்கு நல்லநா ராயங் கொளல்'
(பழமொழி. 50)

(ஔ) **எய் கணை நிழல்** Ey kaṇai niḻal (became extinct, transitory, impermanent)

(36) **விரைந்தழித்தல், நிலையாமை**
'வைகல்தோறும் இன்பமும் இளமையும் எய் கணை நிழலின் கழியும்' (நற். 46:1-2)

(க) **சரம் பெய் தூணி** Caram pey tūṇi (quiver)

(37) **சொல்** – word, speech
'தூதுவர் உருவக் காளை செவிசுடு சரம்பெய் தூணி' (சூளா.1203: 3)

(ங) **மலர் வாளி** Malar vāḷi

(38) **காதல்**
'கண்டு மகிழ்வெய்திக் காதலிற் சிறந்து விரைமலர், வாளியொடு வேனில் வீற்றிருக்கும்' (சிலப்.2: 25-26)

(ஒப்பு) Arrow இணைப்பு, எண்ணங்களின் ஆற்றல், ஊடுருவுதல், காதல், சூரியக்கதிர், திறத்தல், போர், வளமை, வேட்டையாடுதல், வேகம், இறப்பு, பழிவாங்கும் எண்ணம்.

**தொண்டை** (ஆதொண்டைக் கனி) **Toṇṭai (a fruit)**

(1) **சிவப்பு நிறம்** - red
'வாயிதழ்த் திறங்கொளக் கனிந்த தொண்டை வந்தொசிந்து' (சூளா.793: 1)

**தொழுநை** (யமுனையாறு) **Toḻunai (a river)**

(1) **வளம்** - fertile
'வண் புனல் தொழுநை வார் மணல் அகன் துறை, அண்டர் மகளிர் தண் தழை உடீஇயர்' (அகம். 59:4-5)

**தோட்டி** (அங்குசம்) **Tōṭṭi (goad)**

(1) **அடங்குதல்** - control
'எயில் முகம் சிதையத் தோட்டி ஏவலின்' (பதி. 38:5)

(2) **வலிமை** - strong
'கடுங் கண்ண கொல் களிற்றால் காப்பு உடைய எழு முருக்கி, பொன் இயல் புனை தோட்டியால் முன்பு துரந்து, சமம் தாங்கவும்' (புறம். 14:1-4)

(3) **திண்மை** - firm
'உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் வரன் எனும் வைப்பிற்குஓர் வித்து' (குறள். 24)

(3) **நெறிப்படுத்துதல்** - guide
'காட்டுமல் களிநல் யானை கால் கையினோர்ப் பித்தேறித் தோட்டியிட்டு ஊர்வதே போல் சூரிய சோமன் தானும்' (நீலகேசி.265: 1-2)

**தோரணம்** Tōraṇam **(festoon)**

(1) **மங்கலம்** - auspicious
'தோரண வீதியும் தோமறு கோட்டியும் பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும் பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்' (மணி.1: 43-45)

(ஆ) <u>தோரணம் முறிதல்</u> Tōraṇam murital

(2) **தீமை, அழிவு** - bad omen
'தோரணம் முறியுமால் .. .. ..'
(கம்ப.சுந்.374: 1)

(இ) <u>தோரணம் நாட்டுதல்</u>
Tōraṇam nāṭṭutal
**மங்கலம்** - auspicious
'தோரணம் திசைதொறும் சுடர நாட்டுக' (சூளா.902: 3)
**திருமணம்** – wedding
'பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும் தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழிநான்'
(நாலா.556: 3-4)

**<u>தோல்</u> (கேடகம்) Tōl (shield)**

(1) **வளம், செழிப்பு** - flourishing
'.. .. .. .. மன்னர் எயில் ஊர் பல் தோல் போலச் செல் மழை தவழும், அவர் நல் மலை நாட்டே'
(நற். 197:10-12)

(2) **காப்பு** - secure
'சிலை விசை அடக்கிய மூரி வெண் தோல், அனைய பண்பின் தானை மன்னர்' (பதி. 45:16-17)

**<u>தோல்</u> (மான் தோல்) Tōl (deer skin)**

(1) **நன்மை** - goodness
'புள்ளி இரலைத் தோல்ஊன் உதிர்த்துத் தீது களைந்து எஞ்சிய திகழ் விடு பாண்டிற் பருதி போகிய புடைகிளை கட்டி'
(பதி. 74:10-12)

(2) **தூய்மை** - pure
'மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி, ஈன்பிணவு ஒழியப் போகி' (பெரும்.89-90)
**(புலித்தோல்) (tiger skin)**

(3) **வீரம்** - valour
'கொலை உழுவைத் தோல் அசைஇ, கொன்றைந்தார் சுவற்புரள' (கலி.1: 11)

(4) **வலிமை** - strong
'இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன கல்எடுத்து எறிந்த பல்கிழி உடுக்கை' (அகம்.285: 8-9)

(ஆ) <u>உரிவை</u> (புலி உரிவை)
Urivai (tiger skin)

(5) **ஆற்றல்** - power
'வரி கிளர் வய மான் உரிவை தைஇய, யாழ் கெழு மணி மிடற்று, அந்தணன்'
(அகம்.கட.வா: 14)
**(ஏற்று உரிவை)** (bull's hide)

(6) **வீரம், பெருமை, வெற்றி** - valom, greatness, victory
'ஓடா நல்ஏற்று உரிவை தைஇய ஆடுகொள் முரசம் இழுமென முழங்க' (அகம்.334: 1-2)
**(மான் உரிவை)** (deer skin)

(7) **மானம், துறவு** - dignity, renunciation
'.. .. .. .. மானின் உரிவை தைஇய ஊன் கெடு மார்பின்'
(திருமுரு.128-129)

(இ) <u>அதள்</u> Ataḷ
**(வரி அதள்)**

(8) **கொடுமை, அரியது** – cruel, difficult
'பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும் அறன் இல் வேந்தன் ஆளும் வறன் உறு குன்றம் பல விலங்கினவே'
(அகம்.109: 13-14)

(9) **மகிழ்ச்சி** - glad
'இருங்கேழ் வயப்புலி வரிஅதட் குவைஇ, விருந்துஇறை நல்கும் நாடன்' (புறம்.371: 14-15)
**(கிடாய் அதள்)**

(10) **பாதுகாப்பு** – protection, security
'அதளோன் துஞ்சும் காப்பின் உதள' (பெரும்.151)
**(உழை அதள்)**

(11) **காப்பு** – guard, safe
'இலை வேய் குரம்பை உழை அதட் பள்ளி .. .. .. .. சிலையுடைக் கையர் கவலை காப்ப' (மது.310-312)

(ஈ) <u>உரிவை</u> (அரியின் உரிவை)
Ariyin urivai

(12) **அச்சம்**
'வளையுடைக் கையில் சூலமேந்தி கரியின் உரிவை போர்த்து அணங்காகிய வரியின் உரிவை

மேகலை ஆட்டி' (சிலப்.12: 1.60-62)

(உ) <u>மானுரி</u> Mānuri
துறவு
'மானுரி மடியு மந்திரக் கலப்பையும் .. .. .. சங்கிய நுனித்தவோர் சாறயர் முனிவனை' (பெருங்.உஞ்.36: 226, 231)

(ஒப்பு) <u>Skin, Leather, hide</u> இளமை, தடுக்கும் ஆற்றல், தகுதி, தியாகம், பணிவு, பிறப்பு, பரிகாரம், மறுபிறப்பு, மீட்புப்பேறு, வளமை; அறிவு மழுக்கம், நம்பிக்கையின்மை, நைய அடித்தல், பரிவின்மை.
மான் தோல் - அறியாமை, தூய்மை.
புலித்தோல் - ஆற்றல், கொடுஞ்செயல்.
காண்டாமிருகத் தோல் - பாதுகாப்பு.

**<u>தோள்</u> Tōḷ (shoulder)**

(1) **அழகு** - beauty
'நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த வேய் வனப்புற்ற தோளை நீயே' (நற். 82:1-2)
(2) **இன்பம் துய்த்தல்** - enjoyment
'.. .. .. .. குறுமகள் தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே' (குறு. 101:5-6)
(3) **இன்பம்** - pleasure
'விறல் வனப்பு எய்திய தோளும்' (குறு. 226:2)
(4) **திண்மை / வலிமை** – firm, strong
'திண்தோள் வல்விற் காளையொடு' (ஐங். 390:3)
(5) **பெருமை** - greatness
'கணைக்கால், வாங்கிய நுசுப்பின், பணைத் தோள்' (திருமுரு. 14)

(ஒப்பு) <u>Arm, Shoulder</u> ஆற்றல், உதவி, உழைப்பாளி, செயல்பாடு, பாதுகாப்பு, வலிமை

**<u>தோற்கன்று</u> Tōṟkaṉṟu (leather calf)**

(1) **பொய்மை, ஏமாற்றம்** – falsehood, deception
'தோற்கன்று காட்டிக் கறவார்' (சிறுபஞ்.84:7)

**<u>தோற்பை</u> Tōṟpai (skin bag)**

(1) **உடம்பு** - body
'தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும் கூத்தன் புறப்பட்டக் கால்' (நாலடி.26: 3-4)

**<u>தோன்றி</u> Tōṉṟi (a plant)**

(1) **வளம்** - furtile
'தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ' (நற். 69:6)
(2) **அழகு** - beauty
'மணி கண்டன்ன மா நிறக் கருவிளை ஒண் பூந் தோன்றியொடு தண் புதல் அணிய' (நற். 221:1-2)
(3) **சிவப்பு நிறம்** - red
'குவி இணர்த் தோன்றி ஒண்பூ அன்ன தொடுசெந் நெற்றி கணம்கொள் சேவல்' (குறு. 107:1-2)
(4) **கார்காலம்** – rainy season
'விடு கொடிப் பிறந்த மென் தகைத் தோன்றிப் பவழத்து அன்ன செம் பூத் தாஅய், கார் மலிந்தன்று, நின் குன்று' (பரி. 14:15-17)
(6) **தூய்மை** - pure
'தூ இதழ் துணர் துதைந்து தோன்றுகின்ற தோன்றியின்' (சூளா.793: 2)

# ந

**<u>நஞ்சு</u> Nañcu (poison)**

(1) **தீமை** - evil
'முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின், நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்' (நற்.355: 6-7)
(2) **கொலை, அச்சம்** – killing, fear
'கவைமக நஞ்சு உண்டாஅங்கு, அஞ்சுவல் - பெரும!' (குறு.324: 6-7)
(3) **இறப்பு** - death
'நஞ்சு உயிர் செகுத்தலும் அறிந்து உண்டாங்கு' (கலி. 74:8)
(4) **கருமை**

'களம் நிலவு நஞ்சணிந்தார் பாலனையும் கவுணியனார்' (பெரிய.2036: 7-8)

(5) **செவ்வியின்மை**
'விரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும் விரல் நிறைய மோதிரங்கள் வேண்டும் அரை யதனில் பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்கவிதை நஞ்சேனும் வேம்பேனும் நன்று' (தனிப்.3)

**(ஆ) கடு** Kaṭu

(6) **வெறுப்பு** - hatred
'ஆணமில் நெஞ்சத்து அணிநீலக் கண்ணார்க்குக் காணமிலாதவர் கடுஅனையர் - காணவே செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார் அக்காரம் அன்னார் அவர்க்கு' (நாலடி.374)

(7) **கொடியவர்** - cruel
'கடைந்தார் வெருவுற மீது எழு கடு ஆம் எனக் கொடியார்' (கம்ப.ஆரண்.455: 4)

(8) **துன்பம் / ஊறு** – inflict, injury
'ஊறு அளாவிய கடு என உடலிடை நுழைய' (கம்ப.சுந்.1097: 4)

**(இ) தீ (விடம்)** Ti

(9) **வேகம், வெம்மை** - quick
'வேக வெந்தீ நாகம் கிடந்த' (மணி.20: 98)

**(ஈ) நஞ்சு உண்ணல்** Nañcu uṇṇal

(10) **சாதல்**
'விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்' (சிலப்.12: 22)

(11) **உய்வு**
'புவனங்கள் உய்ய ஐயர் பொங்கு நஞ்சுண்ண' (பெரிய.363: 3-4)

**(உ) காளவிடம்** Kāḷaviṭam

(12) **கருமை, இருள்**
'காளவிடம் உண்டிருண்ட கண்டர்பணிக் கலன் பூண்டு' (பெரிய.21.199)

**(ஊ) விடம்** Viṭam

**தீமை**
'தீய விடம் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தை' (பெரிய.21.206)

**வேகம்**
'பொருந்திய விட வேகத்தில் போதுவான் வேகம்' (பெரிய.25.26)

(13) **நீல நிறம்**
'நீலம் ஆர் கடல் விடந்தனை உண்டு' (சுந்.தேவா.828: 5)

## நடுகல் Naṭukal (hero stone)

(1) **சிறப்பு** - eminence
'காட்சி கால்கோள் நீர்ப்பை நடுகல் சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்' (தொல்.1006)

(2) **வீரம்** - valour
'விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர் எழுத்துடை நடுகல் அன்ன' (ஐங்.352: 1-2)

(3) **நிலைபேறு** - stability
'.. .. .. .. சிறுவழி மடங்கி நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்' (புறம்.223: 2-3)

(4) **இறப்பு** - death
'கிடுகு நிரைத்து, எஃகு ஊன்றி, நடு கல்லின் அரண் போல' (பட்.78-79)

(5) **புகழ்** - fame
'செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட கல்ஏசு கவலை எண்ணுமிகப் பலவே' (மலை.388-389)

## நந்து Nantu (conch)

(1) **குறைந்த அறிவு** - lesser perception
'நந்தும் முரளும் ஈர் அறிவினவே' (தொல்.1528)

**(ஆ) நத்து** Nattu

(2) **வளன்** - fertile
'நத்தொடு, நள்ளி, நடை இறவு, வய வாளை, வித்தி அலையில், விளைக! பொலிக! என்பார்' (பரி.10:85-86)

(3) **சேமிப்பு** – save / store
'தந்தம் பொருளும் தமர்கண் வளமையும் முந்துற நாடிப் புறந்தரல் ஓம்புக அந்தண் அருவி மலைநாட! சேணோக்கி நந்துநீர் கொண்டதே போன்று.' (பழமொழி.205)

(ஒப்பு) Snail அமைதி நிலை, உணர்ச்சி, பிறப்பு, மென்மை, விடாமுயற்சி; சோம்பல், நிலையாமை

**நமச்சிவாய** Namaccivāya

(1) **நல்ல துணை** - aid, support
'கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே' (திருநா.தேவா.41: 3-4)

(2) **செம்மை** - upright
'கோவினுக்கு அருங்கலம் கோட்டம் இல்லது நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே' (திருநா.தேவா.42: 3-4)

(3) **பாவம் தீர்ப்பது** - remove sin
'பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே' (திருநா.தேவா.43: 3-4)

(4) **நடுக்கம் இன்மை** - fearlessness
'அடுக்கற் கீழ்க் கிடக்கினும் அருளின் நாம் உற்ற நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே' (திருநா.தேவா.44: 3-4)

(5) **நலம் கொடுப்பது** – well being
'குலமிக ராகிலும் குலத்திற்கு ஏற்பதோர் நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே' (திருநா.தேவா.46: 3-4)

(6) **அறியாமை அகற்றுதல்** – remove ignorance
'இல்லக விளக்கது இருள் கெடுப்பது .. .. .. நல்லக விளக்கது நமச்சிவாயவே' (திருநா.தேவா.48)

(7) **இடுக்கண் இன்மை** – devoid of migery
'நாப்பினை தழுவிய நமச்சிவாயப் பத்து ஏத்தவல்லார் தமக்கு இடுக்கண் இல்லையே' (திருநா.தேவா.50: 3-4)

**நரந்தம்** Narantam **(a grass)**

(1) **நறுமணம்** - fragrance
'நரந்தம் நாறும் குவைஇருங் கூந்தல்' (குறு.52: 3)

(2) **உயர்வு** - lofty
'கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி பரந்து இலங்கு அருவியொடு நரந்தம் கனவும்' (பதி.11: 21-22)

**நரி** Nari **(fox)**

(1) **தீமை** - evil
'செங்கோல் வாளிக் கொடு வில் ஆடவர் வம்ப மாக்கள் உயிர்த்திறம் பெயர்த்தென, வெங் கடற்று அடை முதல் படு முடை தழீஇ, உறு பசி குறு நரி குறுகல் செல்லாது மாறு புறக் கொடுக்கும் அத்தம்' (நற்.164: 6-10)

(2) **இழிவு / தகுதியின்மை** – low, incompetent
'ஒடுங்கா வயத்தின், கொடுங்கேழ், கடுங்கண், இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர் ஏதில் குறு நரி பட்டற்றால்' (கலி.65: 23-25)

(3) **கொடுமை** - cruel
'தெறி மறி பார்க்கும் குறு நரி வெரீஇ' (அகம்.274: 10)

(4) **கள்ளம்** – cunning, deceitful, tricky
'நரியார் தம் கள்ளத்தால் பக்கான பரிசொழிந்து நாளும் உள்கி' (சுந்.தேவா.342: 1-2)

(5) **வஞ்சம்**
'அரிமா வளைந்த நாரிமாப் போல இகன்முனை வேட்டுவர் இடுக்கண் செய்ய' (பெருங்.உஞ்.56: 25-26)

(ஆ) **நரி நன்பகலில் ஊளையிடுதல்** Nari nanpakalil ūḷaiyiṭutal

(6) **தீமை, பாழ் / வீண்** – evil omen, futile / ruin
'ஞாயிறு கோடா நன்பகல் அமயத்து, கவலை வெண் நரி கூஉம்முறை பயிற்றி .. .. .. .. பெரும் பாழ் ஆகும்மன் அளிய, தாமே!' (பதி.22: 34-38)

(இ) **நரிகள் தங்குதல்** Narikaḷ taṅkutal

(7) **தீமை, அழிவு** - evil, destruction
'.. .. .. .. நிருதர் வைகும் பேயினும் பெரிய பேம் நரிகளும் புரிதரும் பிறவும் எண்ணின்' (கம்ப.யுத்.107: 2-4)

(ஈ) <u>நரியின் ஒலி</u> Nariyin oli

(8) இறப்பு, தீமை – death, evil
'பிறவோர் இறந்த வழுவிளிப் பூசலும் நீண்முக நரியின் தீவிளிக் கூவும்' (மணி.6: 73-74)

(உ) <u>நரி வரால் கவ்வச் சென்று நற்றசை இழந்தது</u> Nari varāl kavvac cenru narracai ilantatu

(9) பேராசை - avarice
'நரி வரால் கவ்வச் சென்று நற்றசை இழந்தது ஒத்த தெரிவரான் மால்கொள் சிந்தை தீர்ப்பதோர் சிந்தை செய்வார்' (திருநா.தேவா.118: 1-4)

(ஒப்பு) <u>Fox, Jackal</u> அறிவுநுட்பம், தனிமை, வளமை; இறப்பு, இரத்த தாகம், கழிகாமம், கொடூரம், தந்திரம், திருட்டுத்தனம், தீமை, நன்றியற்ற நிலை,பாலியல், பாழ்நிலை, பேராசை, போலிப்புகழ்ச்சி, மறைத்தல், வஞ்சகம்.

<u>நரை</u> Narai **(grey hair)**

(1) மூப்பு / முதுமை -ageing, old age
'அரி நரைக் கூந்தற் செம் முது செவிலியர்' (நற்.110: 6)

(2) மனக்கவலை - worry
'யாண்டு பல ஆக, நரை இல ஆகுதல் யாங்கு ஆகியர்! என வினவுதிர் ஆயின், மாண்ட என் மனைவியொடு, மக்களும் நிரம்பினர்; யான் கண்டனையர் என் இளையரும்; வேந்தனும் அல்லவை செய்யான், காக்கும்; அதன் தலை ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலர், யான் வாழும் ஊரே' (புறம்.191)

(3) வெண்மை - white
'நறுவிரை துறந்த நரை வெண் கூந்தல்' (புறம் 276: 1)

(4) அறிவு, திறமை - wise, capable
'வலம்புரி புரையும் வால் நரை முடியினர்' (திருமுரு.127)

<u>நல்கூர்ந்தார் மேனி</u> Nalkūrntār mēni **(poor (man's) body)**

(1) பொலிவின்மை – dull / dismal / gloomy
'கல்பயில் கானம் கடந்தார் வர, ஆங்கே நல்லிசை ஏறொடு வானம் நடுநிற்பச் செல்வர் மனம்போல் கவின்ஈன்ற, நல்கூர்ந்தார் மேனிபோல் புல்லென்ற காடு' (கார்.18)

<u>நல்லறத்தோர் பொருள்</u> Nallarattōr porul **(wealth of the virtuous)**

(1) நிலைத்தன்மை / பொலிவி - stable, bright
'ஞாலம் நுங்குறு நல்லறத்தோர் பொருள் போல நின்று பொலிவது பூம் பொழில்' (கம்ப.கிட்.755: 1-2)

<u>நல்லார்</u> Nallār **(the noble)**

(1) மென்மை - tender, soft
'மெல்லிய நல்லாருள் மென்மை அதுவிறந்து ஒன்னாருள் கூற்றுட்கும் உட்குடைமை' (நாலடி.188: 1-2)

<u>நவமி முன்னாள்</u> (அட்டமி) Navami munnāl **(eight phase of the moon)**

(1) வெற்றி - victory, success
'பற்றலர் முனைகள் சாய்க்கும் பட்டவர்த்தனமாம் பண்பு பெற்ற வெங்களிறு கோலம் பெருகுமா நவமி முன்னாள்' (பெரிய.561: 5-8)

<u>நளினை</u> Nalinai **(a lady)**

(1) கற்பு - chastity
'நாரார் கற்பின் நாகிள வேய்த்தோள் நளினைக்கும்' (சீவக.1635: 3)

<u>நன்னன்</u> Nannan **(a king)**

(1) அநீதி - injustice
'பெண்கொலை புரிந்த நன்னன் போல வரையா நிரையத்துச் செலீஇயரோ, அன்னை!' (குறு.292: 5-6)

(2) நன்மை – goodness

'விழைதக ஓங்கிய கழைதுஞ்சு மருங்கின் கான்அமர் நன்னன் போல, யான்ஆ குவல், நின் நலம்தரு வேனே' (அகம்.392: 26-28)

<u>நா</u> Nā **(tongue)**

(1) **சொல்திறம்** – speech skill
'அமிழ்து பொதி செந்நா அஞ்ச வந்த' (குறு.14: 1)

(2) **சொன்னலம்** – desirable words
'முது மொழி நீரா, புலன்நா உழவர் புது மொழி கூட்டுண்ணும்' (கலி.68: 4-5)

(3) **சொல்வளம்** – word power
'அரு மறை நாவின் அந்தணர்க்கு ஆயினும்' (சிறுபா.204)

(4) **சொல்** – word / speech
'யாகாவார் ஆயினும் நா காக்க காவாக்கால் சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு' (குறள்.127)

(5) **உயிர்ப்பு / பேச்சு** – alive, speech
'நாச்செற்று விக்குள் மேல்வாராமுன் நல் வினை மேற்சென்று செய்யப்படும்.' (குறள்.335)

(6) **சொல்வன்மை** – mighty speech
'நா நலம் என்னும் நலன் உடைமை அந் நலம் யா நலத்து உள்ளதூஉம் அன்று' (குறள். 641)

**(ஒப்பு)** <u>Tongue</u> **இணங்குவித்தல், சுவை, சொல்லாற்றல், கொடூரம், தகுதிக் கேடான பேச்சு, நிலையாமை, பழிச்சொல், பொய்.**

<u>நாகத்தின் ஆவி</u> Nākattin̲ āvi **(snakes' hiss)**

(1) **துன்பம்** – affliction, pain
'நாகப் பிள்ளை அங்கண் பிறந்த ஆவி போல வைது வெய்துயிரா' (பெருங்.உஞ்.46: 165-166)

<u>நாகம்</u> Nākam **(நாகமரம்) (a tree)**

(1) **குறிஞ்சித்திணை** - mountain tract
'நனைசினையன நகுவிரையன நலனுடையன நாகம்' (நீலகேசி.16: 1)

<u>நாமநீர்</u> Nāmanīr

(1) **நன்மை, புனிதம்** – good, holy
'நலம்புரி பவித்திரம் ஆகு நாமநீர்' (சூளா.417: 2)

<u>நாய்களோடு சேர்ந்து நின்று நரிக்கூட்டங்கள் ஊளையிடுதல்</u>
<u>Naykalōtu cerntu nin̲ru narikkūttaṅkal ūlaiyitutal</u>

(22) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
'ஞாளியோடு உளைக்கின்ற நரிக் குலம்பலவால்' (கம்ப.ஆரண்.430: 4)

<u>நாவல் கனி</u> Nāval kan̲i **(a fruit)**

(1) **தலைவி**
'பொங்கு திரை பொருத வார் மணல் அடைகரைப் புன் கால் நாவல் பொதிப் புற இருங்கனி' (நற்.35: 1-2)

(2) **வீண்** - futile
'கற்றானும் கற்றார்வாய்க் கேட்டானும் இல்லாதார் தெற்ற உணரார் பொருள்களை - எற்றேல் அறிவில்லான் மெய்தலைப் பாகு பிறிதில்லை நாவல்கீழ்ப் பெற்ற கனி' (பழமொழி.11)

**(ஆ)** <u>**நாவற்பழம்**</u> Nāvar̲pal̲am

(3) **கருமை** - black
'பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி அனையதோர் இருங்கனி நாவற் பழமொன் றேந்தி' (மணி.17: 29-30)

**(இ)** <u>**வெண்ணாவல்**</u> Veṇṇāval

(4) **வெற்றி**
'வெண்ணாவல் அமர்ந்துறை வேதியனை' (திருஞான.தேவா.1156: 1)

<u>நாவாய் கவிழ்த்த நாய்கன்</u> Nāvāy kavil̲tta nāykan̲

(1) **கவலை, கலக்கம், துன்பம்** – worry, anxiety, distress
'நாவாய் கவிழ்த்த நாய்கன் போல ஓவா அவலமொடு காவலன் கலங்கிப் பண்ணமை நல்லியாழ்

இன்னிசைக் கொளீஇயதன்' (பெருங்.இலா.9: 46-48)

**நாவி** **(கத்தூரி)** Nāvi

(1) **நறுமணம்** - fragrance
'நாவி நாறுஎழில் மேனியைக் கண்டு கண்டு' (சீவக.346: 3)

**நாவிதன் வாள்** Nāvitan vāḷ **(barber's sword)**

(1) **தகுதியின்மை** – incompetent / meritless
'காத்தாற்று கிற்பாரைக் கண்டால் எதிருரையார் பார்த்தாற்றா தாரைப் பரியாது மீதூர்தல் யாத்ததே சில்லார் படையாண்மை நாவிதன் வாள் சேப்பிலைக்குக் கூர்த்து விடல்' (பழமொழி. 319)

**நாவும் வாயும் உலர்தல்** Nāvum vāyum ulartal **(dryness of tongue and mouth)**

(1) **தீமை, அழிவு** - bad omen
'நாவும் வாயும் உலர்ந்தன .. .. ..' (கம்ப.யுத்.3663: 3)

**நாள்மீன் - கோள் மீன்** Nāḷmīn - kōḷmīn **(star - planet)**

(1) **தடை** - obstruction / obstacle
'நாளும் கோள் மீன் தகைத்தலும் தகைமே' (கலி.5: 9)

(2) **பன்மை** - multirole
'வாள் நிற விசும்பின் கோள்மீன் சூழ்ந்த' (சிறுபா.24: 2)

**நான்கு** Nanku **(four)**

(1) **வேதம்** – veda / scripture
'நாவில்நாலர் உடல் அஞ்சினர்' (திருஞான.தேவா.2428: 3)

(2) **அந்தக்கரணம்** – sence organs
'நிலன் ஐந்தாய்க் கரணம் நான்காய்' (திருஞான.தேவா.3847: 2)

(ஆ) **நாலு** Nālu
**வேதம்**
'நாலு கொலாம் மறை பாடின தாமே' (திருநா.தேவா.974: 4)

**நான்மூன்று** Nānmūnru

(1) **இராசிகள்** – signs of zodiac
'அறுமூன்றும் நான்மூன்றும் ஆனார் போலும்' (திருநா.தேவா.820: 2)

**நானநீர்** **(புனுகு)** Nānanīr

(1) **உயர்வு** - lofty
'மெய்யணி பசும்பொன் சுண்ணம் மேதகு நானம் நீரின்' (சீவக.117: 1)

**நிம்பம்** **(வேப்பிலை)** Nimpam **(neem)**

(1) **காப்பு** - protection
'நிம்ப முதலான கடி நீடுவினை செய்வார்' (பெரிய.1941: 7-8)

**நிரையம்** Niraiyam **(hell / hades)**

(1) **நயமின்மை** - unfair
'வரையா நயவினர் நிரையம் பேணார்' (நற்.329: 1)

(2) **இன்னாமை, இழிவு** - bad, low
'.. .. .. .. இவ் ஊர் நிரையப் பெண் இன்னா கூறுவ புரைய அல்ல, என் மகட்கு எனப் பரைஇ' (அகம்.95: 11-13)

(3) **பொய்** – false / untrue
'நிரம்ப நிரையத்தைக் கண்டந் நிரையம் வரம்பில் பெரியானும் புக்கான் - இரங்கார் கொடியார மார்ப! குடிகெட வந்தால் அடிகெட மன்றி விடல்' (பழமொழி. 288)

(4) **தீவினை, துன்பம்** – sin, suffering
'தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்பது அன்றிமற் றெம்மை இகழ்ந்த வினைப்பயத்தால் உம்மை எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று பரிவதூஉம் சான்றோர் கடன்' (நாலடி.58)

(5) **துன்பம், அழிவு** - suffering, destruction
'வெவ்வாய் நிரயத்திடை வீழ விரைந்து வீந்தான்' (பெரிய.997: 7-8)

(ஆ) **தீயுழி** Tiyuli

(6) **கேடு** – harm

'அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத் தீயுழி உய்த்து விடும்.' (குறள். 168)

(ஒப்பு) Hell இருள், இழிவு, கேடு, துயரம், துன்பம், வதை, வாழ்வின் இழப்பு.

**நிலம்** Nilam **(earth, land, world)**

(1) **பெரிய அளவு** - huge, large
'மா நிலம் சேவடி ஆக' (நற். கட. வா: 1)

(2) **விரிவு** - wide, broad
'நிலம் கண்டன்ன அகன் கண் பாசறை' (நற். 125: 10)

(3) **நிலைபேறு** - stable
'நிலம் புடைபெயர்வதாயினும்' (நற்.289: 2)

(4) **அளவின்மை** – limitless / unfathomable
'நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கின் அளப்பு அரியையே' (பதி.14: 1-2)

(5) **பெண்** - femenine
நிலமகள் அழுத காஞ்சியும்' (புறம்.365: 10)

(6) **பொறுமை** - patience
'அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை' (குறள்.151)

(7) **இடம்பெயராமை** - unmoved
'பேராப் பெருநிலன் சேய்த்தே யுடம்பொன்றா' (இன்னிலை.43:1)

(8) **அழிவின்மை** - undestroyed
'நிலனும் நீரும் மாய் நெருப்பும் காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்' (கம்ப.கிட்.116: 1-2)

(9) **உயிர்** - life / soul
'வெவ்வினை செய்யு மாந்தர் உயிரெனும் நிலத்து வித்தி' (சீவக.2762: 1)

(ஆ) **நிலம் புடை பெயர்தல்**
Nilam puṭai peyartal (world dislodged)

(10) **அரிய தன்மை, இயல்பின்மை** – rare / unnatural
'நிலம்புடை பெயரினும், .. .. .. ..' (குறு.373: 1)

(இ) **நிலம் துடித்தல்** Nilam tuṭittal (tremor)

(11) **தீமை, அழிவு** - evil, destruction
'நிலம் துடித்தன நெடுவரை துடித்தன' (கம்ப.சுந்.298: 1)

(ஈ) **நிலத்தின் மிசை இருத்தல்**
Nilattin micai iruttal (sitting on land)

(12) **நன்மை** – good omen (dream)
'நிலத்துமிசை இருந்தனை ஆதலின் மற்றுநின் தலைப்பெரு நகரமொடு நன்னாடு தழீஇக் கொற்றம் கோடலு முற்றியதாகி முன்னிய நின்றவை முடியத் தோன்றுமென்று எண்ணிய இப்பொருள் திண்ணிதின் எய்தும்' (பெருங்.இலா.13: 60-64)

(ஒப்பு) Land ஆழ்ந்த உணர்வுகளைப் புரிந்து கொள்ளுதல், இயற்பொருள் வாதம், குளிர்காலம், செயல்துறைப் பயன் நாட்டமுடைமை, தாய்மை, நிலைபெறு, நடுஇரவு, நிறை முதிர்ச்சி, பிறப்பு, பெண்பால், புனிதம், மறுபிறப்பு, மெய்யுணர்வு, விழிப்புநிலை; அழிதல், இறப்பு.

**நிழல்** Nilal **(shadow / shade)**

(1) **இனிமை** – sweet, good
'புன்னை பூத்த இன் நிழல் உயர் கரை' (நற். 91: 2)

(2) **மாண்பு** - noble
'ஞாயிறு காணா மாண்நிழற் படீஇய' (குறு.378: 1)

(3) **இருள், தண்மை** – darkness, cool
'இருள்திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்' (குறு.123: 1)

(4) **பாதுகாப்பு** - protection
'இரு நிழல் படாமை மூ - ஏழ் உலகமும் ஒரு நிழல் ஆக்கிய ஏமத்தைமாதோ' (பரி.3: 75-76)

(5) **செல்வம்** - wealth
'சிறியவன் செல்வம் போல், சேர்ந்தார்க்கு நிழல் இன்றி' (கலி.10: 2)

(6) **அருள்** - mercy
'.. .. .. .. நும் தள் நிழல் கைவிட்டு யான் தவிர்தலைச் சூழ்வலோ?' (கலி.20: 18)

(7) **உடனிருப்பு** - abide
*'நின்னின் விடாஅ நிழல் போல் திரிதருவாய்!'* (கலி.61: 7)

(8) **உடனுறைவு/அழியாமை** – reside with / non extinct
*'தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று'* (குறள்.208)

(9) **நீங்காத தன்மை, உடனுறைவு** - not leave / stay
*'நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல் போல'* (தனிப்.665: 1)

(ஆ) <u>நீருள் மதி நிழல்</u> Nīruḷ mati nilal (shadow of moon in water)

(10) **கொளற்கு அரியதன்மை** – hard to get
*'ஓரொருகால் உள்வழியள் ஆகி, நிறை மதி நீருள் நிழல் போல் கொளற்கு அரியள்'* (கலி.141: 7-8)

(இ) <u>நாள்நிழல்</u> Nāḷnilal

(11) **குறைதல், அழிதல்** – shorten, dissappear
*'நளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழல் போல விளியும் சிறியவர் கேண்மை'* (நாலடி.166: 1-2)

(ஈ) <u>அல்குநிழல் Alkunilal</u>

(12) **வளர்தல், பெருகுதல்** – grow, increase
*'.. .. .. .. விளிவின்றி அல்கு நிழல்போல் அகன்றகன்று ஓடுமே தொல் புகழாளர் தொடர்பு'* (நாலடி.166: 2-4)

**(ஒப்பு)** <u>Shadow</u> **ஆன்மா, இறந்த காலம், பாதுகாப்பு, பிரதிபலிப்பு, பிம்பம், வாழ்க்கை;இருள், இறப்பு, தெளிவற்ற நிலை, பேய்.**

<u>நிறைகுடம்</u> Niraikuṭam **(full pot)**

(1) **அடக்கம்** – modesty / humility
*'கற்று அறிந்தார் கண்ட அடக்கம் அறியாதார் பொச்சாந்து தம்மைப் புகழ்ந்துரைப்பார் - தெற்ற அறைகல் அருவி அணிமலை நாட! நிறைகுடம் நீர்தளும்பல் இல்.'* (பழமொழி.9)

<u>நிறைமதி நாள்</u> Niraimati nāḷ **(full moon)**

(1) **மங்கலம்** – auspricous, festive
*'மதிநாண் முற்றிய மங்கலத் திருநாள்'* (மணி.10: 83)

<u>நீர் மொக்குள்</u> **(நீர்க்குமிழி)** Nīr mokkuḷ **(bubble)**

(1) **நிலையாமை, அழிவு** - transitory, impermanent
*'விண்ணு நீர் மொக்குளின் விளியும் யாக்கையை'* (கம்ப.அயோ.1135: 1)

<u>நீரில் பிறழும் கெண்டையைச் சிறுசிரல் எறியும் செய்கை</u> Nīril piralum kentaiyaic ciruciral eriyum ceykai

(1) **எளிமை** - easy
*'நிறைநீர் அகவயிற் பிறழும் கெண்டையைச் சிறுசிரல் எறியும் செய்கை போல உறுபுகழ் உதயணன் தறுகண் மறவர் பற்றுபு கொண்டு தம் கொற்றவற் காட்ட'* (பெருங்.மகத.26: 21-24)

<u>நீலம்</u> Nīlam **(blue)**

(1) **பேரளவு** - huge, large
*'நீல நிறப் பெருங் கடல் கலங்க உள்புக்கு'* (நற்.45: 2)

(2) **ஆழம்** - deep
*'நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ் சுனை'* (பரி.5: 48)

(3) **வலிமை / ஆற்றல் / நிலைபேறு** – strong / powerful / stable, permanent
*'ஓர்த்த கருத்தும் உணர்வும் உணராத மூர்க்கர்க்கு யாதும் மொழியற்க - மூர்க்கன்றான் கொண்டதே கொண்டு விடானாகும் ஆகாதே உண்டது நீலம் பிறிது.'* (பழமொழி.94)

(4) **உறுதி** - firm
*'தவம்தீர் மருங்கில் திருமகள் போலப் பயம்தீர் மருங்கில் பற்றுவிட்டு ஒரீஇ இட்டதை உண்ணு நீலம் போல ஒட்டிடத்து ஒட்டு உறுதி வாழ்க்கையுள்'* (பெருங்.உஞ்.35: 137-140)

(ஒப்பு) Blue அழகு, அமைதி, அறிவு ஒளி, அன்பு, இசைவு, இறைநிலை, உண்மை, உயர்பண்பு, எல்லையற்ற பேரளவு, கடல், கடல் தெய்வம், கற்பு, குளிர்ச்சி, கூட்டுறவு, தன்னடக்கம், தூய்மை, நடுவுநிலைமை, நிலைபேறு, நம்பிக்கை, நேர்மை, பணிவு, புனிதத்தன்மை, மழை, மாயம், வானுலகம், வானுலகக் கடவுளர், வளம், வீரம்; அறியாமை.

**நீலம்** (மலர்) Nīlam **(a flower)**

(1) **தலைவி** - heroine
*'கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி ஈர்வாளை நீலத்துப் புக்கொளிக்கும் ஊரற்கு'* (ஐந்.ஐம்.24: 1-2)

(2) **குறிஞ்சித் திணை, கருமை** – mountain tract, black (blue)
*'கை விரிந்தன காந்தளும் பூஞ்சுனை மை விரிந்தன நீலமும் வான் செய் நாண்'* (சூளா.17: 1-2)

(3) **பொதுமகளிர்** - prostitute
*'விரைசெய் தாமரை மேல் விளையாடிய அரைச அன்னம் அமர்ந்துள ஆயினும் நிரைசெய் நீல நினைப்பில என்றனன் வரைசெய் கோலமணம் கமழ் மார்பினான்'* (சீவக.1401)

**நீற்றறை** Nīṟṟaṟai **(lime killer)**

(1) **வெம்மை** - heat
*'வெய்ய நீற்றறையது தான் வீங்கிள வேனிற் பருவம்'* (பெரிய.1368: 1-2)

**நீறு** Nīṟu **(ash)**

(1) **அழிவு, இறுதி** - destruction, end
*'நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய'* (கம்ப.பால.12: 3)

(2) **புனிதம்** - holy
*'பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்'* (பெரிய.141: 2)

(3) **தூய்மை** - pure
*'தூய நீறு புனை தொண்டர்கள் என்ன'* (பெரிய.242: 6)

(4) **ஒளி** - bright, dazzle
*'நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா'* (பெரிய.308: 4)

(5) **வெண்மை** - white
*'வெண் திரு நீற்று முண்ட வேதியர் மாதைத் தீண்டி'* (பெரிய.397: 3-4)

(6) **சைவம்** - saivism
*'சைவ வெண் திரு நீற்று முண்டகத்து ஒளி தழைப்பும்'* (பெரிய.508: 3-4)

(7) **தொன்மை** - ancient
*'தொன்மைத் திரு நீற்றுத் தொண்டின் வழிபாட்டின்'* (பெரிய.610: 1-2)

(8) **பாதுகாப்பு** - protection
*'சேம நிலவு திருநீற்றின்'* (பெரிய.1023: 3)

(9) **செம்மை** - upright
*'செம்மை வெண்ணீற்று ஒருமையினார்'* (பெரிய.1212: 1)

(10) **நன்மை** - goodness
*'நாகம் பூண் உகந்தானை நலம்பெருகும் திருநீற்றின்'* (பெரிய.1598: 5-6)

(11) **அழகு, கடவுட்டன்மை** – beautiful, devine
*'சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு'* (திருஞான.தேவா.2794: 2)

(12) **துயர் தீர்த்தல், சிறுமை தவிர்த்தல், உண்மை** – remove affliction, avoid degradation, truth
*'வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு போதம் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு ஓதத் தகுவது நீறு உண்மையில் உள்ளது நீறு'* (திருஞான.தேவா.2795: 1-3)

(13) **வீடுபேறு, துறவு, பக்தி, இனிமை, அறிவாற்றல்** – salvation, renouncement, devotion, sweetness, wisdom
*'முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வது நீறு பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு சித்தி தருவது நீறு திருஆலவாயான் திருநீறே'* (திருஞான.தேவா.2796)

(14) **பெருமை, பாதுகாப்பு** – greatness, protection

'காண இனியது நீறு கவினைத் தருவது நீறு பேணி அணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு சேணந் தருவது நீறு திருஆலவாயான் திருநீறே' (திருஞான.தேவா.2797)

(15) **புண்ணியம், புகழ்** – blessed, famous
'பூச இனியது நீறு புண்ணியம் ஆவது நீறு பேச இனியது நீறு பெருந் தவத்தோர்களுக்கெல்லாம் ஆசை கொடுப்பது நீறு அந்தம தாவது நீறு தேசம் புகழ்வது நீறு திருஆலவாயான் திருநீறே' (திருஞான.தேவா.2798)

(16) **ஆற்றல்** - power
'எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு' (திருஞான.தேவா.2800)

(17) **பாவம் தீர்த்தல்** – remove sin
'பராவணம் ஆவது நீறு பாவம் அறுப்பது நீறு' (திருஞான.தேவா.2801: 2)

(ஆ) <u>**சாம்பல்**</u> Cāmpal

(18) **அழிவு, இறப்பு, இறுதி** - destruction, death, end
'மடையில் வாளை பாய மாதரார் குடையும் பொய்கைக் கோலக் காவுளான் சடையும் பிறையும் சாம்பல் பூச்சும் கீழ் உடையும் கொண்ட உருவம் என்கொலோ' (திருஞான.தேவா.23)

<u>**நுகம்**</u> Nukam **(yoke)**

(1) **ஆற்றல்** - power
'ஓடு தேர் நுண் நுகம் நுழைந்த மாவே' (நற்.58: 11)

(2) **வலிமை** - strong
'.. .. .. .. வெம்போர் நுகம் பிணித்த செங்கயிற்று ஒழுகை' (குறு.80: 4-5)

(3) **வெற்றி** - victory
'நும் நுகம் கொண்டு இனும் வென்றோய்' (பதி.63: 15)

(4) **கொடுமை, வளைவு** - cruel, curve
'கொடு நுகம் பிணித்த செங்கயிற்று ஒழுகை' (அகம்.329: 6)

(5) **அசைவு** - move
'அசை நுகம் படாஅ் ஆண்தகை உள்ளத்து' (புறம்.179: 9)

(6) **ஈகை / கொடை** - benevolence, bounty
'எழு சமம் கடந்த எழு உறழ் திணி தோள் எழுவர் பூண்ட ஈகைச் செந் நுகம்' (சிறுபா.122-113)

(7) **நடுநிலைமை** – neutral, just
'கொடு மேழி நசை உழவர் நெடு நுகத்துப் பகல் போல, நடுவு நின்ற நல் நெஞ்சினோர்' (பட்.205-207)

(ஆ) <u>**பகல்**</u> Pakal

**நடுநிலைமை** – neutral, just
'பகல்போலும் நெஞ்சத்தார் பண்பின்மை இன்னா' (இன்னா.8)

**(ஒப்பு)** <u>Yoke</u> **இணைப்பு, ஒழுக்கம், கட்டுப்படுத்தல், கிறித்து, தியாகம், நடுநிலைமை, வளமை, விதைப்பு; அடிமைத்தனம், கொடுமை, தடை, வரம்பு கடப்பு.**

<u>**நுரை**</u> Nurai **(foam)**

(1) **வளம்** - flourish
'குறு நுரை சுமந்து, நறு மலர் உந்தி' (நற்.68: 4)

(2) **நிலையாமை / அழிவு** - unstable / extinct
'கல்பொரு சிறுநுரை போல, மெல்ல மெல்ல இல்லாகுதுமே' (குறு.290: 5-6)

(3) **இனிமை** - sweet
'இன்நுரைச் செதும்பு அரற்றும் செவ்வியுள்' (கலி.48: 18)

(4) **மென்மை** - soft
'நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை' (அகம்.93:13)

(5) **வெண்மை** - white
'கள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க' (அகம்.149: 8)

(6) **இலேசான தன்மை** – light / float
'பால்கடை நுரையின் பரூஉமிதப்பு அன்ன' (அகம்.224: 6)

(7) **பயனின்மை, வீண்** – waste, useless
'நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு' (நாலடி.221: 3-4)

(ஆ) <u>நுரைக்குமிழி</u> Nuraikkumili (foam bubble)

(8) **அழகு, நிலையாமை** – beauty, neverlosting
'காமர் நுரைக்குமிழி எழுந்திழிவன போல் விளங்கு பெருங் காட்சித்தாக' (பெரிய.1998: 7-8)

<u>நூல்</u> Nūl **(thread, string)**

(1) **நெகிழ்வு** - loose
'விழுமிது கழிவது ஆயினும், நெகிழ்நூல் பூச் சேர் அணையின் பெருங் கவின் தொலைந்த நின்' (குறு.253: 2-3)

(2) **இணைப்பு** - bind
'தண் நறு முகையொடு வெண் நூல் சூட்டி' (அகம்.136: 14)

(3) **மென்மை** - soft
'மென் நூற் கலிங்கம் கமழ் புகை மடுப்ப' (மது.554)

(4) **மெலிவு** - lean
'நூன்மலிந்த நுண்ணுசுப்பு நோவ வந்து நோக்கினார்' (சீவக.1105: 4)

(ஒப்பு) <u>Thread</u> **இணைத்தல், ஏறுதல், கட்டுதல், தப்பித்தல், நெய்தல், பாதுகாப்பு, வளமை, வாழ்க்கை.**

<u>நூல் அறு முத்து</u> Nūl aṟu muttu **(unstringed pearls)**

(1) **சிதறல்** - scatter
'நூல் அறு முத்தின் காலொடு பாறித் துறைதொறும் பரக்கம்' (குறு.51: 2-3)

<u>நூல் சீலை</u> Nūl cīlai **(thread cloth)**

(1) **அழிவு, நிலையாமை** – destroy, unstable
'நூற்றுப்பத்து ஆயிரம் பொன்பெறினும் நூல்சீலை நால்திங்கள் நாளுக்குள் நைந்துவிடும்' (தனிப்.33: 1-2)

<u>நூலும் நாரும்</u> Nūlum nārum **(thread and fiber)**

(1) **பொருத்தமின்மை** – unmatched
'நூலு நாரு மிசைத்தன வொத்தலா நீலகேசி நெடுங்கணாள் சொல்லு மாலும் பேயு முடையவர் செய்கையே போலு நீ சொன்ன புத்தர் சரிதையே' (நீலகேசி.207)

<u>நெஞ்சம்</u> Neñcam **(heart)**

(1) **மயக்கம்** – unclear, confused
'மையல் நெஞ்சம் என் மொழிக் கொளினே!' (நற்.146: 11)

(2) **அன்பு** - love
'காமர் நெஞ்சம் துரப்ப' (நற்.250: 5)

(3) **நட்பு** - friendship
'அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே' (குறு.40: 5)

(4) **துன்பம்** - suffering
'அல்லல் நெஞ்சம் அலமலக்குறுமே' (குறு.43: 5)

(5) **தூய்மை** - pure
'துட்கென்றன்று என் தூஉ நெஞ்சம்' (குறு.157: 2)

(6) **மாண்பு** - noble
'ஆண்டு ஒழிந்தன்றே, மாண் தகை நெஞ்சம்' (குறு.184: 4)

(7) **அருள்** - mercy
'அருள் புரி நெஞ்சம் உய்த்தர' (ஐங்.362: 4)

(8) **நாணாமை** – skyless, not bashful
'நாண் இல் நெஞ்சம் நெகிழ்தலும் காண்பல்' (கலி.121: 11)

(9) **மருட்சி**
'மருளி நெஞ்சம் மகிழ்தலும் காண்பல்' (கலி.121: 15)

(10) **வலிமை** - strong
'வினை நசைஇப் பரிக்கும் உரன் மிகு நெஞ்சமொடு' (அகம்.215: 3)

(11) **நினைதல்** – remembrance
'துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா இன்னும் இழத்தும் கவின்' (குறள்.125: 10)

(ஆ) <u>உள்ளம்</u> Uḷḷam

(12) **அழிவின்மை** - undestroyed
'அழிவு இல் உள்ளம் வழிவழிச் சிறப்ப' (அகம்.47: 1)

(13) **அழிவு** - destroyed
'அழிவுடை உள்ளத்து ஆரஞர் ஆட்டி போதவிழ் புரிகுழல் பூங்கொடி நங்கை' (சிலப்.13: 80-81)

(இ) <u>கல்லா மாந்தர் உள்ளம்</u>
Kallā māntar uḷḷam

(14) நொய்மை, தாழ்தல் – fragile, low
'கல்லா மாந்தர் உள்ளம் போல நொய்ந்நுரை சுமந்து மெய்ந்நயம் தெரிந்த மேலோர் நண்பிற் தாழ இழிதரும்' (பெருங்.உஞ்.50: 12-14)

(15) விரைவு / வேகம்
'கடவுகின்றது காற்றினும் மனத்தினும் கடியது' (கம்ப.யுத்.1441: 2)

**<u>நெய்</u> Ney (ghee)**

(1) பொருட்செல்வம் - wealth
'.. .. .. .. விளக்கொளியும் நெய்யற்ற கண்ணே அறுமே அவரன்பும் கையற்ற கண்ணே அறும்' (நாலடி.371: 2-4)

(2) மறைவு - disappear / hidden
'நெய்யொப் பானைநெய்யிற் சுடர் போல்வதோர் மெய்யொப் பானை விண்ணோரும் அறிகிலார்' (திருநா.தேவா.246: 1-2)

(3) நறுமணம் – pleasant smell
'சேதா நறு நெய்யும் தீம்பால் சுமைத்தயிரும்' (சீவக.481: 1)

(ஆ) <u>பாலில் படு நெய்</u> Pālil paṭu ney

(4) இறைமை, மறைந்து உறைதல், உட்படுதல்
'விறகில் தீயினன் பாலில் படு நெய் போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்' (திருநா.தேவா.30: 1-2)

(இ) <u>பிரைசேர் பாலின் நெய்</u>
Piraicēr pālin ney

(5) மௌனம்
'பிரைசேர் பாலின் நெய்போலப் பேசாது இருந்தால் ஏசாரோ' (திருவா.21: 5: 7-8)

**<u>நெய்க்குடத்தை எறும்பு மொய்த்தல்</u>**
Neykkuṭattai erumpu moyttal

(1) ஈர்ப்பு, ஈடுபாடு – attract, involue
'பொள்ளல் நல் வேழத்து உரியாய் புலன் நின்கண் போதல் ஒட்டா மெள்ளனவே மொய்க்கும் நெய்க்குடம் தன்னை எறும்பு எனவே' (திருவா.6: 24. 5-8)

**<u>நெய்க்குடத்தைப் பற்றி ஏறும் எறும்புகள்</u>** Neykkuṭattaip paṟṟI ēṟum eṟumpukaḷ

(1) பரவுதல் - spread
'நெய்க் குடத்தைப் பற்றி ஏறும் எறும்புகள் போல் நிரந்து எங்கும்' (நாலா.443: 1-2)

**<u>நெய்தல்</u> (நிலம்) Neytal**

(1) கடற்கரை – seashore
'வருணன் மேய பெருமணல் உலகமும்' (தொல்.951: 4)

(2) எற்பாடு – dawn
'எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்' (தொல்.954)

(3) இரங்கல் – crying
'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை தேருங்காலை திணைக்குறிப்பொருளே' (தொல்.960)

(4) போர் - war
'தும்பை தானே நெய்தலது புறனே' (தொல்.1015)
'மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் சிறப்பிற்றென்ப' (தொல்.1016)

**<u>நெய்தல்</u> (மலர்) Neytal (a flower)**

(1) வளமை - futile
'கோட் சுறா வழங்கும் வாள் கேழ் இருங் கழி மணி ஏர் நெய்தல் மா மலர் நிரைய' (நற்.78: 1-2)

(2) மாலைக் காலம் / தனிமை – even time / loneliness
'வள் இதழ் நெய்தல் கூம்ப, .. .. .. .. புலம்பொடு வந்த புன்கண் மாலை' (நற்.117: 3,7)

(3) தலைவி - heroine
'தெறு கதிர் இன் துயில் பசு வாய் திறக்கும் பேதை நெய்தற் பெரு நீர்ச் சேர்ப்பற்கு' (நற்.275: 5-6)

(4) நறுமணம் – fragrance

'கண் நேர் ஒப்பின் கமழ் நறு நெய்தல் அகல் வரிச் சிறு மனை அணியும் துறைவ!' (நற்.283: 2-3)

(5) **தண்மை** - cool
'கனைத்த நெய்தற் கண்போல் மாமலர் நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ, மாலை மணிஇதழ் கூம்ப, காலைக் கள்நாறு காவியொடு தண்ணென மலரும்' (அகம்.150: 8-11)

(6) **மருதத்திணை** - cultivable lands
'நாற விண்டன நெய்தலும் நாண்மது' (சூளா.19: 1)

(ஆ) **வறு நீர் நெய்தல்** Varu nīr neytal

(7) **வீண்** – vain, futile, ruin
'வறு நீர் நெய்தல் போல, வாழாள் ஆதல் சூழாதோயே' (நற்.183: 10-11)

## நெய்தல் Neytal (பறை)

(1) **இறப்பு, நிலையாமை** – death, transitoriness
'ஓர் இல் நெய்தல் கறங்க ஓர் இல் ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப.. ..இன்னாது அம்ம இவ் உலகம்' (புறம்.194: 1,2,..6)

(2) **இறப்பு** – death
'முற்றம் தோறும் மூதூர் அறிய நெய்தல் புலைய நெறியில் காற்றி' (பெருங்.உஞ்,36: 157-158)

## நெருஞ்சி Neruñci (a plant / flower)

(1) **கொடுமை** - cruelity
'புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக் கட்குஇன் புதுமலர் முட்பயந்தாஅங்கு' (குறு.202: 2-3)

(2) **தலைவி** - heroine
'ஞாயிறு அனையன் - தோழி! நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே' (குறு.315: 3-4)

(3) **வளனின்மை, பாழிடம்** – unfertile, ruin
'பீர் இவர் வேலிப் பாழ் மனை நெருஞ்சிக் காடுறு கடு நெறி ஆக மன்னிய' (பதி.26: 10-11)

(4) **சார்ந்தியக்கம்** – dependence
'.. .. .. .. வானிடைச் சுடரோடு திரிதரும் நெருஞ்சி போல' (அகம்.336: 17-18)

(5) **செழிப்பு** - fertile
'சிறு பூ நெருஞ்சியோடு அறுகை பம்பி' (பட்.256)

(6) **துன்பம்** - suffering
'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு, நெருஞ்சிப் பழம்' (குறள்.1120)

(7) **வேட்கை / விருப்பம்**
'அருந்தவர்க்கு ஆயினும் திருந்துமுகம் இறைஞ்சாது செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப் பொன்புனை மலரின் புகற்சி போல வெறுத்த வேட்கைத் தாமுளம் சிறப்ப' (பெருங்.இலா.4: 13-16)

## நெல் Nel (paddy)

(1) **வளன் / செழிப்பு** - fertile
'வண்டு மூசு நெல்லிடை மலரும் அரியல் அம் கழனி ஆர்க்காடு அன்ன' (நற்.190: 5-6)

(2) **இன்றியமையாமை** – necessary, essential, indespensable
'நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே; மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' (புறம்.186: 1-2)

(3) **வழிபாடு** - worship
'நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே' (புறம்.335: 12)

(4) **பயன்** - useful
'நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு' (நாலடி.221: 3-4)

(ஆ) **பழம் நெல்** Palam nel (old grain)

**வளமை** - fertile
'.. .. .. .. ஆறாஅ யாணர், பழம் பல் நெல்லின் குடிப் பரவை' (அகம்.44: 15-16)

(இ) **செந்நெல்** Cennel

**வளமை** – fetile / anspicious
'செழுந்துபடச் செந்நெல்நிறைத் தந்நுண்கொடி அறுகின்' (சீவக.2486: 3)

**<u>நெல்லி</u> Nelli (goose-berry)**

(1) **புளிப்பு** – sour taste
'நெல்லிஅம் புளிச்சுவை' (நற்.87: 4)

(2) **பசுமை** - greenish
'பைங் காய் நெல்லி பல உடன் மிசைந்து' (ஐங்.381:1)

(3) **இனிமை** - sweet
'அத்த நெல்லித் தீஞ் சுவைத் திரள் காய்' (அகம்.241: 13)

(4) **இறவாமை / நீண்ட வாழ்நாள்** – long life / deathless
'செல் உயிர் நிறுத்த சுவைக் காய் நெல்லி' (அகம்.271: 7)

(5) **இனிமை, அருமை** – sweet, rare, priceless
'சிந்தித்து எழுவார்க்கு நெல்லிக் கனியே' (சுந்.தேவா.1009: 1)

(6) **தூய்மை** - pure
'காய்ச்சின நீரொடு நெல்லி கடாரத்தில் பூரித்து வைத்தேன் வாய்த்த புகழ் மணிவண்ணா மஞ்சனம் ஆட நீ வாராய்' (நாலா.154: 5-8)

**(ஆ) <u>கைந்நெல்லிக்கனி</u>** Kainnellikkani

(7) **எளிமை** – easy, simple
'கயற் கடல் சூழ் உலகு எல்லாம் கைந்நெல்லிக்கனி ஆக்கி' (கம்ப.பால.595: 1)

**(இ) <u>கையுறை நெல்லி</u>** Kayurai nelli

(8) **தெளிவு** - clear
'பொய்யுரை செய்யான் புள்ளரசு என்றே புகலுற்றார் கையுறை நெல்லித் தன்மையின் எல்லாம் கரை கண்டாம்' (கம்ப.கிட்.1002: 1-2)

**(ஈ) <u>கையில் ஆமலகக் கனி</u>** Kayil āmalakak kani

**பெறற்கு எளிமை** – easy to get
'செய்ய மேனியன் தேனொடு பால்தயிர் நெய்யது ஆடிய நீலக் குடிஅரன் மையலாய் மறவா மனத்தார்க்கெலாம் கையில் ஆமலகக் கனி ஒக்குமே' (திருநா.தேவா.1848)

**(உ) <u>தடக்கையில் நெல்லிக்கனி</u>** Taṭakkaiyil nellikkani

**எளிமை** – easy, simple
'தடக்கையில் நெல்லிக்கனி எனக்கு ஆயினன்' (திருவா.3: 162)

**<u>நொச்சி</u> Nocci (a plant)**

(1) **போர்** - war
'உழிஞையைத் துடைக்க நொச்சி உச்சியில் கொண்டது உன் ஊர்' (கம்ப.யுத்.898: 4)

**<u>நொய்</u> Noy**

(1) **நுண்மை**
'நொய்யவர் விழுமி யாரும் நூலின் நுண் நெறியைக் காட்டும்' (திருநா.தேவா.570: 1-2)

## ப

**<u>பகல்</u> Pakal (day time)**

(1) **இன்பம், புணர்வு**
'இன்பமும் இடும்பையும், புணர்வும் பிரிவும், நன் பகல் அமையமும் இரவும் போல' (அகம்.327: 1-2)

**<u>பகலில் விண்மீன் வீழ்தல்</u> Pakalil viṇmīn vilutal**

(1) **தீமை, அழிவு**
'இரவு வில்லிடும் பகல் மீன் விழும்' (சிலப்.20: 12)

**<u>பகவதியார்</u> Pakavatiyar**

(1) **கற்பு**
'பொற்புடைய பகவதியார் எனப்போற்றும் பெயருடையார் கற்பு மேம்படு சிறப்பால் கணவனார் கருத்தமைந்தார்' (பெரிய.1919: 5-8)

**<u>பகன்றை</u> Pakanrai (a creeper)**

(1) **பனிக்காலம்** – dew season
'பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும் கடும் பனி அற்சிரம்' (நற்.86: 3-4)

(2) வீரம் - volour
'குரூஉக் கொடிப் பகன்றை சூடி, மூதூர்ப் போர் செறி மள்ளரின் புகுதரும் ஊரன்' (அகம்.316: 6-7)

**பசுக்களின் கழுத்திலுள்ள மணிகள் வீழ்தல்** Pacukkaḻiṉ kaḻuttiluḷḷa maṇikaḷ vīḻtal **(bells falling from cows neck)**

(1) தீமை – evil omen
'நான்முலை யாய நடுங்குபு நின்றிரங்கும் மான்மணி வீழும் வருவதொன்று உண்டு' (சிலப்.17: 4. 1-2)

**பசுத்திரள் மெய் நடுங்கி நிற்றல்** Pacuttiraḷ mey naṭuṅki niṟṟal **(shivering herds)**

(1) தீமை – evil omen
'நான்முலை யாய நடுங்குபு நின்றிரங்கும்' (சிலப்.17: 4.1)

**பசு மண்கலம்** Pacu maṇkalam **(clay pot)**

(1) நிலையாமை / அழிவு
'ஈர் மண் செய்கை நீர் படு பசுங் கலம் பெரு மழைப் பெயற்கு ஏற்றாங்கு, எம் பொருள் மலி நெஞ்சம் புணர்ந்து உவந்தன்றே' (நற் 308: 8-10)

**பசுமரத்து ஆணி அறைதல்** Pacumarattu āṇi aṟaital

(1) மனவுருக்கம் – melting of heart / touching
'பசுமரத்து ஆணி அறைந்தால் போலக் கசிவது பெருகிக் கடல் என மறுகி' (திருவா.4: 65-66)

**பசுமரம் சார்தல்** Pacumaram cārtal

(1) நண்பன் உயிருடன் இருத்தல் (prediction of friend being alive)
'துனிவுகொள் மன்னற்கு முனிவன் கூறும் பசுமரம் சார்ந்தனை ஆதலின் மற்றுநின் உசிர்ப் பெருந்தோழன் உண்மையும் கூட்டமும் கண்ணகன்று உரைந்த கடிநாள் அமையத்துத் திண்ணி தாகும் தெளிந்தனை ஆகுமதி' (பெருங்.இலா.13: 49-53)

**பஞ்சவடி** Pañcavaṭi **(a place)**

(1) குளிர்ச்சி, கடவுட்டன்மை – cool, holy
'பனி தரு தெய்வப் பஞ்சவடி எனும் பருவச் சோலை' (கம்ப.ஆரண்.224: 2)

**பஞ்சி** Pañci **(cotton)**

(1) மென்மை - soft
'பஞ்சி மெல் அடி நடைபயிற்றும்மே!' (நற்.324: 9)

(2) காப்பின்மை - unprotected
'பெருமலை நாட! பிறரறிய லாகா அருமறையை ஆன்றோரே காப்பர் - அருமறையை நெஞ்சிற் சிறியார்க் குரைத்தல் பனையின்மேல் பஞ்சிவைத் தெஃகிவிட்டற்று' (பழமொழி.181)

(3) மெலிவு / மெல்லிய தன்மை – slender / tender
'பஞ்சியின் மெல்லிதேனும் பகை சிறிதென்ன வேண்டாஅஞ்சித் தற் காத்தல் வேண்டும் அரும் பொருளாக என்றான்' (சீவக.1894: 3-4)

(ஆ) **பஞ்சு தீயிடைப்படல்** Pañcu tīyiṭappaṭal (cotton in fire)

(3) அழிவு - destruction
'வெஞ்சுடர்ப் பெருந்தீயினில் விழுத்திய ஏடு பஞ்சு தீயிடைப் பட்டது படக்கண்டு பயத்தால்' (பெரிய.2691: 2-3)

**பஞ்சுரம்** Pañcuram **(a melody)**

(1) இரங்கல் - mourning
'வெஞ்சுரம் செல்வோர் வினைவழி அஞ்சப் பஞ்சுர ஓசையில் பையெனப் பயிரும்' (பெருங்.மகத.1: 160-161)

**பட்டம்** (பட்டு) Paṭṭam **(silk)**

(1) மென்மை – soft

*'பட்டம் பால்நிற மதியம் படர்சடைச் சுடர்விடு பாணி'* (*திருஞான.தேவா*.1988: 1-2)

<u>படம்புடைத்திருத்தல்</u> **(மெய் போர்த்திருத்தல்)** Paṭamputaittiruttal **(cover)**

(1) **பௌத்த சமயம்** - Buddhism
*'பணிய யாதுமோர் பரிவுஇலன் படம்புடைத்திருந்தான்'* (*நீலகேசி*.476: 4)

<u>படுசுழிப் படுதல்</u> Paṭuculip paṭutal **(caught in whirlpool)**

(1) **தடுமாற்றம், துன்பம்** – stagger confusion, affliction
*'பழுது நான் உழன்று உள்தடுமாறிப் படுசுழித் தலைப் பட்டனன் எந்தாய்'* (*சுந்.தேவா*.184: 3-4)

<u>படைப்புண் அகம் அழல் நெய் பெய்தல்</u> Paṭaippuṇ akam alal ney peytal **(pour hot ghee in wound)**

(1) **துன்பம்** - affliction
*'மரணம் பயக்கு மதர்வைத் தாயநின் கடைக்கண் நோக்கம் படைப்புண் அகவயின் அழல்நெய் பெய்தென்று ஆற்றேன் என்னை'* (*பெருங்.வத்*.7: 21-23)

<u>படைவீரர்களின் வாளின் கூரிய பகுதிகளில் ஈக்கள் சூழ்ந்து மொய்த்தல்</u>
Paṭaivīrarkaḷin vāḷin kūriya pakutikaḷil ēkkaḷ cūlntu moyttal

(1) **தீமை, இறப்பு, அழிவு** - bad omen
*'வாளின் வாய்களை ஈ வளைக்கின்ற'* (*கம்ப.ஆரண்*.430: 1)

<u>பண்</u> **(சேணம்)** Paṇ **(saddle)**

(1) **கட்டுப்பாடு** - control
*'வண்மை இலாளர் வனப்பு இன்னா ஆங்கின்னா பண் இல் புரவி பரிப்பு'* (*இன்னா*.9: 3-4)

<u>பண்டி</u> **(சகடம், வண்டி)** **Paṇṭi(cart)**

(1) **உடம்பு** - body
*'உழந்தாலும் புத்தச்சொன் றிட்டூர்த றேற்றா திழந்தார் பலரால் இடும்பை நீர் யாற்றுள் அழுந்துமால் அப்பண்டி யச்சிறா முன்னே கொழுஞ்சீலம் கூலியாக் கொண்டூர்மின் பாகீர்'* (*சீவக*. 2621)

<u>பத்து</u> Pattu **(Ten)**

(1) **இந்திரியம்** - senses
*'அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நான்கும் துறுபறித்து அனைய நோக்கி'* (*சுந்.தேவா*.926: 1-2)

<u>பதடி</u> Pataṭi **(chaff)**

(1) **வீண்** – useless, waste
*'எல்லாம் எவனோ? பதடி வைகல் - பாணர் படுமலை பண்ணிய எழாலின் வானத்து அஞ்சுவர நல் இசை வீழ'* (*குறு*.323: 1-3)

(2) **பயனின்மை, பயனிலி** - unuseful
*'பயன் இல் சொல் பாராடுவானை மகன் எனல் மக்கட் பதடி எனல்'* (*குறள்*.196)

(3) **பொய்ம்மை** - untruth
*'படுபொருளின்றி நெல்லில் பதடிபோல் உள்ளிலார் மெய்'* (*பெரிய*.2717: 1-2)

<u>பதுமபுரம்</u> Patumapuram **(a city)**

(1) **வளமை** - prosperous
*'நீ வருதல் ஒழியென்று நிறை பதுமபுரத்துக்கே'* (*நீலகேசி*.267: 1)

<u>பந்து</u> Pantu **(ball)**

(1) **விளையாட்டு** - play
*'பந்தும் பாவையும் கழங்கும் எமக்கு ஒழித்தே'* (*ஐங்*.377: 4)

**(ஒப்பு)** <u>Ball</u> **அடக்கம், உருண்டை, குழந்தைப் பருவம், நிலைபேறுடைமை, பூமி, பூமியின்**

ஆற்றல், போர், முழுமை, விண்ணுலகு, விளையாட்டுத் தனம்.

<u>பம்பை</u> Pampai **(a drum)**

(1) **துன்பம்** - affliction
*'பைதல் பம்பை இடங்கள் எருக்கி'* (*பெருங்.உஞ்.*36: 159)

<u>**பயின்**</u> **(பிசின்)** Payin **(gum)**

(1) **தகவின்மை** - unworthy
*'நயவார்கண் நல்குரவு நாணின்று கொல்லோ பயவார்கண் செல்வம் பரம்பப் பயின்கொல் வியவாய்காண் வேற்கண்ணாய் இவ்விரண்டும் ஆங்கே நயவாது நிற்கு நிலை'* (நாலடி.267)

<u>பருத்தி</u> Parutti **(cotton)**

(1) **எளிமை** – simple, easy
*'பருத்தி வேலிச் சீறூர் மன்னன்'* (*புறம்.*299: 1)

(2) **வேனிற்பருவம்** - summer
*'கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த'* (*புறம்.*393: 12)

<u>பருந்து</u> Paruntu **(hawk)**

(1) **உயர்ச்சி** - lofty, high
*'ஈன் பருந்து உயவும் வான் பொரு நெடுஞ்சினை'* (*நற்.*3: 1)

(2) **பகை, வெற்றி** - enimity, victory
*'பருந்து வீழ்ந்து எடுத்த பைந் தலை அரவம்'* (*ஐங்.தி.*1: 2)

(3) **திறன்** - capability
*'பருந்து எறிந்தற்றாக் கொள்ளும்'* (*கலி.*82: 27)

(4) **போர்** - war
*'என்றூழ் நின்ற புன் தலை வைப்பில், பருந்து இளைப்படூஉம் பாறு தலை ஓமை'* (*அகம்.*21: 14-15)

(5) **குறிதவறாமை** – aim, target, purpose
*'எறி பருந்து உயவும் என்றூழ் நீள் இடை'* (*அகம்.*81: 9)

(6) **அழிவு** - destroy
*'உரைத்தவர் நாவோ பருந்தெறியா தென்று சிலைத்தெழுந்து செம்மாப் பவரே - மலைத்தால் இழைத்த திகவா தவரைக் கனற்றிப் பலிப்புறத் துண்பார் உணா'* (*பழமொழி.* 295)

(ஆ) <u>**கழுகு**</u> Kaḻuku (vulture)

(7) **இறப்பு** - death
*'கருங்கட் காக்கையொடு கழுகு விசும்பு அகவ, சிறு கண் யானை ஆள் வீழ்த்துத் திரிதரும் நீள் இடை அருஞ்சுரம் என்ப'* (*ஐங்.*314: 2-4)

(8) **விரைவு / வேகம்** – fast, quick
*'சேயொளிச் சிறையவேகக் கழுகினுக்கு அரசு செய்வேம்'* (*கம்ப.கிட்.*991: 2)

(இ) <u>**உவணம்**</u> Uvaṇam (eagle)

(9) **வலிமை** - strong
*'விடமுடை அரவின் உடல் உயிர் உருங்கு உவணம்'* (*பரி.*4: 42)

(10) **உயர்வு** - high, lofty
*'வென்றி வேந்தரை வருக என்று உவணம் வீற்றிருந்த பொன் திணிந்த தோட்டு அரும் பெறல் இலச்சினை போக்கி'* (*கம்ப.அயோ.*72: 1-2)
**வேகம்**
*'அஞ்சுவணத்தின் ஆடை உடுத்தாள் அரவு எல்லாம் அஞ்சுவணத்தின் வேகம் மிகுந்தாள் அருள் இல்லாள்'* (*கம்ப.சுந்.*173: 1-2)

(ஈ) <u>**உவணக்கொடி**</u> Uvaṇakkoṭi

(11) **உயர்வு / நிலைபேறு** - lofty / eternal, perpectual
*'செவ்வாய் உவணத்து உயர் கொடியோயே'* (*பரி.*2: 60)

(உ) <u>**எருவை**</u> Eruvai

(12) **கொடுமை** - cruel
*'அமர்க்கண் அமைந்த அவிர் நிணப் பரப்பின் குழூஉச் சிறை எருவை குருதி ஆர'* (*பதி.*67: 8-9)
**இறப்பு** - death
*'குருதி ஆடிய புலவுநாறு இருஞ்சிறை எருவைச் சேவல் ஈண்டுகிளைத் தொழுதி பச்சூன் கொள்ளை சாற்றி, பறைநிவந்து'* (*அகம்.*381: 9-11)

(ஊ) <u>எழால்</u> Elal

(13) **தீமை** - evil
'வங்காக் கடந்த செங்காற் பேடை எழால் உற வீழ்ந்தென'
(குறு.151: 1-2)
**இறப்பு** - death
'மாவும் மாக்களும் படு பிணம் உணீஇயர், பொறித்த போலும் புள்ளி எருத்தின் புன்புற எருவை பெடை புணர் சேவல் குடுமி எழாலோடு கொண்டு, கிழக்கு இழிய' (பதி.36: 7-10)

(எ) <u>பாறு</u> Pāru

(14) **கூடியுண்ணல்** – communal feeling
'பாறு கிளை பயிர்ந்து படுமுடை கவரும்' (அகம்.175: 5)

(ஏ) <u>கலுழன்</u> Kalulan

(15) **சினம்** – wrath / anger
'கருந்திண் நாகத்தை நோக்கிய கலுழனின் கனன்றான்'
(கம்ப.சுந்.1099: 2)

(ஐ) <u>கருடன்</u> Karuṭan
**வலிமை** - strength
'ஐம்பதினாயிரர் அளவு இல் ஆற்றலர் மொய்ம்பினின் எறுழ் வலிக் கருடன் மும்மையார்'
(கம்ப.சுந்.1056: 3-4)

(16) **விரைவு, வெற்றி, திறன்** – speed, victory, capability
'கால் ஆர்ந்த கதிக் கருடன் என்னும் வென்றிக் கடும்பறவை இவை அனைத்தும்' (நாலா.654: 4-5)

(ஒ) <u>கருடன் இடப்பக்கம் செல்லுதல்</u> Karuṭan iṭapakkam cellutal (eagle flying to the left)

(17) **நன்மை** – good omen
'உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரா னந்த ரங்கா உன்பால் செல்ல வலங்கொண்ட கருடனை யாம் இடங்கண்டோம் எழினரையான் வலத்தே கண்டோம்' (தனிப்.666)

(ஔ) <u>புள்</u> Pul (கருடன்)
**விரைவு** - speed
'வேகப் புள்ளின் வெவ்விசை கேட்ட' (பெருங்.உஞ்.44: 44)

(ஒப்பு) <u>Eagle, Falcon, Hawk, Vulture</u> **அரசத்தன்மை, அறிவு, ஆன்மா, ஆழ்ந்து நினைதல், இறைநிலை, உயர்பண்பு, உயரம், ஒளிக்கொள்கை, கவனமாகப் பார்த்தல், காற்று, கிறித்து, சூரியன், தன்னடக்கம், தன்னம்பிக்கை, தந்தை, தாய்மை, தைரியம், தோற்ற உயர்வு, நிலைபேறுடைமை, நீண்டநாள் வாழ்வு, நெருப்பு, நேர்மை, மறுபிறப்பு, மேன்மையான ஆற்றல், வலிமை, வளமை, வானுலகம், வேகம்; இறப்பு, கடுங்கழிவிரக்கம், காலந்தாழ்த்தல், செருக்கு, தண்டனை, தீமை, பகை, பழிதீர்வு, பொறாமை.**

## <u>பல்லி</u> Palli (lizard)

(1) **உறுதி, பற்றுதல்** – firm, hold
'பொருந்தலால் பல்லி போன்றும்'
(சீவக.1895)

(2) **பற்று** - bind
'பல்லி நுண் பற்றாக உடைவாள் சாத்தி' (நாலா.255: 3)

## <u>பல்லி ஒலித்தல்</u> Palli olittal

(1) **முன்னறிவிப்பு** - prediction
'ஓங்கு மலை வியன் புனம் படீஇயர், வீங்குபொறி நூழை நுழையும் பொழுதில், தாழாது பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென' (நற்.98: 3-5)

(2) **நன்மை, தலைவன் வரவு** - good omen, hero's arrival
'.. .. .. .. பருவரல்தீரப் படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி'
(நற்.169: 2-3)

(3) **நன்னிமித்தம்** – good omen
'.. .. .. .. மனைவயின் பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன'
(கலி.11: 20-21)

(4) **முன்னறிந்து கூறல்** - foretell
'கள்ளி முள் அரைப் பொருந்தி, செல்லுநர்க்கு உறுவது கூறும் சிறு

செந் நாவின் மணி ஓர்த்தன்ன
தெண் குரல் கணி வாய், பல்லிய
காடு இறந்தோரே!'
(அகம்.151: 12-15)

(ஒப்பு) Lizard ஆரோக்கியம், இனப்பெருக்க வளம், இராணுவ போர்முறைத் திறம், கடவுட்பற்று, தெய்வீக அகத்தூண்டுதல், பாசம், பொறுப்பு, மறுபிறப்பு, விவேகம், வெட்கம்; தீமை, பகைமை எண்ணம்.

**பலவின்கனி ஈ** Palavinkani I **(fly in jack-fruit)**

(1) **அழிவு** - annihilation
'வாணார் நுதலார் வலைப்பட்டு அடியேன் பலவின்கனி ஈயது போல்வதன்முன் ஆணோடு பெண்ணாம் உருவாகி நின்றாய்' (சுந்.தேவா.770: 5-7)

**பலவு** Palavu **(jack-fruit)**

(1) **இனிமை** - sweetness
'செங் காற் பலவின் தீம் பழம் மிசையும்' (நற்.232: 5)

(2) **வளமை, அழகு** – luxuriant, elegant
'பலவு உறு குன்றம் போல, பெருங் கவின் எய்திய அருங் காப்பினளே' (நற்.253: 8-9)

(3) **பயன்** - useful
'பயம் கெழு பலவின் கொல்லிக் குடவரை' (நற்.192: 8)

(4) **பேரளவு, காமம்** – large, passion
'வேரல் வேலி வேர்க் கோட் பலவின் சாரல் நாட செவ்வியை ஆகுமதி .. .. .. சிறுகோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கு, இவள் உயிர் தவச்சிறிது; காமமோ பெரிதே!' (குறு.18)

(5) **நறுமணம்** - fragrance
'கலை தொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி' (குறு.90: 4)

(6) **செல்வம்** - wealth
'இன் தீம் பலவின் ஏர் கெழு செல்வத்து' (அகம்.282: 11)

(ஆ) <u>ஆசினி</u> Ācin

(7) **எளிமை** - simple
'பேதை ஆசினி ஒசித்த' (நற்.51: 10)
**வளமை** - luxuriant
'கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்' (அகம்.91: 11-12)

(இ) <u>பலா</u> Palā
**பயன், இனிமை** – use, sweetness
'ஊழாயி னாரைக் களைந்திட் டுதவாத கீழாயி னாரைப் பெருக்குதல் எ யாழ்போலும் தீஞ்சொல் மழலையாய்! தேனார் பலாக்குறைத்துக் காஞ்சிரை நட்டு விடல்' (பழமொழி.104)

(ஈ) <u>கோளிப்பாகல்</u> Kōḷippākal

(8) **மாண்பு, மாட்சி** - noble, honourable
'இடைக்குல மடந்தையர் இயல்பில் குன்றா மடைக்கலம் தன்னொடு மாண்புடை மரபில் கோளிப்பாகல் கொழுங்கனித் திரள்காய்' (சிலப்.16: 22-24)

**பவகாரணி** Palakāraṇi **(a pond)**

(1) **புனிதம், சிறப்பு, கடவுட்டன்மை** – holy, special, devine
'விண்ணோர் ஏத்தும் வியத்தகு மரபில் புண்ணிய சரவணம் பவகாரணியோடு இட்டசித்தி எனும் பெயர் போகி' (சிலப்.11: 93-95)

**பவழம்** Pavaḻam **(Coral)**

(1) **சிவப்பு நிறம்** - red
'பவழத்து அன்ன மேனி' (குறு.கட.வா: 2)

(ஆ) <u>பவளம்</u> Pavaḷam (red)
**சிவப்பு நிறம்**
'பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்' (நற்.317: 4)

(இ) <u>துப்பு</u> Tuppu
**சிவப்பு நிறம்** - red
'அத்தச் செயலைத் துப்பு உறழ் ஒண் தளிர்' (ஐங்.273: 1)

(ஈ) துகிர் Tukir

(2) சிவப்பு நிறம், தூய்மை – red, purity
'மைஇல் செந்துகிர்க் கோவை' (கலி.85: 4)

(ஒப்பு) Coral கிறித்து சிலுவையில் பட்ட துன்பங்கள், குருதி, செவ்வாய்க்கோள், நன்மை.

பழம் Palam **(fruit)**

(1) இனிமை - sweetness
'செங் காற் பலவின் தீம்பழம் மிசையும்' (நற்.232: 5)

(2) வளம் - luxuriant
'கழனி மாஅத்து விளைந்து உகு தீம் பழம்' (குறு.8: 1)

(3) போக இன்பம் – conjugal pleasure
'கைப்பழம் இழந்த மந்தி கட்டியங்காரன் ஒத்தது இப்பழம் துரந்து கொண்ட சிலதனும் என்னை ஒத்தான் இப்பழம் இன்று போகத்து இன்பமே போலும் என்று மெய்ப்பட உணர்வு தோன்றி மீட்டிது கூறினானே' (சீவக.2726)

(4) மகளிர் - women / feminity
'நல்வினை என்னும் நன்பொன் கற்பக மகளிரென்னும் பல்பழ மணிக்கொம்பீன்று பரிசில் வண்டுண்ணப் பூத்து' (சீவக.2728: 1-2)

(ஆ) கனி Kani
இனிமை - sweetness
'.. .. .. .. கடுவன் ஊழுறு தீம்கனி உதிர்ப்பன' (குறு.278: 4-5)

(5) இனிய சொல் – sweet words
'இனிய உளவாக இன்னாத கூறல் கனி இருப்ப காய் கவர்ந்தற்று' (குறள்.100)

(6) இன்பம் - joy
'துனியும் புலவியும் இல்லாயின், காமம் கனியும் கருக்காயும் அற்று' (குறள்.1306)

(7) மூத்தோர் / முதுமை - aged / seniors
'மற்றறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம்செய்ம்மின் முற்றியிருந்த கனியொழியத் தீவளியால் நற்காய் உதிர்தலும் உண்டு' (நாலடி.19)

(8) அழகு - beauty
'அருமுகத்த கனி ஆயின எல்லாம்' (சூளா.1583: 1)

(9) பயன் - use
'கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம்பு ஒத்தார்' (சீவக.2541: 4)

(10) அன்பு
'மாட்சி நீரின் மாண்சினை பல்கிய வேட்கை என்னும் விழுத்தகு பெருமரம் புணர்ச்சிப் பல்பூ இணர்த்தொகை ஈன்று நோயி லின்பக் காய் பல தூங்கியாழ வற்புக்கனி யூழறிந் தேந்த' (பெருங்.வத்.9: 73-77)

(இ) காழ் இல் கனி Kāl il kani (seed less fruit)

(11) அன்பு / காமம் – love / passion
'தாம் வீழ்வார் தம் வீழப்பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழ் இல் கனி' (குறள்.1191)

(ஒப்பு) Fruit அமைதி, அறிவுநுட்பம், ஆன்மீக வளம், நிறைவளம், பாக்கியம், பெருந்தகைமை, முடிவு, மூல வளமை, வானுலக வாழ்த்து.

பழத்தின் இரதம் Palattin iratam **(fruit juice)**

(1) இறைமை, கடவுட்டன்மை – god, devine
'பருகா அமுதமாம் பாலின் நெய்யாம் பழத்தின் இரதமாம் பாட்டில் பண்ணாம் ஒருகால் உமையாளோர் பாகனுமாம்' (திருநா.தேவா.897: 3-5)

பள்ளம் புகும் புனல் Pallam pukum punal **(water flowing to ditch)**

(1) தடையின்மை, விரைவு - unobstructed, speed
'உள்ளம் புகுமொருகாற் பிரியாதுள்ளி உள்ளுதொறும் பள்ளம் புகும்புனல் போன்றகத்

தேவரும் பான்மையளே'
(திருக்கோ.25: 379. 3-4)

(ஆ) <u>பள்ளம் படரும் நீர்</u> Pallam paṭarum nīr
விரைவு - fast, quick
'இன்னே போது மேகுமின் விரைந்தெனப் பள்ளம் படரும் பன்னீர் போலவன்'
(பெருங்.மகத.1: 88-89)

<u>பள்ளி மாறிய பாடையும் எலும்பும்</u>

Palli māriya pāṭaiyum elumpum
(1) கடுமை - severity
'பள்ளி மாறிய பாடையும் எலும்புமே பரந்து கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே' (நீலகேசி.30: 3-4)

<u>பளிக்கறை மண்டபம்</u> <u>Palikkarai</u>

maṇṭapam **(marble hall)**
(1) தெளிவு - clear / transparent
'விளிப்பறை போகாது மெய்புறத்து இடூஉம் பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது'
(மணி.3: 63-64)

<u>பளிங்கு</u> Paliṅku **(marble)**
(1) உயர்வு / ஒளி - lofty / bright
'ஒளிறு வான் பளிங்கொடு செம் பொன் மின்னும்' (நற்.292: 6)
(2) தூய்மை / மாசின்மை / குற்றமின்மை – spotless / pure / blemishless
'மை இல் பளிங்கின் அன்ன தோற்ற' (அகம்.399: 13)
(3) வெளிப்படை / தெளிவு - revealing / obvious
'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்'
(குறள்.706)
(4) மென்மை - soft
'மெய்ப் போதின் நங்கைக்கு அணி அன்னவள் மென் பளிங்கில்'
(கம்ப.பால.851: 1)

(ஒப்பு) <u>Marble, Crystal, Quartz</u>
அழகு, அறிவுநுட்பம், ஆன்மா, உரிமை, உள்ளுணர்வால் அறிகிற ஆற்றல், ஊடுருவல், எண்ணங்களின் ஒளியுருவல் நிலை, கடவுள், திறம், தூய்மை, நிலைபேறு, நீடிப்பாற்றல், நேர்மை, முழுமை, வழிபாடு, விண்ணுலகப் பொருள்கள், வெற்றி.

<u>பறத்தல்</u> Parattal **(flying)**
(1) விரைவு / வேகம் – quick, fast
'பறத்தரல் விசையினும் பண்ணினும் மண்மிசை'
(பெருங்.உஞ்.48: 72)

<u>பறை</u> Parai **(drum)**
(1) ஓசை - sound
'இழுமென இழிதரும் பறைக் குரல் அருவி' (பதி.70: 24)
(2) நினைவு, நினைத்தல் – thought, thinking
'ஓர்த்தது இசைக்கும் பறை போல், நின் நெஞ்சத்து வேட்டதே கண்டாய், கனா' (கலி.92: 21-22)
(3) ஒலி, அறிவித்தல் – noise, announce
'அறை பறை அனைய நீரோர் அரு மறைக்கு ஆவரோதான்'
(கம்ப.பால.966: 4)

(ஆ) <u>பறை அறைதல்</u> Parai araital (drumming)
(4) வெளிப்படுத்தல் – reveal, disclose
'அறை பறை அன்னர் கயவர் - தாம் கேட்ட மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான்' (குறள்.1076)
(5) மறைபொருளைப் புலப்படுத்தல் – reveal a secret
'மறை பெறல் ஊரார்க்கு அரிது அன்றால் - எம்போல் அறை பறை கண்ணார் அகத்து' (குறள்.1180)

(இ) <u>பறைக்குக் காப்பிடல்</u>
Paraikkuk kāppiṭal
(6) மறைபொருளைக் காத்தல் – keep secret
'வெள்ளமாண் பெல்லாம் உடைய தமரிருப்ப உள்ளமாண் பில்லா ஒருவரைத் - தெள்ளி மறைக்கண் பிரித்தவரை மாற்றா தொழிதல்

பறைக்கண் கடிப்பிடு மாறு' (பழமொழி. 178)

(ஈ) <u>தூரியம்</u> (மங்கலப் பறை) Tūriyam

(7) **அரசமைதி** - royalty
'மன்னவற்கு ஏழிசைத் தெழுந்த தூரியம்' (சூளா.1055: 3)

(உ) <u>பறை கிழிதல்</u> Parai kiḻital

(8) **பயன்பாடின்மை** – of no use
'இறைகளோடு இசைந்த இன்பம் இன்பத்தோடு இசைந்த வாழ்வு பறைகிழித்து அனைய போர்வை பற்றியான் நோக்கினேற்கு' (சுந்.தேவா.924: 1-2)

<u>**பன்றி**</u> Panri **(pig)**

(1) **தறுகண்மை / வீரம், அஞ்சாமை** – brave / courageous, fearless
'சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி' (ஐங்.262: 1)

(2) **வலிமை** - strong
'வன்பெரும் பன்றி தன்னை எரியினில் வதக்கி மிக்க' (பெரிய.766: 5-6)

(ஆ) <u>பன்றி ஒருத்தல்</u> PanrI oruttal (male pig)

(3) **சினம்** - wrath
'சிறு கட் பன்றி பெருஞ்சின ஒருத்தல்' (நற்.82: 7)

(இ) <u>களிறு</u> Kaḷiru

(4) **திருமால்** - vishnu
'நானிலம் துளக்கு அற முழு முதல் நாற்றிய பொலம் புனை இதழ் அணி மணி மடற் பேர் அணி இலங்கு ஒளி மருப்பின் களிறும் - ஆகி மூஉரு ஆகிய தலைபிரி ஒருவனை!' (பரி.13: 34-37)

(ஈ) <u>கேழல்</u> Kēlal (boar)

**திருமால்** - vishnu
'கேழல் திகழ்தரக் கோலமொடு பெயரிய ஊழி ஒருவினை உணர்த்தலின்' (பரி.2: 16-17)

(உ) <u>கோட்டுமா ஊர்தல்</u> Kōṭṭumā ūrtal (riding a boar)

(5) **தீமை, இறப்பு, இழிவு** - evil omen (dream)
'கோவலன் கூறுமோர் குறுமகன் தன்னால் காவல் வேந்தன் கடிநகர் தன்னில் நாறைங் கூந்தல் நடுங்கு துயரெய்தக் கூறைகோட் பட்டுக் கோட்டுமா ஊரவும் .. .. .. .. நனவு போல நள்ளிருள் யாமத்துக் கனவு கண்டேன் கடிதீங்கு உறுமென' (சிலப்.15: 95-106)

(ஊ) <u>ஏனம்</u> Enam

(6) **விரைவு** - fast
'கைவரைகளும் வெருவுறமிடை கானெழுவதோர் ஏனம் பெய்கரு முகிலென இடியொடு பிதிர்கனல் விழி சிதறி மொய்வலைகளை அறநிமிர்வுற முடுகிய கடுவிசையில்' (பெரிய.736: 3-8)

(7) **திருமால்** - vishnu
'ஆதி ஏனமதாய் இடக்கல் உற்றான் என்று அதனை வந்தணைதரும் கலுழன்' (பெரிய.18: 7-8)

(8) **வேகம், வலிமை** – speed, strength
'கடுமுரண் ஏனம் ஆகி, முன்கலந்து' (திருவா.4: 6)

(எ) <u>கருவிலங்கு</u> Karuvilaṅku

**இழிவு** - low, mean
'இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை' (பெரிய.1981: 5-6)

(ஏ) <u>வலையிற் பிழைத்த பன்றி</u> Valaiyir pilaitta panri

(9) **வெல்லற்கருமை**
'மாதவன் என் மணியினை வலையிற் பிழைத்த பன்றி போல் ஏதும் ஒன்றும் கொளத் தாரா ஈசன் தன்னைக் கண்டீரே' (நாலா.641: 1-4)

(ஒப்பு) <u>Pig, Wild Boar</u> **அஞ்சாத தன்மை, அதிர்ஷ்டம், ஆண்மை, ஆற்றல், இனப்பெருக்க வளம், இயல்நிலை கடந்த தன்மை, சுதந்திரம், தூய்மைப்படுத்துதல்,**

நீடிப்பாற்றல், புயல், வளமை, வராக அவதாரம், அருவருப்பான அழுக்குடைய தன்மை, அழிவு, கட்டுக்கடங்காத தன்மை, பேருண்டி, முட்டாள்தனம்.

**பனி** Pani (dew)

(1) **நுட்பம்** – subtle, minuteness
*'வெண் கோடு இயம்ப,நுண் பனி அரும்ப'* (நற்.58:7)

(2) **கடுமை, நடுக்கம்** – severe, shivering
*'கடும் பனி அற்சிரம் நடுங்க, காந்தக'* (நற். 86:4)

(3) **தண்மை** - cool
*'கண்ணும் தன் பனி வைகின; அன்னோ!'* (நற். 197:3)

(4) **சிறுமை / சிறிய அளவு** - smallness / small quantity
*'இனியாரை உற்ற இடந்தீர் உபாயம் முனியர் செயினும் மொழியால் முடியா துனியால் திரையுலாம் தூங்குநீர்ச் சேர்ப்ப! பனியால் குளம்நிறைதல் இல்'* (பழமொழி.127)

(5) **நிலையாமை** - transitory
*'மீனிற்குமோ இந்த வெங்கண் சுறாமுனம் வீசுபனி தானிற்குமோ இக்கதிரவன் தோற்றத்தில் தார்மன்னனே'* (தனிப்.114: 3-4)

(ஆ) புற்பனி Purpani

(6) **நிலையாமை, அழிவு**
*'அறியாப் பருவத் தடங்காரோடு ஒன்றி நெறியல்ல செய்தொழுகி யவ்வும் நெறியறிந்த நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப் புற்பனிப் பற்றுவிட் டாங்கு'* (நாலடி.171)

(இ) வெயிலுறு பனி Veyiluru pani
**அழிவு**
*'மின்னின் ஒத்து இறக்கும் செல்வம் வெயிலுறு பனியினீங்கும்'* (சீவக.1537: 2)

(ஈ) புல் நுனைப் பனிநீர். Pul nunaip paninir
**நிலையாமை / அழிவு**
*'புல் நுனைப் பனிநீர் அன்ன மனிசரைப் பொருள் என்று உன்னி'* (கம்ப.யுத்.1252: 3)

(ஒப்பு) Dew, Ice, Mist, Snow
**இளமை, உறக்கம், கன்னிமை, குளிர்காலம், தூய்மை, நினைவு, பிரித்தெடுத்தல், புத்துணர்ச்சி, பேரெண்ணிக்கை, மறைத்தல், மறுபிறப்பு, மென்மை, மீட்பு, வளமை, வெண்மை, இறப்பு, நிலையாமை, போலிப்புகழ்ச்சி.**

**பனுவல்** Panuval (text / book)

(1) **பயன்** - usefulness
*'பயன் தெரி பனுவற் பை தீர் பாண!'* (நற்.167:6)

(2) **நுண்மை** – minuteness / subtle
*'நுணங்கு நுண் பனுவல் போல, கணம் கொள'* (நற்.353: 2)

(3) **மாசின்மை, தூய்மை** – spotless, pure
*'மாசு இல் பனுவற் புலவர் புகழ் பல நாவின் புனைந்த நன் கவிதை மாறாமை'* (பரி.6: 7-8)

(4) **புகழ், நயம்** – famous, meritorious
*'நல் இசை நிறுத்த நயம் வரு பனுவல்'* (அகம்.352: 13)

(5) **நன்மை** – good / beneficial
*'.. .. .. .. புரை இல நல் பனுவல், நால் வேதத்து'* (புறம்.15: 16-17)

(ஆ) நூல் Nūl

(6) **அறம்** - ethics
*'மருந்து உரை இருவரும், திருந்து நூல் எண்மரும்'* (பரி.8: 5)

(7) **ஞானம் / அறிவு** - wisdom / knowledge
*'விரிநூல் அந்தணர் விழவு தொடங்க, புரிநூல் அந்தணர் பொலம் கலம் ஏற்ப'* (பரி.11: 78-79)
(பரி.11: 78-79)

(8) **நெறிமை** – principle / code
*'திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது'* (கலி.99: 3)

(9) **செம்மை** – refinement
*'செந் நூற் கழி ஒருவன் கைப் பற்ற, அந் நூலை முந் நூலாக்*

கொள்வானும் போன்ம்' (கலி.103: 30-31)
**அறிவு** - knowledge
'நூல் அறி வலவ!' (அகம்.114: 8)

**பாகு** Pāku **(syrup)**
(1) **இனிமை** - sweet
'கோகிலம் நவில்வன இளையவர் குதலைப் பாகு இயல் கிளவிகள் அவர் பயில நடமே' (கம்ப.பால.81: 1-2)

**பாகு** **(வெற்றிலை)** Pāku **(betel leaf)**
(1) **பசுமை நிறம்** - green
'பசுங்கிளிச் சிறையெனப் பக்க நிறைத்த பாகும் சாந்தமும் போகமொடு புணர்ந்த' (பெருங்.இலா.3: 62-63)

**பாகு** **(பாக்கு)** Pāku **(areca nut)**
(1) **தூய்மை** - purify
'நிறந்தூய்தா நீரினால் வாய்தூய்தாம் பாகால்' (நீலகேசி.278: 1)

**பாசி** Pāci **(moss)**
(1) **அசைவு** - move
'கிடங்கில் அன்ன இட்டுக் கரைக் கான் யாற்றுக் கலங்கும் பாசி நீர் அலைக் கலாவ' (நற்.65: 2-3)
(2) **நிலையாமை** - impermanent
'ஊர் உண் கேணி உண்துறைத் தொக்க பாசி அற்றே பசலை - காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பரத்தலானே' (குறு.399)
(3) **நொய்மை** – fragile / worn out
'பாசி அன்ன சிதர்வை நீக்கி' (பெரும்.468)
(4) **ஆபத்து** - danger
'விழுந்தோர் மாய்க்கும் குண்டு கயத்து அருகா, வழும்பு கண் புதைத்த நுண் நீர்ப் பாசி அடி நிலை தளர்க்கும் அருப்பமும் உடைய' (மலை.220-222)
(5) **திறனின்மை** - incapacity
'பரந்த திறலாரைப் பாசிமேல் இட்டுக் கரந்து மறைக்கலும் ஆமோ? - நிரந்து எழுந்து வேயின் திரண்டதோள் வேல்கண்ணாய் விண் இயங்கும் ஞாயிற்றைக் கைம்மறைப்பார் இல்' (பழமொழி. 32)

(ஒப்பு) Moss **அன்பு, நட்பு, பணிவு, மறைகாப்பு; சலிப்பு.**

**பாஞ்ச சன்னியம்** Pāñca caṉṉiyam **(conch)**
(1) **போர்** - war
'படை போர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே' (நாலா.2: 7-8)

**பாடலி** Pātali **(a city)**
(1) **வளமை / செழிப்பு** – luxuriant / fertile
'பொன்மலி பாடலி' (குறு.75: 4)

**பாண்டில்** **(கண்ணாடி)** Pāṇṭil **(mirror)**
(1) **தூய்மை / வெண்மை** – pure / white
'தோல் எறி பாண்டிலின் வாலிய மலர' (அகம்.217: 8)

**பாத பீடிகை** Pāta pīṭikai **(alter (of Buddha's feet))**
(1) **புனிதம்** - holy
'ஆதி முதல்வன் அறவாழி ஆள்வோன் பாத பீடிகை பணிந்தனள் ஏத்தி' (மணி.6: 11-12)

**பாதிரி** Pātiri **(a tree)**
(1) **வேனிற்காலம்** - summer
'வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன' (குறு.147: 1)
(2) **கேடின்மை** - harmless
'பாதிரிப்பூப் புத்தோடு பாழ்ப்பினும் தான் பல்வழியும் தாதுரித்தாம் கேடின்மை என்பது நுன் தத்துவமோ' (நீலகேசி.202: 1-2)
(3) **கல்வி, நறுமணம்** – education, fragrance
'கல்லாரே ஆயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின் நல்லறிவு நாளும் தலைப்படுவர் தொல்சிறப்பின்

'ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு' (நாலடி.139)

<u>பாம்பு</u> Pāmpu **(snake)**

(1) **இறப்பு** - death
'.. .. .. .. அழல் உமிழ் அகன் பை பாம்பு உயிர் அணங்கியாங்கும்' (நற்.75: 2-3)

(2) **கடுமை** - fierce
'கடும் பாம்பு வழங்கும் தெருவில்' (குறு.354: 5)

(3) **வலிமை** - strong
'பாம்பு மதன் அழியும் பானாட் கங்குலும்' (அகம்:8: 4)

(4) **விரைவு** - fast
'தண் நில மருங்கில் போழ்ந்த வழியுள், நிரை செல் பாம்பின் விரைபு நீர் முடுக' (அகம்.324: 12-13)

(5) **சினம்** - wrath
'தாங்காச் சினத்தொடு காட்டி உயிர் செகுக்கும் பாம்பும் அவைப் படில், உய்யுமாம்' (கலி.140: 21-22)

(6) **அச்சம்** - fear
'அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல் பாம்புபடப் புடைக்கும்' (திருமுரு.149-150)

(7) **தீமை / அன்பின்மை** – evil / affectionless
'உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று' (குறள்.390)

(8) **பகை** - enmity
'தெற்றப் பகைவர் இடர்ப்பாடு கண்டக்கால் மற்றுங்கண் ணோடுவர் மேன்மக்கள் - தெற்ற நவைக்கப் படுந்தன்மைத் தாயினும் சான்றோர் அவைப்படின் சாவாது பாம்பு' (பழமொழி. 86)

(9) **வஞ்சனை** - deceive
'தலைமை கருதும் தகையாரை வேந்தன் நிலைமையால் நேர்செய் திருத்தல் - மலைமிசைக் காம்பனுக்கும் மெந்தோளாய்! அஃதன்றோ ஓரறையுள் பம்போடுடனுறையும் ஆறு' (பழமொழி. 253)

(10) **ஆற்றல்** – power
'சீர்த்தகு மன்னர் சிறந்தனைத்துங் கெட்டாலும் நேர்த்துரை போஒய்த் தனித்தாயக் கண்ணும் இளைதென்று பாம்பிகழ்வா ரில்' (பழமொழி. 277)

(11) **துன்பம்** - misery
'பரீஇ உயிர்செகுக்கும் பாம்பொடும் இன்னா மரீஇப் பின்னைப் பிரிவு' (நாலடி.220)

**(ஆ)** <u>**அரவு**</u> Aaravu
**துன்பம்** - pain
'அணங்குடை அரவின் ஆர் இருள் நடு நாள்' (நற்.168: 8)

(12) **விடத்தன்மை / நச்சுத்தன்மை** - poisonous
'கடு ஒடுங்கு எயிற்ற அரவுத் தலை பனிப்ப' (புறம்.17: 38)
**சினம்** - anger
'வெஞ்சின அரவின் பைந்தலை துமிய' (குறு.190: 4)
**அச்சம்** - fear
'அரவுஇரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி' (அகம்.258: 10)

(13) **கொடுமை** - cruel
'கொடியோர் இன்று, அவன் கடியுடை வியன்புலம் உருமும் உரறாது; அரவும் தப்பா' (பெரும்.41-42)
**பகை** - enmity
'அரவுக் குறும்பு எறிந்த சிறுகட் தீர்வை' (மலை.504)

(14) **கொல்லும் தன்மை** - killing
'கொல்லும் அரவின் மயங்கிச் சிறியார் கொண்ட தொடர்பின்' (சீவக.1416.3)

**(இ)** <u>**அரா**</u> Arā
**வலிமை** - strong
'பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார் தாமேயும் நாணித் தலைச்செல்லார் காணாய் இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேராது அணங்கருந் துப்பின் அரா' (நாலடி.241)
**துன்பம், தீமை, விடத்தன்மை** – affliction, evil, poisionous
'அணங்கு வாள் விட அரா அணுகும் எல்லையும் குணம் கெடது ஒளி விரி குளிர் வெண்

திங்கள்போல்' (கம்ப.அயோ.138: 1-2)

(ஈ) <u>நல்அரா கதுவல்</u> Nalarā katuval (snake bite)

**துன்பம்** - suffering
'நல்அராக் கதுவியாங்கு, என் அல்லல் நெஞ்சம் அலமலக்குறுமே' (குறு.43: 4-5)

(உ) <u>பாப்பு</u> Pāppu

**தீமை** - evil
'படர் சிறைப் பல் நிறப் பாப்புப் பகையைக் கொடியெனக் கொண்ட கோடாச் செல்வனை' (பரி.13: 38-39)

(15) **திறல்** – capacity / capability
'.. .. .. .. கடுந் திறல் பாப்புக் கடுப்பு அன்ன தோப்பி வான் கோட்டு' (அகம்.348: 6-7)

(ஊ) <u>நாகம்</u> Nākam

**ஆற்றல்** - power
'நாகம் நாணா, மலை வில்லாக' (பரி.5: 24)
**அச்சம்** - fear
'ஒளி திகழ் உத்தி உருகெழு நாகம்' (பரி.12: 4)

(16) **நச்சுத்தன்மை/விடம், வேகம், திறல்** – poisonous, quickness, capacity
'நஞ்சுடை வால் எயிற்று, ஐந் தலை சுமந்த, வேக வெந் திறல், நாகம் புக்கென' (புறம்.37: 1-2)
**சினம்** - wrath
'கதநாகம் புற்றடையக் காரேறு சீற' (திணைமாலை.177)

(17) **வலிமை** - prowess
'பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவனே' (நாலா.8: 7-8)

(18) **காலம் / நேரம்** - time
'சுமைத்தயிர் வேய்ந்த சோற்றில் துய்த்து இனிதாக நம்மை அமைத்தநாள் என்னும் நாகம் விழுங்கப்பட் டன்ன தங்கண்' (சீவக.2617: 1-2)

(எ) <u>உரும் எறி பாம்பு</u> Urum eṟi pāmpu (thender struck snake)

(19) **துன்பம்** - affliction
'பருமப் பனைஎருத்தின் பல்யானை புண்கூர்ந்து உரும்எறி பாம்பின் புரளும்' (களவழி.38: 1-2)

(ஏ) <u>அருமணி இழந்த நாகம்</u> Arumaṇi iḻanta nākam (snake, losing gem)

(20) **துன்பம்** - affliction
'அருமணி இழந்த நாகம் போன்றதும் இன்னுயிர் இழந்த யாக்கை யென்னத் துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்' (சிலப்.13: 58-60)

(21) **தவிப்பு, துன்பம்** – distress, affliction
'அருமணி இழந்தோர் நாகம் அலமருகின்றது ஒத்தாள்' (சீவக. 1508.4)

(ஐ) <u>இடியேறுண்ட நாகம்</u> Iṭiyēṟuṇṭa nākam

**துன்பம்** - affliction
'இடியேறுண்ட நாகம் போலக் கொடியோர் சாயல் கொழுங்கவின் வாட' (பெருங்.இலா.10: 112-113)

(ஒ) <u>நன்மணி இழந்த நாகம்</u> Naṉmaṇi iḻanta nākam

**துன்பம், துயரம்** – sorrow, grief
'நன்மணி இழந்த நாகம் போன்றவள் தன்மகள் வாராத் தனித்துயர் உழப்ப' (மணி.7: 131-132)

(ஓ) <u>நச்செயிற்று அரவின் நோக்கு</u> Nacceyiṟṟu aravin nōkku (poisonous snake's look)

(22) **அச்சம், நடுக்கம்** – dread, tremble
'நச்செயிற்றரவின் நோக்கின் மன்னரை நடுங்க நோக்கி' (சீவக.2494: 1)

(ஔ) <u>புற்று அடங்கு அரவு</u> Puṟṟu aṭaṅku aravu(snake in (termite) mound)

(23) **மறைவு** - hidden / concealed
'புற்றடங்கு அரவின் புக்கொளித்து அடங்கினன்' (மணி.20: 80)

(க) மாசுணம் (மலைப்பாம்பு) Mācuṇam (python)

துன்பம் - affliction

'வாழ் மனை புகுந்தது ஆண்டு ஓர் மாசுணம் வரக் கண்டன்ன' (கம்ப.ஆரண்.715: 3)

(ஒப்பு) Snake, Python அரச உரிமை, ஆழம், உள் ஆற்றலின் வடிவம், ஒளி, கடவுட்டன்மை, கவர்ச்சி, குண்டலினி சக்தி, குணப்படுத்துதல், சக்தி, செயலறிவு, தெய்வீக உரிமை, நிலைபேறு, நிலம், போர்முறைத் திறம், மறுபிறப்பு, மின்னல், மீட்பு, முன்னறிவித்தல், மறைபொருள், மயக்கநிலை, மெய்யுணர்வு, வரம்பு கடந்த நிலை, வலிமை, வலியத் தாக்கும் தன்மை, வளமை, விழிப்புநிலை; அடிமைத்தனம், அழிவு, இருள் இறப்பு, இயற்கையின் ஆபத்தான வலிமை, கழிகாமம், கீழுலகம், சோம்பல், தீமை, தீய எண்ணங்கள், தண்டனை, பாலியல் சக்தி, பொறாமை.

**பாம்புறையும் புற்று** Pāmpuṟaiyum puṟṟu **(snake mound)**

(1) **சிற்றறிவுடையார், புன்மை, ஆபத்து** – petty minded, low, danger

'கற்றன்னர் கற்றாரைக் காதலர் கண்ணோடார் செற்றன்னர் செற்றாரைச் சேர்ந்தவர் - தெற்றென உற்றது உரையாதார் உள்கரந்து பாம்புறையும் புற்றன்னர் புல்லறிவி னார்' (நான்.58)

(ஆ) அரவு உறையும் இல் Aravu uṟaiyum il (snake hut)

(2) **துன்பம்** - harmful

'ஒடுங்கி அரவு உறையும் இல் இன்னா' (இன்னா.30: 3)

**பாரிசாதம்** Pāricātam **(a flower)**

(1) **நறுமணம், ஆண்மை** – fragrance

'கடிகமழ் பாரிசாதம் அதனொடோர் காம வல்லி' (சூளா.1563: 5-6)

**பால்** Pāl **(milk)**

(1) **வெண்மை** - white

'படு திரை கொழீஇய பால் நிற எக்கர்' (நற்.49:1)

(2) **இனிமை** - sweet

'வீங்கு சுரை ஞெமுங்க வாங்கி, தீம் பால்' (நற்.57:5)

(3) **பயன்** - use

'இன் தீம் பாற்பயம் கொண்மார்' (நற்.80:2)

(4) **வளமை** - fertile

'பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!' (ஐங்.3:2)

(5) **நன்மை** - goodness

'பண்பு இலான் பெற்ற பெருஞ்செல்வம் - நன் பால் கலம் தீமையால் திரிந்தற்று' (குறள்.1000)

(6) **பெரியார்** - the great / noble

'பாலோடு அளாயநீர் பாலாகும் அல்லது நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம் தேரின் சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல பெரியார் பெருமையைச் சார்ந்து' (நாலடி.177)

(7) **அறிவுடையார்** - wise

'பாலாற் கழீஇப் பலநாள் உணக்கினும் வாலிதாம் பக்கம் இருந்தைக்கு இருந்தன்று கோலார் கடாஅய்க் குறினும் புகலொல்லா நோலா உடம்பிற்கு அறிவு' (நாலடி.258)

(8) **தூய்மை** - pure

'.. .. .. .. பால்போலும் தூய்மையுள் தோன்றும் பிரமாணம்' (திரி.37: 2-3)

(9) **வாய்மை, உயர்குடியினர், நற்பண்பு** – truth / noble birth, good quality

'சங்கினும் பாலினும் சலமில் வாய்மை விழுத்திணைப் பிறந்த ஒழுக்குடை மரபினர்' (பெருங்.இலா.5: 65-66)

(10) **தோற்றம், மாற்றம்** – appear, change

'உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பால் தயிர் மோர் பருவத்தினாம் பரியாயப் பெயரென்பன் பாலழிந்து தருவித்து உரைத்த தயிர் உருவாய் மும்மைத் தன்மையதாம் திருவத்தென் பொருளாதலைத் தேர தெளியிதென்றாள்'
(நீலகேசி.387)

(ஆ) <u>சிந்திய பால்</u> Cintiya pāl (split milk)

(11) **வீண்** – ruin, waste
'கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது, நல்ஆன் தீம்பால் நிலத்து உக்கா அங்கு, எனக்கும் ஆகாது, என்னைக்கும் உதவாது'
(குறு.27: 1-3)

(இ) <u>பாலுண்ணல்</u> Pāluṇṇal (drink milk)

(12) **நலன் நுகர்தல்** – physical enjoyment
'தீம் பால் உண்பவர் கொள் கலம் வரைதல்' (கலி.133: 17)

(ஈ) <u>நெய்கடை பால்</u> Neykaṭai pāl (churned milk)

(13) **பயனின்மை** - unuseful
'நெய் கடை பாலின் பயன் யாதும் இன்றாகி' (கலி.110: 17)

(உ) <u>பால் நவன்</u> (புதியதாய் கறந்த பால்) Pāl nalan̲ (new milk)

(14) **இறைமை** - godhood
'கானவனைக் கயிலாய மலையுளானைக் கலந்துருகி நைவார்தம் நெஞ்சினுள்ளே பானவனைப் பள்ளியின் முக்கூடலானைப் பயிலாதே பாழே நான் உழன்றவாறே'
(திருநா.தேவா.1444: 5-8)

(ஊ) <u>பாம்புண்ட பால்</u> Pāmpuṇṭa pāl

(15) **நச்சுத்தன்மை, குற்றம்** – poisonous, fault
'பலம்படு முரைநினக்குப் பாம்புண்ட பாலேபோல்'
(நீலகேசி.293: 4)

(எ) <u>பிரை உண்ட பால்</u> Pirai uṇṭa pāl (split milk)

(16) **கலக்கம்** – anxiety, confusion
'பிரை உண்ட பாலின் உள்ளம் பிறிதும் பிறர் முன் சொல்லா'
(கம்ப.யுத்.2111: 3)

(ஒப்பு) <u>Milk</u> **அறிவாற்றல், உண்மை, உயிரின் மூல, ஊட்டம், தாய்மை, தியாகம், தூய்மை, நற்பேறு, நிலைபேறு, நிறைவளம், மறுபிறப்பு, மனித உணர்வு, மனித நேயம், விந்து, வெண்மை.**

<u>பால் உறையாதிருத்தல்</u> Pāl ur̲aiyātiruttal **(unset milk)**

(1) **தீமை** – evil omen
'குடப்பால் உறையா குவி இமிலேற்றின் மடக்கணீர் சோரும் வருவதொன்று உண்டு' (சிலப்.17: 2. 1-2)

<u>பால் நுரை</u> Pāl nur̲ai **(milk bubbles)**

(1) **மென்மை, நொய்ம்மை** – soft, fragile
'பால்நுரையின் நொய்ய அணைப் பைங்கதிர்கள் சிந்தி' (சீவக.2490: 1)

<u>பாலும் தேனும்</u> Pālum tēn̲um **(milk and honey)**

(1) **நட்பு / அன்பு** – friendship / love
'ஆன் முலைப் பிறந்த வானிற அமிர்தம் மலைப்பெய் நெய்யொடு தலைப் பெய்தாங்கு வேறுபட்டு இயலா அன்பினின் அளைஇய நண்பின் அமைதியும்'
(பெருங்.இலா.8: 11-14)

<u>பாலை</u> (நிலம்) Pālai **(dry land)**

(1) பாலை – seperation
'இரு வகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும் உரியதாகும் என்மனார் புலவர்' (தொல்.957)

(2) **வேனில்** – summer
'நடுவு நிலைத் திணையே நன்பகல் வேனிலொடு முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே' (தொல்.955)

(3) **பின்பனி** - dew
'பின்பனி தானும் உரித்தென மொழிப' (தொல்.956)

(4) **வெற்றி** - victory
'வாகை தானே பாலையது புறனே' (தொல்.1019)
'தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப' (தொல்.1020)

(5) **வெம்மை** – heat
'சூழ்கம் வம்மோ - தோழி! பாழ்பட்டுப் பது அற வெந்த பாலை வெங்காட்டு' (ஐங்.317: 1-2)

<u>பாலை</u> **(மலர்)** Pālai **(a flower)**

**தூய்மை / வெண்மை** – pure / white
'கொடிறு போல் காய வால் இணர்ப் பாலை' (நற்.107: 3)

<u>பாலை</u> **(பண்)** Pālai **(a melody)**

(1) **உருக்கம்** – compassion / melt
'தொடை படு பேரியாழ் பாலை பண்ணி, பணியா மரபின் உழிஞை பாட' (பதி.46: 5-6)

(2) **வளமை** - flouriship
'பாணர் கையது பணி தொடை நரம்பின் விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணி, குரல் புணர் இன் இசைத் தழிஞ்சி பாடி; இளந் துணைப் புதல்வர் நல் வளம் பயந்த' (பதி.57: 7-10)

(3) **உயிர்ப்பு** – life, longing
'வல்லோன் தைவரும் வள் உயிர்ப் பாலை' (அகம்.355: 4)

(4) **இன்பம்** - pleasure
'மாறு தலை பெயர்க்கும் மருவு இன் பாலை' (பொரு.22)

(5) **இனிமை** - sweetness
'செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின் இன் தீம் பாலை முனையின்' (பெரும்.179-180)

(6) **இதம்** – soothing
'நைவளம் பழுநிய பாலை வல்லோன்' (குறி.146)

(ஆ) <u>**பஞ்சுரம்**</u> Pañcuram

(7) **மகிழ்ச்சி** - joy / happiness
'வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும், ஆர் இடைச் செல்வோர் ஆறு நனி வெரூஉம்' (ஐங்.311: 1-2)

<u>பாவை</u> Pāvai **(doll / puppet / statue)**

(1) **மாட்சி, பெண்** – noble, feminine
'வினை மாண் பாவை அன்னோள்' (நற்.185: 11)

(2) **பழியின்மை** - faultless
'பாவை அன்ன பழி தீர் காட்சி' (நற்.252: 7)

(3) **வனப்பு / அழகு** – beauty / charm, elegance
'பாவை அன்ன வனப்பினள் இவள்என' (நற்.301: 6)

(4) **அன்பு / நட்பு** – love / friendship
'இது என் பாவைக்கு இனிய நன் பாவை' (ஐங்.375: 1)

(5) **பெண்மை / குழந்தைமை** – feminity, childlike
'பந்தும் பாவையும் கழங்கும் எமக்கு ஒழித்தே' (ஐங்.377: 4)

(6) **தாய்மை** - motherhood
'தாய் உயிர் பெய்த பாவை போல, நலன் உடையார் உயிர்க்கண் தாவார்' (கலி.22: 5-6)

(7) **வெறுமை** – desolate, empty
'பொறி செய் புனை பாவை போல, வறிது உயங்கிச் செல்வேன், விழுமம் உழந்து' (கலி.146: 49-50)

(8) **பொலிவு** - radient, bright
'உருவு கிளர் ஓவினைப் பொலிந்த பாவை' (அகம்.142: 21)

(ஆ) <u>**கொல்லிப்பாவை**</u> Kollippāvai (statue on killi hills)
**மாட்சி**
'உரைசால் உயர் வரைக் கொல்லிக் குடவயின், .. .. .. .. வினை மாண் பாவை அன்னோள்' (நற்.185: 7-11)

(9) **அழியாமை / நிலைபேறு** – undestroyed / stable

பாவை

'செவ் வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லித் தெய்வம் காக்கும் தீது தீர் நெடுங் கோட்டு, .. .. .. .. பெரு நிலம் கிளரினும், திரு நல உருவின் மாயா இயற்கைப் பாவையின், போதல் ஒல்லாள் என் நெஞ்சத்தானே' (நற்.201: 5-12)

(10) **அச்சம், மெல்லியல்பு, தலைவி** - fear, tender, heroine
'பெரும்பூண் பொறையன் பேஎமுதிர் கொல்லிப் கருங்கண் தெய்வம் குடவரை யெழுதிய நல்லியற் பாவை அன்னாம் மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே' (குறு.89: 4-7)

(11) **மடமை** – foolish, ignorent
'வல்வில் ஓரி கொல்லிக் குடவரைப் பாவையின் மடவந் தனளே' (குறு.100: 5-6)

(12) **புகழ் / கடவுட்டன்மை** – fame / divine
'.. .. .. .. பயங்கெழு கொல்லி நிலைபெற கடவுள் ஆக்கிய பலர்புகழ் பாவை அன்னநின் நலனே' (அகம்.209: 15-17)

(இ) <u>ஆடிப்பாவை</u> Aṭippāvai (mirror image / puppet)

(13) **முடிவெடுக்கும் தன்மையின்மை** – indecisive
'கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப் பாவை போல, மேவன செய்யும்' (குறு.8: 4-6)

(ஈ) <u>பனிப்பாவை</u> Paṉippāvai (dew doll / pollen doll)

(14) **குளிர்ச்சி, உருகும் தன்மை, நிலையாமை** – cool, melting, not durable
'தாதிற் செய்த தண்பனிப் பாவை காலை வருத்துங் கையா றோம்பென' (குறு.48: 1-2)

(உ) <u>பொன்செய் பாவை</u> Poṉcey pāvai (gold statue)

(15) **செல்வம் / வளமை** - wrath
'பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான் பெண்கொலை புரிந்த நன்னன் போல' (குறு.292: 4-5)

(16) **அழிவின்மை** – indestructible
'தா இல் நன் பொன் தைஇய பாவை' (அகம்.212: 1)

(ஊ) <u>மணல் பாவை</u> Maṇal pāvai (sand doll / mud statue)

(17) **நிலையாமை / அழிவு** - unstable / ruin
'.. .. .. மணலின் எழுதிய பாவை சிதைத்தது என அழ' (பரி.7: 25-26)

(18) **பயனின்மை** – useless / waste
'நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் மண் மாண் புனை பாவை அற்று' (குறள்.407)

(எ) <u>உப்புப்பாவை</u> Uppuppāvai (salt statue)
**நிலையாமை, அழிவு** - impermanent, ruin / death
'உப்பு இயல் பாவை உறை உற்றது போல, உக்கு விடும் என் உயிர்' (கலி.138: 16-17)

(ஏ) <u>மரப்பாவை</u> Marappāvai (wodden doll)

(19) **உள்ளீடின்மை** - coreless
'நாண் அகத்து இல்லார் இயக்கம் - மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று' (குறள்.1020)

(20) **உயிர்ப்பின்மை** - lifeless
'இரப்பாரை இல்லாயின், ஈர்ங்கண் மா ஞலம் மரப்பாவை சென்று வந்தற்று' (குறள்.1078)

(ஐ) <u>பவளப்பாவை</u> Pavaḷappāvai (coral statue)

(21) **அழகு** - beauty
'பளிங்கு புறத்தெறிந்த பவளப் பாவையின் இளங்கொடி தோன்றுமால் இளங்கோ முன்னென்' (மணி.4: 124-125)

(ஒ) <u>பனிநீரால் பாவை செய்தல்</u> Paṉinīrāl pāvai ceytal (make a dew doll)

(22) **பயனின்மை, வீண்** – waste, useless / futile
'தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல் அருள்செய்யும்

*ஆரூரைப் பண்டெலாம் அறியாதே பனிநீரால் பாவை செயப் பாவித்தேனே'* (*திருநா.தேவா*.1221: 5-8)

(ஓ) <u>பொறியறு பாவை</u> Poriyaṟu pāvai (mechanical doll with broken switch)

(23) **செயலின்மை** - inactive
*'தெளிதல் செல்லா திண்திறை அழிந்து பொறியறு பாவையின் அறிவறக் கலங்கி'* (*பெருங்.உஞ்*.33: 145-146)

(ஔ) <u>பொற்பாவை</u> Poṟpāvai (gold doll / statue)
**நிலையாமை** – transitory / impermanent
*'கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால் உருகு பொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள்'* (*கம்ப. பால*.536: 3-4)

(க) <u>வரைந்த பாவை</u> Varainta pāvai (painted doll)

(24) **அசைவற்ற நிலை** - unmoving
*'வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின் எட்டி குமரன் இருந்தோன் தன்னை'* (*மணி*.4: 57-58)

(ங) <u>வெண்ணெய்ப் பாவை</u> Veṇṇeyp pāvai (butter doll)
**அழிவு, நிலையாமை** – ruin, impermanent
*'பந்தெடுக்கலாத நங்கை பால்கடை வெண்ணெய்ப் பாவை வெந்துடன் வெயில் உற்றாங்கு மெலிந்துக விளங்கும் வெள்ளி'* (*சீவக*.1532: 2-3)

<u>பாவை விளக்கு</u> Pāvai viḷakku **(doll-lamp)**

(1) **மங்கலம்** - anspicious
*'பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும் பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்'* (*மணி*.1: 44-45)

<u>பாழி</u> **(ஒரு நகரம்)** Pāḻi
**காவல்** - secure
*'பாழி யன்ன கடியுடை வியனகர்'* (*அகம்*.15: 10-11)

<u>பாழூரில் பயிக்கம்புக்கு எய்தல்</u>

Pāḻūril payikkampukku eytal **(living in a desolate city)**

(1) **பயனின்மை** – waste / futile
*'ஆவியைப் போகாமே தவிர்த்து என்னை ஆட்கொண்ட ஆரூரரைப் பாவியேன் அறியாதே பாழூரில் பயிக்கம்புக்கு எய்தவாறே'* (*திருநா.தேவா*.1225: 5-8)

<u>பாளைக் கமுகு பரிசு உடைப் பந்தற் கீழ் கோளரி மாதவன் வருதல்</u> Pāḷaik kamuku paricu uṭaip pantaṟ kīḻ kōḷari Mātavan varutal **(arrival of Vishnu under a festive canopy (dream))**

(1) **திருமணம்** - wedding
*'நாளை வதுவை மணம் என்ற நாள் இட்டு பாளைக் கமுகு பரிசு உடைப் பந்தற் கீழ் கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை புகுதக் கனாக் கண்டேன்'* (*நாலா*.557)

<u>பிடவு</u> Piṭavu **(a flower)**

(1) **மழைக்காலம்** – rainy season
*'மறந்து கடல் முகந்த கமஞ் சூல் மா மழை பொறுத்தல் செல்லாது இறுத்த வண் பெயல் கார் என்று அயர்ந்த உள்ளமொடு, தேர்வு இல பிடவமும், கொன்றையும், கோடலும் - மடவ ஆகலின், மலர்ந்தன பலவே'* (*நற்*.99: 6-10)

(2) **நறுமணம்** - fragrance
*'செவ் வரி இதழ சேண் நாறு பிடவின்'* (*நற்*.25: 2)

(3) **மாலைக்காலம்** – even time
*'வண்டு வாய் திறப்ப விண்ட பிடவம், மாலை அந்தி, மால் அதர் நண்ணிய'* (*நற்*.238: 3-4)

(4) **அழகு** – beauty

'பொலன் அணி கொன்றையும் பிடவமும் உடைத்தே' (ஐங்.435: 3)

<u>பிடிகை</u> Piṭikai
(1) **விரைவு**
'காலிரும் பிடியும் கடுங்கால் பிடிகையும்' (பெருங்.உஞ்.38: 12)

<u>பித்திகம்</u> Pittikam **(jasmine)**
(1) **கார்ப்பருவம்** – rainy season
'பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து அரும்பே முன்னும் மிகச்சிவந் தனவே' (குறு.94: 1-2)
(2) **மாலைப்பொழுது** - evening
'செவ்வி அரும்பின், பைங் காற் பித்திகத்து, அவ் இதழ் அவிழ் பதம் கமழ, பொழுது அறிந்து' (நெடு.40-41)

<u>பிரம்பின் கனி</u> Pirampin kaṉi **(cane-fruit)**
(1) **தலைவன்** - hero
'அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்' (குறு.91: 1-2)

<u>பிள்ளை</u> (காரிப்புள்) Piḷḷai **(a bird)**
(1) **அழிவு** - bad omen
'பிள்ளை உள்புகுந்து அழித்தது ஆதலால்' (சீவக.420: 1)

<u>பிள்ளை நகுலம்</u> (கீரி) Piḷḷai nakulam **(mongoose)**
(1) **பிழையற்றவர்க்குத் தண்டனை** – innocent punished
'பிள்ளை நகுலம் பெரும் பிறிதாக எள்ளிய மனையோள் இனைந்து பின் செல்ல வடதிசைப் பெயரும் மாமறையாளன்' (சிலப்.15: 54-56)

<u>பிறை விசும்பிலாத அந்தி</u>
Piṟai vicumpilāta anti **(cresentless evening)**
(1) **மகப்பேறின்மை** - childless
'மிக்கிளம் பிறை விசும்பிலாத அந்தியும் மக்களை இலாததோர் மனையும் ஒக்குமே' (சூளா.413)

<u>பீரம்</u> Pīram **(a flower)**
(1) **கார்காலம்** – rainy season
'மாரிப் பீரத் தலர்சில கொண்டே' (குறு.98: 5)
(2) **அழகு** - beauty
'.. .. .. .. பீரத்து எழில் மலர் புரைதல்வேண்டும்' (அகம்.45: 7-8)

<u>புகார்</u> Pukār **(a city)**
(1) **போகம், புகழ்** – worldy pleasure, fame
'போகநீள் புகழ்மன்னும் புகார் நகரது தன்னில்' (சிலப்.1: 22)
(2) **செல்வம், வளம்** – wealth, luxurious
'இருநில மன்னற்குப் பெருவளம் காட்டத் திருமகள் புகுந்ததிச் செழும்பதியாம் என' (சிலப்.5: 212-213)
(3) **சிறப்பு, நிலைபேறு** – eminence, stability
'பதி எழு அறியாப் பழங்குடி கெழீஇய பொது அறு சிறப்பின் புகாரே ஆயினும் நடுக்கு இன்றி நிலைஇய என்பது அல்லதை ஒடுக்கம் கூறார்' (சிலப்.1: 15-18)
(4) **அழகு, புகழ், நிலையாமை** – charm, fame, unstable
'பூம்புகார் போற்றுதும்' (சிலப்.1: 10)

<u>புகை</u> Pukai **(smoke)**
(1) **இயக்கம்** - movement
'கொழு மீன் சுடு புகை மறுகினுள் மயங்கி' (நற்.311: 6)
(2) **நிலையாமை** - unstable
'ஆவி உண்ணும் அகில் கெழு கமழ் புகை' (பரி.17: 30)
(3) **நுட்பம்** - minute
'நீரினும் நுண்ணிது நெய்யென்பார், நெய்யினும் யாரும் அறிவர் புகைநுட்பம் தேரின் நிரப்பிடும்பை யாளன் புகுமே, புகையும் புகற்கரிய பூழை நுழைந்து' (நாலடி.282)

(ஆ) <u>ஆவி</u> Āvi (vapour)
(3) **நெட்டுயிர்ப்பு / ஏக்கம்** – sigh / longing

'கேள்வி அந்தணர் கடவும் வேள்வி ஆவியின் உயிர்க்கும் என் நெஞ்சே' (கலி.36: 25-26)

(ஒப்பு) Smoke, Incense அன்பு, ஆன்மா, உயிர்ப்பூட்டுதல், தியாகம், தீமைகளை அழித்தல், தூய்மை, தெய்வத்தன்மை, பாதுகாப்பு, புனிதத்தன்மை; அறிவு இருளடைதல், சினம், தண்டனை, தீமை, நிலையாமை, போர், போலிப்புகழ்ச்சி, மறைவு.

<u>புகைக்கொடி தோன்றுதல்</u> Pukaikkoṭi tōṉṟutal **(comet)**

(1) **தீமை, அழிவு** - bad omen
'கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும் .. .. .. சூன்முதிர் கொண்மூப் பெயல்வளம் சுரப்ப' (சிலப்.10: 12-15)

<u>புட்பயில் பழுமரம்</u> Puṭpayil paḻumaram **(fruit tree with birds)**

(1) **பொலிவு / வளம்** - radiance / opulance
'புட்பயில் பழுமரம் பொலிவிற்று ஆகிய மட்டிலா வலநகர் வண்ணம் இன்னதே' (சீவக.93: 3-4)

<u>புண்</u> Puṇ **(wound)**

(1) **நோவு** - pain / hurt
'தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினால் சுட்ட வடு' (குறள். 129)

(2) **கல்வியின்மை** - illiteracy / uneducated
'கண் உடையார் என்பவர் கற்றோர் முகத்திரண்டு புண் உடையார் கல்லாதவர்' (குறள். 393)

<u>புண் உற்ற தீ</u> Puṇ uṟṟa tī **(fire in wound)**

(1) **துன்பம்** - suffer
'புண் உற்ற தீயின் புகை உற்று உயிர் பதைப்ப' (கம்ப.அயோ.385: 1)

<u>(ஆ) புண் திறந்ததில் எறி நுழைத்தல்</u> Puṇ tiṟantatil eṟI nuḻaittal (fire in open wound)
**துன்பம்**
'புண் திறந்ததில் எரி நுழைந்தாலெனப் புகைவாள்' (கம்ப.சுந்.340: 4)

<u>புண்களுள் எஃகெறிதல்</u> Puṇkaḷuḷ ekkeṟital **(spear in wound)**

(1) **துன்பம்** - affliction
'புண்களுள் எஃகெறிந்தது அனைய புன்சொலால்' (சூளா.1206: 3)

<u>(ஆ) புண்ணிடை அயில்</u> Puṇṇiṭai ayil (pierce wound with spear)
**துன்பம்** - pain
'விண்ணிடை அடைந்தனன் என்ற வெய்ய சொல் புண்ணிடை அயில் எனச் செவி புகாமுனம்' (கம்ப.அயோ.1114: 1-2)

<u>(இ) புண்ணில் கோள் இடுதல்</u> Puṇṇil kōḷ iṭutal (pierce wound with spear)

(2) **கொடுமை, துன்பம்**
'பெண்ணில் தீயோய் நின்முதல் மாயும்பிணி செய்தாய் புண்ணில் கோல் இட்டாலன சொல்லிப் பொது நோக்கால்' (கம்ப.சுந்.483: 2-3)

<u>புண்ணில் புளிப்பெய்தல்</u> Puṇṇil puḷipeytal **(pour tamarind in wound)**

(1) **கொடுமை, தீமை** – cruel, evil
'புண்ணில் புளிப்பெய்தால் ஒக்கும் தீமை' (நாலா.202: 5)

(2) **துன்பம்** - affliction
'புண்ணில் புளிப் பெய்தாற் போலப் புறம் நின்று அழகு பேசாதே' (நாலா.627: 3-4)

<u>புண் தோய்த்தெடுத்த பொருவேல்</u> Puṇ tōyttеṭutta poruvēl

(1) **சிவப்பு நிறம்**

'புண் தோய்த்தெடுத்த பொருவேலெனச் சேந்து நீண்ட கண் போன்ற' (சீவக.பதி.26: 1-2)

**புணர் துணையோடு ஆடும் பொறியலவன்** Puṇar tuṇaiyōṭu āṭum poriyalavan

(1) **இன்பம்** - pleasure
'புணர் துணையோடாடும் பொறியலவன் நோக்கி இணர்ததையும் பூங்கானல் என்னையு நோக்கி உணர்வொழியப் போன ஒலிதிரைநீர்ச் சேர்ப்பன்' (சிலப்.7.31)

**புத்தன்** Puttan **(Buddha)**

(1) **வள்ளன்மை** – bounty / liberality
'கண்கொடுத்தான் றடிகொடுத்தான் கயப்புலிக்குத் தற்கொடுத்தான் பெண்கொடுத்தான் உடம்பினையும் பிளந்திட்டுப் பிறர்க்கீந்தான் மண்கொடுத்தான் மகக்கொடுத்தான் மன்னுந்தற் சேர்ந்தார்க்கு விண்கொடுத்தான் அவன் கொடுத்த விரித்துரைப்பன் கேளென்றான்' (நீலகேசி.205)

**புத்தேள் நாடு** Puttēḷ nāṭu **(heaven)**

(1) **பெறற்கருமை** – rare / not easily got
'அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்' (குறு.101: 2)

(2) **இனிமை** – pleasing / pleasant
'இனிது எனப் படூஉம் புத்தேள் நாடே?' (குறு.288: 5)

(3) **புகழ்** - famous
'புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று இகழ்வார்பின் சென்று நிலை?' (குறள்.966)

(ஆ) **புத்தேள் உலகம்** Puttēḷ ulakam

(4) **அழகு, புகழ்** – beautiful, famous
'புத்தேள் உலகம் கவினிக் காண்வர, மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை' (மது.698-699)

(இ) **துறக்கம்** Tuṟakkam

(5) **குற்றமின்மை** - blemishless
'மறுஇல் துறக்கத்து அமரர் செல்வந்தன்' (பரி.5: 69)

(6) **சிறப்பு** - eminent
'நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை ஏறுதல் எளிதோ, வீறு பெறு துறக்கம்?' (பரி.15: 15-16)

(7) **உயர்வு / மேன்மை** – lofty / glorious
'விளைந்தார் வினையின் விழுப்பயன் துய்க்கும் துளங்கா விழுச்சீர்த் துறக்கம் புரையும்' (பரி.தி.1: 46-47)

**பெறற்கருமை** – not easily got
'பெறற்குஅருந் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்' (பெரும்.388)

(ஈ) **உயர்நிலை உலகம்** Uyarnilai ulakam

(8) **இன்பம்** - blizz
'உயர் நிலை உலகம் உறீஇயாங்கு, என் துயர் நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே' (கலி.139: 36-37)

**புகழ் / உயர்வு** - fame / lofty
'இவண் இசை உடையோர்க்கு அல்லது, அவணது உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை' (புறம்.50: 14-15)

(உ) **பொய்தீர் உலகம்** Poyfir ulakam

**பெறற்கருமை** – not easy to achieve
'பொய் தீர் உலகம் எடுத்த கொடிமிசை, மை அறு மண்டிலம் வேட்டனள்' (கலி.141: 11-12)

(ஊ) **அமரர் நாடு** Amarar nāṭu

(9) **பொலிவு** - radiant / bright
'குமரரும் மங்கைமாரும் குழுமலால் வழுவி விண்நின்று அமரர் நாடு இழிந்தது என்னப் பொலிந்தது அவ் அனீக வெள்ளம்' (கம்ப.பால.789: 3-4)

(எ) **உம்பருலகு** Umparulaku

**இன்பம்** – pleasure

'அம்பொன் நிலத்து ஏகுகுடி அகநகரம் அதுதான் உம்பருலகு ஒப்பது அதன்தன்மை சிறிது உரைப்பாம்' (சீவக.106: 3-4)

(ஒப்பு) Heaven, Overworld, Paradise இயக்கம், இன்பம், கடவுட்டன்மை, நிலைபேறு, பாவ விமோசனம், புனிதம், முழுமை, மெய்ப்பொருள், விழிப்புணர்வு.

**புதவி** Putavi

(1) கற்பு
'உலந்த நாளவர்க்குத் தோன்றாது ஒளிக்கு மீன் குளிக்கும் கற்பில் புலந்தவேல் நெடுங்கண் செவ்வாய் புதவிநாள் பயந்த நம்பி' (சீவக.2141: 1-2)

**புதுப்புனல்** (புதுவெள்ளம்) Putuppinal **(freshers)**

(1) நிலையற்றது - impermanent
'புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும் விதுப்புற நாடின் வேறல்ல புதுப்புனலும் மாரி அறவே அறுமே, அவரன்பும் வாரி அறவே அறும்' (நாலடி.370)

**புதுமணல் பரப்புதல்** Putumanal parapputal **(spreading new sand)**

(1) விழா, மகிழ்ச்சி - festival, joy
'விழவுமலி மூதூர் வீதியும் மன்றமும் பழமணன் மாற்றுமின் புதுமணல் பரப்புமின்' (மணி.1: 50-51)

**புல்** Pul **(grass)**

(1) பசுமை / மென்மை – green / soft
'அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர் திறம் புரி பசும் புல் பரப்பினர் கிடப்பி' (புறம்.93: 7-8)

(2) செழிப்பு - luxuriant
'ஆமா நெடுநிரை நன் புல் ஆர' (புறம்.117: 5)

(3) புன்மை – low / mean
'தன் அமர் காதலி புல் மேல் வைத்த இன் சிறு பிண்டம் யாங்கு உண்டனன் கொல்' (புறம்.234: 3-4)

(4) வளம் - lush
'விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே பசும்புல் தலைகாண்பு அரிது' (குறள்.16)

(5) நிலையாமை - unstable
'உற்றதற்கு எல்லாம் உரம் செய்ய வேண்டுமோ? கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக் காப்பமையும் நெற்செய்யப் புல்தேய்ந்தாற்போல நெடும்பகை தற் செய்யத் தானே கெடும்' (பழமொழி. 53)

(6) இகழ்ச்சி, சிறுமை / இழிவு - contempt, mean / despise
'ஒற்கந்தாம் உற்ற இடத்தும் உயர்ந்தவர் நிற்பவே நின்ற நிலையின்மேல் - வற்பத்தால் தன்மேல் நலியும் பசிபெரிது ஆயினும் புன்மேயா தாகும் புலி' (பழமொழி. 70)

(7) மென்மை - soft
'தூநறு மென்புல் அருந்தி விரும்பிய தூநீருண்டு' (பெரிய.14.10)

(ஆ) புல் உண்ணல் Pul unnal

(8) தோல்வி / நிலைதாழ்தல் – failure, defeat / downfall
'பகைவர் புல் ஆர்க!' (ஐங்.4:2)

(இ) புல் எடுத்தல் (புல்லைக் கௌவுதல்) Pul etuttal (eat grass)

(9) தோல்வி - failure / defeat
'எல் எடுத்த படை இந்திராதியர் உனக்கு இடைந்து உயிர் கொடு ஏகுவார் புல் எடுத்தவர்கள் அல்லம் வேறு சில போர் எடுத்து எதிர் புகுந்துளோம்' (கம்ப.யுத்.2017: 5-8)

(ஈ) புல்முடி Pulmuti (grass knot)

(10) அடையாளம் - mark
'பண்டு நற்கு அறியாப் புலம் பெயர் புதுவிர் சந்து நீவிப் புல் முடிந்து இடுமின்' (மலை.392-393)

(உ) <u>புல் நுனிமேல் நீர்</u> Pul nunImēl nīr (dew on tip of grass)

(11) **நிலையாமை** - unstable
'புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி இன்னினியே செய்க அறவினை' (நாலடி.29:1-2)

(ஊ) <u>புற்பனி</u> Purpani (dew on grass)

(12) **நிலையாமை, அழிவு** - transitory, destruction
'அறியாப் பருவத் தடங்காரோடு ஒன்றி நெறியல்ல செய்தொழுகி யவ்வும் நெறியறிந்த நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப் புற்பனிப் பற்றுவிட்டாங்கு' (நாலடி.171)

(எ) <u>புல் நுனை நீர்</u> Pul nunai nīr (water on grass tip)

(13) **அழிவு, நொய்மை** – fragile, ruin
'புல் நுனை நீரின் நொய்தாப் போதலே புரிந்து நின்ற' (கம்ப.ஆரண்.870: 1)

(ஏ) <u>புல் நுனைப் பனிநீர்</u> Pul nunaip paninīr

(14) **பொருட்டின்மை** – unmindful
'புல் நுனைப் பனிநீர் அன்ன மனிசரைப் பொருள் என்று உன்னி' (கம்ப.யுத்.1252:3)

**(ஒப்பு)** <u>Grass</u> **அன்பு, எளிமை, காதல் எண்ணங்கள், நிலையற்ற தன்மை, பணிவான பயன்பாடு.**

<u>**புல் நுனைப் பனி வெங்கதிர் காணல்**</u> Pul nunaip pani venkatir kāṇal

(1) **அழிவு / மறைவு, நிலையாமை** – destroy / disappear, transitory
'புல் நுனைப் பனி வெங்கதிர் கண்டாற் போலும் வாழ்க்கை பொருளிலை நாளும்' (சுந்.தேவா.186: 1-2)

(ஆ) <u>**வெங்கதிர் கண்ட புற்பனி**</u> Venkatir kanta purpanI

**அழிவு**
'வெற்பல் தோன்றிய வெங்கதிர் கண்டஅப் புற்பனிக் கெடுமாறது போலுமே' (திருநா.தேவா.2752: 3-4)

<u>**புல் மரம் புகைதல்**</u> Pul maram pukaital **(grass tree in smoke)**

(1) **வறட்சி** - drought
'புன்மரம் புகைய புகையழல் பொங்கி மன்னுயிர் மடிய மழைவளம் சுரத்தலின்' (மணி.11: 82-83)

<u>**புலி**</u> Puli **(tiger)**

(1) **கொலை வன்மை** - killer
'குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை' (நற்.36: 1)

(2) **வலிமை** - strength
'ஒண் கேழ் வயப் புலி படூஉம் நாடன்' (நற்.119: 3)

(3) **சினம்** - wrath
'இன் புனிற்று இடும்பை தீர, சினம் சிறந்து, செங் கண் இரும் புலிக் கோள் வல் ஏற்றை' (நற்.148: 9-10)

(4) **அஞ்சாமை** - fearless
'களிற்றுத் துப்பு அஞ்சாப் புலி அதள் இதணத்து' (நற்.351: 7)

(5) **வீரம்** – valom, brave
'மறப் புலிக் குருளை கோள்இடம் கரக்கும்' (குறு.209: 2)

(6) **ஆற்றல், வலிமை** – power, strength
'மறம் கொள் இரும் புலித் தொல் முரண் தொலைத்த' (கலி.42.1)

(7) **வெற்றி** - victory
'வேங்கை அம் சினை என விறற் புலி முற்றியும்' (கலி.46: 5)

(8) **சிறப்பு** - eminence
'கிடந்துயிர் மறுகுவ தாயினும் இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த தாழ்வில் உள்ளம் தலைத்தலைச் சிறப்ப' (அகம்.29: 2-4)

(9) **செருக்கு** – hanghty / anogant
'மதர் புலி வெரீஇய மையல் வேழத்து' (அகம்.39: 11)

(10) **பகை** - enmity

'புலிப் பகை வென்ற புண் கூர் யானை' (அகம்.202: 3)

(11) **தலைமை** – leadership / headship
'புலி மருள் செம்மல் நோக்கி' (அகம்.259: 17)

(12) **அச்சம்** - fearful
'அரவும் புலியும் அஞ்சுதகவு உடையா' (அகம்.318: 3)

(13) **உறுதி** - firm
'புலி பசித்தன்ன மெலிவு இல் உள்ளத்து' (புறம்.190: 10)

(14) **ஆண்மை** - manly
'புலிப் போத்து அன்ன, புல் அணற் காளை' (பெரும்.138)

(15) **வீரம் / ஆளுமை** – brave / dominance
'வயக் களிறு பார்க்கும் வயப் புலி போல, துஞ்சாக் கண்ணர், அஞ்சாக் கொள்கையர், அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர், செறிந்த நூல் வழிப் பிழையா நுணங்கு நுண் தேர்ச்சி, ஊர் காப்பாளர், ஊக்கருங் கணையினர்' (மது.643-647)

(16) **வன்மை** – forceful / vehement
'வலி இல் நிலைமையான் வல் உருவம் பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று' (குறள்.273)

(17) **உயர்வு / புகழ்ச்சி** - lofty / praise worthy
'.. .. .. .. .. அடுப்பின் கடை முடங்கும் . நாயைப் புலியாம் எனல்' (பழமொழி.67: 3-4)

(18) **நிலைதாழாமை/ கொள்கைப்பிடிப்பு** – not degrade / of principles
'ஒற்கந்தாம் உற்ற இடத்தும் உயர்ந்தவர் நிற்பவே நின்ற நிலையின்மேல் - வற்பத்தால் தன்மேல் நலியும் பசிபெரிது ஆயினும் புன்மேயா தாகும் புலி' (பழமொழி. 70)

(19) **பகைத்திறம், தீயவர் / தீமை** – enemy / the evil, harmful
'கண்ணில் கயவர் கருத்துணர்ந்து கைமிக நண்ணி அவர்க்கு நலனுடைய செய்பவேல் எண்ணி இடர்வரும் என்னார் புலிமுகத்(து) உண்ணி பறித்து விடல்' (பழமொழி.109)

(20) **பேராற்றல் / வலிமை** – prowess / strength
'தீயன வல்ல செயினும் திறல்வேந்தன் காய்வன சிந்தியார் கற்றறிந்தார் - பாயும் புலிமுன்னம் புல்வாய்க்குப் போக்கில் அதுவே வளிமுன்னர் வைப்பாரம் இல்' (பழமொழி. 265)

(21) **கொடுமை, துன்பம்** – cruel, distress
'ஒடுங்கி அரவு உறையும் இல் இன்னா; இன்னா கடும்புலி வாழும் அதர்' (இன்னா.30: 3-4)

(ஆ) <u>புலி நோக்கு</u> Puli nōkku

(22) **கூரிய பார்வை** – sharp sight
'வலி முன்பின், வல்லென்ற யாக்கை, புலி நோக்கின் .. .. .. ... அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் தாம்' (கலி.4.1-3)

(இ) <u>புலிப் பல் தாலி</u> Pulip pal tāli (necklace in the tiger tooth)

(23) **வீரம், மேன்மை** – bravery, eminence
'புலிப் பல் கோத்த புலம்பு மணித் தாலி' (அகம்.7: 18)

(ஈ) <u>வேங்கை</u> Veṅkai

(24) **வலிமை, கொள்கை** - strength, principles
'கடமா தொலைச்சிய கானுறை வேங்கை இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்;- இடமுடைய வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர், மானம் மழுங்க வரின்' (நாலடி. 300)

**வெற்றி**
'விறல் வேங்கையின் தோல் உடையவனே' (திருவா.6: 1: 4-5)

(உ) <u>கொடுவரி</u> Koṭuvari

**கொலை, கொடுமை, வெற்றி** - killing, cruel, victory
'கோள்வல் கொடுவரி நல்வயமாக் குழுமும் தாள்வீ பதுக்கைய கானமிறந்தார் கொலாள் வினையினாற்ற அகன்றவா நன்றுணரா மீளிகொள் மொய்ம்பினவர்' (ஐந்.எழு.36)

(எ) **புண்டரிகம்** Puṇṭarikam

(25) **சோழர்** - totem of Cola kings
'புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும் தண் தரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்' (பெரிய.606: 1-4)

(ஏ) **புலியேறு** Puliyēṟu

(26) **வெற்றி** - victory
'வென்றடு புலியே றென்ன அமர் விளையாட்டில் மிக்கார்' (பெரிய.424: 718)

(ஐ) **பொறிப்படு வேங்கை** Poṟippaṭu vēṅkai (spotted tiger)

(27) **குறிக்கோள்** – of principles
'பொறிப்படு வேங்கையின் குறிப்பிலர் குரங்கவும்' (பெருங்.உஞ்.46: 35)

(ஒ) **வரிவேங்கை** Varivēṅkai(tiger)

**கொடுமை** - cruelity
'சேதுபதி காத்தமுத்து ராமலிங்க துரைராசர் சிங்க மந்திரி மாதுபதி முத்திருளப்பன் கொடிய வரிவேங்கை' (தனிப்.644: 1-2)

(ஒப்பு) Tiger **ஆண்மை, ஆற்றல், செயல்பாட்டுத் தன்மை, திடம், துணிவு, நன்மை, நிலைபேறு, பகுத்தறிவு, புத்துணர்வு, பேரார்வம், மன உரம், வலிமை, வளமை, விவேகம்; அடங்காப் பசி, ஏமாற்றுதல், கோபம், தந்திரம், பொய்மை, பொறாமை, வஞ்சகம், வெறியுணர்ச்சி.**

## புழு Puḻu (worm)

(1) **தீமை** – evil, vile
'நாணார் பரியார் நயனில செய்தொழுகும் பேணா அறிவிலா மாக்களைப் பேணி ஒழுக்கி அவரோ டுடனுறை செய்தல் புழுப்பெய்து புண்பொதியு மாறு' (பழமொழி. 113)

(2) **அற்பம், வலிமையின்மை** – mean, strenghtless
'மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர் வலியர் என்றாய்' (கம்ப.ஆரண்.867: 2)

(3) **தாழ்வு / இழிவு** - low, inferior
'புழுவினும் கடையேன் புனிதன் தமர்' (திருநா.தேவா.2671: 3)

(ஆ) **என்பில் அது** (புழு) Enpil atu

(4) **உறுதியின்மை / அன்பின்மை** – without firmness, loveless
'என்பி லதனை வெயில்போலக் காயுமே அன்பி லதனை அறம்' (குறள்.77)

(இ) **கீடம்** Kiṭam

(5) **கோட்பாடின்மை** – without principles
'குலத்தினில் பிறந்திலை கோள் இல் கீடம்போல் நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய் அரோ' (கம்ப.யுத்.3957: 3-4)

(ஒப்பு) Worm **இரகசியம், உளச்சான்று; இழிவு, இகழ்ச்சி, இறப்பு, சூது, நயவஞ்சகமாக அழிப்பவர், வலிமையின்மை.**

## புள் Puḷ (bird)

(1) **விரைவு** - quickness / speed
'புள்ளு நிமிர்ந்தன்ன பொலம் படைக் கலி மா' (நற்.78: 9)

(2) **உயிர்** - breath / soul
'.. .. .. .. என் உயிர் விலங்கு வெங் கடு வளி எடுப்பத் துளங்கு மரப் புள்ளின் துறக்கும் பொழுதே?' (அகம்.71: 16-18)

(3) **நன்மை** – good omen
'புள்ளுப் புணர்ந்து இனிய ஆக' (அகம்.136: 3)

(4) **துன்பம்** - distress
'பழனுடைப் பெரு மரம் தீர்ந்தென, கையற்று, பெறாது பெயரும் புள்ளினம் போல' (புறம்.209: 9-10)

(5) **காலம் / விடியல்** –time / dawn
'நல் இருள் விடியல் புள் எழப் போகி' (பெரும்.155)

(6) **முன்னறிவிப்பு** – foretell / predict
*'புண்கிடந்த புண்மேல் நுன் நீத்து ஒழுகி வாழினும்'* (திணைமாலை.149:1)

(ஆ) <u>புள்குரல்</u> Puḷkural

(6) **நன்னிமித்தம்** – good omen
*'அணங்குடை முந்நீர் பரந்த செறுவின் உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம் குடபுல மருங்கின் உய்ம்மார், புள்ஓர்த்துப் படை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்'* (அகம்.207: 1-4)

(7) **நன்மை** – good omen
*'சேறல் வலியாச் செய்கை நோக்கி வாய்ச்சிறு புதுப்புள் வீச்சுறு விழுக்குரல் கேட்டுப் பொருள் தெரியுமோர் வேட்டுவ முதுமகன் பெருமகன் என்னப் பெறல் அரும் கலத்தோடு ஒருமகன் உளவழி எதிர்த்தும் அம்மகன் நடுங்குதுயர் உறுத்தும் கடுங்கண் ஆண்மையன்'* (பெருங்.உஞ்.55: 88-93)

(8) **நன்மை / தீமை** – good / evil omen
*'கனவு மந்திரம் சிந்தனை வாழுநாள் வினவு சோதிடம் கேட்டு உரை புட்குரல் அனகள் யாவையும் என்னைநின் பூதங்கள் அனகொல் நீஇங்கு அறிந்தனை சொல்லென'* (நீலகேசி.885)

(இ) <u>புதுப்புள் வருதல், பழம்புள் போகுதல்</u> Putuppuḷ varutal, paḻampuḷ pōkutal

(9) **தீமை** - evil
*'புதுப்புள் வரினும் பழம்புள் போகினும் விதுப்புறவு அறியா ஏமக் காப்பினை'* (புறம்.20: 18-19)

(ஈ) <u>புட்பகை</u> Puṭpakai (bird omen)

(10) **இறப்பு** - death
*'உட்பகை ஒருதிறம் பட்டெனப் புட்பகைக்கு ஏவா னாகலிற் சாவேம் யாமென'* (புறம்.68: 11-12)

(உ) <u>தூவியொழி புள்</u> Tūviyoḻi puḷ (moulting bird)

(11) **துயர்** - sorrow
*'தூவி ஒழி புள்ளில் தோன்றித் துயருழப்ப'* (சீவக.1575: 3)

(ஊ) <u>பறவைகளின் ஒலி</u>
Paṟavaikaḷiṉ oli (twittering of birds)

(12) **வளம்** – opulence / richness
*'கம்புள் கோழியும் கனைகுரல் நாரையும் செங்கால் அன்னமும் பைங்கால் கொக்கும் கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும் உள்ளு மூரலும் புள்ளும் புதாவும் வெல்போர் வேந்தர் முனையிடம் போலப் பல்வேறு குழூஉக்குரல் பரந்த ஓதையும்'* (சிலப்.10: 114-119)

(எ) <u>பறவை நிமித்தம்</u> Paṟavai nimittam (bird omen)

(13) **துன்பம், தீமை** – affliction, evil
*'வடிமலர்க் காவின் அன்று வண் தளிர்ப் பிண்டி நீழல் முடி பொருள் பறவை கூற முற்றிழை நின்னை நோக்கிக் கடியதோர் கௌவை செய்யும் கட்டையிற் றரவின் என்றேன் கொடியனாய் பிழைப்புக் கூறேல் குழையல் என்று எடுத்துக் கொண்டாள்'* (சீவக.1396)

(ஏ) <u>புள்ளு நிமித்தம்</u> Puḷḷu nimittam

(14) **தீமை, தடை, இறப்பு** – harm / obstacle / death
*'புள்ளு நிமித்தமும் பொல்லா ஆக'* (பெருங்.மகத.27: 79)

(ஐ) <u>புள்ளினுரை</u> Puḷḷiṉurai
**தீமை** - evil
*'தெள்ளி நரைத்துத் தெருளாதுறு தீமை செய்யும் புள்ளின் உரையும் பொருளாம் எனக் கோடலினால்'* (நீலகேசி.7: 1-2)

(ஒப்பு) <u>Bird</u> **அன்பு, ஆன்மீக மயமாக்குதல், உயர்வு, எண்ணங்கள், காலம், காற்று, சுதந்திரம், தூய்மை, தூதுவர், தெய்வீகச்சாரம், நிலைபேறு,**

நெருப்பு, படைப்பு, பருவம், பெண்மைக் கொள்கை, முன்னறிதிறம், வலிமை, வளமை, வாழ்வு, விடியல், விரைவு; கழிகாமம், பித்து பிடித்த நிலை, வஞ்சனை.
கூண்டுப்பறவை - சுதந்திரம், வீடுபேற்றிற்கான ஆர்வம்.
இடமிருந்து வலமாகப் பறத்தல் - தோல்வி.
வீட்டுனுள் பறத்தல் - இறப்பு.
சிவப்பு நிறப்பறவை - தென்திசை.
நீல நிறப்பறவை - இயலாத நிலை, கருத்துக்களின் இணைவு.
கறுப்பு நிறப்பறவை - அறிவாற்றல்.

<u>புளியம் பழம்</u> Puḷiyam paḻam **(tamarind)**

(1) **இழிவு** - lowness / inferior
*'அளிபுண் அகத்துப் புறந்தோல் மூடி அடியேன் உடை ஆக்கை புளியம் பழம் ஒத்து இருந்தேன் இருந்தும் விடையாய் பொடி ஆடி'* (திருவா.25: 5: 1-4)

<u>புற்றம்</u> Puṟṟam **(mound)**

(1) **வளம்** - fertille
*'இரை தேர் எண்கின் பகுவாய் ஏற்றை, கொடு வரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி'* (நற்.125: 1-2)

(ஆ) <u>அரவு உறை புற்றம்</u> Aravu uṟai puṟṟam

(2) **வன்மை** – might / ability
*'நல் அரா உறையும் புற்றம் போலவும், .. .. .. .. மாற்று அருந் துப்பின் மாற்றோர்'*
(புறம்.309: 3-5)

(3) **துன்பம், அச்சம்** – affliction, fear
*'அரவு உறை புற்றத்து அற்றே - நாளும் புரவலர் புன்கண் நோக்காது, இரவலர்க்கு அருகாது ஈயும் வண்மை, உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரே'* (புறம்.329: 6-9)

<u>புறப்புண்</u> Puṟappuṇ **(wound on the back)**

(1) **அவமானம்** – dishonour, shame
*'தன்போல் வேந்தன் முன்புகுறித்து எறிந்த புறப்புண் நாணி .. .. .. ..'* (புறம்.65: 9-10)

<u>புறவு</u> Puṟavu **(dove / pigeon)**

(1) **புன்மை** – mean / low
*'சிறுபுன் புறவொடு சிற்றெழால் சிறு நெறியரு நீள்சுரத்து அல்குவர் கொல் தோழி!'* (திணை.ஐம்.15: 1-2)

(2) **அழகு** - beautiful
*'கோலப் புறவின் குரற்கூவிப் புட்சிமிழ்த்தோன்'* (இன்னிலை.3:1)

<u>புனல்</u> Puṉal **(water / flood)**

(1) **இனிமை** - sweet
*'ஆங்கண் தீம் புனல் ஈங்கண் பரக்கும்'* (நற்.70: 7)

(2) **தண்மை** - cool
*'புது வறங்கூர்ந்த செறுவில் தண்ணென மலி புனல் பரத்தந்தாஅங்கு, இனிதே தெய்ய'* (நற்.230: 8-10)

(3) **காமம்** - passion
*'சிறை அடு கடும் புனல் அன்ன, என் நிறை அடு காமம் நீந்துமாறே'* (நற்.369: 10-11)

(4) **ஒழுக்கு / இயக்கம்** – flow / move
*'புனலூடு போவது ஓர் பூ மாலை கொண்டை'* (பரி.தி.2: 51)

(5) **அழகு / விரைவு** - beautiful, fast
*'காமர் கடும் புனல் கலந்து எம்மோடு ஆடுவாள்'* (கலி.39: 1)

(6) **பொதுமை** - common
*'வேனிற் புனல் அன்ன நுந்தையை நோவார் யார்?'* (கலி.85: 38)

(7) **வண்மை** - bountiful
*'வண் புனல் தொழுநை வார் மணல் அகன் துறை'* (அகம்.59: 4)

(8) **விரைவு** - fast
*'கல்லா யானை கடி புனல் கற்றென'* (அகம்.376: 2)

(9) **அழிவு** - destroying
*'கொல் புனல் சிறையின் விலங்கியோன் கல்லே'* (புறம்.263: 8)

(10) **வளமை** - fertile
*'பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து'* (புறம்.367: 5)

(11) **தூய்மை** - pure
'மாசு போக புனல் படிந்தும்' (பட்.100)
**இயக்கம்** – movement / active
'இயங்கு புனல் கொழித்த வெண் தலைக் குவவு மணல்' (மது.336)

(ஆ) **நீர்** Nir

(12) **இடம்பெயர்வு** - move / migrate
'நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்' (நற்.291: 1)

(13) **நன்மை** - goodness
'நீர் அன நிலையன்; பேர் அன்பினன் என' (நற்.347: 8)

(14) **அளவின்மை** - unfathomable
'.. .. .. .. விரிநீர் வையக வரையளவு இறந்த' (நற்.130: 10-11)
**இனிமை** - sweet
'விருந்தின் தீம் நீர் மருந்தும் ஆகும்' (நற்.53: 8)
**தூய்மை** - pure
'மா நிலம் சேவடி ஆக, தூ நீர்' (நற்.கட.வா: 1)

(15) **இன்றியமையாமை** - necessary
'நீர் இன்று அமையா உலகம் போல' (நற்.1: 6)

(16) **வலிமை** - strength
'ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!' (நற்.15: 3)
**வளமை** - fertile
'நீர் அற வறந்த நிரம்பா நீள் இடை' (நற்.99: 1)
**தண்மை / குளிர்ச்சி** - cool
'நீர் அடு நெருப்பின் தணிய' (நற்.154: 9)

(17) **அன்பு** - love
'செம்புலப் பெயனீர் போல அன்புடை நெஞ்சம் தாங்கலந்தனவே' (குறு.40: 4-5)

(18) **இரக்கம்** - sympathy
'ஈரம் உடைமையின், நீர் ஓரனையை' (பதி.90: 14)
**விரைவு / இயக்கம்** – speed / moving
'நீர் துனைந்தன்ன செலவின்' (பதி.தி.1: 9)
**தண்மை, அழகு** – cool, beauty
'தோற்றமும் அகலமும் நீரினுள' (பரி.4: 29)

(19) **தலைவன்** – hero
'ஓர் இரா வைகலுள், தாமரைப் பொய்கையுள் நீர் நீத்த மலர் போல, நீ நீப்பின், வாழ்வாளோ?' (கலி.5: 14-15)

(20) **தன்னியல்பின்மை / சாரியல்பு** – quality, dependence
'நிலத்து இயல்பான் நீர் திரிந்து, அற்று ஆகும்' (குறள்.452)

(21) **கலத்தல்** – mix / mingle
'புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ நிலத்தொடு நீர் இயைந்தன்னாரகத்து' (குறள்.1343)

(23) **சிறியார்** - lowly
'பாலோடு அளாயநீர் பாலாகும் அல்லது நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம் தேரின் சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல பெரியார் பெருமையைச் சார்ந்து' (நாலடி.177)

(24) **பயன்** - usefulness
'நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கும் உண்டு' (நாலடி.221: 3-4)

(25) **மென்மை** – smooth / quiet
'சொல்லான் அறிப ஒருவனை - மெல்லென்ற நீரான் அறிப மடுவினை' (நான்.80: 1-2)

(26) **செழிப்பு** - luxuriant
'நீரான் வீறெய்தும் விளைநிலம்' (நான்.80: 1)

(27) **வழிபாடு** - worship
'கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்' (திணைமாலை.10:1-2)

(28) **பொறை** - patience
'பொறை எனும் நீரைப் பாய்ச்சி' (திருநா.தேவா.2921: 4)

(29) **அழிவின்மை** – non extinct
'நிலனும் நீரும் மாய் நெருப்பும் காற்றும் என்று உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்' (கம்ப.கிட்.116: 1-2)

(30) **ஒழுக்கம்** – good conduct
'சீர்கெழு நிலத்து வித்திச் சீலநீர் கொடுப்பிற்றீந்தேன்' (சீவக.2632: 2)

(31) **மாண்பு** - nobility
'மாட்சி நீரின் மாண்சினை பல்கிய வேட்கை என்னும் விழுத்தகு பெருமரம் புணர்ச்சிப் பல்பூ இணர்த்தொகை ஈன்று

புனல்

நோயி லின்பக் காய் பல தூங்கியாழ வற்புக்கனி யூழறிந் தேந்த' (பெருங்.வத்.9: 73-77)

(இ) <u>நீர் வேட்கை</u> Nīr vēṭkai

(32) **எதிர்நோக்கும் நிறைவு** - expect satisfaction
*'நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை'* (நற்.171: 1)

(33) **இன்றியமையாமை** - necessary
*'குவளை குறுநர் நீர் வேட்டாங்கு'* (நற்.332: 2)

(ஈ) <u>நீராடுதல்</u> Nīrāṭutal

(34) **உவகை / தூய்மை** - happiness pure
பொங்கி வரு புதுநீர் நெஞ்சு உண ஆடுகம்' (நற்.68: 5)

(35) **முயக்கம்** - embrase
*'கடும் புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று நெடுஞ் சுழி நீத்தம் மண்ணுநர் போல, நடுங்கு அஞர் தீர முயங்கி'* (அகம்.62: 9-11)

(உ) <u>நீர் இயல்பு மாறல்</u> Nīr iyalpu māṟal (change in water quality)

(36) **அரிய தன்மை / இயல்பின்மை** - rare / unnatural
*'.. .. .. .. நீர்த்தீப் பிறழினும்'* (குறு.373: 1)

(ஊ) <u>அறல்</u> Aṟal

(37) **தெளிவு** - clear
*'தேம் படு சிலம்பில் தெள் அறல் தழீஇய'* (நற்.243: 1)
**தண்மை** - cool
*'வேய் பயில் இறும்பின் ஆம் அறல் பருகும்'* (நற்.213: 5)
**வளம்** - fertile
*'மலைகழிந் தன்ன மாக்கால் மயங்குஅறல், பதவுமேயல் அருந்து துளங்குஇமில் நல் ஏறு, மதவுடை நாக்கொடு அசைவீடப் பருகி'* (அகம்.341: 6)

(ஏ) <u>கழித்தலைப்பட்ட நீர்</u> Kaḻittalaippaṭṭa nīr (whirl pool)

(37) **சுழற்சி** - whirl
*'கழித்தலைப் பட்ட நீரது போலச் சுழல்கின்றேன் சுழல்கின்றதென் உள்ளம்'* (சுந்.தேவா.692: 3-4)

(ஐ) <u>சிறையழி புனல்</u> Ciṟaiyaḻi puṉal (flood)

(39) **விரைவு** - quick, fast
*'ஏற்றோர்த் தாக்கிக் கூற்றுறை உலகினுள் உறைகுவிர் ஆயிற் குறுகுமின் விரைந்தெனச் சிறையழி புனலிற் சென்றுமேல் நெருங்கி'* (பெருங்.உஞ்.46: 14-16)

(ஒ) <u>உவர்த்த நீர்</u> Uvartta nīr

(40) **பயனின்மை** – useless / unworthy
*'உவர்த்த நீர் போல எந்தன் உற்றவர்க்கு ஒன்றும் அல்லேன்'* (நாலா.902: 3-4)

(ஓ) <u>நீர்ப்படுத்தல்</u> Nīrppaṭuttal

(41) **தூய்மை, சின நீக்கம்** – pure, appease anger
*'நயந்த கொள்கையில் கங்கைப்பேர் யாற்றிருந்து நங்கை தன்னை நீர்ப்படுத்தி வெஞ்சினந் தரு வெம்மை நீங்கி வஞ்சிமா நகர் புகுந்து'* (சிலப்.29.1)

(ஔ) <u>யாற்று நீர்</u> Yāṟṟu nīr

(42) **துன்பம்** – pine / suffer
*'உழந்தாலும் புத்தச்சொன் றிட்டூர்த றேற்றா திழந்தார் பலரால் இடும்பை நீர் யாற்றுள்'* (சீவக.2621: 1-2)

(ஒப்பு) <u>Water</u> **அமைதி, அழகு, அறிவுத்திறன், ஆழம், ஆன்மா, இளமையின் புத்துணர்வு, இறைமை, இன்றியமையாமை, ஈரம், உயர்வான தகுதி, உள்ளுணர்வு சார்ந்த விவேகம், ஊடுருவும் தன்மை, எல்லையற்ற தன்மை, ஒழுக்கம், கடந்து செல் நிலை, கருணை, கரைவு, கற்பு, குளிர்காலம், குளிர்ச்சி, தகுதி, தூண்டுதல், தெய்வீக வாழ்க்கை, நிலைபேறு, நினைவாற்றல், நெகிழ்வுத்திறன், நேர்மை, படிவாக்கம், படைப்பு, பண்பு**

குறித்த விவேகம், பதங்கமாதல், புண்ணியம், புதுமைப்படுத்தல், புனிதத்தன்மை, பெண்மைக் கொள்கை, பெரும்பரப்பு, மகிழ்ச்சி, மயக்கம், மறுபிறப்பு, மறைவு, மும்மை, மெய்ந்நடப்பு, வடக்குத்திசை, வலிமை, வளமை, வாணிகம், விளைவளம், விழிப்பு; அமைப்பற்ற தோற்றம், அழிவு, ஆழங்காண முடியாத நிலை, நம்பிக்கையற்ற தன்மை, நிலையாமை, வலிமையற்ற தன்மை, வேதனை.

நீராடுதல் / நீராட்டுதல் - ஒய்வு, கரைவு, தூய்மைப்படுத்துதல், தொடக்கம், பாதுகாப்பு, மென்மை, வாழ்வின் மூலம்.

<u>புனிதனோடு காப்பு நாண் கட்டுதல்</u>

Pun̲itan̲ōṭu kāppu nāṇ kaṭṭutal **(tie the band of protection)**

(1) **திருமணம்** - wedding
*'நால் திசைத் தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கி பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்து ஏத்தி பூப் புனை கண்ணிப் புனிதனோடு என்தன்னைக் காப்பு நாண் கட்டக் கனாக் கண்டேன்'* (நாலா.559)

## பூ Pū (flower)

(1) **அழகு, நறுமணம்** – beauty, fragrance
*'புறவு அணி கொண்ட பூ நாறு கடத்திடை'* (நற்.48: 5)

(2) **பொலிவு** - dazzling / bright
*'பூ இல் வறுந்தலை போல'* (குறு.19: 2)

(3) **ஒளி, நறுமணம்** – bright, fragrance
*'நாற்றமும் ஒண்மையும் பூவையுள'* (பரி.4: 29)

(4) **உயர்வு** - lofty
*'பூ மேம்பாடு உற்ற புனை சுரும்பின்'* (பரி.10: 36)

(5) **இன்பம்** - pleasure
*'பொய்கைப் பூப் புதிது உண்ட வரி வண்டு கழிப் பூத்த நெய்தல் தாது அமர்ந்து ஆடி'* (கலி.74: 1-2)

(6) **நிலையாமை / பலி** - transcient / sacrifice
*'பூப் பலி விட்ட கடவுளைக் கண்டாயோ?'* (கலி.93: 24)

(7) **வளம்** - fertile
*'பொரு கரை வாய் சூழ்ந்த பூ மலி வையை'* (கலி.98: 10)

(8) **மென்மை** - softness
*'நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை'* (அகம்.93: 13)

(9) **இனிமை, இன்பம்** – delightful, enjoyment
*'மலைதற்கு இனிய பூவும் காட்டி'* (மலை.283)

(10) **புணர்ச்சி**
*'மாட்சி நீரின் மாண்சினை பல்கிய வேட்கை என்னும் விழுத்தகு பெருமரம் புணர்ச்சிப் பல்பூ இணர்த்தொகை ஈன்று நோயி லின்பக் காய் பல தூங்கியாழ வற்புக்கனி யூழறிந் தேந்த'* (பெருங்.வத்.9: 73-77)

(ஆ) <u>வாடிய பூ</u> Vāṭiya pū (withered flower)

(11) **அன்பின்மை, பொய்யான அன்பு, போலித்தனம்** – loveless, untrue love, fake
*'வாடிய பூவொடு வாரல் எம் மனை?'* (கலி.75: 18)

(12) **வீண்** – waste, useless
*'புது நலம் பூ வாடியற்று, தாம் வீழ்வார் மதி மருள நீத்தக்கடை'* (கலி.147: 15-16)

(இ) <u>சூடிக் கழித்த பூ</u> Cūṭik kal̲itta pū (used flower)

(13) **பயனின்மை, வீண்** – waste, futile
*'கூடினர் புரிந்து குணன் உணப்பட்டோர் சூடினர் இட்ட பூ ஒரன்னர்'* (கலி.23: 12-13)

(ஈ) <u>செம் பூ</u> Cem pū (good flower)

(14) **இறைமை** - devine
*'செம் பூத் தூஉய செதுக்குடை முன்றில்'* (பெரும்.338)

(உ) <u>கோட்டுப் பூ</u> Kōṭṭup pū (tree flower)

(15) **நட்பு** – friendship

'கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி' (நாலடி.215: 1-2)

(ஊ) <u>கயப்பூ</u> Kayappū (pond (water) flower)

(16) **பொருந்தா நட்பு** – improper friendship
'கயப்பூப் போல மலர்ந்துபின் கூம்புவாரை நயப்பாரும் நட்பாரும் இல்' (நாலடி.215: 3-4)

(எ) <u>மலர்</u> Malar (blossom)

(17) **நிலையாமை / அழிவு** - unpermanent / destruction
'மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய' (நற்.73: 3)
**நறுமணம்** - fragrance
'பல் மலர் கஞலிய வெறி கமழ் வேலி' (நற்.339: 10)
**இன்பம்** - pleasure
'மயங்கு மலர்க் கோதை குழைய மகிழ்நன்' (குறு.393: 1)
**வளமை** - fertile
'வண் துறை நயவரும் வள மலர்ப் பொய்கை' (ஐங்.88: 1)

(18) **வதுவை** - marriage
'நல் மனை வதுவை அயர, இவள் பின் இருங் கூந்தல் மலர் அணிந்தோயே!' (ஐங்.294: 4-5)

(19) **தண்மை** - cool
'அதிர் பெயற்கு எதிரிய சிதர்கொள் தண் மலர்' (ஐங்.458: 2)
**அழகு** - beautiful
'புதல்மிசை நறு மலர் கவின் பெறத் தொடரி' (ஐங்.463: 1)
**மென்மை** - soft
'மாறு மென் மலரும், தாரும் கோதையும்' (பரி.6: 46)

(20) **தூய்மை** - pure
'துரந்து புனல் தூவ, தூ மலர்க் கண்கள்' (பரி.7: 52)

(21) **கடவுளர் இருக்கை** - devine existence / sacred
'மலர்மிசை முதல்வனும், .. .. ..' (பரி.8: 3)

(22) **பெண்(மை), தலைவி** - feminity, heroine
'ஓர் இரா வைகலுள், தாமரைப் பொய்கையுள் நீர் நீத்த மலர் போல, நீ நீப்பின், வாழ்வாளோ?' (கலி.5: 14-15)

(23) **உள்ளம்** - heart
'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ் வார்' (குறள்.3)

(24) **காமம்** - passion
'காலை அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி மாலை மலரும் இந் நோய்' (குறள்.1227)
**தூய்மை, மென்மை** – pure, soft / tender
'ஒப்புயர்வில் வேட்டோ ெனாருநிலைப்பட் டாழ்ந்தசெயல் நப்பின்னை ஞால மொருங்கறிக-துப்பாராய்த் தூமலரின் மென்மையுறு தோற்றத்தே வைத்துய்க்க ஏமக் கிழத்தி யறிந்து' (இன்னிலை.22)

(25) **புண்ணியம்** - merit
'தையற் குறுவது தானறிந்தனள் போல் புண்ணிய நறுமலர் ஆடை போர்த்து' (சிலப்.13: 171-172)

(26) **விரிவு, பரப்பு** – wide, expance
'வாடா வளத்தான் மலர்ஞால மதிப்பின் மிக்க' (நீலகேசி.11: 1)

(ஏ) <u>நீர்மலர்</u> Nirmalar (water flower)

**உயர்வு** - high
'வெள்ளத்து அனைய மலர்நீட்டம் - மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு' (குறள்.595)

(27) **அளவு** - measure
'இரவலர் தம்வரிசை யென்பார் மடவார் கரவலராய்க் கைவண்மை பூண்ட - புரவலர் சீர்வரைய வாகுமாம் செய்கை சிறந்தனைத்தும் நீர்வரைய வாநீர் மலர்' (பழமொழி. 379)

(ஐ) <u>நாறா மலர்</u> Nāṟā malar (flower without fragrance)

(28) **பயனின்மை** – incapacity, waste
'இணர் ஊழ்த்தும் நாறா மலரனையர் கற்றது உணர விரித்து உரையாதார்' (குறள்.650)

(29) **துன்பம்** – affliction

'நறிய மலர் பெரிது நாறாமை இன்னா' (இன்னா.37: 1)

(ஒ) <u>நாற்றம் இலாத மலர் அழகு</u>
Nāṟṟam ilāta malar

(30) **சிறப்பின்மை** – not eminent
'நாற்றம் இலாத மலரின் அழகின்னா' (இன்னா.7)

(ஓ) <u>பொன்மலர்</u> Poṉmalar (golden flower)
**சிறப்பு, அழகு** – eminence, beauty
'இன்ப வியலோரார் யாணர் விழைகாமம் பொன்னின் அணிமலரிற் செவ்விதாம்' (இன்னிலை.25: 1-2)

(ஔ) <u>மலர் கொடுத்தல்</u> Malar koṭuttal (give flower)

(31) **அன்பு** - love
'கைவயிற் கொண்ட கழுநீர் நறும்போது கொய்மலர்க் கண்ணி கொடுப்போள் போலக் கனவில் தோன்ற கண்படை இன்றி நனவில் தோன்றிய நறுநுதல் சீறடி மைவளர் கண்ணியை எய்தும் வாயில் யாதுகொல் என்றுதன் அகத்தே நினைஇ' (பெருங்.மகத.7: 63-68)

(க) <u>செப்பின் உள்ளே வைக்கப்பட்ட மலர்</u> Ceppiṉ uḷḷē vaikkappaṭṭa malar (flower in box)

(32) **வாடிய தன்மை** - withering
'வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போல் தகைநலம் வாடி மலர்வனம் புகூஉம்' (மணி.4: 65-66)

(ங) <u>செம்மலர்</u> Cemmalar (good / red flower)

(33) **செழுமை, புனிதம்** – floverish / holy
'பலிகெழு செம்மலர் சார' (திருஞான.தேவா.499: 1)

(ச) <u>பள்ளித்தாமம்</u> (பூக்கள்)
Paḷḷittāmam

**தூய்மை, நறுமணம்** – pure, fragrant
'தூநறும் பள்ளித் தாமம் குஞ்சி மேல் துதையக் கொண்டார்' (பெரிய.3819: 5)

(ஞ) <u>பொய்யா மலர்</u> (பழம்பூ)
Poyyā malar

(34) **பொலிவின்மை** – not bright / without radiance
'கார் தங்கி நின்ற கொடி காளையைக் காண்டலோடு பீர் தங்கி பெய்யா மலரில் பிறிதாயினாளே' (சீவக.1960: 3-4)

(ட) <u>சின்னப் பூ</u> Ciṉṉap pū (totemic flower)

(35) **புகழ்** - fame
'சின்னப்பூ அணிந்த குஞ்சிச் சீதத்தன்' (சீவக.2251)

(ண) <u>மலர்ச் சின்னம்</u> (flower sign)
Malarc ciṉṉam
**புகழ்** - fame
'வடிவாய வேலாற்கு மலர்ச்சின்னம் சொரிவனபோல்' (சூளா.171: 3)

(ட) <u>பூச்சூடாதிருத்தல்</u> Pūccūṭātiruttal (not wearing flowers)

(36) **பிரிவு, தனிமை** – seperation, loneliness
'சாமெனில் சாதல் நோதல் தன்னவன் தணந்த காலைப் பூமனும் புனைதலின்றிப் பொற்புடன் புலம்ப வைகி' (சீவக.1598: 1-2)

(ஒப்பு) <u>Flower</u> **அழகு, அன்பு, இசைவு, இயற்கை வளம், இளமை, ஒழுக்கம், கலவி, கற்பு, கன்னித்தன்மை, காதல், குழந்தைப்பருவம், கொண்டாட்டம், சமநிலை, தகுதி, தன்னம்பிக்கை, தூய்மை, நன்மை, நற்குணம், நீதித்தன்மை, பிறப்பு, பெண்பாற் கருவாய், பொருத்தம், மகிழ்ச்சி, மங்கலம், மறுபிறப்பு, வெற்றி; அறியாமை, இறப்பு, நிலையாமை.**

சிவப்பு மலர்கள் - அடங்காக் கோபம், காதல், குருதி, வாழ்க்கை, வெறி உணர்ச்சி.
நீர்மலர்கள் - இயலாமை, மறைக்குறிப்புப் பொருள்.
வெண் மலர்கள் - அறியாமை, அன்பு, கடவுட்டன்மை, குற்றமற்ற தன்மை, பேராண்மை, மெய்யுறு புணர்ச்சி.

**பூ இதழ்** Pū ital **(petal)**

(1) **சிறுமை** - mean
*'நெல்லுக்கு உமி உண்டு நீர்க்கு நுரை உண்டு புல்லிதழ் பூவிற்கு உண்டு'* (நாலடி.221)

**பூண்** Pūṇ **(ornament)**

(1) **அழகு** - beaauty
*'நுண் பூண், மடந்தையைத் தந்தோய் போல'* (குறு.147: 3)
(2) **சிறப்பு** - eminence
*'பூண் வளைந்தன்ன பொலஞ் சூட்டு நேமி'* (குறு.227: 1)
(3) **உடைமை, உரிமை** – possession, wright
*'மருப்புப் பூண் கையுறையாக அணிந்து'* (கலி.82: 12)
(4) **உயர்வு** - lofty
*'மை அற விளங்கிய ஆன் ஏற்று அவிர் பூண்'* (கலி.85: 11)
(5) **ஆளுமை** –ruling / dominent
*'விளங்கு மணிக் கொடும் பூன் ஆஅய்!'* (புறம்.130: 1)

**பூத்தல்** Pūttal **(bloom)**

(1) **நுகர்தல்** – receive / enjoy / consume
*'பல்பழ மணிக்கொம் பீன்று பரிசில் வண்டுண்ணப் பூத்து'* (சீவக.2728: 2)

**பூப்பரிதல்** Pūpparital **(remove flowers)**

(1) **பிரிவு, தனிமை** – seperation, lonliness
*'பூப்பரிவார் பொன்செய் கலம்பரிவார்'* (சீவக.2965: 1)

**பூ மழை** Pū malai **(flower rain)**

(1) **வாழ்த்து** – blessing, praise
*'புனித மா தவர் ஆசியின் பூ மழை பொழிந்தார்'* (கம்ப.பால.454: 1)
(2) **மகிழ்ச்சி, ஆசி** - joy, blessings
*'தண்ணளி வெண்குடை வேந்தன் செயல்கண்டு தரியாது மண்ணவர்கண் மழை பொழிந்தார் வானவர் பூ மழை சொரிந்தார்'* (பெரிய.130: 1-4)
(3) **சிறப்பு** – eminence, honour
*'தேவரும் முனிவர் தாமும் சிறப்பொடு பொழியும் தெய்வப் பூவின் மாமழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற'* (பெரிய.398: 5-8)

(ஆ) **பொன் மாரி மலர்மழை**
Poṉ māri malar malai (shower of gold and flowers)
**வாழ்த்து, மகிழ்ச்சி** - blessing, joy / cheer
*'மண்ணெலாம் பைம்பொன் மாரி மலர்மழை சொரிந்து வாழ்த்தி'* (சீவக.3085: 2)

**பூ மாலை தீயிடைப்படல்** Pū mālai tiyiṭappaṭal (flower garland in fire)

(1) **அழிவு, துன்பம்** – destruction, misery
*'நீல வல்விடம் தொடர்ந்தெழ நேரிழை மென்பூ மாலை தீயிடைப் பட்டது போன்றுளம் மயங்கி'* (பெரிய.28: 1058)

**பூரண குடத்து நீர் நறவின் பொங்குதல்** Pūraṇa kuṭattu nīr naṟaviṉ poṅkutal **(water of full pot swelling as toddy)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – evil, destruction, death
*'ஆரண மந்திரத்து அறிஞர் நாட்டிய பூரண குடத்து நீர் நறவின் பொங்குமால்'* (கம்ப.சுந்.374: 3-4)

**பூரண கும்பம்** Pūtaṇa kumpam **(full pot)**

(1) **மங்கலம்** – anspicious

'பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும் பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்' (மணி.1: 44-45)

<u>பூரண பொற்குடம் வைத்தல்</u> Pūraṇa porkuṭam vaittal **(keeping full gold pot)**

(1) மங்கலம் - anspicious
'பூரண பொற்குடம் பொலிய வைக்கவே' (சூளா.902: 4)

<u>பூரண பொற்குடம் வைத்துப் புறம் எங்கும் தோரணம் நாட்டல்</u> Pūraṇa porkuṭam vaittup puram eṅkum tōraṇam nāṭṭal **(keeping full gold pot and hoisting hangings all around)**

(1) திருமணம் - wedding
'பூரண பொற்குடம் வைத்துப் புறம் எங்கும் தோரணம் நாட்டக் கனாக் கண்டேன்' (நாலா.556: 3-4)

<u>பூரண மங்கல கலசங்கள் வெடித்தல்</u> Pūraṇa maṅkala kalacaṅkaḷ veṭittal **(full auspicious pots to break)**

(1) தீமை, அழிவு - evil omen
'.. .. .. வெடித்தன பூரண மங்கல கலசங்கள்' (கம்ப.சுந்.298: 7-8)

<u>பூல்</u> Pūl **(say 'phoo')**

(1) சிறுமை - mean
'எமரிது செய்க எமக்கென்று வேந்தன் தமரைத் தலைவைத்த காலைத் - தமரவற்கு வேலின்வா யாயினும் வீழார் மறுத்துரைப்பின் ஆலென்னிற் பூலென்னு மாறு' (பழமொழி. 268)

<u>பூவல் குன்றம்</u> (செம்மண் மலை) Pūval kunram **(red hill)**

(1) சிவப்பு நிறம் - red
'ஓவாக் கணைபாய ஒல்கி எழில்வேழம் தீவாய்க் குருதி இழிதலால் செந்தலைப் பூவல்அம் குன்றம் புயற்கு போன்றவே' (களவழி.12: 1-3)

<u>பூவை</u> (நாகணவாய்ப் பறவை) Pūvai **(a bird)**

(1) பேசும் ஆற்றல் – speech capacity
'பூவையும் கிளியும் மிழற்றப் புகுந்து' (சீவக.873: 3)

(2) பகுத்தறிவு - reasoning / rational
'பொற்றொடி தத்தையீரே பொத்தும் நும் வாயை என்றே கற்பித்தார் பூவையார் தம் காரணக் கிளவி தம்மால்' (சீவக.2511: 3-4)

<u>பூவைப்பூ</u> Pūvaippū **(a flower)**

(1) கருமை - black
'பூவைப்பூ வண்ணன் அடி' (திரி.1: 4)

<u>பூளை வீ</u> Puḷai vī **(a flower)**

(1) மென்மை - softness
'பொங்கு கோபம் சுட பூளை வீ அன்ன தன் அங்கம் வெந்து அன்று தொட்டு அனங்கன் ஆயினான்' (கம்ப.பால.340: 3-4)

(2) நொய்ம்மை, அழிவு - fragile destroyed
'தேறுதி நாளையே அவ் இருபது திண் தோள் வாடை வீறிய பொழுது பூளைவீ என வீவன் அன்றே' (கம்ப.ஆரண்.861: 4)

(3) வெண்மை நிறம் - white
'பூளை வீ புரை பனிப் புயற்குத் தேம்பிய' (கம்ப.பால.531: 2)

(ஆ) <u>மாருதம் அறைந்த பூளை</u> Mārutam araintа pūḷai (poolai flower in strom)
அழிவு - destruction
'ஆள் ஐயா உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த பூளை ஆயின கண்டனை' (கம்ப.யுத்.1212: 1-2)

<u>பெண் யானைகள் மதம் சொரிதல்</u> Peṇ yaṉaikaḷ matam corital **(rutting of she elephent)**

(1) தீமை, இறப்பு, அழிவு - evil omen
'பிடி எலாம் மதம் பெய்திட .. .. ..' (கம்ப.ஆரண்.431: 1)

**பெண்கள் தோள் இடம் துடித்தல்** Peṇkaḻ tōḷ iṭam tuṭittal **(left shoulder of women quiver)**

(1) **நன்மை, வெற்றி** - good omen, victory
*'.. .. .. நெடுங்கண் ஏழையர் தோளுமங்கு இடவயிற் துடித்த'* (சூளா.1218: 2-3)

**பெண்களுக்குப் புருவம், கண், நுதல் இடம் துடித்தல்** Peṇkaḷukku puruvam, kaṇ, nutal iṭam tuṭittal **(quivering of left eye, eye brow and forehead of women)**

(1) **நன்மை** – good omen
*'நலம் துடிக்கின்றதோ நான் செய் தீவினைச் சலம் துடித்த இன்னமும் தருவது உண்மையோ பொலந்துடி இருங்குலாய் புருவம் கண் நுதல் வலம் துடிக்கின்றல வருவது ஓர்கிலேன்'* (கமப.சுந்.360)

**பெண்களுக்குக் கண், புருவம், தோள் வலம் துடித்தல்** Peṇkaḷukkuk kaṇ, puruvam, tōḷ valam tuṭittal **(quivering of right eye, eye brow, shoulder of women)**

(1) **தீமை, அழிவு** - evil omen
*'நிருதர்தம் குல மாதர் பொலந் துடிக்கு அமை மருங்குல் போல் கண்களும் புருவமும் பொன் தோளும் வலம் துடித்தன'* (கம்ப.சுந்.298: 2-5)

**(ஆ) மகளிர் வலக்கண்கள் துடித்தல்** Makaḷir valakkaṇkaḷ tuṭittal (quivering of right eyes of women)

(2) **இறப்பு, தீமை, அழிவு** - evil omen
*'போக மகளிர் வலக் கண்கள் துடித்த பொல்லாக் கனாக் கண்டார் ஆக மன்னற்கு ஒளி மழுங்கிற்று'* (சீவக.2173: 1-3)

**பெரியோர்க்கு உதவிய சிறு உதவி** Periyōrkku utaviya ciṟu utavi**(small help to great persons)**

(1) **பெருக்கம்** – increase, abundance
*'பெரியோர்க்கு உதவிய சிறு நன்றேய்ப்பக் கரவாது பெருகிக் கையிகந்து விளங்கும் உள்ளத்து உவகை தெள்ளிதின் அடக்கி'* (பெருங்.உஞ்.44: 138-140)

**பெருநீர் அற சிறுமீன் துவளுதல்** Perunīr aṟa ciṟumīṉ tuvaḷutal **(small fish squirm without water)**

(1) **தவிப்பு, பிரிவு, துன்பம்** – perplexity, seperation, affliction
*'பெருநீர் அற சிறுமீன் துவண்டு ஆங்கு நினைப் பிரிந்த வெருநீர்மையேனை விடுதி கண்டாய்'* (திருவா.6: 26: 1-3)

**பேகன்** Pēkaṉ **(a benevolent chief)**

(1) **வண்மை** - benevolent
*'வண்டு படு நறவின் வண் மகிழ்ப் பேகன்'* (அகம்.262: 16)

(2) **ஈகை** - bounty, giving
*'உடாஅ போரா வாகுதல் அறிந்தும் படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ'* (புறம்.141: 10-11)

(3) **புகழ்** - fame
*'.. .. .. .. வயங்கு புகழ்ப் பேகன்'* (புறம்.144: 12)

**பேடி** Pēṭi **(ennuch)**

(1) **துன்பம்** - affliction
*'பேடி வேதனை பெரிதோடி ஊருமாதலால்'* (நீலகேசி.96: 1-2)

**பேய்** Pēy **(ghost)**

(1) **துன்பம்** - affliction
*'பெரும் புண்ணுறுநர்க்குப் பேஎய் போல'* (நற்.349: 8)

(2) **அச்சம்** - fear
*'அணங்கரு மரபிற் பேஎய் போல விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க'* (அகம்.265: 14-15)

**பேய்ச்சுரைக்காய்** Pēyccuraikkāy **(bitter bottle gound)**

(1) **கசப்பு, அடக்கமின்மை** – bitter, immodest

'இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும் என்றும் அடங்காதார் என்றும் அடங்கார்; தடங்கண்ணாய் உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும் கைப்பறா பேய்ச்சுரையின் காய்' (நாலடி.116)

<u>பேய்த்தேர்</u> **(கானல் நீர்)** Peyttēr **(mirage)**

(1) **ஏமாற்றம், இன்மை** – deceit, non existant
'பெரு நீர் ஒப்பின் பேஎய் வெண்தேர் மரன் இல் நீள் இடை மான் நசையுறூஉம்' (நற்.84: 4-5)

(2) **பொய்த்தோற்றம்** – false appearance
'உரு இல் பேஎய் ஊராத் தேரொடு நிலம் படு மின்மினி போல' (அகம்.67: 15-16)

**(ஆ)** <u>**தேர்**</u> Tēr

(3) **வறட்சி, துன்பம்** – drought, affliction
'தேர் திகழ் வறும் புலம் துழைஇ, நீர் நயந்து பதுக்கை நீழல் ஒதுக்கு இடம் பெறாஅ அருஞ் சுரக் கவலை வருதலின், வருந்திய நமக்கும் அரிய ஆயின' (நற்.352: 7-10)

**(இ)** <u>**தேர் நீர்**</u> Tēr nīr

(4) **பயனின்மை / வீண்** – useless / waste
'வான் நீங்கு வைப்பின் வழங்காத் தேர் நீர்க்கு அவாஅம் கானம் கடத்திர், எனக் கேட்பின்' (கலி.7: 2-3)

**(ஈ)** <u>**ஆவி**</u> Āvi (vapour)

**பொய்த்தோற்றம்** – false appearance
'.. .. .. .. கனைகதிர் ஆவி அவ்வரி நீர்என நசைஇ மாதவப் பரிக்கும் மரல்திரங்கு நனந்தலை' (அகம்.327: 8-10)

**(உ)** <u>**வெண்தேர்**</u> Veṇtēr

**ஏமாற்றம்** – deceit
'கடிதோடும் வெண்தேரை நீராம் என்றெண்ணி பிடியோடு ஒருங்கோடித் தாள்பிணங்கி வீழும்' (ஐந்.ஐம்.36: 1-2)

**(ஊ)** <u>**மதரசம்**</u> Mataracam

(5) **மாய வாழ்வு** - transcient life
'மதரசம் அனையவர் வரமும் வாழ்வும்' (கம்ப.பால.201: 1)

<u>**பேரிகைகள் முழக்குவார் இன்றி ஒலித்தல்**</u> Pērikaikaḷ muḻakkuvār iṉṟi olittal **(drum resounding without drummers)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – bad omen
'பிடி மதம் பிறந்தன பிறகு பேரியும் இடி என முழங்குமால் இரட்டல் இன்றியே' (கம்ப.சுந்.371: 1-2)

<u>**பொதியறை**</u> **(புழுக்கறை)** Potiyaṟai **(hot chamber)**

(1) **துன்பம்** - affliction
'பொதியறைப் பட்டோர் போன்று மெய் வருந்தி' (மணி.19: 8)

<u>**பொதியில்**</u> **(பொதிகை மலை)** Potiyil **(a mountain)**

(1) **வளமை** - fertile
'வளம் கெழு பொதியின் மாமுனி பயந்த' (சிலப்.8: 8)

<u>**பொருநை**</u> Porunai **(a river)**

(1) **தண்மை / குளிர்ச்சி, வளம்** – cool / fertile
'பூந்தண் பொருநைப் பொறையன் வாழி' (சிலப்.23: 83)

<u>**பொருள்**</u> Poruḷ **(wealth / treasure)**

(1) **நிலையாமை** - unstable
'நில்லாப் பொருட் பிணிச் சேறி' (நற்.126: 11)

**(ஆ)** <u>**வெறுக்கை**</u> Veṟukkai

**நிலையாமை** – unstable

'மாண்டவன்றே ஆண்டுகள் துணையே வைத்ததன்றே வெறுக்கை' (புறம்.357: 4-5)

(இ) **செல்வம்** Celvam
**நிலையாமை** - unstable
'அன்னோர் செல்வமும் மன்னி நில்லாது' (புறம்.360: 11)

**பொலம்பாலிகை** Polampālikai **(golden sprouting grains)**
(1) **மங்கலம், நன்மை, வளம்** – auspicious, good, fertile
'பூரண கும்பமும் பொலம் பாலிகைகளும் பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்' (மணி.1: 44-45)

**பொழில்** Polil **(grove / orchard)**
(1) **வளமை, தண்மை** – fertile, cool
'புன்னை பொரிமலரும் பூந்தண் பொழிலெல்லாம் செங்கண் குயிலகவும் போழ்து கண்டும் (திணை.ஐம்.14:1-2)
(2) **அழகு** - beauty
'காமரு பொழில் இடைக் காவல் வைத்துமே' (சூளா.116: 4)

**பொற்றாலி** **(ஐம்படைத்தாலி)** Porrāli **(gold necklace (five weapon))**
(1) **செல்வச்சிறப்பு, மேன்மை/ உயர்வு** - wealthy, eminent / lofty
'வல்வருங் காணாய் வயங்கி முருக்கெல்லாஞ் செல்வர் சிறார்க்குப்பொற் கொல்லர்போ-னல்ல பவளக் கொழுந்தின்மேற் பொற்றாலி பாஅய்த் திகழக்கான் றிட்டன தேர்ந்து' (திணைமாலை.66)

**பொறி** Pori **(trap)**
(1) **ஆபத்து** - danger
'எய்ம் முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின் செய்யும் மேவல் சிறுகட் பன்றி ஓங்கு மலை வியன் புனம் படீஇயர், வீங்கு பொறி நூழை நுழையும் பொழுதில், தாழாது பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென' (நற்.98: 1-5)
(2) **அழிவு, இறப்பு** – destruction, death
'தினை உண் கேழல் இரிய, புனவன் சிறு பொறி மாட்டிய பெருங் கல் படாஅர், ஒண் கேழ் வயப் புலி படூஉம் நாடன்' (நற்.119: 1-3)

**பொறி** Pori **(switch) (mechanical device)**
(1) **இயக்கம்** - function
'பொறி அழி பாவையின் கலங்கி' (நற்.308: 7)

**பொறையன்** **(சிபி)** Poraiyan **(a king)**
(1) **அருள்** – mercy, compassion
'குறைவின் மிக நிறை தையுழி மறை அமரர் நிறையருள முறையொடு வரும் புறவன் எதிர் நிறைநிலவு பொறையன் உடல் பெற அருளும் புறவம் அதுவே' (திருஞான.தேவா.589: 5-8)

**பொன்** Pon **(gold)**
(1) **உயர்வு** - lofty
'நன் பொன் இமைக்கும் நாடனொடு அன்புறு காமம் அமைக நம் தொடர்பே' (நற்.389: 10-11)
(2) **வளமை / செழிப்பு** - luxuriant
'பொன்மலி பாடலி' (குறு.75: 4)
(3) **அழகு / ஒளி** - beauty / brightness
'பொன் ஏர் மேனி நல் நலம் சிதைத்தோர்' (குறு.319: 6)
(4) **சிறப்பு** - special
'நெல் பல பொலிக! பொன் பெரிது சிறக்க!' (ஐங்.1: 2)
(5) **தலைமை** – leading / headship
'பொன் நிறம் விரியும் பூக்கெழு துறைவனை' (ஐங்.110: 2)
(6) **அருமை** – rare, worthy
'பொன்போல் புதல்வனோடு என் நீத்தோனே' (ஐங்.265: 4)
(7) **பழியின்மை** - blemishless
'பொன் உரை மணி அன்ன, மாமைக்கண் பழி உண்டோ' (கலி.48: 17)

(8) மேன்மை / மதிப்பு – eminence / valuable
'பொன்னுடைத் தாலி என் மகன் ஒற்றி' (அகம்.54: 18)

(9) பொலிவு - bright / radiant
'பொன் செய் கன்னம் பொலிய' (அகம்.317: 8)

(10) தூய்மை, குற்றமின்மை – pure, blemishless
'மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச் செய்தது எனினும் செருப்புத்தன் காற்கேயாம்; எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச் செய்தொழிலாற் காணப் படும்' (நாலடி.347)

(11) திருமகள் – goddess of wealth
'புனை பூந்தழை அல்குல் பொன்னன்னாய்' (ஐந்.ஐம்.14: 1)

(12) ஒப்பற்றது / சிறப்பு – incomparable / great
'பொன் அலது இல்லை பொன்னை ஒப்ப எனப் பொறையில் நின்றாள்' (கம்ப.சுந்.1273: 1)

(ஆ) <u>ஆணி</u> <u>Ani</u>
உயர்வு - eminence, lofty
'சேண் உலாமதில் வேணு மண்ணுளோர் காண மன்றலார் வேணு நற்புரத் தாணுவின் கழல் பேணுகின்றனர் ஆணி ஒத்தவரே' (திருஞா.தேவா.641)

(இ) <u>சூடு உறு பொன்</u> Cūṭu uṟu poṉ (molten gold)
பொலிவு, ஒளி - radiant, glow
'மாடு உறு கிரிகளும் மரனும் மற்றவும் சூடு உறு பொன் எனப் பொலிந்து தோன்றுற' (கம்ப.கிட்.823: 1-2)

(ஈ) <u>வெந்துறு பொன்</u> Venturu poṉ

(13) சிவப்பு நிறம் - red
'வெந்துறு பொன் போல் வீழ்கதிர் மறைந்த அந்தி மாலை யாயிழை போகி' (மணி.24: 159-160)

(ஒப்பு) <u>Gold</u> அழிவின்மை, அரசத்தன்மை, அறிவாற்றல், அன்பு, ஆன்மா, ஆன்ம ஒளியூட்டல், ஒளி, ஒழுக்கம், நிரப்பு, சூரியன், தூய்மை, நிலைபேறு, நிறைவளம், நெருப்பு, புனிதம், மஞ்சள்நிறம், மதிப்பு, மேன்மை, மருத்துவ குணம், வளமை, வெற்றி.

<u>பொன் அணி</u> **Poṉ aṇi (gold ornament)**

(1) சிறப்பு – grand, eminent
'தூய பொன் அணி சோழன் நீடுழியார்' (பெரிய.8.3)

(ஆ) <u>பொன்னணிகளைக் களைதல்</u>
Poṉnaṇikaḷaik kaḷaital (remove gold ornaments)

(2) பிரிவு, தனிமை – saperation, loneliness
'பூப்பரிவார் பொன்செய் கலம்பரிவார்' (சீவக.2965: 1)

<u>பொன் உரை கல்</u> Poṉ urai kal **(touch-stone for gold)**

(1) வனப்பு – beauty, glowing
'பொன் உரை கல்லின், நல் நிறம் பெறூஉம் வள மலை நாடன்' (நற்.25: 4-5)

(ஆ) <u>கட்டளை</u> Kaṭṭaḷai

(2) அழகு - beautiful
'மின்னின் தூவி இருங்குயில், பொன்னின் உரைதிகழ் கட்டளை கடுப்ப' (குறு.192: 3-4)

(3) உறுதி - firmness
'சால்பிற்குக் கட்டளை யாது எனின் தோல்வி துலை அல்லார்கண்ணும் கொளல்' (குறள்.986)

<u>பொன் முகலி</u> Poṉ mukali **(a river)**

(1) குளிர்ச்சி - cool
'குன்றினுக்கு அயலே ஓடும் குளிர்ந்த பொன் முகலி என்றான்' (பெரிய.743: 7-8)

(2) புனிதம் – holy, sacred
'பொன்முகலித் திருநதியின் புனித நெடும் தீர்த்தத்தில்' (பெரிய.1614: 1-2)

(ஆ) <u>முகலி</u> Mukali

(3) செல்வம் – treasure
'திரைகள் திரட்டி வைத்த திருமுகலியினைச் சார்ந்தார்' (பெரிய.10.98)

<u>பொன் நிறம்</u> Pon niram **(gold colour)**

(1) வணிகர் - merchants
'பொன்மலர்க் கண்ணியர் பொன்செய் சுண்ணமொய் மின்மலர் மேல் விளங்க அப்பினார் மென்மலர் அணிநகை மிளிரும் கோலமோடு இன்மலர் இருநிதிக் கிழவர் ஈண்டினார்' (சூளா.1878)

<u>பொன்னி</u> Ponni **(a river)**

(1) இறைச்சார்பு - devine
'திங்கள் சூடிய முடிச்சிகரத்து உச்சியில் பொங்குவெண் தலைநுரை பொருது போதலால் எங்கள் நாயகன் முடிமிசை நின்றே இழி கங்கையாம் பொன்னியாம் கன்னி நீத்தமே' (பெரிய.55)

(2) புனிதத்தன்மை - holy
'பொன்னி நல்நதி மிக்க நீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதம் ஆக்குவதோர்' (பெரிய.404: 5-6)

(3) கடவுட்டன்மை – divinity / godhood
'அணங்கு நீர்ப்பொன்னி ஆடி நான்' (பெரிய.514: 3)

<u>போதி</u> Pōti **(pipal tree)**

(1) துறவு - asceticism / renunciation
'போதியின் கீழ் மாதவர் முன் புண்ணிய தானம் புரிந்த மாதவி தன்துறவும் கேட்டாயோ தோழீ' (சிலப்.29: 9-10)

(2) பௌத்த சமயம் - Buddhism
'சங்க போதியி லாள்கட் டயாச்செய' (நீலகேசி.245: 2)

(3) புத்தர், ஞானம் – Buddha, enlightenment
'போதி யாயுரு வெய்திய புற்கலர்' (நீலகேசி.248: 1)

<u>போது</u> Pōtu **(bud)**

(1) பரத்தையர் - prostitute
'போதார் வண்டுதும் புனல்வயல் ஊரற்குத் தூதாய்த் திரிதரும் பாண்மகனே' (ஐந்.ஐம்.22: 1-2)

<u>போந்தை</u> Pōntai **(palmyrah palm)**

(1) அரசக்குறியீடு – royal sign-totem
'போந்தை வேம்பே ஆர் என வருஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்' (தொல்.1006: 4-5)

(2) வீரம் - valour
'மறம் கெழு போந்தை வெண் தோடு புனைந்து' (பதி.51: 31)

(3) வன்மை / வலிமை - might
'நெடு வேல் பாய்ந்த மார்பின் மடல் வன் போந்தையின், நிற்குமோர்க்கே' (புறம்.297: 9-10)

(4) செழிப்பு - fertile
'வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும் மலைந்த சென்னியர்' (புறம்.338: 6-7)

(5) சேரன் – cera king
'இரும் பனம் போந்தைத் தோடும்' (பொரு.143)

(ஆ) <u>பெண்ணை</u> Peṇṇai

(6) கடவுட்டன்மை – divinity / godhood
'தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பை' (நற்.303: 3-4)

(இ) <u>பனை</u> Panai

(7) உயர்வு - lofty, eminent
'அடும்பு இவர் மணற்கோடு ஊர, நெடும் பனை குறிய ஆகும்' (குறு.248: 5-6)

(8) பேரளவு - large, big
'தினைத் துணை நன்றி செயினும் பனைத் துணையாக் கொள்வர் பயன் தெரிவார்' (குறள்.104)

வன்மை - mighty
'மெய்ம்மையே நின்று மிகநோக்கப் பட்டவர் கைம்மேலே நின்று கறுப்பன செய்தொழுகிப் பொய்ம்மேலே கொண்டவ் விறைவற்கொன்றார் குறைப்ப தம்மேலே வீழப் பனை' (பழமொழி. 280)

பேரளவு - large, huge
'தினைத்துணையர் ஆகித்தம் தேசுள்ளடக்கிப் பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்' (நாலடி.105: 1-2)

(9) நீட்சி - long
'பனையின் நீள் கரம் பற்றிய கையினாள்' (கம்ப.அயோ.514: 4)

(10) நெடுமை tall
'பனைவளர் கம்மாப் படாத்தம் பலத்தரன் பாதம் விண்ணோர்' (திருக்கோ.14: 154: 1)

(ஈ) <u>பனம்பழம்</u> Panampalam (palm fruit)

(11) பயன் / வளன் – use / fertility
'உவப்ப உடன்படுத்தற் கேய கருமம் அவற்றவற் றாந்துணைய வாகிப் பயத்தால் வினைமுதிரின் செய்தான்மே லேறும் பனைமுதிரின் தாய்தாள்மேல் வீழ்ந்து விடும்' (பழமொழி. 270)

(உ) <u>படுபனை</u> Paṭupanai

(12) பயன், ஈகை - use, bounty
'நடுவூருள் வேதிகை சுற்றுக்கோல் புக்க படுபனை அன்னர் பலர்நச்ச வாழ்வார்' (நாலடி.96: 1-2)

(ஊ) <u>ஏற்றைப் பனை</u> Errap panai

(13) வீண் / பயனின்மை – waste / not beneficial
'குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள் இடுகாட்டுள் ஏற்றைப் பனை' (நாலடி.96: 3-4)

(எ) <u>பச்சோலை</u> Paccōlai (fresh palm leaf)

(14) அறிவுடையார், கற்றறிந்தார் - learned, wise
'கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி மற்றைய ராவார் . பகர்வர் பனையின்மேல் வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும் பச்சோலைக்கு இல்லை ஒலி' (நாலடி.256)

(ஏ) <u>வற்றிய பனை ஓலை</u>
Varriya panai ōlai (dry palm leaf)

(15) ஒலி, அறிவிலார் - sound, agnorant / illiterate
'கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல் வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும் பச்சோலைக்கு இல்லை ஒலி' (நாலடி.256)

(ஐ) <u>பெண்ணை</u> Peṇṇai

(16) நட்பு, உயர்வு, முதன்மை, பழமை - friendship, lofty, foremost, ancient
'கடையாயார் நட்பிற் கமுகு அனையர்; ஏனை இடையாயார் தெங்கின் அனையர் தலையாயார் எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே, தொன்மை உடையார் தொடர்பு' (நாலடி.216)

(ஒ) <u>குறைப்பனை</u> Kuraippanai (short / dwarf palm)

(17) பயனின்மை, இயக்கமின்மை – futile, functionless
'கூப்பிடு குரலாய் நிற்பர் குறைப்பனைக் குழாங்கள் ஒத்தே' (சீவக.2772: 4)

(ஒப்பு) <u>Palm Tree</u> அரச தகுதி, அறிவு, அன்பு, ஆர்வமிகுதி, உயர்வு, உயர் . குணமுடைமை, கன்னிமை, தூய்மை, நட்பு, நிலைபேறு, நிறைவளம், நீதி, பிள்ளைப்பேறு நிலை, மறுபிறப்பு, வாழ்வு, விளைவளம், வெற்றி.

## <u>போர்த்தல்</u> Pōrttal (cover)

(1) அறியாமை - ignorance
'போலுமென் றோர்தல் செல்லாய் போர்த்தனை அகமு மென்றாள்' (நீலகேசி.435: 4)

## <u>போர்வை</u> Pōrvai (cover)

(1) பொய் - lie
'சடங்கொள் சீவரப் போர்வை' (திருஞான.தேவா.2533: 1)

# ம

**மகம்** Makam **(a star)**

(1) **நீர்வளம்** – abundant water resources

*'மழை நீங்கிய மா விசும்பில் மதி சேர்ந்த மக வெண் மீன்'* (பட்.34-35)

**மகர ராசியில் சனிக்கோள் புகுதல்** Makara rāciyil caṉikkōḷ pukutal **(Saturn in caprican)**

(1) **தீமை, வறட்சி** - evil, drought

*'விலங்கல் அமர் புயன் மறந்து மீன் சனிபுக்கு ஊன் சலிக்கும் காலம் தானும் கலங்கல் இலா மனப் பெருவண் கையுடைய மெய்யர் வாழ் கழுமலமே'* (திருஞான.தேவா.3843: 5-8)

(ஆ) **மகத்தில் புக்கதோர் சனி** Makattil pukkatōr caṉi

(2) **துன்பம்** - distress

*'மகத்தில் புக்கதோர் சனி எனக்கு ஆனாய்'* (சுந்.தேவா.696: 1)

**மகளிர் குழைகள் காதினின்றும் சோர்தல்** Makaḷir kuḻaikaḷ kātiṉiṉṟum cōrtal **(women's ear ornaments falling)**

(1) **தீமை, தோல்வி, கணவர் இறப்பு** – evil, defeat, death of husband

*'படவரவு அல்குலார் காதில் பையெனச் சுடர்தரு குழைகடாம் அழிந்து சோர்ந்தவே'* (சூளா.1221: 3-4)

**மகன்றில்** Makaṉṟil **(a bird)**

(1) **பிரிவின்மை / அன்பு** - Inseperable / love

*'பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன்ன நீர் உறை மகன்றிற் புணர்ச்சி போலப் பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு'* (குறு.57: 1-3)

**மங்கல கலசங்கள் கீழே விழுந்து உடைதல்** Maṅkala kalacaṅkaḷ kīḻē viḻuntu uṭaital **(anspicious pots fall down and break)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – evil, destruction, death

*'தெரியுமால் மங்கல கலசம் சிந்தின'* (கம்ப.சுந்.373: 3)

**மங்கையரின் மங்கலத் தாலிகள் பிறரால் அறுக்கப் படாமல் தாமே அறுந்து விழுதல்** Maṅkaiyariṉ maṅkalat tālikaḷ piṟarāl aṟukkap paṭāmal tāmē aṟuntu viḻutal **(anspicious marriage strings of women snap off without anybody cutting)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – evil, destruction, death

*'மங்கையர் மங்கலத் தாலி மற்றையோர் அங்கையின் வாங்குநர் எவரும் இன்றியே கொங்கையின் வீழ்ந்தன குறித்த ஆற்றினால்'* (கம்ப.சுந்.376: 1-3)

**மஞ்சள்** Mañcaḷ **(turmeric)**

(1) **புனிதம் / மங்கலம்** – sacred / holy, anspicious

*'சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளித்து'* (திருமுரு.235)

(2) **பாதுகாப்பு** – protection / secure

*'சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர்'* (மலை.343)

(ஆ) **மஞ்சள் பூசுதல்** Mañcaḷ pūcutal (smearing turmeric)

(3) **பெண்மை** - feminity

*'பற்று மஞ்சள் பூசிப் பாவைமாரொடு பாடியில்'* (நாலா.235: 1)

**மஞ்சனம் ஆட்டல்** Mañcaṉam āṭṭal **(bathe)**

(1) **திருமணம்** - wedding

*'குங்குமம் அப்பிக் குளிர் சாந்தம் மட்டித்து மங்கல வீதி வலம் செய்து மா மண நீர் அங்கு*

அவனோடும் உடன் சென்று அங்கு ஆனை மேல் மஞ்சனம் ஆட்டக் கனாக் கண்டேன்' (நாலா.565)

<u>மடலேறுதல்</u> Maṭalēṟutal **(ride the palm horse)**

(1) **காமம்** – passion / love excess
'மடலே, காமம் தந்தது; அலரே, மிடை பூ எருக்கின் அலர் தந்தன்றே' (நற்.152: 1-2)

(2) **இகழ்ச்சி, நாணின்மை** – disgrace / bashless
'விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல் மணிஅணி பெருந்தார் மரபிற் பூட்டி, வெள் என்பு அணிந்து, பிறர் எள்ளத் தோன்றி, ஒருநாள் மருங்கில் பெருநாண் நீங்கி' (குறு.182: 1-4)

<u>மண்</u> Maṇ **(soil, mud / land)**

(1) **நெகிழ்ச்சி** - tenderness
'மண் போல் நெகிழ்ந்து' (அகம்.26: 25)

(2) **அரசு** - kingdom
'.. .. .. .. ஓங்கு புகழ் மண் ஆள் செல்வம் எய்திய' (புறம்.47: 9-10)

(3) **பிணித்தல்** - bind
'குன்று தலைமணந்த மலை பிணித்து யாத்த மண்' (புறம்.357: 1)

(4) **உறுதி** - firm
'மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு இயைந்துகண் ணோடா தவர்' (குறள்.576)

(ஆ) <u>மண் வௌவுதல்</u> Maṇ vauvutal (capture land)

(5) **வெற்றி** - victory
'பாய் இருட் பரப்பினைப் பகல் களைந்தது போல, போய் அவர் மண் வௌவி வந்தனர் சேய் உறை காதலர் செய் வினை முடித்தே' (கலி.148: 22-24)

(இ) <u>மண் நோக்குதல்</u> Maṇ nōkkutal (look at land)

(6) **கவர்தல்** - captivate
'மாற்று இரு வேந்தர் மண் நோக்கினையே' (புறம்.42: 24)

(ஈ) <u>மண் நாணுதல்</u> Maṇ nāṇutal (land feeling shy)

(7) **சுருக்கம், சிறுமை** – reduce, degrade
'மண் நாணப் புகழ் பரப்பியும்' (புறம்.166: 23)

<u>மண்டை</u> Maṇṭai **(bowl)**

(1) **இரத்தல்** - beg
'வழிக்கு மாறும்தம் மண்டையின் உண்டுமன்' (நீலகேசி.238: 1)

<u>மண் மாரி</u> Maṇ māri **(sand rain)**

(1) **அழிவு** - destruction
'செய்யாத செய்த திருமலைராயன் வரையில் அய்யா அரனே அரை நொடியில் வெய்ய தழல் கண்மாரியால் மதனைக் கட்டழித்தாற் போல் தீயோர் மண்மாரியால் அழிய வாட்டு' (தனிப்.364)

<u>மணல்</u> Maṇal **(sand)**

(1) **நுண்மை** - minute
'நுண் மணல் அறல் வார்ந்தன்ன' (குறு.116: 3)

(2) **திண்மை** – firm / strong
'உரவுத் திரை பொருத திணிமணல் அடைகரை' (குறு.175: 2)

(3) **தகுதி / சிறப்பு** – capability / eminence
'வையைக்குத் தக்க மணல் சீர் சூள் கூறல்!' (பரி.8: 71)

(4) **மிகுதி** - abundance / multitude
'கரை பொருது இரங்கும், கனை இரு முந்நீர்த் திரை இடு மணலினும் பலரே' (மது.235-236)

**(ஒப்பு)** <u>Sand</u> **எண்ணிக்கையற்ற நிலை, ஏற்கும் இயல்புடைய தன்மை, துன்பம் தாங்கும் ஆற்றல், நம்பிக்கை, பாதுகாப்பு; நிலையற்ற தன்மை, பயனற்ற உழைப்பு.**

<u>மணமகளிர் கோலம்</u> Maṇamakaḷir kōlam **(bridal attaire)**

(1) **அழகு / வனப்பு** - beautiful
*'மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்தி'* (*சிலப்*.7: 2)

<u>மணர்சுவர்</u> Maṇarcuvar **(mud wall)**

(1) **அழிவு** - destruction
*'பொத்தல் மணர்சுவர்ப் பொல்லாக் குரம்பையை'* (*திருநா.தேவா*.1950: 1)

<u>மணி</u> **(இரத்தினம்)** Maṇi **(gem / crystal)**

(1) **தூய்மை** – pure / clear
*'மை அற விளங்கிய மணி நிற விசும்பில்'* (*நற்*.231: 1)

(2) **நிகரற்ற தன்மை, உயர்வு** - incomparable, lofty
*'நீறு ஆர்ந்தும் ஓட்டா நிகரில் மணியேபோல் வேறாகத் தோன்றும் விளக்கம் உடைத்தாகித் தாறாப் படினும் தலைமகன் தன்னொளி நூறா யிரவர்க்கு நேர்'* (*பழமொழி*. 69)

(3) **பெருமை** – greatness / grand
*'மாசு படினும் மணிதன்சீர் குன்றாதாம்'* (*நான்*.100: 1)

(4) **வளமை** - luxuriant
*'குளநெல் முன்றிற்கனி தேன்சொரி சோலைக் குளிர்மணி வளமை மல்கிளரி யம்மட மந்திகை காய்த்துவான்'* (*சீவக*.2491: 1-2)

**(ஆ)** <u>மாமணி</u> Māmaṇi

(5) **பெறற்கருமை** – rare / hard to achieve
*'ஆங்கவள் உரைகேட்டு அரும்பெறன் மாமணி ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர் போன்று'* (*மணி*.2: 72-73)

<u>மணிச் சிரல்</u> **(மீன் கொத்தி)** Maṇic ciral **(king fisher)**

(1) **குறிக்கோள்** – aim / target
*'புலவுக் கயல் எறிந்த பொன் வாய் மணிச் சிறல்'* (*சிறுபா*.181)

(2) **மயக்கம்** – confusion
*'இரை தேர் மணிச் சிரல் இரை செத்து எறிந்தென'* (*பெரும்*.313)

<u>மணிபல்லவம்</u> Maṇipallavam **(an island)**

(1) **நன்மை / சிறப்பு** – goodness / eminence
*'வஞ்சமில் மணிபல்லவத்திடை வைத்தேன்'* (*மணி*.7: 22)

<u>மத்தம்</u> Mattam **(churning rod)**

(1) **இயக்கம்** - function
*'பாசம் தின்ற தே கால் மத்தம் நெய் தெரி இயக்கம் வெளில்முதல் முழங்கும்'* (*நற்*.12: 2-3)

(2) **சுழற்சி** - rotation / whirl
*'மத்தம் பிணித்த கயிறு போல், நின் நலம் சுற்றிச் சுழலும் என் நெஞ்சு'* (*கலி*.110: 10-11)

(3) **பயன்** - utility
*'தீம் தயிர் கடைந்த திரள் கால் மத்தம்'* (*அகம்*.87:1)

<u>மத்தம்</u> **(ஊமத்தம்)** Mattam **(a plant)**

(1) **தூய்மை** - pure
*'சுரும்பமர் கொன்றையும் தூய மத்தமும்'* (*திருஞான.தேவா*.402: 3)

<u>மத்தளம் முழங்குதல்</u> Mattaḷam mulaṅkutal **(rumbling of drum)**

(1) **திருமணம்** - wedding
*'மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்று ஊத .. .. .. கனாக் கண்டேன்'* (*நாலா*.561)

<u>மதியம் கெடுத்த வயமீன்</u> Matuyam keṭutta vayamīn

(1) **பொலிவின்மை** – dull, not radiant
*'மதியம் கெடுத்த வயமீன் எனத் தம்பி மாழாந் துதியற் குரியாள்'* (*சீவக.பதி*.23: 1-2)

<u>மதுரை</u> Maturai **(a city)**

(1) **புகழ்** - fame
*'தண் தமிழ் வேலித் தமிழ்நாட்டகம் எல்லாம் நின்று நிலைஇப் புகழ்*

பூத்தல் அல்லது, குன்றுதல் உண்டோ மதுரை கொடித்தேரான் குன்றம் உண்டாகும் அளவு?' (பரி.தி.9)

(ஆ) <u>சிவபிரான் திருத் தொண்டர்கள் எல்லாம் மதுரை மாநகர் விரவுதல்</u> Civapirāṉ tiruttoṇṭarkaḷ ellām maturai mānakar viravutal

(2) **சமணர்களுக்கு வரும் தீமை, துன்பம்** – evil omen for Jains
'கானிடை நட்டம்ஆடுங் கண்ணுதல் தொண்டர் எல்லாம், மீனவன் மதுரை தன்னில் விரவிடக் கண்டோம் என்பார்' (பெரிய.28.639)

<u>மந்தாரம்</u> Mantāram **(a plant)**

(1) **தானம் / கொடை** - bounty
'பயன்கொள்வார் பயன் கொள்ப அனைத்தையும் தயங்குகின்றன தான மந்தாரமே' (சூளா.753: 3-4)

<u>மந்திரக் கோடி உடுத்தி மணமாலை அந்தரி சூட்டல்</u> Mantirak kōṭi uṭutti maṇamālai antiri cūṭṭal **(dressing in new clothes, wearing garland)**

(1) **திருமணம்** - wedding
'இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம் வந்திருந்து என்னை மகட் பேசி மந்திரித்து மந்திரக் கோடி உடுத்தி மண மாலை அந்தரி சூட்டக் கனா கண்டேன்' (நாலா.558)

<u>மந்திரம் ஐந்து</u> Mantiram aintu **(five magical chants)**

(1) **நன்மை** - goodness
'முற்செய்த வினையின் நீங்கி நல்வினை விளைக்கும் வித்து மற்செய்து வீங்கு தோளான் மந்திரம் ஐந்து மாதோ' (சீவக.945: 2-3)

(ஆ) <u>ஐம்பதம்</u> Aimpatam

(2) **துன்ப நீக்கம், நன்மை** – removal of affliction
'மறுகனீ பற்றோடு ஆர்வம் விட்டிடு மரண வச்சத் திறுகணீ இறைவன் சொன்ன ஐம்பத அமிர்தம் உண்டால் பெறுதி நற்கதியை என்று பெருநவை அகற்றினானே' (சீவக.946; 2-4)

(4) **வினை நீக்கம்** – removal of sin
'மனத்திடைச் செறும்பு நீக்கி மறவலை ஆகி ஐந்தும் நினைத்திடு நின்கணின்ற நீனிற வினையின் நீங்கி' (சீவக.947: 1-2)

<u>மயிர்குளித்தல்</u> Mayirkuḷittal

(1) **வியப்பு** - wonder
'வாணுதன் மயிர்குளித்து உரைக்கும் மாதவத்து அடிகள் என்றானும்' (நீலகேசி.69: 3)

<u>மயில்</u> Mayil **(peafowl)**

(1) **மடமை** – foolish / incomprehension
'இன மயில் மடக் கணம் போல' (நற்.248: 8)

(2) **பசுமை / வளமை** – greenish / lushious
'கலி மயில் கலாவத்து அன்ன' (நற்.265: 8)

(3) **மென்மை** - soft
'மென் மயில் எருத்தின் தோன்றும்' (குறு.183: 6)

(4) **துன்பம்** - distress
'நல் மயில் வலைப் பட்டாங்கு' (குறு.244: 5)

(5) **அழகு, தலைவி** - beautiful, heroine
'விசும்பு ஆடு ஆய் மயில் கடுப்ப' (நற்.222: 4)

(6) **எதிர்ப்பு** – opposition / protest
'ஒருவர் மயில் ஒருவர் ஒண் மயிலோடு ஏல' (பரி.9: 41)

(7) **வெற்றி** - victory
'விறல்வெய்யோன் ஊர்மயில் வேல்நிழல் நோக்கி' (பரி.8: 67)

(8) **விரைவு** - fast, quick
'வெண் சுடர் வேல் வேள்! விரை மயில் மேல் ஞாயிறு!' (பரி.18: 26)

(9) **குறிஞ்சித் திணை** - mountainous tract
'நீல ஆல வட்டத்தின் நிறம்கொளக் கோலும் பீலிய

கோடு உயர் குன்றின்மேல் ஆலும் மாமழை நீண்முகில் ஆர்த்தொறு மாலும் மாமயில் ஆலுமொர் பாலெலாம்' (சூளா.21)

(10) **ஒழுக்கம்** – conduct / behaviour
'துயிலும் பொழுதத் துடைவூண்மேற் கொண்டு வெயில்விரி போழ்தின் வெளிப்பட்டா ராகி அயில்போலுங் கண்ணாய்! அடைந்தார்போல் காட்டி மயில்போலுங் கள்வ ருடைத்து' (பழமொழி. 194)

(11) **அறியாமை / மடமை** – foolish / ignorant
'முன்னை யுடையது காவா திகழ்ந்திருந்து பின்னையா தாராய்ந்து கொள்குறுதல் - இன்னியல் மைத்தடங்கண் மாதராய்! அஃதாதல் வெண்ணெய்மேல் வைத்து மயில்கொள்ளு மாறு'
(பழமொழி. 210)

(ஆ) **<u>தோகை</u> (மயில்)** Tōkai
**அழகு** – beauty, charming
'கமழ் தாது ஆடிய கவின் பெற தோகை' (நற். 396:5)

(12) **மாட்சி** - noble / honourable
'தோகை மாட்சிய மடந்தை' (ஐங். 293:4)
**வளமை** - luxuriant
'பாகல் ஆர்கைப் பறைக் கட்பீலித் தோகைக் காவின் துருநாட்டு அன்ன' (அகம். 15:4-5)

(இ) **<u>பிணிமுகம்</u>** Piṇimukam

(13) **தெய்வத்தன்மை, கொள்கை** - divine, principle
'பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்' (புறம். 56:8)

(ஈ) **<u>மஞ்ஞை</u>** Maññai
**மடமை** - ignorance
'கலவம் விரித்த மட மஞ்ஞை' (பொரு.212)
**தலைவி** -heroine
'பீலி மஞ்ஞை பெடையோடு ஆலும் குன்ற நாடன் பிரிவின் சென்று' (நற்.288: 3-4)

(15) **பெண்** – femionity / woman
'அணி கிளர் கலாவம் ஐது விரித்து இயலும் மணி புரை எருத்தின் மஞ்ஞை போல, நின் வீ பெய் கூந்தல் வீசு வளி உளர ஏகுதி - மடந்தை!' (நற்.264: 3-6)

(உ) **<u>மஞ்ஞை ஆலல்</u>** Maññai ālal (dancing peafowl)

(15) **மழை வரவு** - rains
'.. .. .. .. மஞ்ஞை மா இனம் காலமாரி பெய்தென, அதன் எதிர் ஆலலும் ஆலின' (குறு.251: 1-3)

(ஊ) **<u>ஏவுறு மஞ்ஞை</u>** Evuṟu maññai (peafowl hit by arrow)

(16) **துன்பம்** - affliction
'ஏவுறு மஞ்ஞையின் இனைந்தடி வருந்த' (மணி.7: 127)

(எ) **<u>மயில் வலப்பக்கம் செல்லுதல்</u>** Mayil valappakkam cellutal

(17) **நன்மை** – good omen
'ஏகும் அளவையின் வந்தன வலமும் மயில் இடமும் காகம் முதலிய முந்திய தடை செய்வன கண்டான்' (கம்ப.பால.1213: 1-2)

(ஏ) **<u>வலையொழி மஞ்ஞை</u>** Valaiyoḻi maññai

(18) **துயர் நீங்குதல்** – devoid of perplexity
'வலையொழி மஞ்ஞையின் மனமயக்கு ஒழிதலும்' (மணி.21: 189)

(ஒப்பு) <u>Peacock</u> **அரசமை, அழகு இலையுதிர்காலம், உலகத்தின் உயர்வு, உயிர்ப்பித்தல், எச்சரிக்கை, ஒழுக்கம், கற்பு, கார்காலம், கொள்கை, சிறப்பு, சிறந்த பண்பு, செல்வம், செழுமை, தீமையை அழிக்கும் செயல், தெய்வீகத்தன்மை, தொடக்கம், நிலைபேறு, நேர்மை, மறுமலர்ச்சி, மழைவரவு, மீட்பு, மேன்மை, முழுமை, வளமை, வழிபாடு, விடியல், விழிப்பு.**

<u>மரகதம்</u> Marakatam **(emerald)**

(1) **பச்சை நிறம்** - green
'காசு அறு பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட' (கம்ப.பால.494: 3)

<u>மரகதப் பொருப்பு</u> Marakatap poruppu **(green mountain)**

(1) **நிறைவு, கடவுட்டன்மை** – totality, devine
'நஞ்சு இவரும் மிடற்று அரவுக்கு அமிர்து நனி கொடுத்து ஆயைக் கலுழன் நல்கும் எஞ்சு இல் மரகதப் பொருப்பை இறைஞ்சி அதன் புறம் சார ஏகி மாதோ' (கம்ப.கிட்.762: 5-8)

<u>மரம்</u> Maram **(tree)**

(1) **வளமை** – fertile / abundant
'குருதி வேட்கை உரு கெழு வய மான் வலி மிகு முன்பின் மழ களிறு பார்க்கும் மரம் பயில் சோலை மலிய' (நற்.192: 1-3)

(2) **பயன்** - benefit
'மரம் சா மருந்தும் கொள்ளார், மாந்தர்' (நற்.226: 1)

(3) **உறுதி** - firm
'நாள் இடைப் படாஅ நளிநீர் நீத்தத்து இடிகரைப் பெரு மரம் போல, தீது இல் நிலைமை முயங்குகம் பலவே' (குறு.368: 6-8)

(4) **செல்வம் / செழிப்பு** – wealth / luxuriant
'ஈதலில் குறை காட்டாது அறன் அறிந்து ஒழுகிய தீதிலான் செல்வம் போல், தீம் கரை மரம் நந்த'
(கலி.27: 1-2)

(5) **நாணின்மை** - bashless
'ஊரோர் எடுத்த அம்பல் அம் சினை, ஆராக் காதல் அவிர் தளிர் பரப்பி, புலவர் புகழ்ந்த நார் இல் பெரு மரம் நில வரை எல்லாம் நிழற்றி, அலர் அரும்பு ஊழ்ப்பவும், வாராதோரே' (அகம்.273: 13-17)

(6) **நன்மை** – goodness
'போது விரி பல் மரனுள்ளும் சிறந்த காதல் நல் மரம் நீ; நிழற்றிசினே!' (புறம்.272: 2-3)

(7) **வருத்தம்** - suffer
'விலங்கிடு பெரு மரம் போல, உலந்தன்றுகொல், அவன் மலைந்த மாவே?' (புறம்.273: 6-7)

(8) **துன்பம்** - affliction
'மரம் படு சிறு தீப் போல, அணங்கு ஆயினள், தான் பிறந்த ஊர்க்கே' (புறம்.349: 6-7)

(9) **பண்பின்மை** – unrefined / indecent
'அரம் போலும் கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கட் பண்பு இல்லாதவர்' (குறள்.997)

(10) **ஊக்கமின்மை** - unmotivated
'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை அஃது இல்லார் மரம் மக்கள் ஆதலே வேறு' (குறள்.600)

(11) **வலிமை** - strong
'மரம்போல் வலிய மனத்தாரை' (பழமொழி.224: 1)

(12) **மகவின்மை** - childless
'மக்களை இலாதவர் மரத்தொடு ஒப்ப' (சூளா.418: 1)

(13) **வேட்கை** - wish, desire
'மாட்சி நீரின் மாண்சினை பல்கிய வேட்கை என்னும் விழுத்தகு பெருமரம் புணர்ச்சிப் பல்பூ இணர்த்தொகை ஈன்று நோயி லின்பக் காய் பல தூங்கியாழ வற்புக்கனி யூழறிந் தேந்த' (பெருங்.வத்.9: 73-77)

(ஆ) <u>பழுமரம்</u> Paḻumaram (fruit tree)

(14) **செல்வம்/ செழிப்பு/ கொடை/ பயன்/ நன்மை** – wealth / bounty / benefit / luxuriant
'தாஅவல் அஞ்சிறை நொப்பறை வாவல் பழுமரம் படரும் பையுள் மாலை' (குறு.172: 1-2)

(இ) <u>வாடிய மரம்</u> Vāṭiya maram (withered tree)

(15) **வறுமை** - poverty
'வறியவன் இளமை போல் வாடிய சினையவாய்' (கலி.10: 1)
**துன்பம்** – affliction

'கரி பொய்த்தான் கீழ் இருந்த மரம் போலக் கவின் வாடி, எரி பொத்தி, என் நெஞ்சம் சுடும்ஆயின்'
(கலி.34: 10-11)

(ஈ) <u>வேரொடு வெம்பிய மரம்</u>
Vērōṭu vempiya maram (tree dried from the root)

(16) **அழிவு, இறப்பு, இறுதி** – destruction, death, end
'யார்கண்ணும் இகந்து செய்து இசை கெட்டான் இறுதிபோல், வேரொடு மரம் வெம்ப' (கலி.10: 3-4)

(உ) <u>வற்றல் மரம்</u> Varral maram (dry tree)

(17) **தீமை, இறப்பு** – bad omen, death
'பெரு மரத்து, இலை இல் நெடுங் கோடு வற்றல் பற்றவும்' (புறம்.41: 5)

(18) **அன்பின்மை** - loveless
'அன்பு அகத்து இல்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண் வற்றல்மரம் தளிர்த்தற்று' (குறள்.78)

(19) பயனின்மை - futile
'கூடிக் கூடி உன் அடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரோ வாடி வாடி வழி அற்றேன் வற்றல் மரம் போல் நிற்பேனோ' (திருவா.32: 11.1-4)

(ஊ) <u>முள் மரம்</u> Muḷ maram (thorn tree)
**தீமை** – evil, harm
'இளைதாக முள்மரம் கொல்க - களையுநர் கை கொல்லும் காழ்த்த இடத்து!' (குறள்.879)

(எ) <u>நச்சு மரம்</u> Naccu maram (poisonous tree)

(20) **பயனின்மை, தீமை** – futile, vile
'நச்சப்படாதவன் செல்வம் - நடுவூருள் நச்சு மரம் பழுத்தற்று' (குறள்.1008)

(ஏ) <u>காயா மரம்</u> Kāyā maram (unfruitful tree)

**பயனின்மை** - futile
'பூத்தாலும் காயா மரமுள மூத்தாலும் நன்கறியார் தாமும் நனியுளர் - பாத்தி விதைத்தாலும் நாறாத வித்துள பேதைக்(கு) உரைத்தாலும் தோன்றா துணர்வு' (பழமொழி. 93)

(ஐ) <u>இடையன் எறிந்த மரம்</u>
Iṭayan̲ er̲inta maram (tree cut by shephard)
**துன்பம்** - affliction
'அடையப் பயின்றார்சொல் ஆற்றுவராக் கேட்டால் உடையதொன் றில்லாமை யொட்டின் - படைபெற் றடைய அமர்த்தகண் பைந்தொடி! அஃதால் இடைய னெறிந்த மரம்' (பழமொழி. 223)

(ஒ) <u>தனிமரம்</u> TanI maram (lone tree)

(21) **வலியின்மை** - strengthless
'எதிர்த்த பகையை இளைதாய போழ்தே கதித்துக் களையின் முதிராதே தீர்த்து நனிநயப்பச் செய்தவர் நண்பெல்லாந் தீரத் தனிமரம் காடாத வில்' (பழமொழி. 286)

(ஓ) <u>நிழன்மரம்</u> Nilan̲maram (shade tree)

(22) பயன், **உதவி** - use, help
'அழன்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம் நிழன்மரம் போல் நேரொப்பத் தாங்கிப் பழுமரம்போல் பல்லார் பயன்றுய்ப்பத் தான் வருந்தி வாழ்வதே நல்லாண் மகற்குக் கடன்' (நாலடி.202)

(ஔ) <u>காழ்த்த மரம்</u> Kāl̲tta maram (strong tree)

(23) **அசைவின்மை, உறுதி** - unmoving, firm
'வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும் உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூலும் - புணர்வின்கண் தக்க தறியும் தலைமகனும் இம்மூவர்

பொத்தின்றிக் காழ்த்த மரம்' (திரி.75)

(க) தாள் (அடிமரம்) Tāḷ (stem)

(24) தலைவன் - hero
'தலைமகன் தாள் தனக்காகச் சாகைய நிலைமைகொண் மனைவியா நிமிர்ந்த பூந்துணர் நலமிகு மக்களா முதியர் தேன்களாக் குலமிகு கற்பகம் குளிர்ந்து தோன்றுமே' (சூளா.414)

(ங) வன்மரம் Vanmaram (strong tree)

(25) பாலை – dry land
'வாகையும் பிறவும் வன்மரம் ஒடுங்கி' (பெருங்.உஞ்.52: 44)

(ஒப்பு) Tree அரசநிலை, அழகு, அறிவாற்றல், ஆரோக்கியம், இருபால் தன்மை, இறப்பின் வெற்றி, உறுப்புகளின் இணைவு, சிறந்த தன்மை, தண்டனை, தியாகம், நிலைபேறு, நிலையான மறுபிறப்பு, நிலையான மெய்ப்பொருள், நீண்ட வாழ்நாள், நீதி, புகலிடம், மகிழ்ச்சி, மனித இயல்பு, மீட்பு, மேன்மை, வாழ்க்கை.

**மராஅம்** **Maraam (a tree)**

(1) கடவுட்டன்மை – godhood / devine existance
'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்' (குறு.87: 1)

(ஆ) மரவம் Maravam

(2) உறுதி / ஆற்றல் / வலிமை – firm / strength / power
'மள்ளர் அன்ன மரவம் தழீஇ, மகளிர் அன்ன ஆடுகொடி நுடங்கும் அரும் பதம் கொண்ட பெரும் பத வேனில்' (ஐங்.400: 1-3)

**மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன்** Maruttuvanpāl māḷāta kātal nōyāḷan **(the sick trusting the doctor)**

(1) அடியவர் - disciple
'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால் மீளாத் துயர்தரினும் .. .. .. ஆளா உனது அருளே பணிப்பேன் அடியேனே' (நாலா.691: 1-3)

**மருதம் / மருது** Marutam / marutu **(a tree)**

(1) வேளாண் நிலம் – agricultural region
'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' (தொல்.951: 3)

(2) வைகறை, விடியல் – early morning, dawn
'வைகறை விடியல் மருதம்' (தொல். 954: 1)

(3) ஊடல் – petty quarrel
'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை தேருங்காலை திணைக்குறிப்பொருளே' (தொல்.960)

(5) முற்றுகை, வெற்றி - beseigt, victory
'உழிஞை தானே மருதத்துப் புறனே' (தொல்.1010)
'முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் அனைநெறி மரபிற்றாகும் என்ப' (தொல்.1011)

(6) செழிப்பு - exuberance
'இருள் புனை மருதின் இன் நிழல் வதியும்' (நற்.330: 5)

(7) தலைவி - heroine
'உளைப்பூ மருதத்துக் கிளைக் குருகு இருக்கும் தண் துறை ஊரன்' (ஐங்.7: 4-5)

(8) வளமை – fertile / luxuriant
'அம்ம வாழி, தோழி! மகிழ்நன் மருது உயர்ந்து ஓங்கிய விரிபூம் பெருந் துறை' (ஐங்.33: 1-2)

(9) நெடுமை, நறுமணம் – lofty, fragrant
'கணைக்கால் நெடுமருது கான்ற நறுந்தாது' (திணை.ஐம்.32: 1)

<u>மருதம்</u> **(பண்)** Marutam **(a melody)**

(1) **இன்பம் / இனிமை** – pleasure / sweetness
'குரு மணி யானை இயல் தேர்ப் பொருநன் திருமருத முந்துறை முற்றம் குறுகி, தெரி மருதம் பாடுப' (பரி.தி.2: 73)

<u>மருந்து</u> Maruntu **(medicine)**

(1) **நன்மை** – good / advantage
'விருந்தின் தீம் நீர் மருந்தும் ஆகும்' (நற்.53: 8)
(2) **பயன்** – benefit / cure
'தோற்றம் அல்லது நோய்க்கு மருந்தாகா வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி' (குறு.263: 3-4)
(3) **இதம்** – comfort / soothing
'மையல் நெஞ்சிற்கு எவ்வம் தீர நினக்கு மருந்து ஆகிய யான்' (ஐங்.59: 2-3)
(4) **சொல்** - word
'.. .. .. .. நினைந்த சொல், திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய மருந்து போல், மருந்து ஆகி' (கலி.17: 18-20)
(5) **ஆக்கம்** – restore / cure
'மருந்து அறைகோடலின் கொடிதே, யாழ நின் அருந்தியோர் நெஞ்சம் அழிந்து உக விடினே' (கலி.129: 24-25)
(6) **மாண்பு** – honour / nobility
'பொருந்தாப் பழியென்னும் பொல்லாப் பிணிக்கு மருந்தாகி நிற்பதாம் மாட்சி' (பழமொழி.40: 1-2)
(7) **துன்பம் களைதல்** – remove distress / heal
'அல்லல் ஒருவர்க் கடைந்தக்கால் மற்றவர்க்கு நல்ல கிளைகள் எனப்படுவார் - நல்ல வினைமரபின் மற்றதனை நீக்கும் அதுவே மனைமர மாய மருந்து' (பழமொழி. 350)

<u>மருப்பு</u> Maruppu **(tusk)**

(1) **வளைவு** - curved
'மருப்பராய் வளைந்தால் ஒக்கும் வாள்மதி' (திருநா.தேவா.2047: 2)
(2) **வெண்மை** - white
'காறார் வெண்மருப்பா கடவூர்த்திரு வீரட்டத்துள்' (சுந்.தேவா.462: 3)

<u>மலங்கு</u> **(விலாங்கு மீன்)** Malaṅku **(a fish)**

(1) **கள்ளச்செயல், ஏமாற்றுதல்** – guile, deceit
'பாம்பிற்கு ஒருதலை காட்டி ஒருதலை தேம்படு தெண்கயத்து மீன்காட்டும் - ஆங்கு மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார் விலங்கன்ன வெள்ளறிவி னார்' (நாலடி.375)

<u>மலர்கை மணி</u> Malarkai maṇi **(gem in hand(palm))**

(1) **தெளிவு** - clear
'வழுவல் இல் பொருள்களை மலர்கையின் மணியென முழுவதும் உணரும் எம் முனைவரன் அறிவே' (நீலகேசி.450: 3-4)

<u>மலர் கையேந்தல்</u> Malar kaiyēntal **(holding flower)**

(1) **அழகு, ஈர்ப்பு** – beauty, entice / attract
'வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின் மலர் கையேந்தி விலைமீன் உணங்கற் பொருட்டாக வேண்டுருவம் கொண்டு வேறோர்' (சிலப்.7.10)

**(ஆ)** <u>ஞாழல் கையேந்தல்</u> Ñāḻal kaiyēntal

(2) **இன்ப வாழ்வு** - love life
'நிணங்கொள் புலால் உணங்கனின்று புள்ளோப்புதல் தலைக்கீடாகக் கணங்கொள் வண்டார்த்துலாம் கன்னிநறு ஞாழல் கையிலேந்தி' (சிலப்.7.9)

**(இ)** <u>நீலம் கையேந்தல்</u> Nīlam kaiyēntal

(3) **காதல்** - love
'கள்வாய் நீலம் கையினேந்திப் புள்வாய் உணங்கல் கடிவாள்' (சிலப்.7.22)

(ஈ) **தாமரைக் கையில் சங்கு சக்கரம் ஏந்துதல்** Tāmarai kaiyil caṅku cakkaram ēntutal (bearing conche and wheel in both hands) (Vishnu)

(4) **வெற்றி, கொடை** - victory, bounty
'பகை அணங்காழியும் பால்வெண் சங்கமும் தகைபெறு தாமரைக் கையினேந்தி' (சிலப்.11: 47-48)

(உ) **வெண்மலர் கையிலேந்தி இருத்தல்** Veṇmalar kaiyilēnti iruttal (bearing white flower in hand)

(5) **உவகை** - happiness / blizz
'அங்கவன் அரசர் கோமான் குறிப்பறிந்து அருளப் பட்டீர் ஈங்கினிப் புகுமின் என்றான் இறைவனை அவனும் சேர்ந்தான் வீங்கிருந் தானை யானும் வெண்மலர் பிடித்த கையால் ஓங்கிருந் தானம் காட்டி உவந்தினிது இருக்க வென்றான்' (சூளா.104)

**மலர் துதைவிலாத சோலை** Malar tutaivilāta cōlai **(flowerless grove)**

(1) **மகப்பேறின்மை** - childlessness
'தொக்கிள மலர் துதைவிலாத சோலையும் .. .. .. மக்களை இலாததோர் மனையும் ஒக்குமே' (சூளா.413)

**மலர் மாரி பெய்தல் (shower of flowers)**

(1) **மேன்மை / சிறப்பு** - enimence
'பீடுகெழு நங்கை பெரும்பெயர் ஏத்தி வாடா மாமலர் மாரி பெய்தாங்கு' (சிலப்.23: 195-196)

(ஆ) **வானவர் மலர் மாரி பொழிதல்** Vāṉavar malar māri poḻital

(2) **வாழ்த்து** – bless, felicitate
'நின்ற வெல்லையுள் வானவரு நெடுமாரி மலர்பொழிந்து' (சிலப்.24: 8)

**மலை** Malai **(mountain)**

(1) **வளமை** - fertile
'வள மலை நாடன் நெருநல் நம்மொடு' (நற்.25: 5)

(2) **உயர்ச்சி, பேரளவு** - lofty, huge
'வான் உற நிவந்த பெரு மலைக் கவாஅன்' (நற்.53: 4)

(3) **திண்மை** - firm
'கானம் திண்ணிய மலை போன்றிசினே' (நற்.240: 10)

(4) **பயன்பாடு** - utility
'பழியும் அஞ்சும், பய மலை நாடன்' (குறு.143: 2)

(5) **கடவுட்டன்மை / இறையிருக்கை** - devine, sear of god
'மலை உறை கடவுள் குலமுதல் வழுத்தி' (ஐங்.259: 3)

(6) **எதிரொலித்தல், சுயமற்ற தன்மை** – echo, not independent
'இலங்கு தாழ் அருவியோடு அணி கொண்ட நின் மலைச் சிலம்பு போல், கூறுவ கூறும் இலங்கு ஏர் எள் வளை' (கலி.46: 25-27)

(7) **அசைவின்மை, நிலைபேறு** – stable, unmoving
'நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது' (குறள்.124)

(8) **வலிமை** - strength
'மைந்திறை கொண்ட மலைமார்ப!' (பழமொழி. 92: 3)

(ஆ) **அடுக்கம்** Aṭukkam
**உயர்ச்சி** - height
'வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து' (நற்.28: 6)
**கடவுட்டன்மை** - devine
'சூருடை அடுக்கத்த கொயற்கு அருந் தழையே?' (நற்.359: 9)

(இ) **வரை** Varai
**இறைமை / கடவுட்டன்மை** – god / godhood
'கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுந்து' (நற்.165: 4)
**உயர்வு** - high, lofty

'உரை சால் உயர் வரைக் கொல்லிக் குடவயின்' (நற்.185: 7)

(9) **அழகு** - beauty
'அணி வரை மருங்கின் ஐது வளர்ந்திட்ட' (நற்.344: 1)

(10) புலப்பாடு - perceive
'ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும் சிறு வரை சென்று நின்றோர்க்கும் தோன்றும்' (புறம்.114: 1-2)

(11) பெருமை / பேரளவு - great / huge
'உயர் மருப்பு ஏந்திய வரை மருள் நோன் பகடு' (புறம்.161: 17)
**வளம்** - fertile
'இன்று செலினும் தருமே; சிறு வரை நின்று செலினும் தருமே' (புறம்.171: 1-2)

(12) **அளவின்மை / அளவிடற்கருமை** – unmeasurable / limitless
'வரை அளந்து அறியாத் திரை அரு நீத்தத்து' (புறம்.238: 17)

(ஈ) <u>பொதியில்</u> Potiyil
**உயர்ச்சி** - lofty
'ஆடு மழை தவழும் கோடு உயர் பொதியில்' (நற்.379: 11)

(13) **அருமை** – rare / worthy
'மன் உயிர் அறியாத் துன்அரும் பொதியில்' (குறு.376: 1)

(14) **பெறல் அருமை / தலைவி** - difficult to get / achieve, heroine
'புகல் அரும், பொதியில் போலப் பெறல் அருங்குரையள்' (அகம்.322: 14-15)

(உ) <u>குறும்பொறை</u> Kurumporai

(15) **வறட்சி / வெம்மை** – drought / hot
'வரிமரல் வாடிய வான்நீங்கு நனந்தலைக் குறும்பொறை மருங்கின் கோட்சுரம் நீந்தி' (அகம்.271: 4-5)

(ஊ) <u>குன்றம்</u> Kunram

(16) **தண்மை** – cool
'அழுந்துபட வீழ்ந்த பெருந் தண் குன்றத்து' (நற்.2: 1)
**உயர்வு** - high / lofty
'நாள் மழை தலைய நல் நெடுங் குன்றத்து' (நற்.17: 1)

(17) **பாதுகாப்பு** – security, protection
'குன்ற வேலித் தம் உறைவின் ஊரே' (நற்.176: 11)
**செழிப்பு, வளமை** - fertile
'செழும்பல் குன்றம் நோக்கி, பெருங்கலி வானம் ஏர்தரும் பொழுதே!' (குறு.287: 7-8)

(18) **விரிவு** - wide / spreading
'கோடை நீடிய அகன் பெருங் குன்றத்து' (அகம்.45: 3)

(19) **நன்மை** - goodness
'ஒன்று நன்கு உடைய பிறர் குன்றம்; என்றும் இரண்டும் நன்கு உடைத்தே கொண் பெறுங் கானம்' (புறம்.156: 1-2)

(எ) <u>குன்று</u> Kunru
**உயர்வு** - high
'ஆடு மழை இறுத்தன்று, அவர் கோடு உயர் குன்றே' (நற்.68: 10)
**கடவுட்டன்மை** - divine
'உலகிற்கு ஆணியாகப் பலர் தொழ, பல வயின் நிலைய குன்றின் கோடுதோறு' (நற்.139: 1-2)

(20) **நிலைபேறு** – stable / everlasting
'குன்று நிலை தளர்க்கும் உருமின் சீறி' (பதி.63: 10)

(21) **பயன்** - use
'நிலவரை ஆற்றி, நிறை பயன் ஒருங்கு உடன் நின்று பெற நிகழும் குன்று' (பரி.15: 6-7)

(22) **புகழ்** - fame
'திசை நாறிய குன்று அமர்ந்து' (பரி.17: 29)
**வளமை, அழகு** – fertile, beauty
'ஐ வளம் பூத்த அணி நிகழ் குன்றின்மேல்' (பரி.18: 15)

(23) **தடை / இடையூறு** – obstacle / hindrance
'குன்று விலங்கு சிறையின் நின்றனை எனாஅ' (புறம்.169: 5)

(24) **குணம்** – good quality / conduct
'குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது' (குறள்.29)

(25) **மதிப்பு** - value
'குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு நின்றன்னார் மாய்வர் நிலத்து' (குறள்.898)

(26) பெருமை, மேன்மை – greatness, eminence
'குன்றிய சீர்மையர் ஆயினும் சீர்பெறுவர் குன்றன்னார் கேண்மை கொளின்' (நாலடி.176: 3-4)

(ஏ) <u>சிலம்பு</u> Cilampu
உயர்வு - high, lofty
'ஆடு மழை தவழும் கோடு உயர் பொதியில் ஓங்கு இருஞ் சிலம்பில் பூத்த' (நற்.379: 11-12)
கடவுட்டன்மை - devine
'கறி வளர் சிலம்பிற் கடவுட் பேணி' (ஐங்.243: 1)

(ஒ) <u>செம்பொன்மலை</u> Cemponmalai (gold mountain)
(27) சிறப்பு – grand, special
'குட காற்று எறிந்த குப்பை, வட பால் செம்பொன்மலையின், சிறப்பத் தோன்றும்' (பெரும்.239-240)

(ஓ) <u>மலையை அகழ்தல்</u> Malaiyai akaltal (dig the mountain)
(28) ஆற்றல் - powerful
'மலை அகழ்குவனே; .. .. ..' (பட்.271)

(ஔ) <u>மஞ்சு சூழ் மலை</u> Mañcu cūl malai (cloud covered mountain)
(29) மாட்சி / வனப்பு – noble / beauty
'மஞ்சு சூழ் மலையின் மாணத் தோன்றும்' (சிலப்.10: 146)

(க) <u>வரை துடித்தல்</u> Varai tuṭittal (mount tremor
(30) தீமை, அழிவு - evil omen
'நிலம் துடித்தன நெடு வரை துடித்தன' (கம்ப.சுந்.298: 1)

(ங) <u>வரை பிதிர வீழ்தல்</u> Varai pitira vīltal (mountain breaking to pieces)
(31) தீமை, இறப்பு, அழிவு - evil omen
'.. .. .. அரு வரை பிதிர வீழ்ந்தது அசனி ஒலி பெறா' (கம்ப.யுத்.3662: 2-3)

(ஒப்பு) <u>Mountain, Hill</u> அமைதி, அறிவுநுட்பம், உயரம், உயர்ந்த எண்ணம், எல்லையற்ற நிலை, கடந்தநிலை, கடவுட்டன்மை, கம்பீரம், சுதந்திரம், தடைவேலி, தனித்த பண்பு, தூய்மை, நிலைபேறு, புனித ஆத்மா, புனிதம், மறைபொருள், மீட்புநிலை, முழுமை, மையம், வலிமை, வளமை, விவேகம்; ஆடம்பரம், தரிசுநிலை, தற்பெருமை.
மலை ஏறுதல் - அறிவின் வளர்ச்சி, உயர்நிலைக்குச் செல்லல்.

<u>மழை</u> Malai **(rain)**
(1) இயக்கம் / பயணம் – movement, journey
'செல் மழை இயக்கம் காணும் நல் மலை நாடன் காதல் மகளே?' (நற்.44: 11-12)
(2) தண்மை - cool
'படு மழை பொழிந்த தண் நறும் புறவில்' (நற்.361: 4)
(3) நுண்மை - minute
'நுண் மழை தளித்தென நறு மலர் தாஅய்' (ஐங்.328: 1)
(4) பயன் – use / yield
'யாண்டு பிழைப்பு அறியாது, பய மழை சுரந்து நோய் இல் மாந்தர்க்கு ஊழி ஆக!' (பதி.21: 30-31)
(5) தூய்மை / வெண்மை – pure / white
'கறை இல் கார் மழை பொங்கி அன்ன' (பரி.14: 19)
(6) அழகு - beauty
'அச்சிரக்கால் ஆர்த்து - அணி மழை - கோவின்றே' (பரி.18: 38)
(7) வளமை - fertile
'வான் ஆர் எழிலி மழை வளம் நந்த' (பரி.தி.1: 1)
(8) வள்ளன்மை, புரத்தல், தாய்மை, பாதுகாத்தல் – benevolence, nurture, motherly, protect

'குழவியைப் பார்த்து உறூஉம் தாய் போல், உலகத்து மழை சுரந்து அளித்து ஓம்பும் நல் ஊழி யாவர்க்கும்' (கலி.99: 4-5)

(9) **வலிமை** - strength
'அரவு எறி உருமோடு ஒன்றிக் கால் வீழ்த்து உரவு மழை பொழிந்த பானாட் கங்குல்' (அகம்.182: 9-10)

(10) **கற்பு** - chaste
'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள் பெய் எனப் பெய்யும் மழை' (குறள்.55)

(11) **பயன் எதிர்பாராமை** – not expecting return of gratitude
'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு என் ஆற்றும் கொல்லோ உலகு' (குறள்.211)

(12) **உதவி** - help / assistance
'மெய்யா உணரிற் பிறர்பிறர்க்குச் செய்வதென்? மையார் இருங்கூந்தல் பைந்தொடி! எக்காலும் செய்யா ரெனினும் தமர்செய்வர் பெய்யுமாம் பெய்யா தெனினும் மழை' (பழமொழி.351)

(13) **செல்வம்** - wealth
'.. .. .. சீர்த்தக்க செல்வம் மழைமதர்க்கண் சின்மொழிப் பேதை ஊர் நல்விருந்து ஆக நமக்கு' (கார்.36: 2-4)

(14) **ஒலி** - sound
'மங்கல கீதம் பாட மழை நிகர் தூரியம் முழங்க' (பெரிய.268: 1-2)

(15) **நடுநிலைமை** - neutrality
**'உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும் நட்பின் கொழுமுனை பொய்வழங்கின் இல்லாகும் செப்பம் உடையார் மழையனையர் இம்மூன்றும் செப்ப நெறி தூராவாறு'** (திரி.83)

**(ஆ) <u>மழை தருதல்</u>** Maḻai tarutal (yield / give rain

**கற்பு** - chastity
'அரு மழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே' (கலி.39: 6)

**(இ) <u>பெயல்</u>** Peyal

**வண்மை** – bounty
'பொறுத்தல் செல்லாது இறுத்த வண் பெயல்' (நற்.99: 7)

**தண்மை** - cool
'வண் பரி தயங்க எழீஇ, தண் பெயல்' (நற்.121: 9)

**தூய்மை** - pure
மாசு அறக் கழீஇய யானை போலப் பெரும் பெயல் உழந்த இரும் பிணர்த் துறுகல்' (குறு.13: 1-2)

**வளமை** - fertile
'பெயின் நந்தி, வறப்பின் சாம், புலத்திற்குப் பெயல் போல், யான் செலின் நந்தி, செறின் சாம்பும், இவள் என்னும் தகையோதான்' (கலி.78: 19-20)

(16) **நன்மை** – advantage / good
'வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம் பெயற் காரும் ஆர்கலி தலையின்று' (அகம்.54: 2-3)

(17) **மிகுதி** - abundance
'காடு கவின் எதிரக் கனை பெயல் பொழிதலின்' (அகம்.164: 4)

(18) **முறைமை, நடுநிலைமை** – order / propriety, neutral
'முறை கோடி மன்னவன் செய்யின், உறை கோடி ஒல்லாது வானம் பெயல்' (குறள்.559)

**இயக்கம்** - function
'உரவுப் பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து' (அகம்.328: 3)

(19) **இனிமை** - sweet
'கடன்முகந்து தீம்பெயலை யூழ்க்கு மெழிலி' (இன்னிலை.9:1)

**(ஈ) <u>சுரத்திடை பெய்த பெயல்</u>**

Curattiṭai peita peyal (rain in wilderners)

(20) **பயனின்மை, வீண்** – waste, futile
'கரப்புடையார் வத்த கடையும் உதவா துரப்புடைய மன்னர்க்கே துப்புரவ தல்லால் நிரப்பிடும்பை மிக்கார்க் குதவஒன் றீதல் சுரத்திடைப் பெய்த பெயல்' (பழமொழி. 373)

**(உ) <u>வான்</u>** Vāṉ

**கற்பு** – chastity

'.. .. .. தேமொழி! - வறன் ஓடின் வையகத்து வான் தரும் கற்பினாள்' (கலி.16: 19-20)

**வண்மை** - benevolance

'மாகவான் நிகர் வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்' (சிலப்.1: 23)

(ஊ) <u>மாரி</u> Māri

**வண்மை / கொடை / ஈகை** - benevolance

'ஆர் அரண் கடந்த மாரி வண் மகிழ்' (நற்.190: 2)

**தண்மை** - cool

'விழுந்த மாரிப் பெருந் தண் சாரல்' (நற்.244: 1)

**வளமை** - fertile

'மாரி வாய்க்க! வளம் நனி சிறக்க!' (ஐங்.10: 2)

(21) **புரத்தல்** - nurture

'.. .. .. பாரி ஒருவனும் அல்லன் மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே' (புறம்.107)

(22) **எல்லை இன்மை** - limitless

'அறு குளத்து உகுத்தும், அகல் வயல் பொழிந்தும், உறும் இடத்து உதவாது உவர் நிலம் ஊட்டியும், வரையா மரபின் மாரிபோல' (புறம்.142: 1-3)

**பயன்** – benefit, use

'சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய் மாரிபோல் மாண்ட பயத்தாம்' (நாலடி.232:1-2)

(23) **செல்வம்/ பொருள் வரவு** - wealth / income

'.. .. .. புதுப்புனலும் மாரி அறவே அறுமே, அவரன்பும் வாரி அறவே அறும்' (நாலடி.370:2-4)

(24) **நிலையாமை, நில்லாமை** – transitory, unstable

'மாரியும் திருவும் மகளிர் மனமும் தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனும்' (பெருங்.உஞ்.35: 156-157)

(25) **அருள், அறம்** – mercy, virtue

'அடங்க லில்லேற் கருளினா லறங்கூர் மாரி பொழிந்தோய் நின்' (நீலகேசி.139: 3)

(26) **காமம்** – passion

'விரிகதிர் ஆரம் மின்னித் தாரெனும் திருவில் வீசிக் குரிசில்மா மேகம் பெய்த கொழும்புயற் காம மாரி' (சீவக.2476: 1-2)

(எ) <u>கார்</u> Kār

**வளமை, அழகு** – fertile, beauty

'நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை, கார் பெற்ற புலமே போல், கவின் பெறும்' (கலி.38: 11-12)

(ஏ) <u>காலமாரி</u> Kālamāri (aeonian rains)

(27) **விரைவு / அழிவு** - speed / destruction

'கால மாரியின் அம்பு தைப்பினும்' (புறம்.287: 3)

(ஐ) <u>துளி</u> Tuḷi

(28) **இன்பம், இரக்கம்** – pleasure, sympathy

'துளி இன்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு' (குறள்.557)

**வளமை** - fertile

'அளியானை அண்ணிக்கும் ஆன்பால் தன்னை வான்பயிரை அப்பயிரின் வாட்டம் தீர்க்கும் துளியானை' (திருநா.தேவா.863: 1-3)

(ஒ) <u>வானம்</u> Vāṉam

**வளம், உயர்வு, மேன்மை** – fertile, lofty, eminent

'மகனுரைக்கும் தந்தை நலத்தை ஒருவன் முகனுரைக்கும் உள்நின்ற வேட்கை - அகல்நீர்ப் புலத்தியல்பு புக்கான் உரைக்கும் நிலத்தியல்பு வானம் உரைத்து விடும்' (நான்.71)

(ஓ) <u>பருவ மழை</u> Paruva maḻai (seasonal rain)

**கொடை** - benevolance

'பருவ மழைச் செங்கை பற்றி' (பெரிய.3819: 5)

(ஒப்பு) Rain அதிர்ஷ்டம், அறிவு, இரக்கம், இறைமைநிலை, உண்மை, உலகப்பொருத்தம், தூய்மை, நடனம், நீர், புனிதம், வளமை, விவேகம், விளைவளம், வேளாண்மை, வாழ்க்கை.

**மன்றத்துப் புன்னை** Manrattup punnai **(a tree in an open yard)**

(1) **துன்பம், துயர் உறுதல்** – affliction, suffers
'மன்றத்துப் புன்னைப் போல மரம்படு துயரம் எய்தி' (திருநா.தேவா.109: 1-2)

**மனு** Manu

(1) **அறம்** – ethical code
'மானம் நேர்ந்து அறம் நோக்கி மனுநெறி போன தண் குடை வேந்தன் புகழ் என' (கம்ப.பால.17: 1-2)

**மா** Mā **(mango)**

(1) **தலைவி** - heroine
'உறு வளி தூக்கும் உயர் சினை மாவின் நறு வடி ஆர் இற்றவை போல் அழிய' (கலி.84: 1-2)

(2) **நன்னன்** – a king
'.. .. .. .. நன்னன் நறுமா கொன்று நாட்டிற் போக்கிய' (குறு.13: 2-3)

(ஆ) **மாங்கனி** Māṅkani (mango fruit)

(3) **இனிமை** - sweetness
'நன்மதுர மாங்கனியில் இருந்ததனை நறுங்கூந்தல்' (பெரிய.1744: 5-6)

**மாடலன்** Māṭalan **(a Brahmin)**

(1) **அறிவு** - knowledge
'நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை மாமறை முதல்வன் மாடலன் என்போன் .. .. .. நாவல் அந்தணன்' (சிலப்.15: 12-13, 20)

**மாணை** Māṇai **(a creeper)**

(1) **குறிஞ்சித்திணை** - mountanous tract
'துறுகல் அயலது மாணை மாக்கொடி துஞ்சுகளிறு இவரும் குன்றநாடன்' (குறு.36: 1-2)

**மாதிரம் எரிதல்** Mātiram erital **(burning sky)**

(1) **தீமை, தோல்வி** - bad omen, failure / defeat
'.. .. .. எரிந்த மாதிரம்' (சூளா.1220: 2)

**மாதுளம் பீசம்** Mātuḷam pīcam **(pamegranate seed)**

(1) **சிவப்பு நிறம், வினைப்பயன்** – red, effect of actions
'மாதுளம் பீசம் உண்மான் அரக்கின் நிறம் போதுளங் காண்பது போல மற்றென்றான்' (நீலகேசி.576: 3-4)

(2) **உள்ளீடு** - core
'அங்குரம் தன்கண்ணும் செல்லாது அரக்கொடு மங்கின பீசத்து உருவம் மலரின்கண் தங்கின என்னும்சொல் தத்துவமாக் கொண்ட அங்குலி மாரனை ஆதன்மற்று என்னாய்' (நீலகேசி.583)

**மாநிதிக்கிழவன்** Mānitikkilavan **(kubera)**

(1) **தலைவன் / வளம்** – hero / richness
'மாநிதிக் கிழவனும் போன்ம் என, மகனொடு தானே புகுதந்தோனே!' (அகம்.66: 17-18)

(ஆ) **வாணன்** Vāṇan

(2) **செல்வம்** - wealth
'தென்புல மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழுநிதி பெறினும் பழிநமக்கு எழுக என்னாய்' (மது.202-204)

(இ) **நிதிக்கோன்** Nitikkōn

**செல்வம்** - wealth
'பயிலும் உருப் பல கொண்டு நிதிக்கோன் தங்கப் பயில் அளகாபுரி வகுத்த பரிசு காட்டும்' (பெரிய.1: 9. 101)

(ஈ) <u>நிதிமன்னவன்</u> Nitima<u>nn</u>ava<u>n</u>

(3) **செல்வம், போகம்** – wealth, life pleasures
*'போகம் நீடுநிதி மன்னவன் மன்னும் புரங்கள் ஒப்பன வரம்பில ஓங்கி'* (*பெரிய*.246: 1-2)

**<u>மாயோன்</u>** Māyō<u>n</u> **(Vishnu)**

(1) **முல்லைத்திணை** - forest tract
*'மாயோன் மேய காடுறை உலகமும்'* (*தொல்*.951)

(2) **சிறப்பு** - eminence
*'வல்லா ராயினும் வல்லுந ராயினும் புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன உரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற'* (*புறம்*.57: 1-3)

(ஆ) <u>நெடியோன்</u> Neṭiyō<u>n</u>

(3) **காத்தல்** - protect
*'.. .. .. .. பல்லா நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும்'* (*பழமொழி*. 75)

**<u>மாரன்</u>** Māra<u>n</u> **(cupid)**

(1) **அழகு** - beauty
*'மாரன் ஒப்பார் மார்பணி கலவி'* (*பரி*.8: 119)

(2) **காமம்** - passion
*'மாதரணி மென்முலைத்தோய் மாரா'* (*தனிப்*.479: 1)

(ஆ) <u>மதன்</u> Mata<u>n</u>

**அழகு** - beauty
*'மயல் விளை மதனற்கும் வடிவு மேன்மையான்'* (*கம்ப.பால*.672: 4)

**<u>மாலம்</u>** (குங்கும மரம்) Mālam **(a tree)**

(1) **நறுமணம்** - fragrance
*'புடைவாசம் கொள மாலம் பூங்கவரி எடுத்தெறிய'* (*சூளா*.170: 3)

**<u>மாலை</u>** Mālai **(garland)**

(1) **கற்பு** - chastity
*'கற்பெனும் மாலை வீசி நாணெனும் களிவண்டு ஒப்பி'* (*சீவக*.2073: 3)

(ஆ) <u>மாலைகள் புலால் நாற்றம் வீசுதல்</u> Mālaikaḷ pulāl nā<u>rr</u>am vīcutal (meat smell in garlands)

(2) **தீமை, இறப்பு, அழிவு** - evil, destruction, death
*'முடியின் மாலைகள் புலாலொடு முழு முடை நாறும்'* (*கம்ப.ஆரண்*.431: 4)

**<u>மாலை</u>** (பொழுது) Mālai **(evening)**

(1) **துன்பம்** - affliction
*'மன்றம் போழும் புன்கண் மாலை'* (*நற்*.73: 4)

(2) **அருளின்மை** - mercyless
*'ஐது வந்து இசைக்கும் அருள் இல் மாலை'* (*நற்*.69: 9)

(3) **அன்பின்மை** - loveless
*'நள்ளென வந்த நாரின் மாலை'* (*குறு*.118: 2)

(4) **தனிமை** - loneliness
*'புலம்பு கொள் மாலை மறைய'* (*ஐங்*.197: 3)

(5) **உயர்வு / சிறப்பு** – eminent / special
*'பீடு கொள் மாலைப் பெரும் படைத் தலைவ!'* (*பதி*.24: 5)

(6) **கருமை** – black / dark
*'தேறித் தெளிந்து, செறி இருள் மால் மாலை'* (*பரி*.12: 82)

(7) **மயக்கம்** - confusion
*'.. .. .. .. இறுத்தந்த மருள் மாலை!'* (*கலி*.118: 8)

(8) **கடுமை** - hard / harmful
*'கூற்று நக்கது போலும், உட்குவரு கடு மாலை!'* (*கலி*.120: 9)

(9) **அழகு** - beautiful
*'கணிநிறை வேங்கை மலர்ந்து வண்டார்க்கும் அணிநிற மாலைப் பொழுது'* (*திணை.ஐம்*.9: 3-4)

(ஆ) <u>அந்தி</u> Anti

**துன்பம்** - affliction
*'உகு பலி அருந்திய தொகு விரற் காக்கை புன்கண் அந்திக் கிளைவயின் செறிய'* (*நற்*.343: 5-6)

(10) **இறப்பு** - death
*'பகல் மாய் அந்திப் படுசுடர் அமையத்து'* (*அகம்*.48: 23)

(11) **(இறை) வழிபாடு** – worship (of god)
'அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும் முத் தீ விளக்கின்' (புறம்.2: 22-23)

(12) **மகிழ்ச்சி** - glad
'கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி, ஆடு துவன்று விழவின், நாடு ஆர்த்தன்றே' (மது.427-428)

(13) **இரங்கல்** - pity
'அந்திமாலை வந்ததற்கு இரங்கி' (சிலப்.8: 84)

(14) **சிவப்பு நிறம்** - red
'செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க அந்திச் செக்கர் வெண்பிறை தோன்ற' (சிலப்.27: 145-146)

**(இ) <u>எரி சிந்தி வந்த மாலை</u>** Eri cinti vanta mālai (eventime, spilling fire)

(15) **துன்பம்** - suffering
'தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார் நாட்டுளதாம் கொல் வளைநெகிழ எரிசிந்தி வந்த இம் மருண்மாலை' (சிலப்.7: 40)

**(ஈ) <u>அந்தியம் போது</u>** Antiyam pōtu

(16) **அழிவு, இறப்பு** – destruction, death
'அந்தியம் போதில் அரி உருவாகி அரியை அழித்தவனை' (நாலா.6: 5-6)

**(ஒப்பு)** <u>Evening</u> **அமைதி, ஓய்வு, நிறமற்ற நிலை, பருவம், மனித வாழ்க்கை; சிக்கல்.**

## <u>மான்</u> Mān (deer)

(1) **விரைவு** - quick, speed, fast
'கடு மான் புல்லிய காடு இறந்தோரே' (நற்.14: 11)

(2) **மடமை** - ignorant
'கழிப் பெயர் களரில் போகிய மட மான்' (நற்.242: 7)

(3) **நொய்ம்மை, மென்மை** – fragile,soft
'நொய்யதோர் மான்மறி கைவிரலின் நுனிமேல் நிலையாக்கி' (திருஞான.தேவா.69: 1-2)

(4) **பெண்** - woman
'தனது மெய்க்கு மலரணையானது தழலிறைக்கும் தனச்சுமையால் இடைமினது மெய்க்கும் துவளுமிம் மான் அந்த மேனகைக்கும் வெகுமிச்ச நாணுண்மை' (தனிப்.839: 1-4)

**(ஆ) <u>கவரிமான்</u>** Kavarimān

(5) **மானம்** - honour
'மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார் உயிர் நீப்பர் மானம் வரின்' (குறள். 969)

**(இ) <u>கலை</u>** Kalai

(6) **தலைவன்** - hero
'நீர் சூழ் மா மலர் அன்ன கண் அழ, கலை ஒழி பிணையின் கலங்கி' (நற்.37: 5-6)

(7) **விரைவு** - quick
'சிலைமாண் கடுவிசைக் கலைநிறத்து அழுத்தி' (குறு.272: 5)

(8) **தூய்மை** - pure
'உரிவை மேகலை உடீஇப் பரிவொடு கருவில் வாங்கிக் கையகத்துக் கொடுத்துத் திரிதரு கோட்டுக் கலை மேலேற்றி' (சிலப்.12: 1.30-32)

**(ஈ) <u>மான்நோக்கு</u>** Mānnōkku

(9) **மருட்சி / மயக்கம், மடமை** – reflexicity / confusion, ignorance
'மான் அமர் நோக்கம் காணா ஊங்கே' (நற்.101: 9)

**(உ) <u>ஏப்பெற்ற மான்பிணை</u>** Epperra mānpiṇai

(10) **துன்பம்** - affliction
'ஏப்பெற்ற மான்பிணைபோல் ஏங்குவார் இன்னுயிரை' (சீவக.2965: 3)

**(ஊ) <u>கவரிமா</u>** Kavarimā

**மானம்** – honour

'கற்றவர் மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்' (கம்ப.அயோ.6: 4)

(எ) <u>கங்கையில் அகப்பட்ட பிணை</u> Kaṅkaiyil akappaṭṭa piṇai (doe in Ganges)

(11) வருத்தம், துன்பம் – suffering, affliction
'கங்கையின் சுழியிற் பட்ட காமரு பிணையின் மாழ்கி' (சீவக.1096: 1)

(ஏ) <u>கவரி</u> Kavari
மானம் - honour
'மானமாக் கவரி வெண் மயிரின் வேய்ந்தன' (சீவக.1201: 2)

(ஐ) <u>புலி நிழற்பட்ட மான்</u> Puli nilarpaṭṭa mān (deer shadowed by tiger)
துன்பம் - affliction
'புலிநிழற் பட்ட மான்போல் போகுயிர் ஆகி நின்றார்' (சீவக.2946: 4)

(ஒ) <u>அடுபுலி கண்ட மான்</u> Aṭupuli kaṇṭa mān (deer seeing a killer tiger)

(28) அச்சம் - fear
'அடுபுலி கண்ட மான்போல் ஆறல வாயினாரே' (சீவக.1137: 4)

(ஓ) <u>மா</u> (கவரிமா) Mā

(29) மானம், மாட்சி - honour, nobleness
'வருந்தல் இல் மானம் மா அனைய மாட்சியர்' (கம்ப.சுந்.506: 1)

(ஔ) <u>வலையிடைப்பட்ட மான்</u> Valaiyiṭaippaṭṭa mān (deer in net)

(30) துயர் / துன்பம் – suffer, affliction
'வலையிடைப் பட்ட மானே போன்றாங்கு அஞ்சி நின்றழைக்கு மாத்துயர் கண்டு' (மணி.13: 32-33)

(ஒப்பு) <u>Deer</u> அழகு, அன்பு, ஆன்மா, இலையுதிர்காலம், உயர்வு, இளமை மீட்புப்பேறு, கன்னிமை, கடவுட்பற்று, கிறித்து, செயலறிவு, தற்கட்டுப்பாடு, தன்னடக்கம், தனிமை, தாய்மைப்பாசம், துல்லியமான செவிப்புல அறிவு, தூய்மை, தூய ஆன்மா, தேடிச்செல்லும் அறிவாற்றல், நிலைபேறு, நீண்ட வாழ்நாள், நேர்த்தி, மென்மை, வளமை, விரைவியக்கம்; அறியாமை, கோழைத்தனம், நிலையாமை, பாலியல் ஆர்வமுனைப்பு.

<u>மான்மதம்</u> (கத்தூரி) Mānmatam **(musk)**

(1) நறுமணம் - fragrance
'மான்மதச் சாந்த மணம்கமழ் தெய்வ' (சிலப்.13: 117)

<u>மிதுனம்</u> Mitunam

(1) அறிவாற்றல் - wisdom
'.. .. .. .. பொருள் தெரி புந்தி மிதுனம் பொருந்த' (பரி.11: 5-6)

(2) கார் - rainy season
'பொதியில் முனிவன் புரை வரைக் கீறி மிதுனம் அடைய' (பரி.11: 11-12)

(ஒப்பு) <u>Gemini</u> அறிவாற்றல், ஆரஞ்சு நிறம், இருமை, உடல், காதலர். காற்று, தொடர்பாற்றல், புதன்கோள், மாறும் இயல்பு, வெப்பம், வேறுபடுத்தல்.

<u>மின்மினி</u> Minmini **(fire fly)**

(1) ஒளி - glow
'பல் மர உயர் சினை மின்மினி விளக்கத்து' (நற்.44: 10)

(2) மிகுதி - abundance
'நிலம் படு மின்மினி போல, பல உடன் இலங்கு பரல் இமைக்கும்' (அகம்.67: 16-17)

(3) விளக்கம் - bright
'மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம்' (அகம்.72: 3)

<u>மின்னல் இன்றி வானம் இடித்தல்</u>

Minnal inri vānam iṭittal **(thunder without lightening)**

(1) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
*'தடித்து இன்றி நெடுவானம் கலந்து இடித்தன'* (கம்ப.சுந்.298: 6-7)

**மின்னு** Minnu **(lightening)**

(1) **ஒளி** - flash
*'மின்னு வசி விளக்கத்து வரும்எனின்'* (நற்.334: 8)

(2) **வலிமை** - power
*'இடி உமிழ் வானத்து இரவு இருள் போழும் கொடி மின்னுக் கொள்வேன் என்றன்னள்'* (கலி.141: 17-18)

(3) **நிலையாமை, அழிவு** - impermanent, destruction
*'செல்வர்யாம் என்றுதாம் செல்வுழி எண்ணாத புல்லறி வாளர் பெருஞ்செல்வம் எல்லில் கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி மருங்கறக் கெட்டு விடும்'* (நாலடி.8)

(ஆ) <u>மின்</u> Min

(4) **வேகம்** - speed
*'வீசுமின் புரை காதன்மேதகு'* (திருஞான.தேவா.3884: 1)

(5) **மறைவு** - disappear / die
*'மன்னுநீர் மொக்குள் ஒக்கும் மானிடர் இளமை இன்பம் மின்னின் ஒத்து இறக்கும்'* (சீவக.1537: 1-2)

(6) **விரைவு** - quickness
*'விண்டலர் கன்ணி சிந்த மின்னிற் சென்றெய்தினானே'* (சீவக.979: 4)

(7) **நுண்மை** - minute
*'வெம்பி வீதி ஓடினார் மின்னின் அன்ன நுண்மையார்'* (சீவக.1103: 4)

(ஒப்பு) <u>Lightning</u> **ஆற்றல், சுருக்கம், செறிவு, திடீர் நிகழ்வு, தூண்டுதல், மழை, வலிமை, வளமை.**

**மீன்** Min **(fish)**

(1) **தலைவி** - heroine
*'.. .. .. .. இருங் கழிக் குருளை நீர்நாய் கொழு மீன் மாந்தி, தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்'* (நற்.195: 1-3)

(ஆ) <u>மீன் துஞ்சுதல்</u> Min tuñcutal (fish to sleep)

(2) **விழிப்பு நிலை** - awake
*'மீன் கண் துஞ்சும் பொழுதும் யான் கண் துஞ்சேன்'* (நற்.319: 10)

(ஒப்பு) <u>Fish</u> **அதிர்ஷ்டம், அறிவாற்றல், ஆரோக்கியம், ஆழமான வாழ்வு, ஆன்மா, உண்மை, உலக முழுமை, இரகசியத்தன்மை, கிறித்தவர்கள், சுதந்திரம், சொல்லாடாமை, தன்னடக்கம், தியாகம், தூய்மை, நீர், நிறைவு, நிலைபேறு, பணிவு, மகிழ்ச்சி, மறுபிறப்பு, மீட்பு, மெய்ம்மை சார்பு, வளமை, விவேகம், விழிப்புநிலை, வீடுபேறு; அழிவு, தீமை, பாலியல், பேராசை, மடமை.**

**மீன் (விண்மீன்)** Min

(1) **மிகுதி** - multitude
*'அகல் இரு விசும்பின் மீனினும் பலரே'* (குறு.44: 3-4)

(2) **ஒளி** - light
*'சேணோன் மாட்டிய நறும் புகை ஞெகிழி வான மீனின் வயின்வயின் இமைக்கும்'* (குறு.150: 1-2)

(3) **ஒளிமிகுதி** - abundant light
*'ஞெகிழியின் பெயர்ந்த நெடு நல் யானை மீன் படு சுடர் ஒளி வெரூஉம்'* (குறு.357: 6-7)

(4) **வலியின்மை** - powerless
*'மா இரு விசும்பில் பல் மீன் ஒளி கெட ஞாயிறு தோன்றியாங்கு, மாற்றார் உறு முரண் சிதைத்த நின் நோன் தாள் வாழ்த்தி'* (பதி.64: 12-14)

(5) **சுற்றம்** - kindred
*'பல் மீன் நாப்பண் திங்கள் போல, பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை'* (பதி.90: 17-18)

(6) **ஒளிர்தல்** – twinkle / dazzle

'மீன் பூத்தன்ன தோன்றலர்' (திருமுரு.169)

(7) **சிறுமை (சிறிய அளவு)** - smallness
'பல் மீன் நடுவண் பால் மதி போல' (சிறுபா.219)

(8) **அறிவிலார்** - ignorant
'ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால் மாயிரு ஞாலத்து மாண்பு ஒருவன் போல்கலார் பாய்இருள் நீக்கும் மதியம்போல் பல்மீனும் காய்கலா ஆகும் நிலா' (பழமொழி.27)
**மிகுதி, பன்மை** – excess, multitude
'காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து மேலாடு மீனின் பலராவர்' (நாலடி.113: 1-2)

(9) **அளவின்மை** - extensive / countless
'அந்தரத்து அலர்ந்த பன்மீன் எனைத்துள அனைத்தும் மாதோ' (சீவக.3048: 4)

**(ஒப்பு)** Stars **ஆன்மாவின் நிலைபேறு, உயர்பண்பு, உயர்ந்த குறிக்கோள், - எட்டமுடியாத குறிக்கோள், எச்சரிக்கை நிலை, ஒளி, கடவுளின் இறைநிலை, கற்றல், கிறித்துவின் பிரப்பு, சமூகச் சமநிலை, சேர்க்கை, தூய்மை, தெய்வீக வழிகாட்டி, தொடர்முறைச் சுழற்சி, நம்பிக்கை, நிலையான தன்மை, பிரபஞ்சம், புனிதப்பண்பு, பெருக்கத் தன்மை, மனிதன், மனித ஆற்றல், முழுமை, மெய்ம்மை சார்ந்த விழிப்பு நிலை, முன்னறிவிப்பு, விதி.**
**ஐந்து முனைகளுடைய விண்மீன் - வானுலகம்.**
**ஆறு முனைகளுடைய விண்மீன் - கடல் தெய்வம், பால் வேறுபாடற்ற ஒற்றுமை.**

**<u>மீன்கணின் அளவு</u>** Mīṉkaṇiṉ aḷavu **(size of fish's eye)**

(1) **சிறிய அளவு** - smallness / a little
'மீன் கணின் அளவும் வெற்றிடங்கள் இன்மையால்' (சீவக.54: 1)

**(ஆ) <u>கயற்கணின் அளவு</u>**
Kayaṟkaṇiṉ aḷavu
**சிறிய அளவு** - smallness / very little
'கயற்கணின் அளவும் கொள்ளார் கவற்சியுள் கவற்சி கொண்டார்' (சீவக.1393: 3)

**<u>முக்குடை</u>** Mukkuṭai

(1) **சமணம்** - Jainism
'மொய் வினை இருள் கண் போழும் முக்குடை மூர்த்தி பாதம்' (சீவக.3145: 3)

**<u>முக்குளநீர்</u>** Mukkuḷanīr **(water of a pond)**

(1) **தீவினை அகற்றுதல், நன்மை** – remove wrong deeds, goodness
'வேயனவே தோளுமை பங்கன்வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே' (திருஞான.தேவா.123: 3-4)

**<u>முக்கோல்</u>** Mukkōl **(trident staff)**

**மெய்ம்மை, வாய்மை** – fact, truth
'உரை சான்ற முக்கோலும்' (கலி.9: 2)

**<u>முகம்</u>** Mukam **(face)**

(1) **வெளிப்படை** - open / expressive
'வெள்ளம் வருங்காலை ஈரம்பட் டஃதேபோல் கள்ள முடையாரைக் கண்டே அறியலாம் உள்ளமர் கண்ணாய்! ஒளிப்பிலும் உள்ளம் படர்ந்ததே கூறும் முகம்' (பழமொழி.144)

(2) **தெளிவு** - clear / revealing
நோக்கி அறிகல்லாத் தம்உறுப்புக் கண்ணாடி நோக்கி அறிப அதுவேபோல் - நோக்கி முகனறிவார் முன்னம் அறிப அதுவே மகனறிவு தந்தை யறிவு' (பழமொழி. 145)

(3) **உள்ளக்குறிப்பு** - heart' intension
'நாற்ற முரைக்கும் மலருண்மை கூறிய மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின் அகம்பொதிந்த தீமை

மனமுரைக்கும் முன்னம் முகம்போல முன்னுரைப்பது இல்' (நான்.48)

முட்டிகை (சம்மட்டி) Muṭṭikai

(1) சகிப்புத்தன்மை, பொறுத்தல், வெறுப்பின்மை, துன்பம் – patience, bear, hateless, suffer
'முட்டிகை போல முனியாது வைகலும் கொட்டி உண்பாரும் குறடுபோல் கைவிடுவர் சுட்டுக்கோல் போல எரியும் புகுவரே, நட்டார் எனப்படுவார்' (நாலடி.208)

முடவன் Muṭavaṉ (lame)

(1) இயலாமை - incapacity
'பெருந்தேன் கண்ட இருங்கால் முடவன், உட்கைச் சிறு குடை கோலி, கீழ் இருந்து, சுட்டுபு நக்கியாங்கு' (குறு.60: 2-4)

முண்டகம் Muṇṭakam (a flower)

(1) பனிக்காலம் – dew season
'கூன் முண் முண்டகக் கூர்ம் பனி மா மலர்' (குறு.51: 1)

முத்தம் Muttam (pearl)

(1) ஒளி - glow
'இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும்' (ஐங்.193: 2)

(2) மதிப்பு - value
'பந்தர்ப் பயந்த பலர் புகழ் முத்தம்' (பதி.74: 6)

(3) உயர்வு - lofty
'சீர் கெழு வெண் முத்தம் அணிபவர்க்கு அல்லதை, நீருளே பிறப்பினும், நீர்க்கு அவைதாம் என் செய்யும்? தேருங்கால், நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே' (கலி.9: 15-17)

(4) வளமை - fertile
'பல் வேறு திருமணி, முத்தமொடு, பொன் கொண்டு, சிறந்த தேஎடுத்துப் பண்ணியம் பகர்நரும்' (மதுரை.505-506)

(4) தண்மை – cool
'ஓதந் தொகுத்த ஒலிகடல் தண்முத்தம் பேதை மடவார்தம் வண்டல் விளக்கயரும் கானலஞ் சேர்ப்ப' (ஐந்.ஐம்.46: 1-3)

(6) வளமை, செல்வம், திரட்சி - Fertile, wealth, roundness
'கண்திரள் முத்தம் பயக்கும் இருமுந்நீர்' (ஐந்.எழு.59: 1)

(ஆ) முத்து Muttu

(7) வெண்மை - white
'முத்து ஏர் வெண் பல் முகிழ் நகை மடவரல்' (ஐங்.380: 2)

(8) எழில் / அழகு – beauty / elegance
'முகை முல்லை வென்று, எழில் முத்து ஏய்க்கும் வெண் பல்' (பரி.8: 76)

(9) சிறப்பு - eminent
'பல உறு முத்தின் பழி தீர் வெண் பல்' (பொரு.28)

(10) தூய்மை - pure
'தூய முத்தின் சிவிகை சுடர்க்குடை' (பெரிய.2113: 2)
ஒளி - glow
'நாயனார் உமக்களித்தருள் செய்த இந்நலங்கிளர் ஒளிமுத்தின்' (பெரிய.2430: 1-2)

(இ) நித்திலம் Nittilam

(11) தலைவி - heroine
'எக்கர் இடுமணல் மேல் ஓதம் தரவந்த நித்தில நின்றிமைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப! மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தார் ஒற்கம் கடைப்பிடியாதார்' (ஐந்.ஐம்.48)
ஒளி - glow / light
'.. .. .. சங்கு நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கும் வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து' (திணைமாலை.49)

(ஈ) தரளம் Taraḷam

தண்மை – cool
'தண்தரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்' (பெரிய.608: 3-4)
வெண்மை – white

'வெண்தரளம் எனக்காதின் மிசை அசையும் குண்டலமும்' (பெரிய.892: 7-8)

(உ) <u>வலம்புரி முத்து</u> Valampuri muttu

வெற்றி - victory
'மாசறு பொன்னே வலம்புரி முத்தே' (சிலப்.2. 73)

(ஒப்பு) <u>Pearl</u> **அறிவு நுட்பம், அன்பு, உண்மை, உயர் மதிப்பு, ஒளி, கடல், கண்ணீர், கன்னிமை, காதல் சந்திரன், சொல்லாற்றல், தியாகம், திருமணம், தூய்மை, நம்பிக்கை, நிலைபேறு, நிறைவளம், பிறப்பு, மெய்ப்பொருள், மண உறுதி, வளமை, வானுலகம், வெண்மை.**

<u>முத்துப் பந்தற் கீழ் மதுசூதனன் கைத்தலம் பற்றுதல்</u> Muttup pantar kīl matucūtanan kaittalam parrutal **(hold hand, under pearl canopey**

(1) திருமணம் - marriage
'மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்று ஊத முத்து உடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற் கீழ் கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்' (நாலா.561)

<u>முத்து மாலைகள் தொங்கவிடுதல்</u> Muttu mālaikaḷ toṅkaviṭutal **(pearl garland hangings)**

(1) மங்கலம் - anspicious
'பத்தி வேதிகைப் பசும்பொன் தூணத்து முத்துத் தாம முறையொடு நாற்றுமின்' (மணி.1: 48-49)

<u>முதலை</u> Mutalai **(crocodile / allegator)**

(1) அச்சம் - fear
'நாம முதலை நடுங்கு பகை அஞ்சான்' (நற்.287: 6)

(2) வலிமை - strength
'கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை' (குறு.324: 1)

(2) தலைவன் – hero
'முதலைப் போத்து முழு மீன் ஆரும் தன் துறை ஊரன்' (ஐங்.5: 4-5)

(4) அன்பின்மை - loveless
'தன் பார்ப்புத் தின்னும் அன்புஇல் முதலையொடு,' (ஐங்.41: 1)

(5) தீமை - evil
'முதலைத் தனி மா முரண் தீர அன்று' (நாலா.1219: 1)

(ஆ) <u>கராம்</u> Karām

(6) வலிமை - strength
'ஊர்க் குறுமாக்கள் ஆடக் கலங்கும் தாள் படு சில் நீர்க் களிறு அட்டு வீழ்க்கும் ஈர்ப்புடைக் கராஅத்து அன்ன என்னை' (புறம்.104: 2-4)

(7) துன்பம், இடர் - affliction
'ஒடுங்க இருங் குட்டத்து அருஞ்சுழி வழங்கும் கொடுந்தாள் முதலையும், இடங்கரும், கராமும்' (குறி.256-257)

(ஒப்பு) <u>Crocodile</u> **அறிவாற்றல், எச்சரிக்கை, நிலம், பேருண்டி விருப்பம், மறுபிறப்பு, மகரராசி, முன்னறி திறம், வலிமை, வளமை, விளைவளம், இறப்பு, எதிர் மாறாக்குதல், கழிகாமம், கொடுங்கோன்மை ஆட்சி, சீற்றம், தீமை, நரகம், போலி நடிப்பு, பாவம், விடாத் துயரளிப்பு.**

<u>முதுமால்பு</u> **(ஏணி)** Mutumālpu **(ladder)**

(1) வலிமையின்மை / நிலையாமை – strengthless / transiant
'பெருந்தேன் கண்படு வரையில் முதுமால்பு அறியாது ஏறிய மடவோன் போல, ஏமாந்தன்று; இவ் உலகம்' (குறு.273: 5-7)

(ஆ) <u>ஏணி</u> Eṇi

(2) நீட்சி - long
'ஏணி எய்தா நீள்நெடு மார்பின்' (பெரும்.245)

(3) உயர்ச்சி - high
'வானம் ஊன்றிய மதலை போல, ஏணி சாத்திய ஏற்று' (பெரும்.346-347)

(3) உதவி - help

'எய்ப்புழி வைப்பாம் எனப்போற்றப் பட்டவர் உற்றுழி ஒன்றுக் குதவார் பைத்தொடீஇ அச்சிடை யிட்டுத் திரியின் அதுவன்றோ மச்சேற்றி ஏணி களைவு' (பழமொழி.136)

(5) **முத்தி** - salvation
'பேணியநல் பிறைதவழ் செஞ்சடையினானைப் பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும் ஏணியை' (திருநா.தேவா.739: 1-3)

(6) **மேல் கீழ் இயக்கம்** – to go up and down
'ஏணி போல் இழிந்து ஏறியும் ஏங்கியும்' (திருநா.தேவா.1017: 2)

**(ஒப்பு)** Ladder **அறிவாற்றலின் படிநிலை, உயரம், குறிக்கோள், செங்கோட்டு நிலை, நீதி.**

<u>முயல்</u> Muyal **(rabbit)**

(1) **புன்மை** - mean
'கான முயல் எய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது' (குறள்.772)

(2) **மென்மை** - soft
'மென் முயல் கறையின் அரும்பு அர நேர் வைத்து அணிந்தாய்' (திருவா.6: 35: 4-5)

(ஆ) <u>முயல் பறழ்</u> Muyal paṟaḻ (bunny)

(3) **விரைவு** - fast
'கடுமுயற் பறழி னோடும் கான ஏனத்தின் குட்டி' (பெரிய.675: 1-2)

**(ஒப்பு)** Hare, Rabbit **அறிவாற்றல், ஆர்வம், இனப்பெருக்கம், ஒழுக்கம், மீட்பு, மென்மை, வளமை, வாழ்வு, விழப்புணர்வு, விரைவு, விளைவளம், ஒழுக்கக்கேடு, கழிகாமம், கீழுலக வளமை, கோழைத்தனம், சூழ்ச்சித்திறம், பித்துப் பிடித்த நிலை.**

<u>முயல்விட்டுக் காக்கைப் பின்போதல்</u>
Muyalviṭṭuk kākkaip piṉpōtal **(go after crow, leaving the rabbit)**

(1) **மடமை, வீண்** – foolishness, futile
'அன்பிருத்தி அடியேனைக் கூழாட்கொண்டு அருள்செய்த ஆரூரர்தம் முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப் பின் போனவாறே' (திருநா.தேவா.1219: 5-8)

<u>முரசினுள் அரவு உறைதல்</u> Muraciṉuḷ aravu uṟaital

(1) **தீமை, தோல்வி**
'அரசிளங் குமரனை அனற்றும் ஆற்றலர் முரசினுள் மணியரவு உரைந்த மத்தணி நிரைசுடர் நெடுங்குடை அகடு நெய்கனி பிரசங்கள் புரைபுரை விலங்கப் பெய்தவே' (சூளா.1219)

<u>முரசு</u> Muracu **(drum)**

(1) **வெற்றி** - victory
'வென்று எறி முரசின் நன் பல முழங்கி' (குறு.380: 2)

(2) **போர்** - war
'அரசு பகை தணிய, முரசு படச் சினைஇ, ஆர் குரல் எழிலி கார் தொடங்கின்றே' (ஐங்.455: 1-2)

(3) **பாதுகாப்பு / காவல்** – security / protection
'ஏமம் என்று இரங்கும், நின் எறி முரசம், அம் முரசின் ஏமத்து இகந்தாளோ' (கலி.99: 14-15)

(4) **அரசாட்சி** - reign
'இமிழ் குரல் முரசம் மூன்றுடன் ஆளும் தமிழ் கெழு கூடல் தண் கோல் வேந்தே' (புறம்.58: 12-13)

(5) **வழிபாடு / கடவுட்டன்மை போர்** - worship / devine / war
'பலி பெறு முரசம் பாசறைச் சிலைப்ப' (புறம்.362: 3)

(ஆ) <u>முரசம் கிழிதல்</u> Muracam kiḻital (torn drum)

(6) **தீமை, இறப்பு** – evil omen
'திண் பிணி முரசம் கண் கிழிந்து உருளவும்' (புறம்.229: 19)

(இ) <u>முரைசும் வெண்குடையும் அகப்படுத்தல்</u> Muraicum veṇkuṭaiyum akappaṭuttal (catch drum and parasol)

(7) பகைவரை வெற்றி கொளல் – victory over enemy
'எழுவார் நல் வலம் அடங்க, ஒரு பகல் முரைசொடு வெண்குடை அகப்படுத்து, உரை செல' (அகம்.36: 20-21)

(ஈ) <u>கொற்ற முரசு ஒலி அவிதல்</u>
Korra muracu oli avital (royal drum not sounding)

(11) தீமை, அழிவு, இறப்பு – evil omen
'கொற்ற முரசு பாடவிந்து .. .. ..' (சீவக.2173: 6)

(உ) <u>முரசொலித்தல்</u> Muracolittal (rumble of drum)

(12) திருமணம் - wedding
'யானை எருத்தத் தணியிழையார் மேலிரீஇ மாநகர்க்கு ஈந்தார் மணம் அவ்வழி முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம்' (சிலப்.1: 43-46)

(ஊ) <u>முரைசு</u> Muraicu
வெற்றி - victory
'முரைசொடு நெடுங்கொடி முழங்க நாட்டுக விரைவொடு படுகென வேந்த னேயினான்' (நீலகேசி.226: 3-4)

(எ) <u>வெற்றி முரசம் கண் கிழிதல்</u>
Verri muracam kaṇ kilital

(13) தீமை, தடை, இறப்பு – evil omen
'உருமுறழ் முரசின் கண்கிழிந்து அதனொடு' (பெருங்.மகத.27: 76)

(ஒப்பு) <u>Drum</u> அரச ஆணை, ஆண்பால், இடி, போரின் அழைப்பு, முன்னறிவிப்பு, மெய் மறந்த மகிழ்ச்சி, வளமை, தீமையை விரட்டுதல், தொடர்பு கொள்ளுதல்.

<u>முருக்கு</u> Murukku **(a flower)**

(1) வேனிற் காலம் - summer
'வேனில் முருக்கின் விளை துணர் அன்ன' (நற்.73: 1)

(2) சிவப்பு நிறம் - red
'உதிரந் துவரிய வேங்கை உகிர்போல் எதிரி முருக்கரும்ப ஈர்ந்தண்கார் நீங்க' (ஐந்.ஐம்.31: 1-2)

(ஆ) <u>கிஞ்சுகம்</u> Kiñcukam
சிவப்பு நிறம் - red
'கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்' (திருவா.2: 15)

<u>முருகு அயர் பாணி</u> Muruku ayar pāṇi **(song on murukan)**

(1) குறிஞ்சி - hilly tract
'முன்றில் எங்கும் முருகு அயர் பாணியும்' (சூளா.13: 1)

<u>முல்லை</u> Mullai **(jasmine)**

(1) காடு – forest region
'மாயோன் மேய காடுறை உலகமும்' (தொல்.951: 1)

(2) கார்காலம், மாலை – winter, evening
'காரும் மாலையும் முல்லை' (தொல்.952: 1)

(3) இருத்தல் – waiting
'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை தேருங்காலை திணைக்குறிப்பொருளே' (தொல்.960)

(4) போர் - war
'வஞ்சி தானே முல்லையது புறனே' (தொல்.1007)
'எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித்தன்றே' (தொல்.1008)

(5) கற்பு - chastity
'முல்லை சான்ற கற்பின்' (நற்.142: 10)

(6) நறுமணம் / உயர்வு – fragrance / lofty
'மீமிசைக் கலித்த வீ நறு முல்லை' (நற்.169: 5)

(8) மழை, கார்ப்பருவம், அழகு –

Rain, winter, beauty
'சிறு வீ முல்லைத் தேம் கமழ் பசு வீ, பொறி வரி நல் மான் புகர் முகம் கடுப்ப, தண் புதல் அணிபெற மலர, வண் பெயல் கார் வரு பருவம் என்றனர்மன்' (நற்.248: 1-4)

(8) **குளிர்ச்சி / தண்மை** - cool
'கூதிர் முல்லைக் குறுங் கால் அலரி' (நற்.366: 5)

(9) **மாலைப் பொழுது** - evening
'.. .. .. .. முல்லை அரும்பு வாய் அவிழும் பெரும் புன் மாலை' (நற்.369:3-4)

(10) **முறைமை** - order
'முகிழ் மயங்கு முல்லை முறை நிகழ்வு காட்ட' (பரி.15: 39)

(11) **தகைமை** - propricty
'.. .. .. .. தேருடன் முல்லைக்கு ஈத்த செல்லா நல் இசை, படுமணி யானை, பறம்பின் கோமான்' (புறம்.201: 2-4)

(12) **வழிபாடு / முன்னறிதிறம்** – worship / foretell
'.. .. .. .. நறு வீ முல்லை அரும்பு அவிழ் அலரி தூஉய், கைதொழுது, பெரு முது பெண்டிர், விரிச்சி நிற்ப' (முல்.9)

(13) **வெண்மை** - white
'முல்லை வெண் முறுவல் உமை அஞ்சவே' (திருநா.தேவா.1752: 2)

## <u>முலை</u> Mulai (breast)

(1) **பெண்** – woman
'கல்லாதான் சொற்கா முறுதல், முலையிரண்டும் இல்லாதாள் பெண்காமுற் றற்று' (குறள்.492)

(2) **பெண்மை** - femenity
'புலை உள்ளி வாழ்தல் உயிர்க்கு இன்னா; இன்னா முலை இல்லாள் பெண்மை விழைவு' (இன்னா.12: 3-4)

(3) **தாய்மை** – motherly
'சரயு என்பது தாய்முலை அன்னது இவ் உரவு நீள் நிலத்து ஓங்கும் உயிர்க்கு எலாம்' (கம்ப.பால.24: 3-4)

(ஆ) <u>**வாடு முலை ஊறிச் சுரத்தல்**</u> Vāṭu mulai ūric curattal (withered breast secreting milk)

(4) **அன்பு, வீரம், பெருமை, தாய்மை** – love, valour, pride, motherly
'வரு படை போழ்ந்து வாய்ப் பட விலங்கி, இடைப் படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய, சிறப்புடையாளன் மாண்பு கண்டருளி, வாடு முலை ஊறிச் சுரந்தன- ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே' (புறம்.295: 4-8)

(இ) <u>**முலை அறுத்தல்**</u> Mulai aṟittal

(5) **சினம்** – wrath
'மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்ட என் முலை அறுத்திடுவென், யான்' (புறம்.278: 4-5)

(ஈ) <u>**ஆன் முலை அறுத்தல்**</u> Āṉ mulai aṟuttal

(6) **அறமின்மை** - unrighteous
'ஆன் முலை அறுத்த அறனிலோர்க்கும்' (புறம். 34: 1)

(உ) <u>**ஒரு முலை அறுத்தல்**</u> Oru mulai aṟuttal

(7) **எதிர்ப்புணர்வு** - aggression
'ஒரு முலை அறுத்த திருமாவுண்ணிக் கேட்டோர் அனையர் ஆயினும்' (நற். 216: 8-9)

## <u>முழவு</u> Mulavu

(1) **ஒலி** - sound
'முழவு இசைப் புணரி எழுதரும்' (நற்.67: 11)

(2) **நன்மை** - goodness
'புலம் புரி வயிரியர் நலம் புரி முழவின்' (நற்.100: 10)

(3) **மகிழ்ச்சி** - happiness
'மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க' (அகம்.76: 1)

(4) **திருமணம்** wedding
'படு மண முழவொடு பரூஉப் பணை இமிழ' (அகம்.136: 7)

(6) **பாதுகாப்பு / காவல்** – protection

security
'முழவு கண் துயிலாக் கடியுடை வியல் நகர்' (புறம்.247: 8)

**முள்** Muḷ **(thorn)**

(1) **கூர்மை** - sharp
'சுறவுக் கோட்டன்ன முள் இலைத் தாழை' (நற்.19: 2)
(2) **பாதுகாப்பு** - protect
'ஒலி காவோலை முள் மிடை வேலி' (நற்.38: 8)
(3) **கொடுமை / வளைவு** - cruel / curve
'கொடு முள் ஈங்கை நெடு மா அம் தளிர்' (நற்.205: 9)
(4) **நுட்பம்** - minute
'நுண் முள் வேலி தாதொடு பொதுளிய' (நற்.277: 6)
(5) **வலி / காவல்** – strong / secure
'முள் அரைத் தாமரை முகிழ் விரி நாட்போது' (சிறுபா.183)
(6) **பகை, பகைவர்** - enmity
'தெள்ளி யுணரும் திறனுடையார் தம்பகைக்கு உள்வாழ் பகையைப் பெறுதல் - உறுதியே கள்ளினால் கள்ளறுத்தல் காண்டும் அதுவன்றோ முள்ளினால் முட்களையு மாறு' (பழமொழி.308)
(12) **துன்பம்** - suffering
'முள் உடைக் காட்டின் நடத்தல் நனியின்னா' (இன்னா.33: 2)

**(ஒப்பு)** Thorn **உண்மை, கடினம், கூரிய அறிவாற்றல், கன்னிமை, இழப்பு, இனிய குணமில்லாதிருத்தல், உள நைவு, தீமை, வலி.**

**முள்ளில் புனைமரம் ஏறல்** Muḷḷil puṉaimaram ēṟutal **(ascend a thorn tree)**

(1) **துன்பம்** - suffer
'வள் உகிர்ப் பேழ்வாய் ஞமலி வடிவுகள் அள்ளிக் கதுவவல் அறி அயலது முள்ளிற் புனைமரம் ஏற முயல்வார்' (சூளா.1934: 2-4)

**முளரி** (முட்செடி) Muḷari **(thorny bush)**

(1) **கொடுஞ்சொல்** – cruel words
'விளரியாழ்ப் பாண்மகனே! வேண்டா வழையேன் முளரி மொழியா துளரிக் - கிளரிநீ' (திணைமாலை.126)

**முன்கைநெடியார்** Muṉkaineṭiyār **(long forearm)**

(1) **ஆற்றல்** - power
'எங்கணொன் றில்லை எமரில்லை என்றொருவர் தங்க ணிழவுதாம் செய்யற்க - எங்கானும் நன்கு திரடு பெரியவாம், ஆற்றவும் முன்கை நெடியார்க்குத் தோள்' (பழமொழி.156)

**மூரிக்கடல்** Mūrikkaṭal**(ocean)**

(1) **விரைவு** - quick
'ஆலமே அனைய மெய்யர் அகலிடம் அழிவு செய்யும் காலம் மேல் எழுந்த மூரிக்கடல் எனக் கடிது செல்வார்' (கம்ப.சுந்.756: 3-4)

**மெல்கோல்** **(பல் துலக்கும் கோல்)** Melkōl

(1) **தூய்மை** - clean
'பறைந்துபோய் மெல்கோலாற் பல்லெலாம் தூயவாம்' (நீலகேசி.278: 2)

**மெழுகு** Meḻuku **(paraffin / wax)**

(1) **நிலையாமை, அழிவு** - transitory, destroy
'.. .. .. .. எரி பரந்த நெய்யுள் மெழுகின் நிலையாது, பை பயத் தேயும் - அளித்து - என் உயிர்' (கலி.138: 21-23)
(2) **நெகிழ்ச்சி** - melt
'தீ உறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே' (ஐங்.32:4)

**(ஆ)** **எரி உறு மெழுகு** Eri uṟu meḻuku (wax in fire)

(3) **நிலையழிதல்**
'இட்டநாண் வேலி உந்திக் கடலென எழுந்த வேட்கை விட்டெரி கொளுவ நின்றள்

எரியுறு மெழுகின் நின்றாள்'
(சீவக.710: 3-4)

(4) **துயரம்** - affliction
'இடர் உற மறையோரும் எரி உறு மெழுகு ஆனார்' (கம்ப.அயோ.668: 4)

(இ) <u>எரிகனல் எய்திய மெழுகு</u>
Erikanal eytiya meluku
**உருகுதல், அழிவு, நிலையாமை**
'எரி கனல் எய்திய மெழுகின் யாக்கைபோல் உருகினன் என்கிலம் உயிருக்கு ஊற்றம் ஆய்' (கம்ப.கிட்.197: 2-3)

(ஈ) <u>தழல் கண்ட மெழுகு</u> Talal kanta meluku
**உருகுதல்** – melt / soften
'தழல் அது கண்ட மெழுகு அது போலத் தொழுது உளம் உருகி அழுது உடல் கம்பித்து' (திருவா.4: 60-61)

(உ) <u>தீ மெழுகு</u> Ti meluku

(8) **ஆற்றாமை, துன்பம்** - affliction
'தீயில் வீழ்ந்து தீ மெழுகின் தேம்பினார்' (கம்ப.அயோ.1147: 4)

(ஒப்பு) <u>Wax</u> **இரகசியம், உயர்நிலை, இறப்பு, நிலையாமை, பயம்.**

<u>மேகக்கூட்டம் இன்றி வானம் இடித்தல்</u>
Mēkakkūṭṭam inri vānam iṭittal

(1) **தீமை, இறப்பு, அழிவு**
'.. .. .. இரட்டல் இன்றியே தடியுடை முகிற் குலம் இன்றித் தா இல் வான் வெடிபட அதிருமால் உதிரும் மீன் எலாம்' (கம்ப.சுந்.371: 2-4)

<u>மேதி</u> Mēti **(buffalo)**

(1) **மருதத்திணை, கருமை** – agricultural tract, black
'கள் அலைத்த கவுள் கரு மேதிபால்' (சூளா.27: 2)

<u>மேரு</u> Mēru

(1) **உயர்ச்சி, அசைவின்மை / நிலைபேறு** – lofty, emmoved / stable
'வீச விண்டொடு மேருத் துளங்குமோ' (சூளா.635: 2)

(2) **ஆற்றல்** strength
'பொறையும் ஆற்றலும் பூமியும் மேருவும் அனையான்' (நீலகேசி.33: 3)

<u>மேனகை</u> Mēnakai **(a damsel)**

(1) **அழகு** - beauty
'தனது மெய்க்கு மலரணையானது தழலிறைக்கும் தனச்சுமையால் இடைமினது மெய்க்கும் துவளுமிம் மானந்த மேனகைக்கும் வெகுமிச்ச நாணுண்மை' (தனிப்.839: 1-4)

<u>மேனி கரிதல்</u> MēnI karital **(blackening of body)**

(1) **தீமை, தோல்வி** - evil omen
'உள்ளடி உமைத்து உமைத்து அழன்ற மேனியும் கள்ளவிழ் கண்ணியும் கரிந்த கண்களும்' (சூளா.1223: 1-2)

<u>மை</u> Mai **(collyrium)**

(1) **கருமை, இருள்** – black, dark
'வரை கிழிப்பன்ன மை இருள் பரப்பி' (நற்.154:2)

(ஆ) <u>அஞ்சனம்</u> Añcanam

(2) **கருமை, நீலம்** – black, blue
'செறிஇலைக் காயா அஞ்சனம் மலர' (முல்.93)

<u>மைம்மீன் புகைதல்</u> Maimmīn pukaital **(smokey Saturn)**

(1) **தீமை, மழையின், வறட்சி** - bad omen, drought
'மைம்மீன் புகையினும் .. .. .. .. பெயல் பிழைப்பு அறியாப் புன்புலத் ததுவே' (புறம்.117:1-7)

(ஆ) <u>கரியவன் புகைதல்</u>
Kariyavan pukaital
**தீமை, வறட்சி** - evil, drought

'கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும் .. .. .. கால்பொரு நிவப்பிற் கடுங்குரல் ஏற்றோடும் சூன்முதிர் கொண்மூப் பெயல்வளம் சுரப்ப' (சிலப்.10: 102-105)

<u>மொக்குள்</u> Mokkuḷ **(bubble)**

(1) **நிலையாமை, அழிவு** - transient, destruction
'படு மழை மொக்குளின் பல்காலும் தோன்றிக்கெடுமிதோர் யாக்கையென்று எண்ணி' (நாலடி.27: 1-2)

<u>மோர்</u> Mōr **(butter – milk)**

(1) **அழிதல்** - destruction
'உருவப் பிழம்பப் பொருளென் றுரைப்பனிப் பால் தயிர் மோர் பருவத்தினாம் பரியாயப் பெயரென்பன் பாலழிந்து தருவித்து உரைத்த தயிர் உருவாய் மும்மைத் தன்மையதாம் திருவத்ததென் பொருளாதலைத் தேர தெளியிதென்றாள்' (நீலகேசி.387)

## ய

<u>யாக்கை</u> Yākkai **(body)**

(1) **நிலையாமை, அழிவு** - transient, destroy
'படுமழை மொக்குளின் பல்காலும் தோன்றிக் கெடுமிதோர் யாக்கையென்று எண்ணி' (நாலடி.27:1-2)

(2) **அரியது, பயன்** – rare, utility
'அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்' (நாலடி.34:1)

(3) **பயனின்மை** - futile
'பொருளில் யாக்கை பூமியில் பொருந்தா' (சிலப்.10: 201)

(ஆ) <u>உயிர் இன்றி வாழும் யாக்கை</u> Uyir inri vālum yākkai (lifeless body)

(4) **இயக்கமின்மை** – inactive / devoid of function
'மன்னரை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணும் காலை இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்' (பெரிய.1001: 5-8))

(இ) <u>உயிர் இழந்த யாக்கை</u> Uyir ilanta yākkai (lifeless body)

(5) **அசைவற்ற நிலை, இயக்கமின்மை** - immobile, inactive
'இன்னுயிர் இழந்த யாக்கையின் இருந்தனள் துன்னியது உரைத்த சுதமதி' (மணி.7: 133-134)

(ஈ) <u>உடலில் ஒளி தோன்றுதல்</u> Uṭalil oḷi tōnrutal (body glows)

(6) **நன்மை, வெற்றி** - good, victory
'ஆளி ஏறனையவன் அணிபொன் மேனிமேல் நீள் ஒளி தவழ்ந்தது' (சூளா.1218: 1-2)

(உ) <u>ஏடு (உடல்) நிலத்தில் இடல்</u> Eṭu nılattil iṭal (put body in ground)

(6) **இறப்பு** - death
'ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து எங்கள் குழாம் புகுந்து' (நாலா.4: 1-2)

<u>யாமை</u> Yāmai **(tortoise / turtle)**

(1) **தலைவன்** - hero
'பிணங்கு அரில் வள்ளை நீடு இலைப் பொதும்பில் மடி துயில் முனைஇய வள் உகிர் யாமை நொடி விடு கல்லின் போகி' (அகம்.256: 1-30)

(ஆ) <u>ஆமை</u> Āmai

(2) **புலனடக்கம்** – self (senses) control
'ஒருமையுள் ஆமைபோல் ஐந்து அடக்கல் ஆற்றின் எழுமையும் ஏமாப்பு உடைத்து' (குறள்.126)

(ஒப்பு) <u>Tortoise</u> **அமைதி, உட்சுருள்வு, ஊறு செய்ய முடியாத நிலை, எச்சரிக்கை, தற்கட்டுப்பாடு, தன்னடக்கம், நீர், பாதுகாப்பு, பொறை, முன்னோக்கு,**

வலிமை, வளமை, வழவழப்பான தன்மை, விளைவளம், விவேகம்; மடிமை.
கடலாமை - பால் வேறுபாடற்ற தன்மை.

**யாழ்** Yāl̲ (lyse)

(1) **பண்பு** - culture
'பாணன் கையது பண்புடைச் சீறியாழ்' (நற்.30:2)

(2) **இனிமை** - sweet
'யாழ் ஓர்த்தன்ன இன் குரல் இன வண்டு' (நற்.176:8)

(3) **நிலையாமை** - transient
'வீழுநர்க்கு இறைச்சியாய் விரல் கவர்பு இசைக்கும் கோல் ஏழும் தம் பயன் கெட, இடை நின்ற நரம்பு அறூஉம் யாழினும் நிலை இல்லாப் பொருளையும் நச்சுபவோ?' (கலி. 8: 9-11)

(4) **சிறப்பு** - eminence
'ஏழ் புணர் சிறப்பின் இன் தொடைச் சீறியாழ்" (மது.559)

(5) **செம்மை** – prosper / upright
'கணை கொடிது யாழ் கோடு செவ்விது ஆங்கு அன்ன வினைபடு பாலால் கொளல்' (குறள்.279)

**யானை** Yān̲ai (elephant)

(1) **ஆற்றல்** - strength
'புலியொடு பொருத புண் கூர் யானை' (நற்.65: 5)

(2) **சினம்** - anger
'முருகு உறழ் முன்பொடு கடுஞ் சினம் செருக்கிப் பொருத யானை' (நற்.225: 1-2)

(3) **செயல்திறன்** - capability
'வினை வல் யானைப் புகர் முகத்து அணிந்த' (நற்.296: 2)

(4) **அச்சம்** - fear
'உரு கெழு யானை உடை கோடு அன்ன' (நற்.299: 1)

(5) **விரைவு** - speed
'.. .. .. .. ஓங்கு செலல் கடும் பகட்டு யானை நெடுமான் அஞ்சி' நற்.381: 6-7)

(6) **கொடுமை** – cruel
'வெம் முரண் யானை விறற் போர் வேந்தே' (ஐங்.467: 5)

(7) **போர்த்திறம்** – fighting capacity
'போர் வல் யானைச் சேரலாத' (பதி.15: 23)

(8) **போர்வெற்றி** - war victory
'பல் செருக் கடந்த கொல் களிற்று யானை' (பதி.46: 10)

(9) **பேரளவு** - huge
'யானையும் மலையின் தோன்றும்' (புறம்.42: 2)

(10) **வளமை** - fertile
'வானத்து அன்ன வளம் மலி யானை' (மலை.530)

(11) **வீரம்** - valour
'கான முயல் எய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது' (குறள்.772)

(12) **வலிமை** - power
'இருதலைப் பணிலம் ஆர்ப்ப, சினம் சிறந்து, கோலார்க் கொன்று, மேலோர் வீசி, மென்பிணி வந்தொடர் பேணாது, காழ் சாய்த்து, கந்து நீத்து உழிதரும் கடாஅ யானையும்' (மது.380-383)

(13) **நன்றியின்மை, தாழ்வு, சிறுமை** – ingratitude, low, mean
'யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார் கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும், எறிந்தவேல் மெய்யதா வால்குழைக்கும் நாய்' (நாலடி.213)

(14) **உயர்வு** - lofty
'ஓங்கியல் யானை தூங்கு துயிலெய்த' (சிலப்.27: 220)

(15) **வேகம் / விரைவு** - speed, quick / fast
'வேக யானையின் வழியோ நீங்கென' (சிலப்.27: 222)

(ஆ) **பள்ளி யானை** Pal̲l̲i yān̲ai (sleeping elephant)

(16) பேருயிர்ப்பு / **பெருமூச்சு** – sigh / yearning
'பள்ளி யானையின் வெய்ய உயிரினை' (நற்.353: 2)

யானை

(இ) <u>யானை கை வைத்து உறங்குதல்</u> Yāṉai kai vaittu uraṅkutal

(17) **தீமை, இறப்பு** – evil omen
'மைந்துடை யானை கைவைத்து உறங்கவும்' (புறம்.229: 18)

(ஈ) <u>களிற்று யானை</u> Kaḷirru yāṉai (he elephant)
**சினம்** - wrath
'பாகன் நெடிது உயிர்வாழ்தல் காய்சினக் கொல்களிற்று யானை நல்கல் மாறே' (அகம்.336: 13-14)

(உ) <u>களிறு</u> Kaḷiru
**வலிமை** - power
'இனம் சால் வயக் களிறு பாந்தட் பட்டெனா' (நற்.14: 8)
**சினம்** - wrath
'கடாஅம் செருக்கிய கடுஞ் சின முன்பின் களிறு நின்று இறந்த நீர் அல் ஈரத்து' (நற்.103: 2-3)

(18) **ஆண்மை / சிறப்பு** – manly / eminent
'மணி மயில் தொழில் எழில் இகல் மலி திகழ் பிறிது இகழ் கடுங் கடாக் களிற்று அண்ணலவரோடு' (பரி.தி.1: 63-64)

(19) **ஊக்கம்** – motivation / encouragement
'சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும் களிறு' (குறள்.597)

(20) **தலைவன்** - hero
'ஒல்லோமென் றேங்கி உயங்கி இருப்பளோ கல்லிவ ரத்த மறிபெய் சிலம்பொலிப்பக் கொல்களிறு அன்னான்பின் செல்லுங் கொலென்பேதை மெல்விரல் சேப்ப நடந்து' (ஐந்.எழு.40)

(21) **மங்கலம்** - auspicious
'மங்கல மழகளிறு அனைய செல்கையன்' (சூளா.78: 3)

(ஊ) <u>களிற்று ஒருத்தல்</u> Kaḷirru oruttal (lone elephant)

(22) **தனிமை** – lonely / dangerous
'வில் கடிந்து ஊட்டின் பெயரும் கொல் களிற்று ஒருத்தல் சுரன் இறந்தோரே' (நற்.92: 8-9)

(23) **கடுமை** - severity
'காழ்வரை நில்லாக் கடுங் களிற்று ஒருத்தல்' (கலி.2: 26)
**வலிமை** - power
'பொறி நுதற் பொலிந்த வயக் களிற்று ஒருத்தல்' (அகம்.78: 4)

(எ) <u>இனம் பிரி ஒருத்தல்</u> Iṉam piri oruttal
**தனிமை, ஆபத்து** – lonely, danger
'பால் மருள் மருப்பின், உரல் புரை பாவு அடி, ஈர் நறுங் கமழ் கடாஅத்து, இனம் பிரி ஒருத்தல் ஆறு கடி கொள்ளும் வேறு புலம் படர்ந்து' (கலி.21: 1-3)

(ஏ) <u>வேழம்</u> Vēḻam
**சினம்** - wrath
'உரவுச் சின வேழம் உறு புலி பார்க்கும்' (நற்.336: 7)
**வலிமை** - strength
'மதனுடை வேழத்து வெண் கோடு கொண்டு' (பதி.30: 11)
**ஆற்றல்** - power
'பொரு சமம் கடந்த புகழ் சால், வேழம்' (பரி.21: 2)
**வீரம்** - valour
'மறம் மிகு வேழம், தன் மாறு கொள் மைந்தினான்' (கலி.53: 3)
**விரைவு** - speed
'கால் கிளர்ந்தன்ன வேழம் மேல்கொண்டு' (திருமுரு.82)

(29) **உயர்வு / மேன்மை** – lofty / high
'புகர்முகம் பூழிப் புரள உயர்நிலைய வெஞ்சின வேழம் பிடியோடு இசைந்தாடும்' (கார்.38: 1-2)

(ஐ) <u>வேழம் எதிர்தல்</u> Vēḻam etirtal (facing an elephant)

(30) **ஆபத்து** - danger
'கடுஞ்சின வேழத்து எதிர்சேறல் இன்னா' (இன்னா.30: 2)

(ஒ) <u>பிணிமுகம்</u> Piṇimukam

(31) **உயர்வு** - lofty

*'சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து'* (*பரி*.5: 2)
**வீரம்** - valour
*'ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி'* (*திருமுரு*.247)

**(ஓ) கரி** Kari
**வலிமை** - strength
*'ஆங்க அணிநிலை மாடத்து அணிநின்ற பாங்காம் மடப் பிடி கண்டு, வயக் கரி மால் உற்று, நடத்த நடவாது நிற்ப'* (*பரி*.10: 41-43)

**(ஔ) கோண்மா** Kōṇmā
**வலிமை, ஆற்றல்** – strength, power
*'கொடுவரி பாயத் துணையிழந்து அஞ்சிக் கடுவுணங்கு பாறைக் கடவு தெவுட்டு நெடுவரை அத்தம் இறப்பர்கொல் கோண்மாப் படுபகை பார்க்கும் சுரம்'* (*ஐந்.எழு*.37)

**(க) எஃகொழி களிறு** Ekoḻi kaḷiṟu
(32) **துன்பம், வருத்தம்** - distress
*'பைதல் நெஞ்சத்து மையல் கொள்ளா எஃகொழி களிற்றின் வெய்துயிர்த்து உயங்கி'* (*பெருங்.உஞ்*.33: 108-109)

**(ங) பிடிக்களிறு** Piṭikkaḷiṟu
(33) **இணைவு** - pair
*'பிடிக்களிறு என்னத் தம்மிற் பிணைபயின்ற அணை வரால்கள்'* (*திருநா.தேவா*.509: 3-4)

**(ச) பிடி** Piṭi
(34) **வேகம் / விரைவு** - quickness
*'கடுகிய விசையொடு காற்றென உராஅய் முடுகிய இரும்பிடி முகத்தொடு தாக்கிய'* (*பெருங்.உஞ்*.48: 119-120)

**(ஞ) போதகம்** Pōtakam
(35) **மங்கலம்** - anspicious
*'மங்கலம் தரு மழவிளம் போதகம் வரும் இரு மருங்கெங்கும்'* (*பெரிய*.2051: 3-4)

**(ட) யானைகள் தொழுவில் அடைபட்டிருப்பது போல அடங்கியிருத்தல்** Yāṉaikaḷ toḻuvil aṭaipaṭṭiruppatu pōla aṭaṅkiyiruttal
(36) **தீமை, இறப்பு, அழிவு** - evil omen
*'தொழுவில் நின்றன சூழி மா'* (*கம்ப.யுத்*.3664: 4)

**(ஒப்பு)** Elephant **அரசமை, அரசர்களின் வலிமை, அறிவு நுட்பம், அசைக்க இயலாத உறுதி, அடக்கம், அதிக எடையுள்ள உருவமற்ற தன்மை, இரக்கம், இறைமை, ஊர்தி, எளிமைநயம், கடவுட்பற்று, கடமையுணர்ச்சி, கற்புடைமை, கன்னித்தன்மை, சக்தி, செல்வம், செயலறிவு, தற்கட்டுப்பாடு, தன்னடக்கம், தடையை நீக்கும் விலங்கு, தொடக்கம், தூய்மை, நம்பிக்கை, நடுநிலைமை, நன்மை, நிலைபேறு, நீண்ட நினைவாற்றல், பணிவு, பண்புயர்வு, முடிவு, வலிமை, வளமை, விநாயகக் கடவுள்; அக உணர்ச்சியின்மை, அசட்டை மனப்பான்மை, அழகற்ற தன்மை, அறியாமை, கொடூரம், தற்பெருமை, தன்வயமின்மை.**

**யானை வாய்புகு கவளம்** Yāṉai vāypuku kavaḷam **(rice ball in elephant's mouth)**
(1) **அழிவு** - destruction
*'கருங்களி மத நல்யானை வாய்புகு கவளமே போல் பெருங்களியாளன் காலன் பிறை எயிறு அணிந்து நின்ற இருங்களி யாணர் வாழ்வில் இமைப்பிடை பெரிது கண்டாய்'* (*சூளா*.1860: 2-4)

**யானையினது பட்டமும் பொற்கொட்டையும் சிதைதல்**
Yāṉaiyiṉatu paṭṭamum poṟkoṭṭaiyum citaital **(head ornament of elephant being destroyed)**

(1) **தீமை, தடை, இறப்பு** – bad omen
'மந்தரம் என்னு மத்த யானை நீல நெடுவரை நெற்றித் தாகிய கோலக் கோங்கின் கொழுமலர் கடுப்புறு சூறைக் கடுவளி பாறப் பறந்தெனப் பட்ட மடுத்த கொட்டையொடு பாறவும்' (பெருங்.மகத.27: 71-75)

## ர

**ரதி** Rati **(Rati, lady of Cupid)**

(1) **அழகு** - beauty
'இருபந்தந்த மெனும்பொற் பயோதர மென்னசொல் லரதிக்கெண் மடங்கிவள்' (தனிப்.799: 1-2)

## ல

**லேகை** Lēkai **(சங்க லேகையும் சக்கர லேகையும்) (line on palm)**

(1) **அரசமைதி** - royality
'சங்க லேகையும் சக்கர லேகையும் அங்கை உள்ளன வையற் காதலால்' (சூளா.114: 1-2)

## வ

**வச்சிரம்** Vacciram **(diamond)**

(1) **உறுதி** - firm
'வள்ளிதழ் மாலை மார்பன் வச்சிர மனத்தன் ஆனான்' (சீவக.2732: 4)

**வசம்பு** Vacampu **(a spice)**

(1) **வெண்மை** - white
'வால்வெள் வசம்பும் வள்ளிதழ்க் காந்தளும்' (பெருங்.உஞ்.50: 28)

**வசுந்தரி** Vacuntari **(a queen)**

(1) **கற்பு, தூய்மை** – chastity, purity
'கோசலத்து அரசன் மாபெரும் தேவி மாசில் கற்பின் வசுந்தரி என்னும் தேனிமிர் கோதை சேடியேன் யான்' (பெருங்.வத்.13: 36-38)

**வஞ்சி** Vañci **(a creeper)**

(1) **முல்லைத்திணை, போர்** - forest tract, war
'வஞ்சி தானே முல்லையது புறனே எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித்தன்றே' (தொல்.1007, 1008)

(2) **வளமை** - fertile
'வஞ்சி அன்ன என் வளநகர் விளங்க' (அகம்.263: 12)

(3) **வெற்றி, புகழ்** – victory, fame
'விண் பொரு புகழ், விறல் வஞ்சி' (புறம்.11: 6)

(ஆ) **வஞ்சி நடுதல்** Vañci naṭutal (plant vanci)

(4) **மங்கலம்** - anspicious
'காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும் பூக்கொடி வல்லியும் கரும்பு நடுமின்' (மணி.1: 46-47)

**வடபுலம்** Vaṭapulam **(Northern Region)**

(1) **பாதுகாப்பு** - protection
'நாமம் அறியா ஏம வாழ்க்கை வடபுல வாழ்நரின்' (பதி.68: 12-13)

(ஆ) **வடக்கிருத்தல்** Vaṭakkiruttal

(2) **இறப்பு** - death
'கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப் பொருது புண் நாணிய சேரலாதன் அழி கள மருங்கின் வாள் வடக்கிருந்தென, இன்னா இன் உரை கேட்ட சான்றோர்' (அகம்.55: 10-13)

(ஒப்பு) North இரவு, உலகத்தின் நடுக்கோடு, இறைமை, துருவ நட்சத்திரம், சொர்க்கத்தின் வாயில், மறைபொருள்; அழிவு, இருள், இறப்பு, தீமை.

**வயல்** Vayal **(field)**

(1) **செல்வம்** - wealth
*'திரு நயத்தக்க வயல்'* (*பரி.தனிப்*.1: 17)

(ஒப்பு) Field **சுதந்திரம், நிகழ்வுக்குரிய நிலை, படைப்பு, பரந்த தன்மை, வளமை.**

**வயலை** Vayalai**(a creeper)**

(1) **தலைவி** - heroine
*'புயல் புறம் தந்த புனிற்று வளர் பைங் காய் வயலைச் செங் கொடி களவன் அறுக்கும்'* (*ஐங்*.25: 1-2)

**வயவன்** **(மரங்கொத்தி)** Vayavan **(wood pecker)**

(1) **கூர்மை** - sharp
*'குடுமி நெற்றிக் கூருளி அன்ன வல்வாய் வயவன்'* (*பெருங்.உஞ்*.55: 20-21)

(ஆ) **வயவன் வற்றிய மரத்திலிருந்து ஒலித்தல்** Vayavan varriya marattiliruntu olittal (wood pecker twittering from dry tree)

(2) **தீமை, போர், படை வரவு** - evil omen, forewelling war
*'வரு படைக்கு அகன்ற வயந்தகன் வருவழிப் பொருபடை அண்ணல் பொழில்வயின் இருப்பக் கடுவிசைக் கனலி சுடுகதிர் மருங்கில் குடுமி நெற்றிக் கூர் உளி அன்ன வல்வாய் வயவன் வறண்மரத்து உச்சிப் பல்கால் உரைத்தது பகற்படை தருமெனப் பாட்டில் கூறக் கேட்டனன் ஆகி'* (*பெருங்.உஞ்*.55: 17-23)

**வயிர்** **(கொம்பு)** Vayir **(bugle / trumpet)**

(1) **தெளிவு** - clear
*'வயிர் இடைப்பட்ட தெள் விளி இயம்ப'* (*அகம்*.269: 18)

(2) **இனிமை** - sweet
*'வயிர் எழுந்து இசைப்ப'* (*திருமுரு*.120)

**வயிரம்** Vayiram **(diamond)**

(1) **உறுதி** - firm
*'வயிரத்தன்ன வை ஏந்து மருப்பின்'* (*அகம்*.178: 1)

(2) **திண்மை**
*'கல் படி வயிரத் திண்கால் நகங்களின் கல்லி கையால்'* (*கம்ப.யுத்*.788: 3)

(ஒப்பு) Diamond **அறிவுத்திறம், ஆற்றல், உண்மை, ஒழுக்கம், ஒளி, கடினத்தன்மை, காதல், செல்வச்செழிப்பு, தன்னடக்கம், தூய்மை, நிலைபேறு, பளபளப்பு, மகிழ்ச்சி, முழுமை, வலிமை, வாழ்க்கை, விலைமதிப்பு, வெளிப்பாடு, வெற்றி.**

**வராஅல்** Varāal **(a fish)**

(1) **வளம்** - fertile
*'வலை வல் பாண்மகள் வால் எயிற்று மடமகள் வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள் யாண்டு கழி வெண்ணெல் நிரைக்கும் ஊர'* (*ஐங்*.48: 1-3)

(2) **தலைவன்** - hero
*'பகுவாய் வராஅல் பல் வரி இரும் போத்துக் கொடுவாய் இரும்பின் கோள் இரை துற்றி, ஆம்பல் மெல் அடை கிழிய, குவளைக் கூம்பு விடு பல் மலர் சிதையப் பாய்ந்து, எழுந்து'* (*அகம்*.36: 1-4)

(3) **பரத்தையர்** - prostitute
*'உண்டுறைப் பொய்கை வராஅல் இனம் இரியும் தண்டுறை ஊர! தகுவதோ - ஒண்தொடியைப் பாராய் மனைதுறந் தச்சேரிச் செல்வதனை ஊராண்மை ஆக்கிக் கொளல்'* (*ஐந்.எழு*.52)

(ஆ) **வரால்** Varāl

(4) **பெரிய அளவு** - huge
*'சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையால் பெரிய பொருள்கருது வாரே - விரிபூ விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு வராஅல் வாங்கு பவர்'* (*பழமொழி*. 372)

**<u>வருணன்</u>** Varuṇa<u>n</u> **(god of rain)**

(1) **நெய்தல் திணை** - sea shore region
'வருணன் மேய பெருமணல் உலகமும்' (தொல்.951)

(2) **ஈகை** - benevolence
'தருமன் தண்ணளியால் தனது ஈகையால் வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே' (சீவக.160: 1-2)

**<u>வல்லு</u>** Vallu **(chess)**

(1) **திறமை / ஆற்றல்** – capacity / capable
'வல்லுப் போர் வல்லாய்! .. .. .. ..' (பரி.18: 41)

(2) **கவனம்** – concentration / attention / alertness
'கவை மனத்து இருத்தும் வல்லு வனப்பு ஒழிய' (அகம்.377: 8)

**<u>வலம்புரி</u>** Valampuri **(a rare variety of conch)**

(1) **ஒலி** - sound
'வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்' (நற்.172: 8)

(2) **வெண்மை** - white
'பொலம்புரி ஆடை! வலம்புரி வண்ண' (பரி.3: 88)

(3) **தூய்மை** - pure
'துணை புணர்ந்து எழுதரும் தூ நிற வலம்புரி' (கலி.135: 1)

(4) **வளமை** - fertile
'அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து' (அகம்.201: 5)

(5) **சிறப்பு, புகழ்** – eminent, fame
'வலம்புரி அன்ன, வசை நீங்கு சிறப்பின்' (பெரும்.35)

(6) **வெற்றி, தூய்மை** – victory, pure
'தூ வலம்புரி உடைய திருமால்' (நாலா.275: 3)

**<u>வலம்புரி வயிற்றிடைப் பிறந்த மாமணி</u>**

Valampuri vayi<u>r</u><u>r</u>iṭai pi<u>r</u>anta māmaṇi **(great gem in the valampuri conch)**

(1) **சிறப்பு** - eminence
'வலம்புரி வயிற்றிடைப் பிறந்த மாமணி நலம்புரி பவித்திரம் ஆகு நாமநீர்' (சூளா.417: 1-2)

**<u>வலம் வருதல்</u>** Valam varutal **(ascend to the right / circumambulate)**

(1) **உயர்வு** - lofty
'மன்னுயிர் புரைஇய வலனேர்பு இரங்கும் கொண்டல் தண்டளிக் கமஞ்சூல் மாமழை' (பதி.24: 27-28)

(2) **சிறப்பு** - eminence
'புத்தேளிர் கோட்டம் வலம்செய்து இவனோடு புக்க வழிஎல்லாம் கூறு' (கலி.82: 4-5)

(ஆ) **<u>வலம் வீழ்த்தல்</u>** Valam vi<u>l</u>ttal (fall to the right)

(3) **வெற்றி கொள்ளல்** – win over
'துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி' (அகம்.3: 7)

**<u>வலை</u>** Valai **(net)**

(1) **வளம்** - fertile
'வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப' (நற்.38: 1)

(2) **நுண்மை / நுட்பம்** - minute
'நுண் வலைப் பரதவர் மட மகள்' (குறு.184: 6)

(3) **கொள்ளுதல்** - catch
'கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்' (குறு.342: 3)

(4) **பயன்** - benefit
'இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்து குறுங் கண் அவ் வலைப் பயம் பாராட்டி' (அகம்.70: 2-3)

(5) **உலகப் பற்று** – worldly attachment
'கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை நிலையறியாது அந்நீர் படிந்தாடி யற்றே, கொலைவல் பெருங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு' (நாலடி.331)

(6) **பார்வை** - seeing
'கொடுங்கண் வலையால் உயிர் கொல்வா னுந்தை நெடுங்கண் வலையால் உயிர்கொல்வை மன்னியும்' (சிலப்.7.18)

(7) **பாதுகாப்பு** - protect
'கல்விப் பாகரில் காப்புவலை ஓட்டி' (மணி.18: 165)

(8) காமம் - passion
'காமாத்தம் எனும் கார்வலைப் பட்டு நான் போமாத்தை அறியாது புலம்புவேன்' (திருநா.தேவா.201: 1-2)

(9) புலன் - senses
'பஞ்ச பூத வலையிற் படுவதற்கு அஞ்சி நானும் ஆமாத்தூர் அடிகளை' (திருநா.தேவா.202: 1-2)

(10) வஞ்சனை - deceit
'வஞ்ச வல்வினையுள் வலைப்பட்டு' (சுந்.தேவா.192: 4)

(11) நட்பு - friendship
'நட்பு வலைக் கிழமையின் நம்பொருட்டாக' (பெருங்.மகத.18: 87)

(12) அன்பு / காமம் / ஆசை - love / passion / desire
'கண்வலைக் காமுகர் என்னும் மாபடுத்து ஒள்நிதித் தசைதழீஇ உடலம் விட்டிட்டும் பெண்வலைப் படாதவர் பீடின் ஓங்கிய அண்ணல் அம் கடிநகர் அமைதி செப்புவாம்' (சீவக.78)

(13) சொல் - word
'சொல் வலை வேட்டுவன்' (புறம்.252: 5)

(ஆ) வலைப்படுதல் Valaippaṭutal (netted)

(14) அகப்படுதல் - caught
'கண் வலைப் படூஉம் கான லானே' (நற்.184: 7)

(15) துன்பம் - affliction
'நல் மயில் வலைப் பட்டாங்கு' (குறு.244: 5)

(16) சிக்குதல் - entangle
'பொய்வலைப் படூஉம் பெண்டு தவப் பலவே' (ஐங்.283: 5)

(இ) வலைபரிதல் Valaiparital (torn net)

(17) தப்புதல் - escape
'.. .. .. .. வெவ் வினைக் கொலை வல் வேட்டுவன் வலை பரிந்து போகிய' (நற்.189: 6-7)

(ஈ) வலை விரித்தல் Valai virittal (spread net)

(17) நோக்கம் – seeing
'வலை விரித்தன்ன நோக்கலை' (பதி.51: 36)

(உ) புலிக்கான வலையில் நரி அகப்படுதல் Pulikkāṉa valaiyil nari akappaṭutal (fox in the tiger's net)

(19) பொருந்தாமை - unsuitable
'இரும் புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர் ஏதில் குறு நரி பட்டற்றால்' ((கலி.65: 24-25)

(ஒப்பு) Net அன்பு, காதல், பிணைப்பு, மீனவர், வளமை; இறப்பு, சூழ்ச்சி.

**வள்ளை** Vaḷḷai **(a creeper)**

(1) வெண்மை - white
'வள்ளை வெண்மலர் அஞ்சி' (சுந்.தேவா.150: 3)

**வளி எறி கொம்பு** Vaḷi eṟi kompu **(creeper swaying in wind)**

(1) வருத்தம் / துன்பம் – affliction / suffering
'வளி எறி கொம்பின் வருந்தி மெய்ந் நடுங்கி' (மணி.24: 86)

**வளையொடும் தலைமுடி திருத்தல்** Vaḷaiyōṭum talaimuṭi tiruttal **(correct bangles and hair)**

(1) பெண்மை / தோல்வி / வீரமின்மை – feminine / defeat / cowardice
'இளையருள் பெரியவன் சொல்லும் எம்மிறைக்கு உளைவன செய்தவர் உயிரை மற்றவர் கிளையொடுங் கீண்டர சாடு மன்றெனில் வளையொடும் தலைமுடித் திருத்து வாழ்துமே' (சூளா.1261)

**வன்னி** Vaṉṉi **(fire)**

(1) கற்பு - chastity
'வன்னி மரமும் மடைப்பளியும் சான்றாக முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள் பொன்னி' (சிலப்.21: 5-6)

(2) ஒளி, வெம்மை – light, heat

'கங்கை திங்கள் வன்னி துன் னெருக்கின்னொடு கூவிளம் வெங்கணாகம் விரிசடையில் வைத்த விகிர்தன்னிடம்' (திருஞான.தேவா.2297: 1-2)

**வனைகலத் திகிரி** Vaṉaikalat tikiri **(potter's wheel)**

(1) **சுழற்சி, விரைவு, சினம்** - whirl, speed, wrath
'கனை செலல் முன்பொடு கதழ்ந்து வரல் போற்றி, வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்' (மலை.473-474)

(2) **துயர், துன்பம், குழப்பம்** – affliction / confusion
'வனைகலத் திகிரி போல மறுகும் எம்மனங்கள் என்பார்' (சீவக.1108: 4)

**வாகை** Vākai **(a tree)**

(1) **பாலைத்திணை** - wilderness
'வாகைதானே பாலையது புறனே' (தொல.1019)

(2) **சிறப்பு** - eminence
'துய் வீ வாகை, நுண் கொடி உழிஞை, வென்றி மேவல், உரு கெழு சிறப்பின்' (பதி.43: 23-24)

(3) **கடவுட்டன்மை** - divine
'கடவுள் வாகைத் துய்வீ ஏய்ப்ப' (பதி.66: 15)

(4) **மென்மை** - soft
'மென் பூ வாகைப் புன் புறக் கவட்டிலை' (அகம்.136: 10)

(5) **வெற்றி** - victory
'நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை சூடிய இராமன் தோள் வலி கூறுவார்க்கே' (கம்ப.பால.12: 3-4)

(ஆ) **வாகைக் கண்ணி வலத்தில் சூட்டுதல்** Vākaik kaṇṇi valattil cūṭṭutal

(6) **திருவிழா அறிவிப்பு** - celebration
'மாதர் அங்கையின் மங்கலத்து இயற்றிய வாகைக் கண்ணி வலத்தில் சூட்டித் தானைச் சேரித் தலைப்பெரும் திருவன் நாள் நீராட்டணி நாளையென்று அறைதலும்' (பெருங்.உஞ்.37: 260-263)

**வாகை** **(நகர்)** Vākai **(a town)**

(1) **வெற்றி** - victory
'சூடா வாகைப் பறந்தலை, ஆடு பெற' (அகம்.125: 19)

(2) **நலம்** – well being
'வண் கை எயினன் வாகை அன்ன இவள் நலம் தாராது அமைகுவர் அல்லர்' (புறம்.351: 6-7)

**வாசவதத்தை** Vācavatattai **(a lady / queen)**

(1) **கற்பு** - chastity
'நனவில் போலக் காதலன் முகத்தே கனவில் தோன்றக் காளையும் விரும்பி மாசில் கற்பின் வாசவ தத்தாய்' (பெருங்.மகத.9: 156-158)

**வாடை** Vāṭai **(North wind)**

(1) **வருத்தம், துன்பம்** – affliction, suffering
'அல்கலும் அலைக்கும் நல்கா வாடை' (நற். 89: 7)

(2) **தண்மை** - cool
'இரும் புறம் தழூஉம் பெருந்தண் வாடை' (நற்.193: 4)

(3) **கொடுமை** - cruel
'வருவைஅல்லை; வாடை நனி கொடிதே' (ஐங். 233: 1)

(4) **இன்னாமை/துன்பம்** -
'இன்னா வாடையும் மலையும்' (ஐங். 236:3)

(5) **அருளின்மை** - pitiless
'அரும் பனி கலந்த அருள் இல் வாடை' (ஐங்.479: 3)

(6) **பண்பின்மை** -
'நும் இல் புலம்பின் நும் உள்ளுதொறும் நலியும் தண்வரல் அசைஇய பண்பு இல் வாடை' (அகம்.58: 10-11)

(7) **இரக்கமின்மை** - unsympathatic
'கடிது வந்து இறுத்த கண் இல் வாடை' (அகம்.243: 8)

**வாய்** Vāy **(mouth)**

(1) **சொல்** – word

'அலர் வாய்ப் பெண்டிர் அம்பலொடு ஒன்றி' (நற்.36: 6)

(ஒப்பு) Mouth ஆக்கல், இருமை, உண்ணுதல், சுவாசித்தல், சொல்லாற்றல்; அழித்தல்.

**வாய்க்கால்** Vāykkāl **(canal / channel)**

(1) நட்பு - friendship
'சேய்த்தானும் சென்று கொளல் வேண்டும், செய்விளைக்கும் வாய்க்கால் அனையார் தொடர்பு. (நாலடி.218:3-4)

**வாயில்** Vāyil **(door / gate)**

(1) பாதுகாப்பு – secure, protect
'காப்புடை வாயில் போற்று, ஓ என்னும்' (நற்.132: 8)
(2) தடை / தடுப்பு – obstruct / prevent
'பலர் புகு வாயில் அடைப்பக் கடவுநர்' (குறு.118: 3)
(3) புகுதல் / வழி - enter / way
'உலகு புகத் திறந்த வாயில்' (புறம்.234: 5)
(4) திறப்பு / விருந்தோம்பல் – open / entertain guests
'அடையா வாயில் அவன் அருங் கடை குறுகி' (சிறுபா.206)
(5) ஐம்பொறிகள் – five senses
'பொறி வாயில் ஐந்து அவித்தான்' (குறள்.6)

(ஆ) இஞ்சி Iñci
பாதுகாப்பு, தடை / தடுப்பு – safe / obstacle
'இஞ்சி அடுத்துவைத் தேமாந் திருப்பினும்' (பழமொழி.320: 1)

(ஒப்பு) Gate, Door, Entrance
அரணமைத்தல், அருளிரக்கம், ஆற்றல், உடல், கருவாய், சுதந்திரம், செல்லும் வழி, தொடக்கம், நிலைமாற்றம், நீதி, நேர்மை, நுழைவிடம், பாதுகாப்பு, புகழ், பெண்மை, போர், மறுபிறப்பு, முடிவு.

திறந்திருக்கும் வாயில் - அமைதி, பகற்பொழுது, விருந்தோம்பும் பண்பு.
மூடியிருக்கும் வாயில் - அவலநிலை, போர், விருந்தோம்பாமை, வெளியே துரத்துதல்.
இருண்ட வாயில் - இறப்பு, கீழுலகம்.
இரும்பு வாயில் - வாழ்வு.

**வாயும் பல்லும் உலர்தல்** Vāyum pallum ulartal **( dryness of mouth and teeth)**

(1) தீமை - evil
'வாயினும் பல்லினும் உலறினார் .. .. ..' (கம்ப.யுத்.107: 1-2)

**வாலியோன் (பலதேவன்)** Vāliyōn̲ **(the white (Baladeva))**

(1) வலிமை - strength
'வலியொத் தீயே வாலி யோனை' (புறம்.56: 12)

**வாழை** Vāl̲ai **(plantain)**

(1) தலைவி - heroine
'நெடுநீர் அருவிய கடும் பாட்டு ஆங்கண், பிணி முதல் அரைய பெருங் கல் வாழைக் கொழு முதல் ஆய் கனி மந்தி கவரும்' (நற்.251: 1-3)
(2) வளமை - fertile
'சோலை வாழை முனைஇ, அயலது' (நற்.232: 3)
(3) ஒருமை – once / onetime
'முன்னும் ஒருகால் பிழைப்பானை ஆற்றவும் பின்னும் பிழைப்பப் பொறுப்பவோ? இன்னிசை யாழின்வண்(டு) ஆர்க்கும் புனலூர! ஈனுமோ வாழை இருகால் குலை' (பழமொழி. 63)
(4) இனிமை, நன்மை – sweetness, goodness
'வேம்பின் இலையுட் கனியினும் வாழைதன் தீஞ்சுவை யாதுந் திரியாதாம்' (நாலடி.244:1-2)
(5) இன்பம் – happy

'ஏழை மானுட இன்பினை நோக்கி இளையவர் வலைப் பட்டிருந்து இன்னம் வாழை தான் பழுக்கும் நமக்கு என்று வஞ்ச வல்வினையுள் வலைப் பட்டு' (சுந்.தேவா.192: 1-4)

(ஆ) <u>காற்றெறி வாழை</u> Kārreri vālai (plantain swaying in wind)

(6) **கலக்கம் / நடுக்கம்** – confusion / trembling
'காற்றெறி வாழையின் கலங்கி மெய்ந்நடுங்கி' (பெருங்.உஞ்.43: 138)

(இ) <u>வாழை மேல் வயிரம் கூர்த்தல்</u> Vālai mēl vayiram kūrttal (sharpening diamond on plantain)

(7) **வலிமை, உறுதி** - strength, firm
'ஆழியும் அகலத்த திருவும் வாங்கியிப் பாழியம் தோளினான் பால வாக்கினால் ஏழையும் எம்மையும் அறியும் என்றனர் வாழைமேல் வயிரம் கூர்த்தனைய மாண்பினார்' (சூளா.1212)

**<u>வாள்</u> Vāḷ (sword)**

(1) **வலிமை** - strength
'உறு பகை தணித்தனன், உரவு வாள் வேந்தே' (நற்.81: 10)

(2) **பிரிவுத்துன்பம், கொடுமை** – seperation, cruel
'தோள் தோய் காதலர்ப் பிரிக்கும் வாள் போல் வைகறை வந்தன்றால் எனவே' (குறு.157: 3-4)

(3) **வெற்றி** - victory
'வலம் படு வென்றி வாய் வாள்' (அகம்.213: 21)

(4) **வன்கண்மை, வீரம்** – vehemence, valour
'ஒளிறு வாள் மறவரும், .. .. .. ..' (புறம்.227: 4)

(5) **செயலாற்றல்** - capable
'வையகம் புகழ்ந்த வயங்கு வினை ஒள் வாள்' (புறம்.230: 5)

(6) **ஆண்மை** - manliness
'வாள் மிசைக் கிடந்த ஆண்மையோன் திறத்தே' (புறம்.270: 13)

(7) **இறப்பு / நிலையாமை** – death / transient
'நாள் என ஒன்றுபோல் காட்டி, உயிர் ஈரும் வாளது உணர்வார்ப் பெறின்' (குறள்.334)

(8) **பெருமை** - greatness
'ஓடோ மறவர் உருத்த மதம் செருக்கிப் பீடுடை வாளார் பிறங்கிய ஞாட்பினுள்' (களவழி.28: 1-2)

(9) **ஆற்றல் / வலிமை** – power / strength
'வன் துணை வாளேயாகச் சாரிகை மறி வந்து' (பெரிய.424: 3-4)

(ஆ) <u>வாள் அகப்படுதல்</u> Vāṉ akappaṭutal (caught with sword)

(10) **பகைத்திறம்** - hostile
'வாள் அகப்பட்டானை, ஒவ்வான் எனப்பெயரும் மீளி மறவனும் போன்ம்' (கலி.104: 49-50)

(இ) <u>எஃகம்</u> Eḳkam
**கூர்மை** - sharp
'கதுவாய் போகிய துதிவாய் எஃகமொடு' (புறம்.353: 15)

(ஈ) <u>எஃகு</u> Eḳku
**வெற்றி** - victory
'தாங்குநர் தடக் கை யானைத் தொடிக் கோடு துமிக்கும் எஃகுடை வலத்தர், நின் படைவழி வாழ்நர்' (பதி.51: 29-30)

**(ஒப்பு)** <u>Sword</u> **அரசத்தன்மை, அறிவாற்றல், ஆண்மையின் சிறப்பு, ஆன்மீக ஆற்றல், உயர்தகுதி, உயிர்த்தியாகம், உரிமைத்திறம், கடினத்தன்மை, காதல், சூரிய ஆற்றல், செயற்பாங்கு, தீமையை அழிக்கும் ஆற்றல், தூய்மைப்படுத்துதல், நீதி, பாதுகாப்பு, புனித ஆற்றல், போர் வீரர்கள், மதிப்பு, வலிமை,வளமை, வாழ்க்கை, வீரம், வெற்றி; அழிவாற்றல்,**

திறம், இறப்பு, காமம், சண்டை, தண்டனை, பழிதீர்ப்புச்செயல்.

<u>வாள்</u> **Vāḷ (sinkle)**

(1) கூர்மை - sharp
'நெல் அரி தொழுவர் . ர் வாள் உற்றென' (நற்.195: 6)

<u>வாளம்</u> **(சக்கரவாகம்) Vāḷam (a legendary bird)**

(1) பிரிவின்மை - inseperable
'கங்குலும் பகலும் எனப் பொலிவன கமலம் மங்கைமார் தட முலை எனப் பொலிவன வாளம்' (கம்ப.கிட்.20: 3-4)

<u>வாளை</u> **Vāḷai (sword fish)**

(1) தலைவன் - hero
'கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி ஈர்வாளை நீலத்துப் புக்கொளிக்கும் ஊரற்கு' (ஐந்.ஐம்.24: 1-2)

<u>வான்</u> **Vāṉ (sky)**

(1) உயர்வு - high
'வான் உற நிவந்த பெரு மலைக் கவாஅன்' (நற்.53: 4)

(2) புகழ் - fame
'வான் தோய் நல்லிசை உலகமொடு உயிர்ப்ப' (பதி.37: 6)

(3) ஈகை / கொடை - benevolence, giving
'சுரந்த வான் பொழிந்தற்றா, சூழ நின்று யாவர்க்கும் இரந்தது நசை வாட்டாய் என்பது கெடாதோதான்' (கலி.100: 11-12)

(4) தூய்மை - pure
'மாசு இல் வான் முந்நீர்ப் பரந்த தொல் நிலம்' (கலி.103: 77)

(5) விரிவு - expance
'வீயாது பரந்த நின் வசை இல் வான் புகழே' (புறம்.168: 22)

(ஆ) <u>வானம்</u> Vāṉam

உயர்வு - high, lofty
'வானினும் உயர்ந்தன்று' (குறு.3: 1)

விரிவு - extensive
'ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து' (குறு.92: 1)

வண்மை - bountiful
'வண்மைபோல் வானம் பொழிந்த நீர்' (பரி.22: 8)

(6) வளம் - fertile
'வறம் தெற மாற்றிய வானமும் போலும்' (கலி.146: 14)

(7) மழைவளம் – enriching rains
'கான் உயர் மருங்கில் கவலை அல்லது, வானம் வேண்டா வில் ஏர் உழவர்' (அகம்.193: 1-2)

(8) நீர்மை - watery
'குண கடல் முகந்த கொள்ளை வானம்' (அகம்.278: 1)

(9) சிறப்பு - eminent
'வான்நின்று உலகம் வழங்கி வருதலால் தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று' (குறள்.11)

(இ) <u>விசும்பு</u> Vicumpu

சேய்மை, உயர்வு - distant, lofty
'சேய் விசும்பு இவர்ந்த செழுங் கதிர் மண்டிலம்' (நற்.67: 1)

விரிவு - expanse, spreading
'அகல் இரு விசும்பின் அரவுக் குரைபடுத்த' (நற்.377: 6)

(10) பேரளவு - huge
'மழை தொழில் உலந்து, மா விசும்பு, உகந்தென' (நற்.333: 1)

(11) அளவின்மை - unmeasurable
'நீர், நிலம், தீ, வளி, விசும்போடு, ஐந்தும் அளந்து கடை அறியினும், அளப்பு அருங் குரையை' (பதி.24: 15-16)

புகழ் - fame
'மாயாப் பல் புகழ் வியல் விசும்பு ஊர்தர' (பதி.90: 10)

(ஈ) <u>விண்</u> Viṇ

உயர்வு - lofty
'விண் உயர் பிறங்கல் விலங்கு மலை நாட்டே' (குறு.144: 7)

புகழ் - fame
'வீயா விழுப் புகழ், விண் தோய் வியன் குடை' (அகம்.135: 11)

(உ) <u>ஆகாயம்</u> Ākāyam

(12) ஒளி - light, shine

'நின் உருவமும் ஒளியும் ஆகாயத்து உள' (பரி.4: 31)
விரிவு - expanse
'ஆக்கும் ஆகாயம் எல்லாப் பொருட்கும் பூக்குமிடம் கொடுக்கும் புரிவிற்றாகும்' (மணி.27: 193-194)

(ஊ) <u>காயம்</u> Kāyam
அளவின்மை - unmeasurable
'வறிது நிலைஇய காயமும், என்றாங்கு அவை அளந்து அறியினும், அளத்தற்கு அரியை' (புறம்.20: 4-5)

(எ) <u>செவ்வான்</u> Cevvāṉ (colourful sky)
(13) அழகு - beautiful
'செவ்வான் செவ்வி கொண்டன்று' (குறு.108: 4)

(ஏ) <u>விடியல் வானம்</u> Viṭiyal vāṉam (dawn sky)
(14) பொலிவு - bright
'விடியல் வியல் வானம் போலப் பொலியும்' (பரி.19: 83)

(ஐ) <u>வானை வீழ்த்துதல்</u> Vāṉai viḻttutal (pull down the sky)
(15) ஆற்றல் - power
'வான் வீழ்க்குவனே; .. .. .. ..' (பட்.272)

(ஒ) <u>செக்கர் வான்</u> Cekkar vāṉ
அழகு - beauty
'நக்கவான் இளம்பிறை வளர்ந்த நாட்கதிர்ச் செக்கர்வான் அனையதோர் திருவும் எய்தினாய்' (சூளா.418: 3-4)

(ஒப்பு) <u>Sky</u> எல்லையற்ற நிலை, இறைமை, கடந்த நிலை, தூய்மை, நிலைபேறு, புனிதத்தன்மை, முழுமை, வலிமை, வாழ்க்கை, விழிப்புணர்வு நிலை.

**<u>வான் இடு வில்</u> Vāṉ iṭu vil (Rainbow)**
(1) எதிர்பாராமை, திடீர் நிகழ்வு - sudden, unexpected
'வான்இடு வில்லின் வரவறியா வாய்மையால் கால்நிலம் தோயாக் கடவுளை யாம்நிலம் சென்னி யுறவணங்கிச் சேர்தும்எம் உள்ளத்து முன்னியவை முடிக என்று' (நாலடி.கட.வா.1)

(ஆ) <u>வில்</u> Vil
(2) வளைவு - curve
'கொன்றைக் குழலூதிக் கோவலர் பின்னிரைத்துக் கன்றமர் ஆயம் புகுதர - வின்று வழங்கிய வந்தன்று மாலையாங் காண முழங்கி விற் கோலிற்று வான்' (ஐந்.எழு.22)

(இ) <u>இந்திர திருவில்</u> Intira tiruvil
(3) எழில் / அழகு - beauty
'இந்திர திருவிலின் எழிலின தொருபால்' (சீவக.121: 4)

(ஈ) <u>இரவு வில்</u> Iravu vil
(4) தீ நிமித்தம் – bad omen
'இடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழும்' (சிலப்.20 5)
'இரவு வில்லிடும் பகன்மீன்விழும்' (சிலப்.20: 12)

(உ) <u>திருவில்</u> Tiruvil
(4) ஒளி - glow
'திருவில் இட்டுத் திகழ்தரு மேனியன்' (சிலப்.15: 156)

(ஊ) <u>வான் இடு வில்லின் தோற்றம்</u> Vāṉ iṭu villiṉ tōṟṟam (origin of rainbow)
(6) அறியப்படாமை - unknown
'வான் இடு வில்லின் வரவு அறியாத வகையன் என்பாய்' (நீலகேசி.684: 1)

**<u>வான் மதி இழந்த மீனினம்</u> Vāṉ mati iḻanta mīṉiṉam (starring sky without moon)**
(1) பொலிவின்மை – devoid of radiance

'வான்மதி இழந்த மீனினம் போலப் பொலிவின்று ஆகிப் புல்லென் கோலமொடு' (பெருங்.உஞ்.47: 260-261)

**வான ஊர்தி ஏறல்** Vāṉa ūrti ēṟal **(ride the flying vehicle)**

(1) **மேன்மை** - eminence
'பீடுகெழு நங்கை பெரும்பெயர் ஏத்தி வாடா மாமலர் மாரி பெய்தாங்கு அமரர்க்கு அரசன் தமர் வந்தேத்தக் கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு வான ஊர்தி ஏறினண் மாதோ கானமர் புரிகுழற் கண்ணகி தானென்' (சிலப்.23: 195-200)

(2) **இறப்பு** – death
'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவன் ஏவா வான ஊர்தி எய்துப என்ப, தம் செய் வினை முடித்து' (புறம்.27: 7-9)

**வானம்பாடி** Vaṉampāṭi **(skylark)**

(1) **செழிப்பு** - luxuriant
'வானம்பாடி வறம் களைந்து, ஆனாது அழி துளி தலைஇய புறவில்' (ஐங். 418:1-2)

(2) **எதிர்பார்ப்பு / மகிழ்ச்சி** - expectation / happiness
'துளி நசை வேட்கையான் மிசை பாடும் புள்ளின்' (கலி. 46:20)

(3) **நோன்மை** - asceticism
'துளியுண் பறவைபோல் செவ்வன்நோற் பாரும்' (பழமொழி. 248: 3)

**வானில் உள்ள நட்சத்திரங்கள் உதிர்ந்து வீழ்தல்** Vāṉil uḷḷa naṭcattiraṅkaḷ utirntu vīḻtal **(falling stars)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – evil omen, destruction, death
'முகிற் குலம் இன்றித் தா இல் வான் வெடிபட அதிருமல் உதிரும் மீன் எலாம்' (கம்ப.சுந்.371: 3-4)

**(ஆ) விண்மீன் உதிர்தல்** Viṇmīṉ utirtal

(2) **தீமை, தோல்வி, கேடு**

'வானமீன் உச்சியுள் நின்ற மாற்றலர் தானையுள் நடுவு வீழ்ந்து அதிரத் தங்களுக்கு ஊனமுண்டு என்பதை உணர்ந்து' (சூளா.1224: 1-3)

**விச்சாதரர்** Viccātarar **(divine beings)**

(1) **முயற்சி, வேகம், வலிமை** – perseverance, speed, strength
'அசையா ஊக்கத்து அடிகளென் உள்ளம் விசைகொள் நோந்தாள் விச்சாதரர் போல் மிசையே சென்றுற மேன்மேல் நெருங்கும்' (பெருங்.நர.1: 230-232)

**விசும்பு வீழ் கொள்ளி** Vicumpu vīḻ koḷḷi **(meteor)**

(1) **அழிவு** - destruction
'விசும்புவீழ் கொள்ளியின் பைம்பயிர் துமிப்ப' (குறு. 189:4)

**(ஆ) உற்கம்** Uṟkam

(2) **தீமை, இறப்பு** – evil, death
'காலனும் காலம் பார்க்கும்; பாராது, வேல் ஈண்டு தானை விழுமியோர் தொலைய, வேண்டு இடத்து அடூஉம் வெல் போர் வேந்தே! திசை இரு - நான்கும் உற்கம் உற்கவும் (புறம். 41: 1-4)

**(இ) எரி** Eri

(3) **அழிவு** - destruction
'மிகவானுள் எரிதோன்றினும்' (புறம். 395:34)

**விட்டில்** Viṭṭil **(grasshopper / muth)**

(1) **வீழ்ச்சி, அழிவு** - fall, destruction
'விரிசுடர் விளக்கம் கண்ட விட்டில் போல் வீழ்வ காணாய்' (கம்ப.ஆரண்.779: 4)

**விடவர் இயல்பு திரிதல்** Viṭavar iyalpu tirital **(warrior's nature deviates)**

(1) **தீமை, தோல்வி** - evil omen, defeat
'விடவரும் இயல்புகள் திரிந்து மெல்லியன் மடவரல் அவரொடு மாறுபட்டனர்' (சூளா.1221: 1-2)

**விடுகதிர் பருதி முன்னர் மின்மினி விளக்கம்** Viṭukatir paruti munnar minminI viḷakkam **(fire fly before sun)**

(1) **தகுதியின்மை, சிறுமை** – unworthy, mean
*'வடதிசைக் குன்ற மன்ன வான்குல மாசு செய்தீர் விடுகதிர்ப் பருதி முன்னர் மின்மினி விளக்கம் ஒத்தீர்'* (சீவக.742: 1-2)

**விண் தொடர் மதியினைப் பிளந்து மீன் எழுதல்** Viṇ toṭar matiyinaip piḷantu mīn eḻutal **(star piercing the moon)**

(1) **தீமை, அழிவு, இறப்பு** – evil, death, destruction
*'விண் தொடர் மதியினைப் பிளந்து மீன் எழும்'* (கம்ப.சுந்.375: 1)

**விண்ணும் மண்ணும் அதிர்தல்** Viṇṇum maṇṇum atirtal **(sky and earth tremble)**

(1) **தீமை, அழிவு, இறப்பு**
*'மண்ணும் விண்ணும் அதிர்ந்தவே'* (சீவக.2173: 8)

**விண்ணுலகம்** Viṇṇulakam **(heaven)**

(1) **இன்பம்** – happiness, pleasure
*'நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்- நுண்ணூல் உணர்விலர் ஆகிய ஊதியம் இல்லார்ப் புணர்தல் நிரயத்துள் ஒன்று'* (நாலடி. 233)

**விரிச்சி** Viricci **(oracle)**

(1) **முன்னுணர்தல்** – predict, premonitiar
*'திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப* (நற். 40: 4)

(2) **நற்சொல்** – promphetic words
*'நெல் நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும் செம் முது பெண்டின் சொல்லும் நிரம்பா'* (புறம். 280: 6-7)

**விரும்பிப் பிடித்த வெண்மலர் வீழ்ச்சி** Virumpi piṭitta veṇmalar vīlcci **(held while flower falling hand)**

(1) **இடையூறு** - obstacle
*'விரும்பி நீ பிடித்த வெண்மலர் வீழ்ச்சி பொருந்தி நீ அளக்கும் பொருவில் போகத்து இடையூறு உண்மை முடியத் தோன்றும்'* (பெருங்.இலா.13: 54-56)

**வில்** Vil **(bow)**

(1) **வலிமை** - strength
*'வல் வில் ஓரி கானம் நாறி'* (நற்.6: 9)

(2) **கொடுமை** - cruel
*'கொடு விற் கானவன் கோட்டுமா தொலைச்சி'* (நற்.75: 6)

(3) **வீரம், கொலை** – valour, killing
*'விழுத் தொடை மறவர் வில் இடத் தொலைந்தோர்'* (ஐங்.352: 1)

(4) **வளைவு / வருத்துதல்** – crooked / afflict
*'நெறி செறி வெறி உறு முரல் விறல் வணங்கு அணங்கு வில்'* (பரி.1: 18)

(5) **சொல், விரைவு** - word, quickness
*'வல்லவன் தைஇய வாக்கு அமை கடு விசை வில்லினான் எய்தலோ இலர்மன்; ஆயிழை! வில்லினும் கடிது, அவர் சொல்லினுள் பிறந்த நோய்'* (கலி.137: 9-11)

(6) **சேரன்** – cera king
*'புலியொடு வில் நீக்கி, புகழ் பொறித்த கிளர் கெண்டை'* (கலி.104: 3)

(7) **வெற்றி** - victory
*'கலி கொள் மள்ளர் வில் விசையின் உடைய'* (அகம்.185: 7)

(8) **புகழ்** - fame
*'செல்லா நல் இசை நிறுத்த வல் வில்'* (அகம்.209: 13)

(9) **வேட்டை** - hunt
*'கற்று உரிக் குடம்பைக் கத நாய் வடுகர் வில் சினம் தணிந்த வெரு வரு கவலை'* (அகம்.381: 7-8)

(ஆ) **சிலை** Cilai
**வளைவு** - curved

'வாங்கு சிலை மறவர் வீங்கு நிலை அஞ்சாது' (நற்.148: 6)
கொடுமை - cruel
'அவ் விளிம்பு உரீஇய கொடுஞ் சிலை மறவர்' (குறு.297: 1)

(10) அழகு / ஒலி - beauty / sound
'அரி மான் இடித்தன்ன, அம் சிலை வல் வில்' (கலி.15: 1)
வலிமை - strong
'வரி மாண் நோன் ஞாண் வன் சிலைக் கொளீஇ' (அகம்.61: 7)

(11) ஆற்றல் - power
'அரவு உறழ் அம் சிலைக் கொளீஇ' (குறி.158)

(இ) சாபம் Cāpam

(12) மாண்பு / மாட்சி - noble / honour
'மாண் வினைச் சாபம் மார்புற வாங்கி' (பதி.90: 32)
அழகு - beauty
'கண் ஒளிர்வரூஉம் கவின் சாபத்து' (புறம்.7: 4)

(ஈ) வில் வணக்கம் Vil vaṇakkam (bow bent)

(13) தீமை - evil
'சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில் வணக்கம் தீங்கு குறித்தமையான்' (குறள்.827)

(உ) வில் நாண் அறுபட்டு இற்றுப்போதல் Vil nāṇ aṟupaṭṭu iṟṟuppōtal (torn bow string)

(14) தீமை, இறப்பு, அழிவு - evil omen
'ஏவும் வெஞ்சிலை நாண் இடை இற்றன' (கம்ப.யுத்.3663: 2)

(ஒப்பு) Bow அறிவாற்றல், ஆற்றல், உயிர்ப்பாற்றல், நா, நெருப்பு, மின்னல், வலிமை, வளமை, விதி, வேட்டையாடுதல்; இறப்பு, போர்.

**விலங்கு** Vilaṅku **(animal)**

(1) கல்லாமை – illiterate / uneducated / unrefined
'விலங்கொடு மக்கள் அனையர் - - இலங்கு நூல் கற்றாரொடு ஏனையவர்' (குறள்.410)

(2) சினம் / சீற்றம் – anger / wrath
'வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார் கன்றிக் கறுத்தெழுந்து காய்வரோடு ஒன்றி உரைவித்து அகமெழுவார் காண்பவே, கையுள் சுரைவித்துப் போலுந்தம் பல்' (நாலடி. 315)

(3) அறியாமை / பகுத்தறிவின்மை – ignorance / irrational
'பாம்பிற்கு ஒருதலை காட்டி ஒருதலை தேம்படு தெண்கயத்து மீன்காட்டும் ஆங்கு மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார் விலங்கன்ன வெள்ளறிவினார்' (நாலடி. 375)

**விழவு** Viḻavu **(festival)**

(1) மேன்மை - glory
'விழவுமேம் பட்டவென் நலனே (குறு.125: 4)

(2) மகிழ்ச்சி - glad / happy
'பெருநிலக் குறுமகள் வந்தென எ இனிவிழ வாயிற்று என்னும் இவ் ஊரே' (குறு.295: 5-6)

(3) பாதுகாப்பு - security
'ஏமம் ஆகிய, சீர் கெழு விழவின்' (பதி.15: 38)

(4) அழகு - beauty
'கல்லெனக் கவின் பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்' (கலி.5: 10)

(5) மாட்சி - honourable
'நல் மாண் விழவில் தகரம் மண்ணி' (அகம்.385: 6)

(6) வெளிப்படை - open, reveal
'உள்ளி விழவின் அன்ன, அலர் ஆகின்று, அது பலர் வாய்ப் பட்டே?' (அகம்.368: 18-19)

(7) மங்கலம், களிப்பு – anspicious, happy
'மங்கல விழவு கொண்டு வருநதித் துறை நீராடி பொங்கிய களிப்பினோடும்' (பெரிய.562: 1-3)

(ஆ) திருவிழா Tiruviḻā

(8) சிறப்பு - eminent
'மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கி' (பெரிய.7.4)

**விழுப்புண்** Viluppun **(wound)**

(1) **வீரம்** - valour
'அழுந்து படு விழுப் புண் வழும்பு வாய் புலரா எவ்வ நெஞ்சத்து எஃகு எறிந்தாங்கு' (நற்.97: 1-2)

(ஆ) **புகழ்குறி** Pukalkuri

(2) **பெருமை, புகழ்ச்சி** - pride, fame
'புகழ்குறி கொண்ட பொலந்தார் அகலத்து' (அகம்.354: 9)

**விழிக்கும் அளவு** Vilikkum aḷavu **(wink)**

(1) **காலச் சிறுமை** - momentary
'விழிக்கும் அளவிலே வேர் அறுத்தானை' (நாலா.167: 3)

**விளக்கு** Viḷakku **(lamp)**

(1) **அறம்** - virtue
'வேலின் நோக்கிய விளக்கு நிலையும்' (தொல்.1036)

(2) **பெண்** - woman
'மனைக்கு விளக்கு ஆயினள்மன்ற' (ஐங்.405: 2)

(3) **ஒளி** - glow, light
'கைவிளக்காகக் கதிர் சில தாராய்' (கலி.142: 43)

(4) **புகழ், சிறப்பு, கற்பு, கடவுட்டன்மை** – fame, eminence, chastity, divine
'கடவுட் கற்பொடு குடிக்கு விளக்கு ஆகிய புதல்வற் பயந்த புகழ் மிகு சிறப்பின்' (அகம்.184: 1-2)

(5) **வழிபாடு** – worship
'இரும்செய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ நெல்லும் மலரும் தூஉயக் கைதொழுது' (நெடுநல்.42-43)

(6) **பொய்யாமை** - truth
'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு' (குறள்.299)

(7) **கல்வி ஞானம், அறிவு** - knowledge, wisdom
'விளக்கு விலைகொடுத்துக் கோடல் விளக்குத் துளக்கம் இன்(று) என்றனைத்தும் தூக்கி விளக்கு மருள்படுவ தாயின் மலைநாட என்னை பொருள்கொடுத்துக் கொள்ளார் இருள்' (பழமொழி. 3)

(8) **ஒளி, நன்மை, நல்வினை** – light, goodness, good deed
'விளக்குப் புக இருள் மாய்ந்தாங் கொருவன் தவத்தின்முன் நில்லாதாம் பாவம்- விளக்குநெய் தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை தீர்விடத்து நிற்குமாம் தீது' (நாலடி.51)

(9) **தூய்மை** - purity
'தூய திரு விளக்கெரித்தார் துளக்கறு மெய்த்தொண்டனார்' (பெரிய.4064: 7-8)

(ஆ) **விளக்கு அணைதல்** Viḷakku anaital (light put off)

(10) **தீமை, இறப்பு** – evil, death
'நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா' (புறம்.280: 3)

(இ) **விளக்கம்** Viḷakkam

**ஒளி** - light
'பல் மர உயர்சினை மின்மினி விளக்கத்து' (நற்.44: 10)

**புகழ்** - fame
'புகழ்செய்யும் பொய்யா விளக்கம்' (நான்.24: 1)

(ஈ) **விளக்கொளி** Viḷakkoḷi (lamp light)

(11) **நிலையற்ற அன்பு** – transient love / false love
'விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும் துளக்கற நாடின் வேறல்ல விளக்கொளியும் நெய்யற்ற கண்ணே அறுமே, அவரன்பும் கையற்ற கண்ணே அறும்' (நாலடி. 371)

(உ) **கைவிளக்கு** Kaiviḷakku (small lamp)

(12) **தெளிவு** - clarity
'மாட்சி ஒன்றானும் இன்றி மயங்கினேற் கிருளை நீங்கக் காட்டினார் தேவர் ஆவர் கைவிளக்கதனை என்று' (சீவக.2729: 2-3)

(ஊ) **தீபம்** Tipam

(13) பெண்மை, அழகு – feminity, beauty
'பெண் இயல் தீபம் அன்ன பேர் எழிலாட்டி மாட்டு'
(கம்ப.ஆரண்.1029: 1)
ஞானம் / அறிவு - wisdom, knowledge
'தீபமே அனைய ஞானத் திருமறை முனிவர் செப்பும்'
(கம்ப.யுத்.610: 3)

(எ) வேத நல் விளக்கு Vēta nal viḷakku (vedic lamp)

(14) மகிமை, இறைமை – glory, godhood
'மின்திகழ் குடுமி வேங்கட மலைமேல் மேவிய வேத நல் விளக்கை தென்திசைத் திலதம் அனையவர் நாங்கைச் செம்பொன்செய் கோயிலினுள்ளே மன்று அது பொலிய மகிழ்ந்து நின்றானை வணங்கி நான் வாழ்ந்தொழிந்தேனே'
(நாலா.1275: 3-8)

(ஒப்பு) Lamp அருள், அழகு, அறிவுத்திறம், அன்பு, இரக்கம், ஒளி, கன்னிமை, சிந்தனை வாழ்க்கை, செழிப்பு, சுய தியாகம், தனிமை, தூய்மை, நிலைபேறு, நெருப்பு, நற்பேறு, பார்வை, புனித ஆன்மா, மெய்ப்பொருள், வளமை, வழிகாட்டி, விழிப்புணர்வு; இருள் மற்றும் அறியாமையை அகற்றுதல்.

**விளக்கிருக்க மின்மினித் தீக்காய்தல்** Viḷakkirukka miṉmiṉit tīkkāytal **(warming with fire fly, while there is lamp)**

(1) அறியாமை - ignorance
'விதியின்றி மதியிலியோன் விளக்கிருக்க மின்மினித் தீக் காய்ந்தவாறே' (திருநா.தேவா.1224: 7-8)

**விளங்காய்** Viḷaṅkāy **(a hard fruit)**

(1) பயனின்மை, வீண், புளிப்புச் சுவை – waste, futile, sour taste
'சிறுகாலையே தமக்குச் செல்வுழி வல்சி இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்- இறுகிறுகிப் பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும் பொன்னும் புளிவிளங்கா யாம்' (நாலடி. 328)

**விறகில் தீ** Viṟakul tī **(fire in wood)**

(1) மறைவு - hidden
'விறகில் தீயினன் பாலில் படு நெய் போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்'
(திருநா.தேவா.30: 1-2)

(ஆ) விறகிடைத் தீ Viṟakiṭait tī

(2) புலப்பாடின்மை – not onservable
'விறகிடைத் தீயர் வீழி மிழலையுள் விகிர்தனாரே'
(திருநா.தேவா.1579: 4)

**விறகு** Viṟaku **(fire wood)**

(1) வெப்பம் – heat, warmth
'வஞ்சி விறகின் சுட்டு, வாய் உறுக்கும்' (அகம்.216: 4)
(2) இறப்பு - death
'கரி புற விறகின் ஈம ஒள் அழல்' (புறம்.231: 2)

**வீமன்** Vīmaṉ **(Bhima)**

(1) வலிமை - strength
'வீமனென வலிமிகுந்த திருமலைராயன் கீர்த்தி'
(தனிப்.394: 1)

**வீரர்கள் அணிந்திருந்த கற்பக மாலை புலால் நாற்றம் வீசுதல்** Vīrarkaḷ aṇintirunta kaṟpaka mālai pulāl naṟṟam vīcutal **(flower garlands worn by warriors emitting bad smell)**

(1) தீமை, அழிவு - evil omen
'மல் பக மலர்ந்த தோள் மைந்தர் சூடிய கற்பக மாலையும் புலவு காலுமால்' (கம்ப.சுந்.372: 3-4)

**வீரர்களின் வில் இற்று வீழ்தல்** Vīrarkaḷiṉ vil iṟṟu vīḻtal **(bows of warriors fall torn)**

(1) தீமை, தோல்வி - evil omen, defeat

'.. .. .. போர்செய் ஆடவர் ஏவிளை கொடுஞ்சிலை இற்று வீழ்ந்தவே' (சூளா.1222: 3-4)

**வீழ்** (விழுது) Vīl (aerial roots)

(1) **மகன், ஆதாரம், தாங்குதல்** – son, support, basic
*'சிதலை தினப்பட்ட ஆல மரத்தை மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக் குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற புதல்வன் மறைப்பக் கெடும்.* (நாலடி.197)

**வீழ்ந்த வெண்மலர் வெறுநிலத்தில் வீழாது காலில் விழுதல்** Vīlnta venmalar verunilattil vīlātu kālil vilutal **(white flower falling at foot and not on floor)**

(1) **இழந்ததைப் பெறல்** - regain
*'வீழ்ந்த வெண்மலர் வெறுநிலம் படாது தாழ்ந்த கச்சைநின் தாள்முதல் தங்கலில் பிரிந்த போகம் பெயர்த்தும் பெறுகுவை'* (பெருங்.இலா.13: 57-59)

**வீழிக்கனி** Vīlkkani **(a fruit)**

(1) **சிவப்பு நிறம்** - red
*'பாழிப் புயம் அம்பு உருவப் படலும் வீழிக் கனி போல் புனல் வீச வெகுண்டு'* (கம்ப.யுத்.2313: 1-2)

**வெட்சி** Vetci **(a flower)**

(1) **குறிஞ்சித்திணை / போர்** - mountain tract / war
*'வெட்சி தானே குறிஞ்சியது புறனே உட்கு வரத்தோன்றும் ஈர்ஏழ் துறைத்தே வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக் களவின் ஆ தந்து ஓம்பல் மேவற்றாகும்'* (தொல்.1002, 1003)

(2) **போர்** - war
*'வெட்சி மா மலர், வேங்கையொடு விரைஇ, சுரி இரும் பித்தை பொலியச் சூடி'* (புறம்.100: 5-6)

(3) **நிரை கொள்ளல்** – capture of herds
*'வெட்சி மலர் புனைய வெள்வாளுழத்தியும் வேண்டும் போலும்'* (சிலப்.12: 13)

**வெண்குடை கால் பரிந்து உலறல்** Venkutai kāl parintu ularal **(parasol falling, rod breaking)**

(1) **தீமை, இறப்பு** – evil omen, death
*'காவல் வெண்குடை கால் பரிந்து உலறவும்'* (புறம்.229: 20)

**வெண் சாந்து அணிதல்** Ven cāntu anital **(smear white paste)**

(1) **மங்கலச் செய்தி அறிவிப்பு** – announce festivity
*'செல்வச் சேனை வள்ளுவ முதுமகன் நறுவெண் சாந்தொடு மாலை அணிந்து மறுவில் வெண்துகில் மருங்கணி பெறீஇ'* (பெருங்.இலா.2: 34-36)

**வெண்ணெய்** Vennei**(butter)**

(1) **உருகும் தன்மை, நிலையாமை** – melting, transient
*'சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன உவர் எழு களரி ஓமை அம் காட்டு'* (நற்.84: 6-8)

(2) **மென்மை** – soft / smooth
*'வெண்ணெய் போன்று ஊறு இனியள்'* (சீவக.480: 1)

(3) **அழிவு** - destroy
*'பின்னை வெண்ணெயிற் றிரண்டபின் பிழைக்கவும் பெறுமே'* (சீவக.2754: 4)

(ஆ) **அழலுறு வெண்ணெய்** Alaliru venney (butter in fire)

(4) **துன்பம், தவிப்பு** – sorrow, suffering
*'அழலுறு வெண்ணெய் போல அகம் குழைந்து உருகி ஆற்றாள்'* (சீவக.1: 408.1)

(இ) **வெண்ணெய் தீயுறல்** Venney fiyural

(5) **மெலிவு, துன்பம்** – leanness, sorrow

'வெண்ணெய் தீயுற்ற வண்ணம் ஆடவர் மெலிகின்றாரே' (சீவக.5: 1255.4)

(ஈ) இழுது Ilutu

(6) **மென்மை** - smooth
'இன்புகை ஆர்ந்த இழுதார் மென்பள்ளி மேல்' (சீவக.1576: 1)

(உ) தீயுறு வெண்ணெய் Tiyuru venney

(7) **உருகுதல், நிலையழிதல்** – melt, change
'தீயுறு வெண்ணெயின் உருகு நெஞ்சமொடு' (பெருங்.உஞ்.33: 153)

(ஊ) நெருப்புறு வெண்ணெய் Neruppuru venney

**நிலையாமை, அழிவு, உருக்கம்** – transient, destruction, melting
'நெருப்புறு வெண்ணெயும் நீருறும் உப்பும் எனவிங்ஙனே பொருப்புறு தோகை புலம்புறல் பொய்யன்பர் போக்குமிக்க' (திருக்கோ.22: 315. 1-2)

(எ) வெண்ணெய் உருகாதிருத்தல் Venney urukātiruttal (butter not melting)

(8) **தீமை** – evil omen
'உறிநறு வெண்ணெய் உருகா உருகும்' (சிலப்.17: 3.1)

(ஏ) வெண்ணெய்க் குன்று எரியுறல் Venneyk kunru eriyural (butter mount on fire)

**உருகுதல், மெலிதல்** – melt, leanness
'வெண்ணெய்க் குன்று எரியுற்றாற் போல் மெலிந்துபின் நிற்குமன்றே' (சீவக.1597: 4)

**வெண்மதி இழந்த மீன்** Venmati ilanta min **(star, without moon)**

(1) **மயக்கம் (அறிவு மயக்கம்)** – confusion / bewilderment
'வெண்மதி இழந்த மீன்போல் விடலைக்குத் தம்பி மாழாந்து' (சீவக.1695: 1)

**வெண்மை** Venmai **(white)**

(1) **பொய்ம்மை** – false / untruth
'.. .. .. .. வாய் அல்லா வெண்மை உரையாது' (கலி.88: 6)

(2) **புல்லறிவு / அறிவு முதிராமை** – ignorance / immetured
'வெண்மை எனப்படுவது யாது எனின் ஒண்மை உடையம் யாம்! என்னும் செருக்கு' (குறள்.844)

(3) **தூய்மை** - pure
'வெண் குணங்கொள் கோவணம் தண்டினில் அவிழ்த்தது கொடுப்பார்' (பெரிய.514: 6-8))

(4) **அந்தணர்** - Brahmin
'வெண் துகில் உடுத்து வெண் சாந்து மெய் வழித்து ஒண் திரள் மல்லிகை ஒலியல் சூடினார் வண்திரள் மணிமுத்தும் வயிரச் சாதியும் கொண்டியல் அணியொடு கோலம் தாங்கினார்' (சூளா.1874)

(ஆ) வெள்ளை Vellai

(5) **பழியின்மை** - blemishless
'பால்நிற வண்ணன் போல்பழி தீர்ந்த வெள்ளையும்' (கலி.104: 8)

(6) **பேதைமை** - innocence
'கள்ளம் இன்றிக் கட்டாள் வீழ்த்த வெள்ளை வேட்டுவீர் புள்ளெவன் பிழைத்ததென்று உள் அழிந்தவர்கட்கு உறுதி கூற' (பெருங்.உஞ்.56: 15-17)

(7) **பிள்ளைத் தன்மை** – childlike
'பிள்ளைமை கலந்த பேதைப் பெரும்பிணை வெள்ளை நோக்கமொடு விரும்புபு விதும்பி' (பெருங்.இலா.15: 99-100)

(8) **வஞ்சகமின்மை** - guileless
'வெந்த னம்ம னம்மென வெள்ளை நோக்கின் முள்ளெயிற்று' (சீவக.1099: 1)

(இ) வெளிறு Veliru

(9) **அறியாமை** - ignorance
'அரிய கற்று ஆசு அற்றார்கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு' (குறள்.503)

(10) **வெளிப்படை** - open / exposed
'வெளிறு பட விளையாடிய விகிர்தன் இராவணனை' (திருஞான.தேவா.3251: 5-6)

(ஒப்பு) White Colour **அகிம்சை, அமைதி, அருளிரக்கம், அறிவொளி, ஆன்மா, இறைமை, உண்மை, எளிமை, கற்பு, கன்னிமை, தற்காலப் போர்நிறுத்தம், தன்னடக்கம், தூய்மை, நடுநிலைமை, பகல்பொழுது, புனிதத்தன்மை, மறுபிறப்பு, முழுமை, மேன்மை, மீட்பு, வாழ்க்கை, வியப்பார்வம், விழிப்புநிலை, வீறு, வெளிப்பாடு; அறியாமை, இறப்பு, துயரம், முதுமை.**

<u>**வெந்த புணில் வேல் நுழைதல்**</u> Venta Puṇṇil vēl nuḻaital **(spear in wound)**

(1) **துன்பம்** - affliction
'வெந்த கொடும் புணில் வேல் நுழைந்தது ஒப்ப சிந்தை திரிந்து திகைத்து அயர்ந்து வீழ்ந்தான்' (கம்ப.அயோ.201: 2-3)

(ஆ) <u>**வெந்தீ புண் மேல் நுழைதல்**</u> Ventī puṇ mēl nuḻaital (fire in wound)
**துன்பம்** - affliction
'விண்மேல் எழுந்தான் எழு மெல்லியலாளும் வெந்தீ புண்மேல் நுழையத் துடிக்கின்றனள் போல் புரண்டாள்' (கம்ப.ஆரண்.922: 3-4)

<u>**வெந்நீர்**</u> Vennīr **(hot water)**

(1) **காமம்** - passion
'நோய் உறு வெந் நீர்; தெளிப்பின், தலைக் கொண்டு வேவது அளித்து இவ் உலகு' (கலி.142: 53-54)

<u>**வெய்ய தேன் வாய்க்கொள்ளுதல்**</u> Veyya tēṉ vāykkoḷḷutal **(hot honey in mouth)**

(1) **தடுமாற்றம்** – totter / perplexed
'வெய்ய தேன் வாய்க்கொண்டாற் போல் விழுங்கலோடு உமிழ்தல் தேற்றான் செய்வதென் நோற்றிலாதேன் நோற்றிலாள் திறத்தின் என்று மையல் கொண்டிருப்ப அப்பால் குமரிதன் மதியில் சூழ்ந்தாள்' (சீவக.2072: 3-8)

<u>**வெயிலிடைத் தந்த விளக்கு**</u> Veyiliṭait tanta viḷakku **(lamp in sunlight)**

(1) **ஒளியின்மை** – dull / not bright
'வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள்' (கம்ப.சுந்.332: 2)

<u>**வெவ்விடம் தலைக்கொண்டல்**</u> Vevviṭam talaikkoṇṭal **(poison rising to head)**

(1) **கடுந்துயரம் / வேதனை** – distress / pain
'அவ்வுரை கேட்ட வேந்தன் ஆவுறு துயரம் எய்தி வெவ்விடம் தலைக்கொண்டாற் போல் வேதனை அகத்து மிக்கு' (பெரிய.117: 1-4)

<u>**வெள்ளம்**</u> Veḷḷam **(flood)**

(1) **அழிவு** - destruction
'அழிதரு வெள்ளம் நீந்தும் நாளே' (நற்.177: 10)

(2) **மிகுதி, துன்பம்** - immence / abundance, sorrow
'உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி' (குறு.29: 3)

(3) **பேரளவு** - large / exceed
'கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே' (குறு.387: 5)

(4) **வரம்பின்மை** - limitless
'புலம் கெட நெறிதரும் வரம்பு இல் வெள்ளம்' (பதி.33: 6)

(5) **காமம்** - passion
'.. .. .. மிகு பெயல் உப்புச் சிறை நில்லா வெள்ளம் போல, நாணு வரை நில்லாக் காமம் நண்ணி' (அகம்.208: 19-20)

(6) **வளம்** – abundance / fertile
'வெள்ளம் மாறாது விளையுள் பெருக' (மது.109)

(7) **உயர்வு** - lofty / high
'வெள்ளத்து அனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு' (குறள்.595)

(8) **அளவற்ற தன்மை** – unmeasurable / plenty
'வெள்ளம் பகையெனினும் வேறிடத்தார் செய்வதென் கள்ளம் உடைத்தாகிச் சார்ந்த கழி நட்பு' (பழமொழி.297: 1-2)

(ஆ) **ஓதம்** Otam

(9) **மிகுதி** - much, exceeding
'காதலில் தீரக் கழிய முயங்கன்மின் ஓதம் துவன்று ஒலிபுனல் ஊரனைப் பேதைபட்டு ஏங்கன்மின் நீயிரும் என்னிலா ஆசை ஒழிய உரைத்து' (ஐந்.எழு.50)

(ஒப்பு) Flood **அடங்காமை, அழிவு, கடவுளின் பழியெதிர்ச் செயல், கண்ணீர், பலத்த மழை, தண்டனை, புதிய வரலாறு, மறுபிறப்பு, மறைவிலிருந்து மீண்டும் வெளிப்படுதல், முடிவு, வளர்ச்சி.**

**வெள்ளாங்குருகு** Veḷḷaṅkuruku **(a bird)**

(1) **பரத்தை** - prostitute
'வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென, காணிய சென்ற மட நாரை' (ஐங்.151: 1-2)

**வெள்ளின் மாலை** Veḷḷiṉ mālai

(1) **கடுமை** – harsh / cruel
'வெள்ளின் மாலையும் விரிந்த வெண்டலைகளும் கரிந்த .. .. .. கள்ளியாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே' (நீலகேசி.30: 1,4)

**வெள்ளை (வெள்ளாடு)** Veḷḷai **(goat)**

(1) **வளம்** - fertility
'சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன' (குறு.163: 2)

(ஆ) **வெள்ளாடு** Veḷḷāṭu

(2) **குற்றம்** – blemish / crime
'தம்குற்றம் நீக்கலர் ஆகிப் பிறர்குற்றம் எங்கேனும் தீர்த்தற்கு இடைப்புகுதல் - எங்கும் வியன் உலகில் வெள்ளாடு தன்வளி தீராது அயல்வளி தீர்த்து விடல்' (பழமொழி. 38)

**வெள்ளி (விண்மீன்)** Veḷḷi **(a star / venus)**

(1) **ஒளி** - glow / light
'குணக்குத் தோன்று வெள்ளியின், இருள் கெட விரியும்' (நற்.230: 4)

(2) **மழை** - rain
'அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது மழை வேண்டு புலத்து மாரி நிற்ப' (பதி.13: 25-26)

(3) **பயன், சிறப்பு, வளமை** – utility, eminence, fertility
'வறிது வடக்கு இறைஞ்சிய சீர் சால் வெள்ளி பயம் கெழு பொழுதோடு ஆநியம் நிற்ப' (பதி.24: 24-25)

(4) **பயன், தன்மை, வளமை** – use, cool, fertile
'நிலம் பயம் பொழிய, சுடர் சினம் தணிய, பயம் கெழு வெள்ளி ஆநியம் நிற்ப' (பதி.69: 13-14)

(5) **மாசின்மை** - stainless
'நீர்த் திரள் கடுக்கும் மாசு இல் வெள்ளி' (அகம்.142: 16)

(6) **விடியல், புதிய தொடக்கம்** – dawn, new beginning
'வெள்ளி முளைத்த நல் இருள் விடியல்' (பொரு.72)

(ஆ) **வெள்ளி தென்புலம் படர்தல்**
Veḷḷi teṉpulam paṭartal (venus going south)

(7) **தீமை, வறட்சி, பயனின்மை, மழையின்மை, வளனின்மை** – evil omen, drought, futile, dry, infertile
'இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும் அஞ்தண் காவிரி வந்துகவர் பூட்ட' (புறம்.35: 7-8)

(இ) **மீன்** Mīṉ

(8) **மழை** - rain
'மீன்வயின் நிற்ப வானம் வாய்ப்ப' (பதி.90: 1)

(ஈ) **வெண்மீன்** Veṇmīṉ

(9) புகழ் - fame
'வசையில் புகழ் வயங்கு வெண்மீன்' (பட்.1)

(ஒப்பு) Venus அழகு, அமைதி, அன்பு, இசைவு, உறவு, கவர்ச்சி, தெற்குத்திசை, தூய்மைப்பாடு, மயக்குதல், மறுபிறப்பு; இடர்ப்பாடுகள், இறப்பு, போரின் விளைவுகள்.

**வெள்ளோத்திரம்** Veḷḷōttiram **(a flower)**

(1) பாலை நிலம் - wilderness
'மால் வெள்ளோத்திரத்து மை இல் வால் இணர், அருஞ் சுரம் செல்வோர், சென்னிக் கூட்டும்' (ஐங்.301: 1-2)

**வேங்கை** Vēṅkai **(a tree)**

(1) கடவுட்டன்மை – devine / godhood
'எரி மருள் வேங்கைக் கடவுள் காக்கும்' (நற்.216: 6)

(2) கார்காலம் / முன்னுரைத்தல் – rainy season / foretell
'கார் அரும்பு அவிழ்ந்த கணி வாய் வேங்கை' (நற்.373: 6)

(3) நறுமணம் - fragrance
'வேங்கையும் காந்தளும் நாறி' (குறு.84: 4)

(4) அழகு - beauty
'புன வேங்கைத் தாது உறைக்கும் பொன் அறை முன்றில்' (கலி.39: 33)

(5) திருமணம்- marriage
'மன்றல் வேங்கை கீழ் இருந்து, மணம் நயந்தனன், அம் மலைகிழவோற்கே' (கலி.41: 43-44)

(6) குறிஞ்சித்திணை - mountanous region
'முதிர் இணர் ஊழ் கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை' (கலி.44: 1)

(7) மணநாள் – wedding day
'குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண் மன்ற வேங்கை மணநாட் பூத்த மணியேர் அரும்பின் பொன்வீ தாஅய்' (அகம்.232: 6-8)

(8) வெற்றி, வலிமை – victory, strength / power
'கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மே லிருங்கால் வயவேங்கை யேய்க்கு' (திணைமாலை.25:1-2)

(9) பாதுகாப்பு - security
'தன் குறை இது என்னான், தழை கொணரும் தண் சிலம்பன் நின் குறை என்னும் நினைப்பினனாய், பொன் குறையும் நாள் வேங்கை நீழலுள் நண்ணான்; எவன்கொலோ, கோள் வேங்கை யன்னான் குறிப்பு' (திணைமாலை.31:4)

(10) உயர்வு / மேன்மை / இறைமை – lofty, excellent, godhood
'பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழு நிழல் ஒரு முலை இழந்தாளோர் திருமா பத்தினிக் கமரர்க் கரசன் தமர்வந் தீண்டியவள் காதற் கொழுநனைக் காட்டி யவளொடெங் கட்புலங் காண விட்புலம் போய' (சிலப்.பதிகம்.4-9)

**வேந்தன்** Vēntaṉ **(king)**

மருதத்திணை - agricultural tract
'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' (தொல்.951)

**வேம்பு** Vēmpu **(neem)**

(1) மன்னர் அடையாளம் – sign of King
'போந்தை வேம்பே ஆர் என வரூஉம் மாபெருந் தானையர் மலைந்த பூவும்' (தொல்.1006: 4-5)

(2) கசப்பு - bitterness
'வேம்பின் பைங் காய் என் தோழி தரினே, தேம் பூங் கட்டி என்றனிர்' (குறு.196: 1-2)

(3) காவல்மரம் – totemic tree
'மோகூர் மன்னன் முரசம் கொண்டு, நெடுமொழி பணித்து, அவன் வேம்பு முதல் தடிந்து' (பதி.44: 14-15)

(4) பாண்டியன் – sign of Pandya kings
'சினை அலர் வேம்பின் பொருப்பன் பொருத' (கலி.92: 27)

(5) கடவுட்டன்மை - devine
'தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்' (அகம்.309: 4)

(6) பாதுகாப்பு – protection

'வேம்புசினை ஒடிப்பவும் காஞ்சி பாடவும் .. .. .. .. எல்லா மனையும் கல்லென் றவ்வே' (புறம்.296: 1-3)

(7) **வெறுப்பு** - hate
'விருப்பிலார் இல்லத்து வேறிருந் துண்ணும் வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்' (நாலடி. 210: 1-2)

(8) **தீமை** - evil
'வேம்பின் இலையுட் கனியினும் வாழைதன் தீஞ்சுவை யாதுந் திரியாதாம்; ஆங்கே இனந்தீது எனினும் இயல்புடையார் கேண்மை மனந்தீதாம் பக்கம் அரிது' (நாலடி. 244)

(9) **இழிவு, வருத்தம்** – mean, affliction
'உயர்வரைத் தேனை உண்பார் வருத்தும் காஞ்சிரமும் வேம்பும் வாய்க்கொள்வார் யாவர் சொல்லாய்' (சீவக.2722: 6-8)

**<u>வேய்</u>** Vēy **(bamboo)**

(1) **அழகு** - beauty
'நோயும் நெருஞ்சியும் வீடச் சிறந்த வேய் வனப்புற்ற தோளை நீயே' (நற்.82: 1-2)

(2) **உயர்ச்சி** - lofty
'வெயில் முளி சோலைய, வேய் உயர் சுரனே' (ஐங்.327: 3)

(3) **வளமை** - fertile
'வேய் பயில் சோலை அருவி தூர்த்தர' (பரி.11: 23)

(4) **திரட்சி** - roundness
'வேய் எனத் திரண்ட தோள்' (கலி.57: 1)

(ஆ) **<u>கழை</u>**

(5) **விசைப்பு, எழுச்சி** - force, arise
'கழைக் கண் இரும் பொறை ஏறி விசைத்து எழுந்து' (நற்.95: 5)

(6) **உயர்வு** - lofty, high
'உறு கழை நிவப்பின் சிறு குடிப் பெயரும்' (நற்.204: 10)

(ஒப்பு) <u>Bamboo</u> **ஒழுக்கம், உள்ளார்ந்த நலம், சிறந்த பண்பு, தகுதி, நன்மை, நேர்மை, மகிழ்ச்சி.**

**<u>வேர்</u>** Vēr **(root)**

(1) **மூலம், அடிப்படை, ஆசை** - cause, base, desire
'அல்லற் பிறவி அகன்றோய் நீ ஆசை வெவ்வேர றுத்தோய் நீ' (நீலகேசி.138: 1)

**<u>வேல்</u>** Vēl **(spear / javelin)**

(1) **வெற்றி** - victory
'.. .. .. .. வென் வேல் தெறல் அருந் தானைப் பொறையன்' (நற்.18: 4-5)

(2) **வீரம்** – valour / heroism
'மறவர் வேல் என விரிந்த கதுப்பின் தோல' (நற்.86: 1-2)

(3) **கூர்மை** - sharp
'செரு மிகு மொய்ம்பின் கூர்வேற் காளையொடு' (நற்.184: 2)

(4) **வலிமை** – strength / skill
'வல் வேற் கட்டி நல் நாட்டு உம்பர்' (குறு.11: 6)

(5) **கொலை** - killing
'கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்' (குறு.283: 5)

(6) **திறல், விறல், வெற்றி** - strength, bravery, triumph
'வெஞ்சின விறல் வேற் காளையொடு' (ஐங்.391: 5)

(7) **பாதுகாப்பு** – defend / guard / protect
'விறல் வெய்யோன் ஊர் மயில், வேல் நிழல், நோக்கி' (பரி.8: 67)

(8) **ஆற்றல்** - power
'வேல் கெழு தடக்கைச் சால் பெருஞ் செல்வ' (திருமுரு.265)

(9) **வீரம், மீட்பு, கடவுட்டன்மை** – valour, save, divine
'வீர வேல், தாரை வேல், விண்ணோர் சிறை மீட்ட தீர வேல், செவ்வேள் திருக் கை வேல், வாரி குளித்த வேல், கொற்ற வேல், சூர் மார்பும் குன்றும் துளைத்த வேல் - உண்டே துணை' (திருமுரு.தனிப்.3)

(10) **அஞ்சாமை / அச்சமின்மை** – fearless, bold / courageous
'அஞ்சும் முகம் தோன்றின், ஆறுமுகம் தோன்றும்; வெஞ் சமரில், அஞ்சல் என வேல் தோன்றும்; நெஞ்சில் ஒரு கால் நினைக்கின், இரு காலும்

தோன்றும் - முருகா! என்று ஓதுவார் முன்' (திருமுரு.தனிப்.6)

(11) **வெம்மை** - severity
'தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும், .. .. .. .. தெவ்வர்க்கு ஒக்கிய' (சிறுபா.234)

(12) **நிலைபேறு** - stability
'நீர் ஒலித்தன்ன நிலவு வேற் தானையொடு' (மது.369)

(13) **சினம், நன்மை** – wrath, upright
'மனைக்காக்கம் மாண்ட மகளிர் ஒருவன் வினைக்கு ஆக்கம் செவ்வியன் ஆதல் - சினச் செவ்வேல் நாட்டாக்கம் நல்லனிவ் வேந்தென்றல் கேட்டாக்கம் கேளிர் ஒரீஇ விடல். (நான்.20)

(ஆ) <u>உடம்பிடி</u> Uṭampiṭi
**வீரம்** - valour
'கடம்புஅமர் நெடுவேள் அன்ன, மீளி, உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்' (பெரும்.75-76)

(இ) <u>எஃகம்</u> Ekam

(14) **மாட்சி, மாண்பு** – noble, honourable
'ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஓட்டிய நீமாண் எஃகம் நிறத்துச் சென்று அழுந்த' (அகம்.212: 19-20)
**திறல், கூர்மை** – strong, sharp
'உள்ளம் அழிக்கும் கொட்பின் மான்மேல் எள்ளுநர்ச் செகுக்கும் காளை கூர்த்த வெந்திறல் எஃகம் நெஞ்சுவடு விளைப்ப' (புறம்.303: 2-4)

(ஈ) <u>வேல் கூர்மை மழுங்குதல்</u>
Vēl kūrmai maluṅkutal (spear becoming blunt)

(15) **தீமை, தோல்வி** - evil, defeat
'.. .. .. .. நாம வென்றிவேல் பூவொளி மழுங்கின .. .. .. ..' (சூளா.1222: 2-3)

## <u>வேலி</u> Vēli (fence)

(1) **பாதுகாப்பு** - protection
'ஒலி காவோலை முள் மிடை வேலி' (நற்.38: 8)

(2) **தடை** - obstruction / obstacle
'இடு முள் நெடு வேலி போல' (கலி.12: 1)

(3) **தகவு / பெருமை** – worthiness / greatness
'தகவு எனும் வேலி இட்டு' (திருநா.தேவா.2921: 6)

(4) **காவல்** – guard / protect
'நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி வேலி அன்னவன் மலையின் மேல் உளான்' (கம்ப.கிட்.114: 1-2)

(ஆ) <u>சிறை</u> Cirai
**பாதுகாப்பு, காவல்** – protection, security
'சிறை இல் கரும்பினைக் காத்து ஓம்பல் இன்னா' (இன்னா.5)

(ஒப்பு) <u>Hedge, Fence</u> **இரகசியம், தனிமை.**

## <u>வேலூர்</u> Vēlūr (a town)

(1) **வெற்றி** - victory
'திறல்வெல் நுதியில் பூத்தகேணி விறல்வேல் வென்றி வேலூர்' (சிறுபா.172-173)

## <u>வேழமுண்ட வெள்ளில்</u> Velamunta vellil (a diseased fruit)

(1) **உள்ளீடின்மை, உள்ளுறுதியின்மை** – hollow, careless
'வெஞ்சின வேழமுண்ட வெள்ளிலின் வெறியமாக நெஞ்சமு நிறையு நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி' (சீவக.1024: 1-2)

(ஆ) <u>வேழமுண்ட விளங்கனி</u>
Vēlamunta vilaṅkani

(2) **வீண், பயனின்மை** – futile, waste
'வெஞ்சின வேழமுண்ட விளங்கனி போன்று நீங்கி எஞ்சினான் போல நின்றா னேத்தருந் தவத்தின் மிக்க' (சீவக.1122: 2-3).

## <u>வேள்வி</u> Vēḷvi (alter five / sacrificial fice)

(1) **பலி** - sacrificial offering

'கபிலை கண்ணிய வேள்வி நிலையும்' (தொல்.1036)

(2) **புகழ்** – fame / merit
'வசைநீங்கிய வாய்மையால், வேள்வியால் திசை நாறிய குன்று அமர்ந்து' (பரி.17: 28-29)

(3) **மேன்மை / மகிமை** – glory / eminence
'வேள்வியின் அழகு இயல் விளம்புவோரும்' (பரி.19: 43)

(4) **பயன்** - use
'பண்ணி தைஇய பயம் கெழு வேள்வியின் விழுமிது நிகழ்வது ஆயினும்' (அகம்.13: 11-12)

(5) **சிறப்பு** - excellence
'அருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை நெய்ம் மலி ஆவுதி பொங்க, பல் மாண் வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி' (புறம்.15: 18-20)

(ஆ) <u>வேள்வி வேட்டல்</u> Vēḷvi vēṭṭal

(6) **உயர்வு, உவப்பு** – loftiness, gladness
'கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது, வேள்வி வேட்டனை, உயர்ந்தோர் உவப்ப' (பதி.74: 1-2)

(இ) <u>வேள்வித்தீ</u> Vēḷvitti (sacrificial fire)

(7) **ஒளி** - glitter
'பொச்சாப்பு இலாத புகழ்வேள்வித் தீப்போல எச்சாரும் மின்னும் மழை' (கார்.7: 3-4)

(ஈ) <u>இராவணன் வளர்க்கும் வேள்வி திரண்டெழாமல் அணைந்து, அவ்விடத்திலிருந்து கரையான்கள் கூட்டம் கூட்டமாகத் தோன்றுதல்</u> Irāvaṇan vaḷatkkum vēḷvi tiranṭelāmal aṇaintu, avviṭattiliruntu karaiyānkaḷ kūṭṭam kūṭṭamākat tōnrutal (sacrificial fire put out; termite come up)

(7) **தீமை, அழிவு, இறப்பு** – evil omen
'ஆண் தகை இராவணன் வளர்க்கும் அவ் அனல் ஈண்டில பிறந்தவால் இனம் கொள் செஞ் சிதல் தூண்ட அரு மணி விளக்கு அழலும் தொல் மனை' (கம்ப.சுந்.370: 1-3)

**<u>வேனில்</u> Vēnil (summer / spring)**

(1) **இன்பம்** - happiness
'செங் கண் இருங் குயில் எதிர் குரல் பயிற்றும் இன்ப வேனிலும் வந்தன்று' (நற்.224: 5-6)

(2) **தண்மை** - cool
'தண் பத வேனில் இன்ப நுகர்ச்சி' (ஐங்.368: 3)

(3) **அருமை** - rare / precious
'அரும் பதம் கொண்ட பெரும் பத வேனில்' (ஐங்.400: 3)

(4) **பெருமை / சிறப்பு** – greatness / eminence
'பொழில் வதி வேனில் பேர் எழில் வாழ்க்கை' (பதி.48: 15)

(5) **காமன், காதல்** – cupid / love
'ஆனா விருப்போடு அணி அயர்ப, காமற்கு வேனில் விருந்து எதிர்கொண்டு' (கலி.92: 67-68)

(6) **கொடுமை / துன்பம்** – cruel / affliction
'இன்னா வேனில் இன் துணை ஆர' (அகம்.335: 6)

(7) **அழகு** - beauty
'ஆன் ஏமுற்ற காமர் வேனில்' (அகம்.317: 14)

(8) **செம்மை / நிறைவு** - upright / full
'செழு மனை மறக்கும் செவ்வி வேனில்' (அகம்.355: 8)

(9) **வெம்மை** – hot / warm
'வேனில் அன்ன என் வெப்பு நீங்க' (புறம்.397: 17)

(10) **கொடுமை** – cruel / harsh
'.. .. .. .. எழுதரு பல் கதிர்ப் பருதி காய் சினம் திருகிய கடுந் திறல் வேனில்' (பெரும்.2-3)

**<u>வைகல்</u> Vaikal (day)**

(1) **குளிர்ச்சி** - cool
'செந்தீக் கதீஇய வெந்தழல் புண்ணினுள் சந்தனச் சாந்திட்டன்ன தண்மையொடு வந்தது மாதோ வைக லின்றேன்' (பெருங்.மகத.7: 108-110)

<u>வையை</u> Vaiyai **(a river)**

(1) **இனிமை** - sweetness
*'தமிழ் வையைத் தண்ணம் புனல்'* (*பரி*.6: 60)

(2) **அழகு** - beauty
*'.. .. .. .. மாறு அட்ட தானையான் வையை வனப்பு'* (*பரி*.7: 49-50)

(3) **மாண்பு** - nobleness
*'சேண் இகந்து கல் ஊர்ந்த மாண் இழை வையை'* (*பரி*.11: 39)

(4) **வளம்** - fertile
*'தொய்யா விழுச் சீர் வளம் கெழு வையைக்கும்'* (*பரி*.17: 44)

(5) **பாண்டியன்** – Pandya kings
*'தென்னவன் வையைச் சிறப்பு'* (*பரி*.20: 97)

(6) **மதுரை** – the city on the banks of the river
*'காமரு வையை கடுகின்றே கூடல்'* (*பரி.தி*.2: 4)

(7) **புரத்தல், பாதுகாத்தல்** – nurture, protect
*'உலகு புரந்தூட்டும் உயர் பேரொழுக்கத்துப் புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி வையை என்ற பொய்யாக் குலக்கொடி'* (*சிலப்*.13: 165-167)

**வைரம் (diamond) பார். வயிரம்**

